# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

A COMPREHENSIVE
ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

## தமிழ்ச்சொற்பிறப்பு நெறிமுறைகள்
## Principles of Tamil Etymology

பன்னிரண்டாம் மடலம்
Vol. XII

முனைவர் இரா. மதிவாணன்
மதிப்புறு இயக்குநர்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித்திட்ட
இயக்கக வெளியீடு
தமிழ்நாடு அரசு

2011

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

## A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

## தமிழ்ச்சொற்பிறப்பு நெறிமுறைகள்
## Principles of Tamil Etymology

பன்னிரண்டாம் மடலம்
Vol. XII

முனைவர் இரா. மதிவாணன்
மதிப்புறு இயக்குநர்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித்திட்ட
இயக்கக வெளியீடு
தமிழ்நாடு அரசு

2011

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கக வெளியீடு – 31.

முதற் பதிப்பு : திருவள்ளுவர் ஆண்டு 2042 கும்பம் (மாசி) (Feb - 2011)

**A Comprehensive Etymological Dictionary of the Tamil Language, Vol. XII, Principles of Tamil Etymology**



விலை : உருபா 400/–

Price : Rs. 400/-

குறியீட்டெண் : Colon No.P.J1-J, 314"K.M4

வெளியிட்டோர் :

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்,
சி–48, முதல் தளம்,
தமிழ்நாட்டு வீட்டுவசதி வாரிய அலுவலக வளாகம்,
2ஆம் நீழற்சாலை, அண்ணாநகர், சென்னை–600 040.

Published by :

Directorate of Tamil Etymological Dictionary Project,
C-48, Ist Floor, T.N.H.B., Office Complex,
IInd Avenue, Anna Nagar,
Chennai - 40.

அச்சீடு :

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.பி.டி. வளாகம், தரமணி,
சென்னை–600 113.

Printed at :

International Institute of Tamil Studies,
Tharamani, Chennai - 113

நூல் கிடைக்குமிடங்கள் :

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்,
சி–48, முதல் தளம்,
தமிழ்நாட்டு வீட்டுவசதி வாரிய அலுவலக வளாகம்,
2ஆம் நீழற்சாலை, அண்ணாநகர், சென்னை–600 040.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.பி.டி. வளாகம், தரமணி,
சென்னை–600 113.

Copies available at :

Directorate of Tamil Etymological Dictionary Project,
C-48, Ist Floor, T.N.H.B., Office Complex,
IInd Avenue, Anna Nagar,
Chennai - 40.

International Institute of Tamil Studies,
Tharamani, Chennai - 113



மாண்புமிகு தமிழக முதலமைச்சர்
முத்தமிழறிஞர்
கலைஞர் மு.கருணாநிதி

செம்மொழிச் செம்மல் கலைஞர் பெருந்தகையே
செம்மாந்த செந்தமிழர் பாவாணர் நுண்ணோக்கில்
சீர்கொள் அகரமுதலி வெளியிட்டுப்
பேர்கொண்டீர் வாழ்க நெடிது!

மு. கருணாநிதி
முதலமைச்சர்




தலைமைச் செயலகம்
ஓமந்தூரார் அரசினர் தோட்டம்
சென்னை – 600 002

நாள் 28-02-2011.

# அணிந்துரை

மொழிஞாயிறு ஞா.தேவநேயப்பாவாணர் அவர்களை இயக்குநராகக் கொண்டு, செம்மொழியாம் தமிழ்மொழியின் தனித்தன்மையையும், தொன்மை–யையும், மேன்மையையும் புலப்படுத்தும் நோக்கில் 'செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி' ஒன்றை உருவாக்கும் திட்டத்தை, 8.5.1974 அன்று நான் முதல்முறை முதலமைச்சராக விளங்கிய காலத்தில் உருவாக்கினேன்.

தமிழ்மொழி உயர்தனிச் செம்மொழி மட்டுமன்றி, உலகத் தாய்மொழி என்னும் முடிவை உலகு ஒப்பிடுமாறு, பற்பல சான்றுகள் தந்து நிறுவிடும் தொண்டினில் தன்னை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டு, தமது வாழ்நாள் பணியாகச் செய்துவந்த பாவாணரே, இந்த அரிய பணியை நிறைவேற்ற வல்லவர் என்பது நாடறிந்த உண்மை. அவர்கள் பணியிடையில், 16.1.1981 அன்று இயற்கை எய்த நேரிட்டது பேரிழப்பாகும்.

எனினும், அப்பணியைப் பாவாணர் ஆய்வு நெறியில் தோய்ந்து தேர்ந்த முனைவர் இரா. மதிவாணன் பொறுப்பேற்றுத் தொடர்ந்து பணியாற்றி, அகர முதலியின் மடலங்களை அச்சியற்றி வெளியிட்டு, அதன் இறுதி மடலமாகிய பன்னிரெண்டாம் மடலத்தினை, திட்டத்தின் 31வது வெளியீடாகக் கொண்டு வந்துள்ளது காண மகிழ்கின்றேன். நமது தமிழ்மொழி 'செம்மொழி' என்பதை மைய அரசு ஏற்று அறிவித்து, உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாடும் கோவையில் சிறப்பாக நடைபெற்று, உலகெங்கும் தமிழர்கள் வாழும் நாடுகளில் எல்லாம் ஒருங்குறி (Unicode) பயன்படுத்தக்கூடிய நிலை உருவாகியுள்ள நல்லதொரு சூழலில், தமிழ் ஆர்வலர்களும், ஆய்வாளர்களும், ஆசிரியர்களும், எழுத்தாளர்–களும், கலைத்துறையினரும் இடம்பெற்றுள்ள நாடுகளிலெல்லாம், செம்மொழித் தமிழுக்கு ஒருபெரும் வரவேற்பு மலர்ந்து வருவதை நாம் காண்கிறோம்.

இந்நிலையில், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி திட்டப் பணி நிறைவெய்தியுள்ளது மிகவும் வரவேற்கப்படுவதாகும். இத்திட்டத்தில் பங்கேற்று, பலநிலைகளில் பணியாற்றி திட்டம் முழுமை பெறத் துணை புரிந்துள்ள அனைவருக்கும் எனது பாராட்டுகளை உரித்தாக்குகிறேன்.

(மு.கருணாநிதி)



மொழிஞாயிறு

ஞா.தேவநேயப்பாவாணர்

ஞால முதன்மொழி எந்தமிழே என்றென்று
சால நிறுவிய பாவாணச் செம்மலே
நின்று நிலவும் சொற்பிறப்பு காட்டியதால்
பொன்றாது நின்றதும் பேர்!

**ரா. சிவகுமார்,** இ.ஆ.ப.
அரசு செயலாளர்



தமிழ் வளர்ச்சி, அறநிலையங்கள் மற்றும் செய்தித்துறை
அலுவலகம் : 044-25672887
இல்லம் : 044-26195354
தொலை நகரி : 044-25672021

நாள் 28.02.2011

"தொன்று நிகழ்ந்ததனைத்தும் உணர்ந்திடும்
சூழ்கலை வாணர்களும் - இவள்
என்று பிறந்தவள் என்றுணராத
இயல்பினளாம் எங்கள் தாய்"

என்று பாட்டுக்கொரு புலவரான பாரதியார் பாடியதற்கேற்ப நம் தமிழ்மொழி என்றென்றும் இளமை குன்றாது வாழ்ந்திருக்கும் வகையில் தமிழ் மொழிக்கே சிறப்பான சொற்பிறப்பியல் நெறியில் மொழியாய்வு அறிஞர் மொழிஞாயிறு ஞா. தேவநேயப் பாவாணரைத் தலைவராகக் கொண்டு மாண்புமிகு முதல்வர் கலைஞர் அவர்கள் 08- 05-1974 உருவாக்கிய சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் பல்லாண்டுகளாக உழைத்து 31 தொகுதிகளில் எல்லாச் சொற்களுக்கும் விளக்கம் வரலாறு முதலியன கூறிச் சிறப்பாக வெளியிட்டுள்ளது. அவ்வகையில் தற்போது 'சொற்பிறப்பு நெறிமுறைகள்'என்ற தலைப்பில் வெளிவரும் இறுதித் தொகுதி நம் செம்மொழித் தமிழின் பெருஞ்சிறப்பை உலகத்திற்கு எடுத்துக் காட்டும் வண்ணம் தனித்தொகுதியாக சிறப்பாக வெளிவருகின்றது. இவ்வகரமுதலிப் பணிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வரும் மாண்புமிகு முதல்வர் அவர்களுக்கும் நல்ல வழிகாட்டுதல்கள் நல்கும் மாண்புமிகு நிதியமைச்சர் அவர்களுக்கும் தமிழ் வளர்ச்சி, அறநிலையங்கள் (ம) செய்தித் துறையின் சார்பில் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அகரமுதலித் துறையில் ஒப்பற்ற பணியேற்றுச் சிறப்பிக்கும் மதிப்புறு இயக்குநர் திரு இரா. மதிவாணன் அவர்களையும் மிகவும் பாராட்டி மகிழ்கிறேன். அரசின் தமிழ் வளர்ச்சித் திட்டங்கள் நல்ல முறையில் நிறைவு பெறுவது மிகவும் இன்றியமையாதது. குறித்த காலத்தில் அரசின் திட்டப் பணிகளைச் செவ்வனே நிறைவுறுத்த வேண்டும் என்பதைக் கருத்தில் கொள்ள வேண்டியுள்ளது. இந்நிலையில் அகரமுதலித் திட்டப் பணி நிறைவுறப் பெரிதும் உழைத்த திட்டப் பணியாளர்கள் அனைவரையும் பாராட்டுகிறேன்.

"தமிழுக்குத் தொண்டு செய்வாய்
துறைதோறும் துறைதோறும் துடித்தெழுந்தே"
- பாவேந்தர்

(ரா. சிவகுமார்) 28-2-11

அரசுச் செயலாளர்
தமிழ் வளர்ச்சி, அறநிலையம் மற்றும்
செய்தித் துறை
தலைமைச் செயலகம், சென்னை-600 009

# பதிப்புக்குழு

முனைவர் **இரா. மதிவாணன்**, மதிப்புறு இயக்குநர்
தலைவர்–பதிப்புக்குழு

முனைவர் **மு.கண்ணன்**, சிறப்புநிலைத் தொகுப்பாளர்

முனைவர் **ச. செந்திலாண்டவன்**, சிறப்புநிலைத் தொகுப்பாளர்

முனைவர் **இரா.கு.ஆல்துரை**, சிறப்புநிலைத் தொகுப்பாளர்

திரு.**கா. இளமுருகு**, சிறப்புநிலைத் தொகுப்பாளர்

திரு.**ச.கி. கணேசன்**, சிறப்பு நிலை ஓவியர் – முதனிலை

திரு. **மா. பூங்குன்றன்**, பதிப்பாசிரியர்

திரு.**க.கணேசன்**, பதிப்பாசிரியர்

திரு.**சு.வீரவேலு**, பதிப்பாசிரியர்

திருவாட்டி.**வே.உமாராணி**, உதவிப் பதிப்பாசிரியர்

# பதிப்புரை

செம்மொழித் தமிழின் சீரார்ந்த முன்மைக்கும் தொன்மைக்கும் அடிப்படைக் கருவி நூலாக இருப்பது செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி. உலகில் இதுவரை வெளிவந்துள்ள சொற்பிறப்பியல் அகரமுதலிகள் அனைத்தினும் மேம்பட்டதாகத் தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி விளங்க வேண்டும் எனப் பேராசான் மொழிஞாயிறு ஞா.தேவநேயப்பாவாணர் கனவு கண்டார். அதனை அரசின் திட்டமாக்கிப் பாவாணருக்கென்றே தனித்த ஓர் இயக்ககத்தை உருவாக்கிய **மாண்புமிகு தமிழக முதலமைச்சர் முத்தமிழ்க் கலைஞர்** அவர்கள் பாவாணரின் நெட்ட நெடுங்கனவை நீடு நிலைத்த நனவாக்கியதை அகரமுதலி தொகுப்புப் பணி நிறைவுற்று வெளிவந்துள்ள 30 தொகுதிகளில் இன்று காண்கிறோம். இறுதித் தொகுதியான சொற்பிறப்பு நெறிமுறைகள் 31 ஆம் தொகுதியாக வெளிவந்துள்ளது.

உலக மொழிகளில் ஆங்கிலம், பிரஞ்சு, செருமானியம், உருசியம், சீனம், இலத்தீனம், சமற்கிருதம் ஆகியவற்றில் சொற்பிறப்பு அகரமுதலிகள் வெளிவந்துள்ளன. இந்திய மொழிகளில் தெலுங்கு, நேப்பாளம் மொழிகளில் வெளிவந்தவை சிறப்பாக அமையவில்லை. குடும்ப மொழிகளுக்காக வெளிவந்த பரோஎமனோவரின் *Dravidian Etymological Dictionary (DED),* அல்தாய்க்கு மொழிகளுக்காக வெளிவந்த *Etymological Dictionary of Altaic Languages (EDAL),* பின்லாந்து பேராசிரியர் அன்னு பனு அகோலா வெளியிட்ட *SUDURALJAN* (சுமேரியன் திரவிடம் ஊரல் மொழிகள் சப்பானியம் ஆண்டியன் இன்கா மொழி) அகரமுதலி ஆகியவை ஒப்பீட்டு அகரமுதலிகளாக *(Comparative Dictionary)* உள்ளன. இவற்றில் சொற்பிறப்பின் மூலத்தைத் தேடும் முயற்சி முழுமையாக எடுக்கப்படவில்லை.

12000 பக்கங்களில் இரண்டு இலக்கம் சொற்களை உள்ளடக்கி அனைத்துச் சொல்லாட்சிகளுக்கும் வேர்மூலமும் இனச்சொல்வகைப்பாடும் காட்டும் முயற்சியில் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி வீறார்ந்த வெற்றி நடை பயின்றுள்ளது. பல்வேறு காரணங்களால் அகரமுதலிப் பணி தொடர்ந்த இடர்ப்பாடுகளுக்கு உள்ளாகியது. திட்டமிட்ட கால வரம்புக்குள் நிறைவுறுத்த இயலாமல் வேறுவழியின்றி காலநீட்டிப்பை எதிர்கொள்ள நேர்ந்தது வருந்தத்தக்கதாயிற்று. நெடுங்காலமாகப் புலமை நலம் பொதுளிய திறப்பாடு மிகுந்த இயக்குநர் பணியிடம் நிரப்பப்படவில்லை. அரசு செயலாளரே கூடுதல் பொறுப்பு இயக்குநராக நீடிக்க நேர்ந்ததாலும் புலமை சான்ற இயக்குநரின் ஒரு சீரான மேற்பார்ப்பு இல்லாத நிலையிலும் அகரமுதலிச் சொற்பதிவுகளிலும் சீரான பதிப்புப்

பணியிலும் குறைபாடுகள் காணப்படுகின்றன என்பது உண்மையே. இக்குறைபாடுகளைக் களைந்து ஆக்சுபோர்டு ஆங்கில அகரமுதலி போல் பன்னிரு பெருந்தொகுதிகளில் திருந்திய பதிப்பு Revised edition of Tamil Etymological Dictionary (TED) வெளியிட அரசுக்கு வேண்டுகோள் விடப்பட்டுள்ளது.

"வினைச் சொற்களின் பெருக்கம் செம்மொழிச் சிறப்பை நிலைநாட்டும். அத்தகைய வினைச்சொல் பெருவளத்தைத் தமிழில் நான் காண்கிறேன்" என அருள்மிகு வினோபா அடிகள் குறிப்பிட்டார். அது உலக மொழிகளில் வேர்வீழ்த்து ஐரோப்பிய மொழிகளில் விழுதூன்றியதைக் கால்டுவெல் பெருமகனாரும் யாழ்ப்பாணத்து நல்லூர் ஞானப்பிரகாச அடிகளாரும் வலியுறுத்தினர். பாவாணர் அதனை மெய்ப்பித்துக் காட்டினார். அகரமுதலியில் செம்மொழித் தமிழின் வேர்வளம் விளக்கப்பட்டுள்ளது.

திரவிடமொழிகளிலும் ஏனைய உலகமொழிகளிலும் இனச்சொல் காட்டியிருப்பது, படவிளக்கம் தந்திருப்பது, இன்றியமையாத சொற்களுக்கு விரிவான விளக்கம் தந்திருப்பது, பிற அகரமுதலிகளில் காணப்படும் பிழைபாடுகளைச் சுட்டிக்காட்டித் திருத்தியிருப்பது, புதிய கலைச் சொற்களைப் படைத்திருப்பது, வடமொழிச் சொல்லாட்சிகளுக்கு நிகரான தமிழ்ச் சொற்கள் தந்திருப்பது, தமிழில் புகுந்துள்ள வேற்று மொழிச் சொற்களைத் தனியாகப் பிரித்து முத்தொகுதி அயற்சொல் மடலமாக வெளியிட்டிருப்பது, ஏட்டில் பயிலாத நாட்டுப்புறத்துத் தமிழ்ச் சொல்லாட்சிகளைத் தேடித் தொகுத்திருப்பது இன்றியமையாத இலக்கணக் குறிப்புகள் தந்திருப்பது ஆகியவை இந்த அகரமுதலியின் சிறப்புக் கூறுகள் எனலாம்.

எல்லாவற்றுக்கும் மேலாகப் பாவாணர் எண்ணிய வண்ணம் இதுவரை வெளிவந்துள்ள உலகச் சொற்பிறப்பு அகரமுதலிகளில் காணப்படாத சிறப்புக்கூறுகள் பெருமளவில் இந்த அகரமுதலித் தொகுப்புகளில் இடம் பெற்றிருப்பது இத்திட்டப் பணியின் தனிச்சிறப்பை எடுத்துக் காட்டுகிறது. இப்பணியில் எங்களை ஈடுபடுத்திய **மாண்புமிகு முதலமைச்சருக்கும், மாண்புமிகு நிதியமைச்சருக்கும்,** தமிழ் வளர்ச்சி அரசு செயலாளருக்கும் என்றும் பொன்றா நன்றியுடையோம். இப்பணியில் அயராது உழைத்த திட்டப்பணி தமிழறிஞர்கள் அனைவருக்கும் நன்றி உரியது.

**தலைவர்**
பதிப்புக்குழு

# என்னுரை

## "Dictionary brings people closer to a perfect language"

உலகில் பிறமொழித் துணையின்றித் தானே தனித்தியங்கவல்ல ஒரே மொழி நம் செந்தமிழ் என்று நிலைநாட்டிய மொழிஞாயிறு ஞா. தேவநேயப் பாவாணரை நாடறியும். இவர் இயற்றிய பனுவல்கள் அனைத்தும் உலகேத்தும் இலகொளிக் கோட்பாடுகளைப் புதுக்கியுள்ளன. அவர் தமிழ்த்தாய்க்குச் சூட்டிய மதிப்பரிய மணியாரங்களாக விளங்கியவை அவர் எழுதிய வேர்ச்சொற் கட்டுரைகளே. அவையே தமிழ்ச் சொற்பிறப்பு நெறிமுறைகளுக்கும் முதல் தாய்மொழி மீட்டமைப்பு வரையறைக்கும் தனித்தமிழ் நிலைப்பாட்டுத் தலைமைக்கும் ஊற்றுக்கண்களாகும். அவற்றைத் தானே முழுதுணர்ந்து சொற்பிறப்பு நெறிமுறைகளாய் வடித்துத்தர ஒருப்பட்டு என் வாணாளுக்குள் யானே நிறைவுறுத்துவேன் எனப் பகர்ந்த மொழிநூல் பகலவனைக் கருத்திலாக் காலன் கவர்ந்து கொண்டான்.

எனினும், மொழித்துறை முட்டறுத்துக் கற்றோர் அறியா நுண்மாண் நுழைபுலமும் பன்மாண் ஆய்வுத்திறனும் கொண்டு புலத்துறை முற்றிக் கற்றோர்க்குத் தான் வரம்பாகித் தலைமை பூண்ட பேராசான், பாவாணர்பால் அகரமுதலித் தொழும்பு பூண்ட நாள் (25.4.1975) முதலாக அவர் பேராவியற்கையெய்திய நாள் (16.1.1981) வரைப்பட்ட ஆறாண்டுகளில், இருவென இருந்து சொல்லெனச்சொல்லி, பருகுவன்ன ஆர்வத்தனாகிப் பல்கால் வினவி, ஒருகாலைக்கொருகால் வளர் நிலாவென சொற்பிறப்பு நுட்பங்களைக் குறிப்பெடுத்து, ஐயப்பாடுகளை அகல அகற்றி மெய்நெறிப்பாங்குகளை விளங்க மனங்கொண்டு பேராசானின் மனங்காண யான் உளங்கொண்ட வகைமையை அவ்வப்போது எடுத்துரைத்து, அவர் செவி மடுத்து ஒப்பிய பாங்குகளை உவந்தேற்று நிலைப்படுத்திக் கொண்டேன். பாவாணப் பேராசான் திடுமென மறைந்தாலும் என் உள்ளத்தில் நிலைப்படுத்திக்கொண்ட உருவேற்றங்கள் இப்பொழுது அப்பெருந்தகை பயிற்றிய பாங்கு பிறழாமல் தமிழ்ச் சொற்பிறப்பு நெறிமுறைகளாகச் சொற்பிறப்பியல் பேரகர முதலியின் பன்னிரண்டாம் மடலமாக – மொட்டவிழ்ந்து முகை திறந்து அன்றலர்ந்த மலராகத் தமிழுலகின் முன்வைத்த இன்னமுதுப் படையலாக வெளி வருகின்றது.

மரபிலக்கண வரம்புக்குள்ளும் மொழியியல் நோக்குகளின் வீச்செல்லைக்குள்ளும் அகப்படாத மொழிப் பாங்குகள் அனைத்தும் பாவாணப் பெருந்தகையின் அகக்கண் வலைவீச்சில் அகப்பட்டுவிட்டன. அவற்றைப் ஒருப்பட்டு ஒப்பம் செய்து ஒருக்கிட்டு விளத்தங்காட்டி தந்துள்ள நெறிப்பாட்டு வகைமைகளை முறைப்பட ஓர்ந்து குறைநிறைகளைத் தெள்ளிக்காட்டும் திறவோரை நெஞ்சார வாழ்த்தி நினைவாரப் போற்றும் நன்றிக்கடப்பாடுடையேன்.

**நெறிமுறைப்பாங்கு:**

ஒரு சொல்லின் முந்துநிலை மீட்டமைப்பு கற்பனையாக இருத்தலாகாது. பொருட்காரணம் தழுவிய ஏரண அறிவியல் அடிப்படைக் கொண்டிருத்தல் வேண்டும். பொதுநெறிகள் எனும் வரம்புக்குள் அடங்க வேண்டும். இதற்குச் சான்றாக மாஃசு முல்லரின் அணுகுமுறையை எடுத்துக்காட்டலாம். History எனும் ஆங்கிலச் சொல்லின் மூலம் கிரேக்க இலத்தீன் மொழிகளில் widtar எனும் சொல்லில் அடங்கியிருக்கிறது. widtar - vidtar எனத் திரிந்து v நீங்கி d-s ஆகத் திரிந்து istar

என்றானபின் history எனத்திரிந்ததாகக் காட்டுகிறது. சமற்கிருதத்தில் vitta (அறிதல்) எனத் திரிந்துள்ளது. இதிலிருந்து இவற்றின் முந்துவினையடி wit (அறிதல்) என்பதை உறுதி செய்கிறார் பாவாணர். wit என்பது தமிழ் விழி பார்த்தல் (அறிதல்) எனும் மூலம் கொண்டது என மேலும் பின்னோக்கி வடிவமைத்துக் காட்டுகிறார். ஒரு வேர் மூலம் சரியானது என்பது அதன் பொருட்காரணம் முற்றிலும் பொருந்தியிருப்பதிலிருந்து உறுதிப்படுகிறது. age எனும் ஆங்கிலச்சொல் இ (இய) = செல், போ எனும் மூலம் கொண்டது என மாஃசுமுல்லர் கூறுகிறார். அந்த இகரம் முன்செலல் கருத்துடைய உ என்பதன் திரிபு என்கிறார் பாவாணர். மாஃசுமுல்லர் தொட்டு, மேற்கொண்டு பின்னோக்கி மீட்டமைக்காத இடங்களில் எல்லாம் பாவாணரின் வேர்ச்சொல்லாய்வு நெறிகள் ஒளிகான்று வெளிச்சத்திற்குக் கொண்டு வந்திருப்பதைக் காண்கிறோம்.

**பயன்கொள்ளும் பாங்கு:**

1. உலக முதன்மொழியிலிருந்து உலகமொழிகள் பிரிந்த பாங்கையும், இன்றைய உலக மொழிகளிலுள்ள அடிப்படைச் சொல்லாட்சிகள் உலக முதன்மொழியில் ஒடுங்கும் பாங்கையும் நெறிமுறைகள் காட்டுகின்றன.

2. உலகெல்லாம் பரவிய ஆங்கிலமொழி 10 இலட்சம் சொற்களைக் கொண்டிருந்தாலும் அன்றாடு வழக்கில் பேசுவதற்கு 7000 சொற்களே போதும் எனக் கண்டறிந்துள்ளனர். மிகப் பழங்காலத்தில் மேலும் குறைந்திருக்கும் எனும் பாங்கையும் நெறிமுறைகள் சுட்டிக்காட்டுகின்றன.

3. உலக மொழிகளில் அடிப்படை வினைச்சொற்கள் ஆயிரம் எண்ணிக்கையைத் தாண்டுவதில்லை. தமிழில் 2300 வினைச்சொற்கள் பட்டியலிடப்பட்டுள்ளன. இவையும் பாவாணர் கொள்கைப்படி 54 வேர் முதல்களில் ஒடுங்கிவிடுகின்றன என்பதைப் பொருட்பாட்டு மீட்டமைப்புகள் வாயிலாக அறியலாம்.

4. உலக முதன்மொழி தோற்றத்தில் எழுத்தியல், சொல்லியல் தொடர்பான அகத்தோற்றம் காட்டும் பொருட்பாட்டு நெறிகளும் முதன்முறையாகத் தனியாக வகுத்துக் காட்டப்பட்டுள்ளன. சொல்வடிவ மீட்டமைப்புகள் ஒரு குடும்ப மொழிகளுக்கே சிறப்பாகப் பொருந்துவதால் மொழிக்குடும்ப வரம்புகளைக் கடந்து மூலத்தாய்மொழி நோக்கி மீட்டமைக்க பொருட்பாட்டு நெறிமுறை ஒன்றே உதவி செய்யும்.

5. சொல்லின் பொருட்பாடு தொடராட்சியில் தெளிவுறுவதைத் தொடரியல் விளக்குகிறது. தமிழ் தன்னுடைய இனமொழிகளான திரவிடத்திலும் வடஇந்திய மொழிகளிலும் திரியும் பாங்குகள் ஆறாம் தலைப்பில் காட்டப்பட்டுள்ளன.

6. தமிழ்ச் சொற்கள் உலகமொழிகளில் ஊடாடிய பாங்குகள் ஏழாம் தலைப்பில் காட்டப்பட்டுள்ளன.

7. கற்காலம் முதல் இக்காலம் வரை ஐவகை நாகரிகப் படிநிலைக்கேற்ப சொல்வகைகள் பிரிக்கப்பட்டுள்ளன. கற்காலம், வேட்டைக்காலம், கால்நடை வளர்ப்புக் காலம், வேளாண்மைக்காலம், நகர நாகரிகக் காலம் எனும் ஐவகைக் காலங்களில் மூலத்தாய் மொழியிலிருந்து அடிப்படைச் சொற்களில் உடன் கொண்ட சொல்வளமாகவும், கடன்கொண்ட சொல்வளமாகவும், திரிபுற்ற சொல்வளமாகவும், படைப்புச் சொல்வளமாகவும் வடிவுற்ற பாங்குகளை ஞாலப் பொதுநெறி முறைகள் சுட்டிக் காட்டுகின்றன.

உலகமொழிகளில் எழுதப்பட்டுள்ள சொற்பிறப்பு நெறிமுறைகள் தன் சொல்லும் அயற்சொல்லும் என வகைப்படுத்துகின்றன. ஆயின், தமிழ்ச் சொற்பிறப்பு நெறிமுறைகள் மூலத்தாய்மொழியும் சேய்மொழிகளும் என வகைப்படுத்திச் செல்வதைக் காணலாம்.

**இரா. மதிவாணன்**

மதிப்புறு இயக்குநர்

# தமிழ்ச் சொற்பிறப்பு நெறிமுறைகள்

## 1. ஆய்வு முன்னுரை

"Language is a thought transfer technique"

**பாவாணரின் ஆய்வு நோக்கு:**

உலகமொழிகள் மூவாயிரத்துக்கும் மேற்பட்டவை. உலகமொழிகள் அனைத்தும் ஆறு பெருங் குடும்பங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளன. இவற்றிடையில் அடிப்படைச் சொற்களில் ஒரு சார் பொதுமை கண்ட மொழியியலார், இந்த ஆறு குடும்ப மொழிகளும் ஒரே மூலத்தாய் மொழியிலிருந்து பிறந்திருக்குமா என ஆய்வுப்புலத்தில் தூண்டல் உண்டாக்கித் தூண்டலுக்கேற்ற துலக்கங்களை எங்கே காண்பது எப்படிக் காண்பது என அலவுற்றுப் புலத்திறன் நெடுநோக்குகளால் நோட்டவலை விரித்துத் துழாவி வருகின்றனர்.

இத்தேடல்களுக்கு வழிகாட்டி ஆற்றுப்படுத்தும் அருந்துணையாகத் தம் வேர்ச்சொல்லாய்வு முறைகளை மொழிஞாயிறு ஞா.தேவநேயப் பாவாணர் உலக மொழிநூல் அறிஞர்க்குப் பெருந்துணைக் களஞ்சியமாக கொடையளித்துள்ளார். இது, ஞாலத்தாய்மொழியைத் தேட வேண்டாம்; தமிழே ஞாலத்தாய்மொழியென்று நிறுவுகின்றது. தமிழின் ஆணிவேர், பக்கவேர், சல்லி வேர்களை உலகமொழிகள் அனைத்திலுமுள்ள வினையடி மூலங்களோடு ஒப்பிட்டால் மூலத்தாய்மொழியாகிய தமிழினின்றும் அவை எக்காலத்தில் எவ்விடத்தில் எவ்வகையில் முகிழ்த்துக் கிளைத்துத் தனித்து வளர்ந்தன என்னும் பூட்டாப்புகளுக்குத் தக்க விடை கிடைக்கும்.

அடுத்து, முதல் தாய்மொழியாகிய ஞால முதன்மொழி எப்படித் தோன்றியது என்பதைச் சுட்டடிக் கொள்கையால் விளக்கியுரைத்த பெருமையும் மொழிஞாயிறு பாவாணரைச் சாரும்.

இத்துறையில் உலக அறிஞர்கள் பலரும் பாடாற்றி முதல் தாய்மொழியைக் காண வகுத்தளித்த கருதுகோள்கள், எடுகோள்கள் (hypothesis and theories) பற்பல. சோவியத்துநாட்டு நொசுட்டிராடிக் (Nostrotic) கோட்பாடுகள், கிரீன்பர்க் போன்றோரின் வழிகாட்டு நெறிமுறைகள், சவுத்வொர்த்து, சிம்சுலில்லியம் பாட்ரிக்கு, இலெவிட்டு போன்றோரின் முந்துமொழி மீட்டமைப்பு முயற்சிக் கொள்கைக் குறிப்புகள், அமெரிக்க நாட்டு மொழியியல் வல்லுநர் சோம்சுகியின் உளநூல் அடியொற்றிய மொழித்தோற்றக் கோட்பாடுகள் ஆகியவை பாவாணரின் முதல் தாய்மொழிக் கோட்பாடுகளை முற்றிலும் ஒத்திருப்பதைக் காணலாம்.

முதல்தாய்மொழியின் தனிநிலையாகிய அசைநிலைத் தன்மையைச் சீனமொழிக் குடும்பத்திலும், அதற்கு முந்திய ஒட்டுநிலைப் பாங்கைத் திரவிட மொழிகள் உள்ளடங்கிய ஒட்டுநிலைக் குடும்பமொழிகளிலும் அதற்கடுத்த உட்பிணைப்பு நிலையை ஐரோப்பிய மொழிகளிலும் காணக் கூடுவதால், மொழிக்குடும்ப

வளர்ச்சியின் மூன்று படி நிலைகளை ஒப்பிட்டு இணைந்தாய்ந்து படிமுறை இலக்கணக் கட்டமைப்புத் திரிபுகளுக்கான நெறிமுறைகளை வகுத்தளிப்பதும் – திட்ட நுட்பமாகப் பண்டைத் தமிழின் வேரடிகள் தொன்மையாலும் பொருண்மையாலும் ஆலமரமாக விரிந்து உலக மொழிகளாக விழுதூன்றிய வகைமையை விளக்கிக் காட்டும் நெடிய வரலாற்று நெறிமுறைகளைத் திட்டப்படுத்துவதும், தமிழிலிருந்து திரவிட மொழிகள் கிளைத்த நெறிமுறைகளையும், தமிழ் வேரடிகளிலிருந்து இன்றைய தமிழ்ச் சொல்வளம் விரிந்த பாங்கை நெறிமுறைகள் வாயிலாகப் புலப்படுத்துவதும் தமிழ்ச்சொற்பிறப்பியல் நெறிமுறைகள் என்னும் இந்நூலின் நோக்கமாகும்.

மொழி என்பது எது என்னும் வினாவிற்கு முதலில் விடை காண வேண்டும். உருவெழுத்தே மொழியென்பாரும் ஒலியமைப்பாகிய பேச்சே மொழியென்பாரும், எண்ணமே மொழியாக வெளிப்படுதலின் எண்ணமே மொழியென்பாரும் தத்தங்கருத்தே வலிவுடையது என்பர்.

எம்மொழியிலும் மரபிலக்கண நூல்கள் எழுத்தும் ஒலிப்புமே மொழி மூலமாகக் கொண்டு எழுத்துக்கும் சொல்லுக்கும் இலக்கணம் கூறுகின்றன. அதுவும், இலக்கணம் எழுதப்பட்ட காலத்து மொழிநிலையைக் காட்டுவதாகவே அமைகிறது. அண்மையில் மேலைநாடுகளில் வளர்ந்துள்ள மொழியியல் நூலார் உலகில் பேசப்படும் எம்மொழியாயினும் அதன் ஒலியன், உருபன், தொடரியல், பொருட்பாடு ஆகியவற்றை உள்ளது உள்ளபடி எடுத்துக்கூறும் பாங்கைப் புதிய இலக்கண மரபாகக் கொண்டுள்ளனர். எந்த மொழியையும் அதன் தோற்றக் காலத்திலிருந்து ஆராய்வதும் சொற்பிறப்பு காண்பதும், அதற்கான நெறிமுறை வகுப்பதும் அவர்களுடைய நோக்கமன்று.

சொற்பிறப்பு என்பது உலகில் எந்தப் பல்கலைக்கழகத்திலும் ஒரு பாடமாகப் பயிலப்படுவதுமில்லை, பயிற்றுவாரும் இலர். ஆதலின் இஃதோர் புதிய புலத்துறை.

குறிப்பிட்ட ஒரு மொழியில் கூட அனைத்துச் சொற்களுக்கும் சொற்பிறப்பு காணும் முயற்சி உலகில் தமிழ் தவிர வேறெந்த மொழியிலும் மேற்கொள்ளப்படவில்லை. ஆங்கிலத்தில் பத்து இலக்கம் சொற்கள் இருப்பதாகக் கூறுகின்றனர். ஆங்கிலத்தில் இதுவரை வெளிவந்த ஐந்து சொற்பிறப்பியல் அகரமுதலிகளில் சற்றொப்ப முப்பதாயிரம் சொற்களுக்கு மேல் இடம் பெறவில்லை. ஒரு மொழியில் புகுந்த கடன் சொற்களுக்கு மட்டும் அயற்சொல் மூலம் காட்டுவதே சொற்பிறப்பு என எண்ணியுள்ளனர். வேர்மூல ஆராய்ச்சி அம்மொழியாளரிடம் இன்மையான் தாய்மொழிச் சொற்களுக்குச் சொற்பிறப்பு கூற இயலவில்லை. தமிழ் ஒன்றே வேர் மூலங்களைப் பொருள் வளர்நிலைப்பாடுகளுடன் தக்க வைத்துக் கொண்டிருப்பது பாவாணர் ஆய்வால் வெளிப்பட்டுள்ளது.

சொல்லையும் அதன் பொருளையும் தனித்தனியாக ஆராய்வது மொழியியலார் கோட்பாடு. அது தவறு என்றும் சொல்லையும் பொருளையும் ஒரு சேர ஆராய வேண்டும் என்றும் உறுதிப்படுத்தியவர் பாவாணர். இது பண்டைத் தமிழிலக்கண நெறி என்பதைத் தொல்காப்பியமும்

"பொருண்மை தெரிதலும் சொன்மை தெரிதலும்

சொல்லி னான் என்மனார் புலவர்"

என்று குறிப்பிட்டிருக்கிறார்.

ஆகவே மரபிலக்கணமும் மொழியியலும் சொற்பிறப்புகாண முழுமையாக உதவாத நிலையில் வேர்ச்சொல்லாராய்ச்சியே சொற்பிறப்புகாண முற்றிலும் உதவுகிறது. வேர்ச்சொல்லாராய்ச்சி எந்தெந்த வகைமைகளில் தாய்மொழியில் சொற்பிறப்பு காணவும் இனமொழிகள் தாய்மொழியிலிருந்து கிளைத்த நெறிப்பாடுகளை உணர்த்தவும் முதல் தாய்மொழியிலிருந்து உலகமொழிக் குடும்பங்கள் கிளைத்த நெறிமுறைகளை உணர்த்தவும் உதவுகிறது என்பதை விளக்கிக் காட்டுவனவே சொற்பிறப்பு நெறிமுறைகள்.

சொற்பிறப்பு அகரமுதலி தொகுப்போர் பெரும்பாலும் சொற்பிறப்பு நெறிமுறைகள் எழுதுவதில்லை. ஆங்கிலத்தில் கீற்று (Skeat) பெருமகனார் ஒருவரே ஒற்றை மடல ஆங்கிலச் சொற்பிறப்பு அகரமுதலிக்கு இரட்டை மடலச் சொற்பிறப்பு நெறிமுறைகள் எழுதி வெளியிட்டார். மொழிஞாயிறு பாவாணரும் தமிழில் உருவாக்கும் பன்மடலச் சொற்பிறப்பு அகரமுதலிக்கு இலக்கணமாகப் பன்னிரண்டாம் மடலத்தைத் தமிழ்ச் சொற்பிறப்பு நெறிமுறைகள் மடலமாக வெளியிடத் திட்டப்படுத்தினார்.

அவர் திட்டப்படுத்தியதற்கேற்ப பன்னிரண்டாம் மடலம் சொற்பிறப்பு நெறிமுறைகளாக வெளிவருகிறது.

சுட்டடிக் கொள்கையிலிருந்து முதல் தாய் மொழியாகியத் தமிழ் தோன்றிய நிலைகளையும் அற்றைக் காலம் முதல் இற்றைக்காலம் வரை தமிழ்மொழியில் சொற்கட்டு இலக்கணப் பாங்குகள் தமிழிலிருந்து திரவிட மொழிகள் கிளைத்த பாங்குகள் ஆகியவை முதற்பகுதியாகவும், தமிழிலிருந்து உலக மொழிக் குடும்பங்கள் கிளைத்த பாங்கு இரண்டாம் பகுதியாகவும் அமையும். முதற்பகுதி வேர்ச்சொல்லாய்வு வகையிலும் இரண்டாம் பகுதி மொழியகழ்வாராய்ச்சி வகையிலும் ஆராயப்படும்.

**சொற்பிறப்பு:**

சொற்பிறப்பு காண்பதற்கான அடிப்படையான அலகுகள் இரண்டு.

1. வேர்மூலச் சொற்பிறப்பு (Root tracing Etymology)

2. வடிவ மீட்டமைப்புச் சொற்பிறப்பு (Reconstruction Etymology).

வேர்மூலம் காண்பதற்கு வேர்மூலச் சொற்பிறப்பு நெறிமுறைகளும், வடிவ மீட்டமைப்பு செய்வதற்கு வடிவ மீட்டமைப்பு நெறிமுறைகளும் தனித்தனி வகுக்கப்பட்டுள்ளன. இதுபோன்றே இயற்சொல். திரிசொல். திசைச்சொல், வடசொல் ஆகியவற்றுக்கு மரபிலக்கணத்தில் வரையறை தரப்பட்டுள்ளன. கடன்சொல். அயற்சொல், தாய்மொழியிலிருந்து பிறமொழிக்குச் சென்று உருமாறி மீண்டும் தாய்மொழிக்கே வந்த

உருமாற்றச்சொல் ஆகியவற்றின் இயல் வரையறை தரப்பட்டுள்ளது. தமிழ்ச் சொல் வடசொல் வரையறை திட்டப்படுத்தப்பட்டுள்ளது.

சொற்றிரிபுப் பாங்குகளும் பொருள்திரிபுப் பாங்குகளும் பல்வேறு குறுந்தலைப்புகளில் தனிச்சொல் கூட்டுச் சொல்லாட்சிகளில் இடம் பெற்றுள்ள வகைமைகள் ஆராய்ந்து அவற்றுக்கான நெறிமுறைகள் வகுக்கப்பட்டுள்ளன. இவை முதல் தாய்மொழியின் தோற்றத்திற்கும் அதிலிருந்து உலகக் குடும்பமொழிகள் பிரிந்ததற்கும் தக்க நெறிமுறைகளை நுட்பமாக வரையறுக்கக் கூடியவை.

வேர்மூலங்களையும், வடிவ மீட்டமைப்புகளையும் உன்னிப்புகள் என்று சொல்ல இயலாவண்ணம் சொற்பொருளாட்சிகளின் அடிப்படையிலும் ஏரண அடிப்படையிலும் பொருட்பாட்டுத் திரிபுகளும் சொற்றிரிபுகளும் அமைந்திருப்பதைத் தெளிவான எடுத்துக்காட்டுகளோடு நெறிமுறைகள் விளக்குகின்றன.

ஒரு சொல் பல பொருள் தருவதாயின் அச்சொல்லின் வேரடியே பல பொருள் தரும் பொருட்பாங்குடையதாயிருக்கும். வேரடிக்குப் பல பொருள்கள் வந்த வகைமை ஏரண வழிப்பட்ட பொருட்பாட்டு விரிவுக்கு இடந்தரும் "எண்ணமே மொழி" என்னும் தலைப்பிலுள்ள நெறிமுறைகளால் விளக்கப்படுகிறது.

எண்ணம் என்பது காரணகாரியத் தொடர்புடையது. மனத்தின் செயற்பாடு தொடர் சங்கிலி போன்றது. எண்ணத்தின் அலைவீச்சுக்கு எட்டிய பொருள்கள் அனைத்தும் அந்த எண்ணத்தைச் சுமந்து பழக்கப்பட்ட வேர்ச்சொல்லுக்குள் ஒடுங்கியிருக்கும். எந்தப் பொருள் வேறுபாடு வேறுபடுத்திக் காட்டப்பட வேண்டுமோ அந்த நேரத்தில் தேவையான சொல்லாக்க ஈறுகள் அல்லது முன்னடைகளைப் பெற்று குறிப்பிட்ட பொருள் வேறுபாடு காட்டும் சொல்லை அந்த வேரிலிருந்து படைத்திட்டுக்கொள்ளும் ஆற்றலைத் தானாகவே மாந்த மனம் பெற்றிருக்கிறது.

சொற்றிரிபுக்கும் பொருள் தொடர்புக்கும் உள்ள தொடர்புகளும் நெறிமுறைகளால் திட்டப்படுத்தப்படுகின்றன.

1. சொல் திரிந்து பொருளும் திரியும் சொற்கள்

2. சொல் திரியாமலும் பொருள் திரியாமலும் உள்ள சொற்கள்

3. சொல் திரிந்து பொருள் திரியாத சொற்கள்

4. சொல் திரியாமல் பொருள் திரிந்த சொற்கள்

5. சொல்லை நலிந்தும் வலிந்தும் ஒலிப்பதால் பொருள் வேறுபாடு காட்டும் சொற்கள்

6. சொல்லைப் பலுக்கும் உணர்ச்சிப்பாங்கால் பொருள் வேறுபாடு காட்டும் சொற்கள்

7. சொல்லில் அசையழுத்தம் தருவதால் பொருள் வேறுபடும் சொற்கள்

8. இட வழக்குகளால் பொருள் வேறுபடும் சொற்கள்

9. பல்வேறு நம்பிக்கைகளினால் தம் பொருளிழந்து வேறு பொருள் சுமந்த சொற்கள்.

வேர் மூலம் காண்பது எப்படி, வடிவ மீட்டமைப்பது எப்படி என்னும் விளக்கங்களும் நெறிமுறை விளக்கங்களிலேயே கூறப்பட்டுள்ளன.

தனிச்சொல்லின் சொல்லடிப் பொருளுக்கு அப்பாற்பட்ட பொருட் புலப்பாடு ஆகுபெயரென்றும், கூட்டுச்சொல்லின் நேரடிப் பொருளுக்கு அப்பாற்பட்ட பொருட்புலப்பாடு அன்மொழித்தொகை என்றும் தொடர்ச்சொற்களின் வெளிப்படைப் பொருளுக்கு அப்பாற்பட்ட பொருட்புலப்பாடு குறிப்பு என்றும் மரபிலக்கண வல்லோரால் குறியீடு செய்யப்பட்டுள்ளன. இவற்றுக்குள் கட்டுப்படாத பொருட்புலப்பாடுகளுக்குப் பொருண்மை தெளிவு காட்டும் புதுநெறிமுறைகள் பொருட்பாட்டு நெறிமுறைகளில் சேர்க்கப்பட்டுள்ளன.

## ஆய்வுத் தொடக்கம்:

மொழிஞாயிறு ஞா. தேவநேயப்பாவாணர் தம் சொல்லாராய்ச்சியைத் தொடங்கி, செந்தமிழ்ச் செல்வியில் சூன், 1931 மொழியாராய்ச்சி எனும் கட்டுரை எழுதினார். கட்டுரை வரைவியல் (1936), ஒப்பியன் மொழி நூல் (1948), வேர்ச்சொல் சுவடி ஆகியவை அடுத்து வெளிவந்தன. தன் வேர்ச்சொல்லாய்வு குறித்துச் சிலர் அகமகிழ்வு கொள்வதையும் சிலர் புறக்கணித்து வெறுப்பதையும் பாவாணர் பெரிதாக எடுத்துக் கொள்ளவில்லை.

"மொழிநூற் கலை உலகில் தோன்றி இருநூற்றாண்டுகள் ஆயினும் இன்னும் இது குழந்தைப் பருவத்திலேயே இருப்பதையும் இந்தியர்க்குப் பெரும்பாலும் தெரியாதிருப்பதையும் நோக்குமிடத்து எனது மொழிநூல் முடிபை வெறுப்பாரை நோக்கி வருந்துவதற்கு எள்ளளவும் இடமில்லை. சென்ற நூற்றாண்டின் முற் பகுதியில் உலக முழுமைக்கும் மொழிநூல் கதிரவனாய் விளங்கிய மாஃசு முல்லரைக் கூட, பலர் விதப்பாய் அமெரிக்கர் குறைகூறியும் கண்டனங்கள் செய்தும் வந்தனர். என் கட்டுரைகளைக் குறை கூறி, என் முடிவுகள் முன்னிலும் வலியுறுமாறு செய்த நண்பர் பலர்க்கும் யான் மிகவும் கடப்பாடு உடையேன்" என்றே (29.1.1990) பாவாணர் குறிப்பிட்டுள்ளார்.

பாவாணர் எழுதிய வேர்ச்சொற் கட்டுரைகள் சொற்களின் திரிபையே காட்டிச் செல்கின்றன என்றும் அவை ஆய்வு நெறிமுறைகளை எடுத்துக் கூறவில்லை என்றும் அதனால் அவை அறிவியலின் பாற்பட்டனவல்ல யென்றும் குறை கூறுகின்றனர். 1938 இல் கீற்று (Skeat) எழுதிய ஆங்கிலச் சொற்பிறப்பியல் நெறிமுறைகள் (Principles of English Etymology) இரு மடலங்களைக் கருத்தூன்றிப் படித்தேன். நான், ஒவ்வொரு சொல்லும் அசையும் எழுத்தும் தோன்றுதலுக்கும் திரிதற்கும் கெடுதற்கும் நெறிமுறைகள் தொகுத்து 'செந்தமிழ்ச் சொற்பிறபியல் நெறிமுறைகள்' எனும் தலைப்பில் நூல் எழுதி வைத்தேன். அந்நூலைவெளியிட வாய்ப்பின்றி பூச்சியரித்து கெட்டுப் போய்விட்டது. ஆயினும் இன்று அதனினும் சிறந்ததொன்று தொகுக்க இயலும் எனப் பாவாணர் குறிப்பிட்டார். 1975 முதல் 1981 வரை நான் அவருடன் இருந்த காலத்தில் நானும் இதனை நினைவுப்படுத்திகொண்டிருந்தேன். 'அனைத்துத் தொகுதிகளையும் வெளியிட்ட பின்னர் தொகுத்து வெளியிடலாம். என் நூல்களில் குறிப்பாக வேர்ச்சொற் கட்டுரைகளிலிருந்தே எழுத்தும் சொல்லும் திரியும் நெறிமுறைகளை வகுத்துக் கொள்ளலாம்' என்றார். ஆனால், 1981 இல் எதிர்பாராத வகையில் இயற்கை எய்தினார்.

சொற்பிறப்பு குறித்து அவரோடு நான் உரையாடி எழுதி வைத்திருந்த குறிப்புகளும் உலமொழிகள் பலவற்றுக்கும் எழுதப்பட்டுள்ள சொற்பிறப்பியல் நெறிமுறைகளும் வளர்ந்து வரும் மொழிப் பாங்குகளும் பழந்தமிழின் மரபிலக்கணக் கூறுகளும் பற்றுக் கோடாக நின்றமையின் பாவாணரின் குறிக்கோட் பணியாகிய செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் நெறிமுறைகளை நான் தொகுத்துள்ளேன்.

இப்பணிக்குத் துணையாக நின்ற அகரமுதலித் திட்டப் பணியாளர்களுக்கு நன்றியுடையேன்.

பாவாணர் விட்டுச் சென்ற பணிகளைச் செய்வதற்கு அவருடைய நூல்களே மூலவாயில்களாக கிடைத்தன. குறிப்பாகத் தமிழ் வரலாறு இயற்தமிழின் அடிப்படையான பெயர், வினை, இடை, உரிச்சொல் கட்டமைப்புகளை விளக்கிச் செல்கிறது. முதல் தாய்மொழி பொருட்பாட்டு நெறியை (Semantics) விளக்குகிறது, வேர்ச்சொற் கட்டுரைகள் சுட்டடி வழி வந்த வேரடிகள் சொற்றிரிவாகவும் பொருள்திரிவாகவும் மொழி தோன்றிய காலத்திலிருந்தே பெற்ற மொழி வளர்நிலைகளைக் காட்டுகின்றன, ஒப்பியன் மொழிநூல் தமிழ் வேர்ச் சொற்களும் அடிப்படைச் சொற்களும் உலக மொழிகளில் ஊடாடித் தமிழின் தலைமையும் தாய்மையும் காட்டி நிற்பதை நிறுவுகின்றது. மொழிகளை ஆராய்வது என்பது உண்மையில் சொற்களை ஆராய்வதாகும். மக்களைப் போன்றே சொற்கள் இனம் இனமாகக் கொடிவழி (genelogical) முறையில் இயங்குகின்றன.

**சொற்பிறப்பியல் நெறிமுறையின் தேவை:**

உணர்த்த உணரும் உலகம் இது. உண்மை எனத் தெரிந்தவற்றையும் "இதுதான் உண்மை" என அதனை முடிய ஐயப்பாடுகளை அகற்றி வெளிச்சமிட்டுக் காட்ட வேண்டியுள்ளது, மேலை நாட்டாரும் ஆரியச்சார்பினரும் கொண்ட மொழியியல் கொள்கைகளில் தவறானவற்றைச் சுட்டிக் காட்டிச் சரியனவற்றைத் தக்க சான்றுகளொடு நிறுவும் பணியில் மொழிஞாயிறு பாவாணர் வெற்றி கண்டார். அவர் கண்ட சொற்பிறப்புக் கோட்பாடுகளின் அடிப்படையில் அவரே வகுத்துக் காட்டிய சொற்பிறப்பியல் பாங்குகள் அவருடைய நூல்களில் பரந்து காணப்படுகின்றன. அவற்றை வெளியுலகிற்கு எவரும் முறையாக வெளிப்படுத்திக் காட்டவில்லை.

பாவாணர் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி தொகுக்கும் பணியில் அமர்த்தப்பட்ட போது தேராதூனில் நடைபெற்ற மேலை நாட்டு மொழியியல் பயிற்சிக்கு அனுப்பப்பட்டார். அப்பயிற்சியில் உடன் மாணக்கராக இருந்த ஒரிசா நாட்டு மொழியறிஞர் பட்நாயக் என்னொடு பேசும் போது, "பாவாணரொடு பழகி அவர் சொல்லாய்வு முறைகளைக் கேட்டறிந்தேன். அவை முற்றிலும் புதிய நோக்கில் உலக முதன்மொழியை நிறுவ வழிகாட்டுபவையாக உள்ளன. அவருடைய நெறிமுறைகளைத் தொகுத்து வெளியுலகின் பார்வைக்குக் கொணர்ந்தால் தமிழின் அருமை உணரப்படுவது மட்டுமன்றி உலக மொழிகளின் முந்துநிலை ஆராயவும் உண்மையான வேர்ச்சொல் காணவும் வழிவகுக்கும். இப்பணி காலத்தின் கட்டாயம், இன்றைய உடனடித் தேவை, பாவாணருக்குப் பின் பொறுப்பேற்றுள்ள நீங்கள் செய்வீர்களா என்றார். உறுதியாகச் செய்து முடிப்பேன் என்றேன்", இதன் தேவையை அவர் உலகுக்கு உணர்த்தினார்,

**சொற்பிறப்பியல் நெறிமுறையின் நோக்கம்:**

விளைபயிருக்கு உரமிட்டு நீர்பாச்சுகிறோம், களையெடுக்கிறோம், காவலிருந்தாலும் வேலியிடுகிறோம். இத்தகைய பணிக்கூறுகள் மொழியின் வளர்ச்சிக்கும் காப்புக்கும் தேவைப் படுகின்றன, பயிரை முறையாகக் காத்தால் நல்ல விளைச்சல் காணமுடிகிறது, மொழியை முறையாகக் காத்தவர்கள் அதன் பயனை நிறைவாகப் பெற்றிருக்கிறார்கள். இதற்குச் சான்றாகப் பண்டைக் காலத்து தமிழ், சமற்கிருதம் உள்ளிட்ட ஆறு செம்மொழிகளையும் இன்றைய நிலையில் உலகெலாம் கோலோச்சும் ஆங்கிலத்தையும் சான்றாகக் காட்டலாம், இதனைக் கருத்திலிருத்திய பாவாணர் "தமிழ் உயர்ந்தால் தமிழன் உயர்வான்" என்றார்.

சொற்பிறப்பு தொடர்பாக உலக அறிஞர்களின் ஆய்வுகள் அனைத்தும் ஒன்று விடாமல் கூர்ந்து ஆய்ந்த பாவாணர், அவை இயன்மொழியாகவும் ஞாலமுதன்மொழியாகவும் தோன்றிய செந்தமிழை ஆய்வதற்குத் தக்க அளவுகோல்களாக அமையவில்லை எனக்கண்டறிந்தார்.

சொற்பிறப்பு ஆராய்ச்சில்தான் கண்டறிந்த ஆராய்ச்சி நெறிமுறைகளைச் சுட்டடிக் கொள்கை வாயிலாகத் தன்னுடைய நூல்களில் வெளிப்படுத்திக் காட்டினார், குறிப்பாகச் சொல்லின் முந்து வடிவில் மூலவேர் இதுவென அவர் வரையறுத்து காட்டினார்.

அவர் காட்டியிருப்பதன் வண்ணம் தமிழின் இலக்கிய வழக்கிலும் உலகியல் வழக்கிலும் சொல்லாட்சியின் வேர் மூலங்கள் கலந்துள்ளவை என உறுதிப்படுத்துவதற்குச் சொற்பிறப்பியல் நெறிமுறைகளை மேற்கோளாகக் காட்ட வேண்டியுள்ளது. முழுமையான தெளிவை உண்டாக்குவதுதான் நெறிமுறையின் நோக்கம்,

சொற்பிறப்பியல் ஆய்வு செய்வோர் சொற்களை மட்டும் ஆய்ந்தால் போதாது. மொழி பண்பாடு வரலாறு ஆகிய மூன்றும் ஒன்றிலிருந்து ஒன்று பிரிக்க முடியாதவை, மொழியைப் பேசும் மக்கள் வாழ்வில் பண்பாடும் வரலாறும் பிணைந்திருப்பது போன்று மொழியிலும் அக்கூறுகள் அகப்படிவுகளாக (fossil) உட்புதைந்துள்ளன, அவற்றையும் ஒரு சேர ஆராய வேண்டும் என மொழியகழ் வாராய்ச்சி வழி காட்டுகிறது.

<u>எ.டு.</u> 1) <u>சொல்லின் அடிப்படை</u>

சம்பளம் (சம்பா) நெல்லும் உப்புமாகக் கொடுக்கப் பட்ட கூலி. மக்களின் பண்பாட்டுக் கூறு.

E.<u>Salary</u> படை மறவர்க்கும் பிறர்க்கும் உப்பும் கூலியாகச் சேர்த்து தரப்பட்ட பண்பாட்டுக் கூறு.

அளம்: உப்பளம், உப்பு. அளம் – சளம் – salt. உணவில் உப்பு சேர்ந்துக் கொள்ளும் பழக்கம் ஒருமொழியினரிடமிருந்து ஏனைய மொழியினர்க்கும் பரவியதை இச்சொற் பரவல் காட்டுகிறது.

2) <u>சொல்லின் வரலாற்று அடிப்படையில்</u>

தமிழிலும் தமிழின மொழிகளிலும் பெரும்பாலும் உயிர் முதலாக இருக்கும் சொற்களில் சகரமெய் புதிதாகச் சேர்ந்து வடபுலத்தில் வட ஆரிய மொழிக்கூறுகளாகிவிடுகின்றன.

திரவிடர் எனும் தமிழினத்தார் வடக்கே இருந்து தெற்கே வந்தவர்கள் எனும் மேலை நாட்டு ஆய்வாளர்களின் முடிவால் ஏண் – சேண், உப்பு–சுப்பு எனும் சொற்களில் எது முந்தியது என்பதை வரலாற்று வழி இடப்பெயர்வின் தவறான கருத்தால் தவறான முடிவெடுத்து சகர நீக்கமும் தமிழ்ச் சொல் என்கின்றார்கள்.

சொல்லும் சொற்றொடரும், என்றும் இலக்கண வடிவு சிதையாதிருத்தற் பொருட்டு இலக்கணம் எழுதப்பட்டது. அந்நாள்முதலே தமிழ் கன்னித்தன்மையை இழக்காமல். இலக்கண வடிவு சிதையாமல் இருந்ததால் செந்தமிழ் எனப் பெயரிடப்பட்டது.

வண்ணனை நெறிநூலார் வரலாற்று ஆராய்ச்சி அடியொடு விட்டு விட்டமையால் பல குடும்ப மொழிகளின் மூலமொழி இருக்கும் போதே அதை அறியாது வேறொரு புதுமொழியைத் தேடுகின்றனர்.

<u>செந்தமிழ் எல்லை – திருத்தக்கல்</u>

தென்னாட்டில் யாரேனும் ஒருவர் இலக்கண வழுப்பட்டு பேசியதை வெறொருவர் திருத்தினால் திருத்தப்பட்டவர் திருத்தியவரை, "<u>இவர் திருத்தக் கல்லிற்குத் தெற்கிட்டுப் பிறந்தவர்</u>" என்று நகையாடுவது வழக்கம். இதனால், பண்டைய தமிழகத்தில் செந்தமிழ் வழக்கு எல்லையைக் குறிக்க எல்லைக் கல் நடப்பட்டிருந்தது என்பதும், தெற்கே செல்லச் செல்லத் தமிழ் சிறந்திருந்ததென்பதும் தெளிவாகிறது.

<u>விரிவான அகராதி ஒரு வரலாற்றுக் களஞ்சியம் (சொல். கல். பக்.28)</u>

மொழியின் சொற்கள் கூட வரலாற்றை வரையறுக்கும்(பக்:18) எனப் பாவாணர் குறிப்பிட்டார்.

The inner life of every people is stereotyped in their language and retained there for the instruction of future generations and teacher will signally fail if he does not evoke from the fossil elements of words much of national history/ customs and morals.

- English Word Book by John Graham.

**1. மூலத் தாய்மொழியின் தோற்றம்**

origin of the parent language of mankind.

(1.1) உலக மொழிகளுக்கெல்லாம் மூலத்தாய் மொழியாகிய முதல்தாய்மொழியில் அன்றாடு வழக்கில் ஆளும் மூவிடப்பெயர்த் திரிபுகள் ஆ, ஈ., ஊ எனும் முச்சுட்டுகளை அடிப்படையாகக் கொண்டிருக்கின்றன,

எ.டு. 1) தன்மை – நான்

த. ஆன் – யான் – நான்; ம. ஞான்; ஆத். ஙா; சீனம். ஙா; சமற். அஹம்.

2) முன்னிலை – நீ

த. ஈ, நீ; தெ. க. நீ; ஆத். நீ.

3) படர்க்கை

த. அவன், அவள், அவர், அது, அவை.

(1.2) உணர்ச்சி ஒலிகள் (emotional sounds)

உலக முதன்மொழியாகிய ஞாலத்தாய் மொழியின் தொடக்கக் கூறுகளாகும்.

எ.டு. ஆ, ஈ, ஊ, ஓ, ஐ.

(1.3) விளியொலிகள் (vocative sounds) ஞாலத் தாய்மொழியின் கூறுகளாகும்.

எ.டு. ஏ, ஏய், ஓ, ஓய், எலா, எல்லா.

(1.4) முச்சுட்டுகள் முதல் தாய் மொழியின் முதற் கூறுகளாகும்.

ஆ. ஈ. ஊ.

(1.5) குறிப்பொலிகள் (symbolic sounds) முதல் தாய்மொழியின் கூறுகளாகும்.

எ.டு. எழுத முடிவன

உம் – ஊம் (ஊம் கொட்டுதல்)

சீ, போ.

எழுத முடியாதன

மொச்சட்டம் (ச்,சொ)

வீளை (சீழ்க்கை)

விலங்குகளை விளிக்கும் ஒலிகள்

தோ தோ (நாய்); கூவோ (மேய்ச்சல் மாடு); போ போ (கோழி); வேசு வேசு (பூனை)

(1.6) குழவி (குழந்தை) வளர்ப்பொலிகள் (nursery sounds) முதல் தாய் மொழிக் கூறுகளாகும்.

எ.டு. இங் – இங்கா (பால்); டும் டும், பிப்பீ (விளையாட்டு ஒலிகள்)

(1.7) வாய்ச் செய்கை ஒலிகள் (gesticulatary sounds) முதல் தாய் மொழிக் கூறுகளாகும்.

எ.டு. ஆ = அங்காத்தல் (வாய் திறத்தல்)

ஆ – ஆகாட்டு.

அவ் – அவ்வு –கவ்வு – வவ்வு – வெளவு.

xÈ¢brŒiffŸ (sound gestures) எனப்படும் ஒப்பொலிகள், வாய்ச்செய்கை ஒலிகள் ஆகியன குறில் நெடில் என இருவகை உயிரெழுத்துகள் தோன்றுவதற்கும் வல்லினம், மெல்லினம், இடையினம் என மூவகை மெய்யெழுத்து தோன்றுவதற்கும் ஒலிப்புறுகளுக்குப் பயிற்சி தந்து எழுத்துகளின் பிறப்பிடத்தை உறுதிப்படுத்தின.

எ.டு. ஒப்பொலி

கா (காக்கை); கீர் (கீரி); குறட் (குறட்டை)

வாய்ச்செய்கை ஒலி

ஆ, ஈ, ஊ, அவ்.

(1.9) முந்தியல் மாந்தன் வாயில் நெடில்களே முதலில் தோன்றின.

எ.டு.

ஆ, ஈ, ஊ, ஏ, ஓ, (அஇ) ஐ, (அஉ) ஔ

## மொழித்தோற்றம்:

தமிழின் முதன்மையை நிலைநாட்டுவதற்குப் பிற மூலங்களைக் காட்டிலும் மொழி ஆய்வே முழுமையாகவும் விளக்கமாகவும் பயன்படுகிறது. தமிழின் தோற்றத்தைப் பற்றிய ஆய்வு மொழித் தோற்றத்தைப் பற்றிய ஆய்வாக அமையும் என்பது மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர்தம் முடிபாகும். மொழித் தோற்றத்தைக் கருத்தடிப்படையில் ஆராய்ந்து அவர் சுட்டடிக் கொள்கையை நிலைநாட்டியுள்ளார்.

மொழியின் தோற்றத்தைப் பற்றிய ஆய்வு பல்வேறு காலக்கட்டங்களில் பல்வேறு வகையாக நடந்துள்ளது. என்றாலும் இதுவரை அனைவருக்கும் ஏற்புடைத்தான வகையில் அமையும் கருத்து உருவாகவில்லை. இவ்வாறு மொழித் தோற்றத்தைக் காண்பதற்கு இயலாததாக அமைவதற்கு மொழியை மனித எண்ணத்திலிருந்து பிரித்தறிய முடியாமை ஒரு காரணமாகும் என்பர். எண்ணமும் மொழியும், ஒன்றில்லை என்றால் மற்றொன்று இல்லை என்று சொல்லும் அளவிற்குப் பின்னிப் பிணைந்துள்ளன. ஆகையால், மொழித் தோற்றத்தையும் அதை எப்பொழுது, எப்படி மாந்தன் பேசினான் என்பதையும் அறிய முதலில் **மாந்தன் எப்பொழுது, எப்படி எண்ணக்கற்றுக்கொண்டான்** என்பதைக் காண வேண்டிய நிலை ஏற்படுகிறது.

## கருத்து:

கிரேக்க மொழியில் சொல்லைக் குறிக்கும் சொல் logos என்பதாகும். அங்கு இச்சொல் எண்ணம் என்ற பொருளையும் குறிக்கிறது. இவ்வாறு அம்மொழியில் ஒரே சொல் சொல்லையும் எண்ணத்தையும் குறிப்பது இவ்விரண்டும் ஒருசேர இணைந்திருக்கும் தன்மையைக் காட்டுகிறது எனக்கொள்ள வேண்டும். வயவர் சான் தம் நற்செய்தியின் தொடக்கத்தில் சொல் (கிரேக்கத்தில் logos)லைப் பற்றிக் குறிப்பிடுகையில் ஆண்டவர் மனத்தில் தொடக்கத்திலிருந்தே எண்ணமும் மொழியும் இருந்தன என்று குறிப்பிடுகிறார். இது போன்று வரும் சான்றுகள் பல சொல்லும் கருத்தும் ஒன்றோடு ஒன்று பின்னிப் பிணைந்து செயற்படுகின்றன என்பதைக் காட்டுகின்றன.

கருத்தில்லை என்றால் மொழி இல்லை என்றுதான் சொல்ல வேண்டும். அதே நேரத்தில் மொழியில்லை என்றால் கருத்து முழுவதுமாகத் தோன்றாது எனக் கொள்ள இயலாது. மொழி இல்லாமல் ஒரு சில கருத்துகள் தோன்றுகின்றன என்றாலும் **மொழியோடு தோன்றும் கருத்தே பலவாகப் பெருகி வளர்வதற்கு இடம்**

**தருகிறது.** அதனால்தான் சொன்மூலங்களை விளக்கும்பொழுது கருத்தடிப்படையில் ஆராய்ந்து தெளிவாக்குகிறார் பாவாணர்.

**சுட்டடி:**

சுட்டடிக் கொள்கையில் அ, இ, உ என்பனவே முதன்மை இடத்தைப் பெறுகின்றன. இச்சுட்டுகளும் முதலில் நெடிலாகத் தோன்றியிருக்க வேண்டும். பின்னரே அவை குறுகி சுட்டெழுத்துகளாகியுள்ளன. அதனால்தான் நெட்டெழுத்துகள் ஓரெழுத்து ஒரு மொழியாய் நின்று பொருள் உணர்த்துகின்றன. குற்றெழுத்துகளுக்கு ஓரெழுத்தாய் நின்று பொருளுணர்த்தும் தன்மை இல்லை. இக்கருத்தை

நெட்டெழுத்தேழே ஓரெழுத்தொரு மொழி (தொல்.எழுத்து. 43)

குற்றெழுத்தைந்தும் மொழி நிறைபிலவே (தொல்.எழுத்து.44).

என வரும் தொல்காப்பிய நூற்பாக்கள் உணர்த்தி நிற்றலைக் காணலாம்.

அ, இ, உ என்பனவற்றுள் சேய்மைச் சுட்டிலிருந்து சேய்மைக் கருத்து தவிர வேறொன்றும் பிறப்பதற்கு இடம் இல்லை. அண்மைச் சுட்டிலிருந்து அண்மை, பின்மை, இழிகை முதலிய ஒரு சில கருத்துகளே பிறக்கின்றன. ஆனால், முன்மைச் சுட்டிலிருந்து தோன்றல் (முன் வருதல்), முன்மை, முன்செல்லல், நெருங்கல், பொருந்தல், வளைதல், துளைத்தல், துருவல் ஆகிய எட்டு பெருங்கருத்துகளும் இவற்றிற்கு இடைப்பட்டனவும், இவற்றிலிருந்து கிளைத்தனவுமான எவ்வளவோ நுண்கருத்துகளும் பிறக்கின்றன.

**குறுக்கம்:**

நெட்டெழுத்துகள் குறுகி குறில்களான பின்னரே அவை மொழியில் வழக்கூன்றியுள்ளன. அவ்வகையில் குற்றெழுத்துகள் சொற்களாக அமையும் திறத்தனவாக அமையாதிருந்தாலும் சுட்டெழுத்துகளாக இடம் பெற்றுள்ளன.

அ, இ, உ அம்மூன்றுஞ் சுட்டு (தொல்.எழுத்து.31)

முந்தியுஃமாந்தன் தன் கருத்தை வெளிப்படுத்த சைகைகளைப் பயன்படுத்தியுள்ளான். பின்னர் சைகையுடன் வாயால் ஒலி எழுப்பியும் தன் கருத்தை உணர்த்த முற்பட்டுள்ளான். அவ்வடிப்படையில்தான் முச்சுட்டுகளும் மொழி வளர்ச்சிக்கு அடிப்படைகளாய் அமைகின்றன.

சுட்டிக் காட்டும் ஒலிகள் சுட்டொலிகள், சேய்மையைச் சுட்டுவதற்கு வாயை விரிவாய் திறந்து ஒலிக்க வேண்டும். அவ்வகையில் பிறப்பது ஆகாரமாகும். அண்மையைச் சுட்டுவதற்கு வாயைப் பின்னுக்கு இழுத்தொலிப்பது ஈகாரமாகும். சேய்மைக்கும் அண்மைக்கும் இடைப்பட்ட முன்மையைச் சுட்டுவதற்கு இதழ்களை முற்படக் குவித்தொலிக்க வேண்டும். இவ்வகையில் பிறந்ததே ஊகாரமாகும். இவை முறையே சேய்மை, அண்மை, முன்மை ஆகியவற்றைச் சுட்டும் ஒலிகளாகும். இந்தச் சுட்டொலிகளின் தோற்றமே தமிழின் கருநிலையாகும். இவையே முதன் முதலில் தோன்றிய உயிர்களாகும்.

**உகரச்சுட்டு:**

உகரச்சுட்டு வேர் தனித்தும் க,ச,த,ந,ப,ம என்னும் ஆறு மொழி முதலில் வரும் எழுத்துகளோடு கூடியும் வரும். ஞ,வ,ய மெய்கள் உகரத்தோடு சேர்ந்துமொழி முதலில் வாரா. ஆகையால் அவை பிற உயிர்களோடுதான் கூடி மொழி முதலில் வரும். இவ்வாறு வருபவற்றுள் பெரும்பாலானவை உகரச் சுட்டடிச் சொற்களின் திரிபுகளாக இருக்கும்.

உயிருகரம் முதலாக வருவது முதலடி. உயிர்மெய்யுகரமாக வருவது வழியடி. இவ்வகையில் ''உல் என்னும் முதலடி சொன் முதல் மெய்கள் ஆறொடு கூடி குல்,சுல்,துல்,நுல்,புல்,முல் என்னும் வழியடி களைத் தோற்றுவிக்கும்.

## வேர்:

திராவிட மொழிகளின் சொன் மூலங்களை ஆராய்ந்த திரவிட மொழியியலாளர்கள் திரவிடச் சொற்களின் வேர் வகைகளாக ஆறினைக் காட்டுவர். இந்த ஆறு வகை வேர்கள் ஓரெழுத்து, ஈரெழுத்து, மூன்றெழுத்து என்று மூன்று வகைகளாக அமையும். இம்மூன்றிலும் முதலெழுத்து குறில், நெடில் என இரு பிரிவாக அமைந்து ஆறாக அமைகின்றன. இவற்றில் ஓரெழுத்து வேர் தவிர மற்ற ஈரெழுத்து, மூன்றெழுத்து வேர்களில் முதலெழுத்தைத் தொடர்ந்து மெய்கள் வருகின்றன. ஈரெழுத்து வேரில் ஒரு மெய் மட்டும் அமைந்திருக்கும். மூன்றெழுத்து வேரில் மெய்யிணை இடம் பெற்றிருக்கும். இம்மூவகை வேர்களில் முதலெழுத்தாக உயிர் வரும் இல்லையேல் மெய்யுடன் கூடியதாக உயிர் வரும்.

## அறுவகை:

இவ்வாறு உயிர் அல்லது உயிரும் மெய்யுமாக வருவதைப் பாவாணர் குறிப்பிட்டுள்ள அறுவகை வழியடிகளுடன் தொடர்புபடுத்திக் காணலாம். உண்மையில் பாவாணர் குறிப்பிடும் வழியடி வேர்கள் மிகப் பழைய தன்மையனவாகும். திரவிட மொழிகளின் வேர் வகைகளாகக் காட்டும் இந்த ஆறு வகை இன்றைய மொழி நிலையை வைத்தும் ஆராய்ந்த முடிபாகும். இவை இரண்டிற்கும் தொடர்புபடுத்துவது அவ்வளவு பொருத்தப்பாடு இல்லை என்றாலும் உயிர் அல்லது **உயிரும் மெய்யுமாக** வேர் அமைவதை இவ்விரு சாரார் கருத்துகளும் உணர்த்தி நிற்பதைக் காணலாம்.

## இனமொழிகளில் வேர்:

பொதுவாக இனமொழிகளில் வேர்கள் ஒரே வகையாக இருக்கும். வேருடன் இணையும் சொல்லாக்க ஈறுகள், பாலீறுகள் முதலியன மொழிக்கு மொழி வேறுபட்டனவாக இருக்கும் என்றாலும் சில சொல்லாக்கங்கள் ஒரு மொழியின் திரிபுகளாக அமைதலும் உண்டு.

## கருத்துப்பெருக்கம்:

நாகரிகம் வளர வளர கருத்துகள் பெருகுகின்றன. அடிப்படைக் கருத்துகளிலிருந்து வேறுபட்ட பல கருத்துகள் தோன்றுகின்றன. இக்கருத்துகளைக் குறிக்கும் சொற்கள் பல்வேறு வகையில் திரிபடைகின்றன. இல்லையென்றால் பல பொருள் ஒரு சொல் (polysemy), பல சொல் ஒரு வடிவம் (homonymy) ஆகியன அதிகரித்துப் பொருள் மயக்கம் ஏற்படும்.

## சொல்லாக்க அடிப்படை:

ஒரு கருத்திலிருந்து மற்றொரு கருத்து தோன்றும்பொழுது ஒரு சொல்லிலிருந்து மற்றொரு சொல் பிறக்கும். தேவை ஏற்படுகிறது. கருத்து வேறுபடும்பொழுது சொல்லும் வேறுபட வேண்டும். இல்லையென்றால் பொருள் மயக்கம் உண்டாகும். மொழி வளர்ச்சியுறாது. இதுவே சொல்லாக்க அடிப்படை நெறிமுறை என்பார் மொழி ஞாயிறு தேவநேயப் பாவாணர். இவ்வடிப்படையில் சொல் மாறுவதற்கு அறுவகைத் திரிபுகள், முக்குறை, மும்மிகை முதலியன மொழியில் ஏற்படுகின்றன.

இந்தியாவில் சமற்கிருத மொழியுடன் உறவு கொண்ட மொழி வழிவந்தவர்களாகக் கருதப்படும் இந்தோ ஆரிய மொழிகளைப் பேசுவோர் பெரும்பான்மையோராக இருக்கின்றனர். ஆகையால், அக்குடும்பத்தை சேர்ந்த மொழிகளைப் பேசுவோர் எல்லோரும் ஆரிய மூலத்தின் வழிவந்தவர்கள் எனக் கருதும் நிலை இருந்து வருகிறது. ஆனால் உண்மை அவ்வாறு இல்லை. இந்தோ–ஆரிய மொழிகளைப் பேசுவோர்கள்–குறிப்பாக வங்காளம், பீகார், ஒரிசா, குச்சரம், மராட்டியம் ஆகிய பகுதிகளில் வாழ்வோரின் பெரும்பான்மை முன்னோர் ஆரியமல்லாத மொழிகளைக் குறிப்பாகப் பழந்திரவிட மொழிகளைப் பேசுபவர்களாக இருந்துள்ளனர். கடந்த இரண்டாயிரமாண்டுகளாக இந்தோ ஆரிய மொழிகளைப் பேசுவோர் எண்ணிக்கையிலும், பண்பாட்டிலும் ஆதிக்கப் பிரிவினர்களாக இருந்துள்ளனர். ஆகையால் ஆரிய அடையாளத்தைக் கொள்ளும் மனநிலை ஆரியமல்லாதவர்கள் பலருள் இருந்துள்ளது.

மூவாயிர ஆண்டுகளுக்கு முன் சமற்கிருதத்திற்கு மூலமான மொழியைப் பேசிய ஆரியர்கள் இந்தியாவில் இருந்த மக்களை நோக்க எண்ணிக்கையில் சிறுபான்மையினராக இருந்துள்ளனர். அவர்கள் நாகரிகம் அடையாத நாடோடி வாழ்க்கையினராக இருந்தனர். ஆனால் அன்று இந்தியாவில் இருந்தவர்களிடம் நாகரிகம் நன்கு வளர்ந்திருந்தது. ஆரியர்கள் குதிரைகளையும், தேர்களையும் கொண்டிருந்தனர். இங்கு இருந்த மக்களைக் காட்டிலும் இடம் விட்டு இடம் நகரும் இயல்பினராக இருந்தனர். அவர்களிடம் சில படைக்கலங்களும் இருந்துள்ளன.

ஆரியர்கள் இந்தியாவிற்குள் வடமேற்குப் பகுதியின் வழியே கி.மு.1500 அளவில் வந்தனர் என்று அறிஞர்கள் கருதுகின்றனர். திரவிட மொழிகளின் தாக்கம் இருக்குவேதக் காலத்திலேயே பழம் சமற்கிருதத்தின் மேல் ஏற்பட்டுள்ளது. பிற்காலத்தில் திரவிட மொழிகளின் தாக்கம் இன்னும் அதிகமாகவே இருந்துள்ளது. பிற்கால வேதங்களிலும் உரைகளிலும் வேதத்திற்குப் பின்னர் வந்த சமற்கிருத இலக்கியங்களிலும் இத்தாக்கம் மிகுதியாகவே இருந்துள்ளது.

ஆரியர்கள் இந்தியத் துணைக் கண்டத்தில் நிலைத்த பின், அவர்களது கிழக்கு ஐரோப்பாவிலுள்ள மூதாதையர்களான இந்தோ–ஐரோப்பியர்த் தொடர்பு முற்றும் அற்றுப்போய்விட்டது. மொழி, பண்பாடு போன்றவற்றில் பெருமளவு ஆரியமல்லாத் தன்மைகளைக் குறிப்பாகத் திராவிடத் தன்மைகளை அவர்கள் ஏற்றுக்கொண்டனர்.

ஆரியர்களைப் பற்றி தெரிந்த அளவிற்கு அவர்கள் வென்ற மக்களைப் பற்றி அறிய முடிவதில்லை.

வேதகால ஆரியர்கள் சில நூற்றாண்டுகள் தனியாக இந்தியாவின் வடமேற்குப் பகுதியில் இருந்து தங்களுக்குள் கலந்தாய்ந்து இந்து மதத்தினை உருவாக்கிக் கொண்டனர் என்று சிலர் கருதுகின்றனர். இக்கருத்தை இப்பொழுது அறிஞர்கள் ஏற்றுக்கொள்வதில்லை. இந்து மதத்தில் இவ்வியக்கத் தன்மைகள் குறிப்பாகத் திரவிடக் கூறுகள் பெருமளவில் இருக்கின்றன. ஆகையால் ஆரியர்கள் தங்கள் வேதகால மதத்துடன் இந்தியாவில் அப்பொழுது நிலவி வந்த தன்மைகளைக் குறிப்பாகத் திரவிடத் தன்மைகளை ஏற்றுக்கொண்டனர். இந்த அளவில் இன்றைய இந்து மதம் உருவாக்கம் பெற்றுள்ளது.

இந்தோ–ஐரோப்பியம், திரவிடம் என்னும் இரண்டு பெரிய குடும்ப மொழிகள் இந்தியாவில் பேசப்படுகின்றன. இந்தோ–ஐரோப்பியக் குடும்ப மொழிகள் வடஇந்தியாவிலும், நடுவண் இந்தியாவிலும் பெரும்பான்மையாகப் பேசப்படுகின்றன. திரவிடக் குடும்ப மொழிகள் பெரும்பான்மையான தென் இந்தியாவில் பேசப்படுகின்றன.

## சமற்கிருதத்தில் கலந்துள்ள தமிழிய (திரவிட)ச் சொற்கள்:

சமற்கிருதம் வேறு, தமிழிய மொழிகள் வேறு என்ற உண்மை நிலை உணர்ந்த பின் சமற்கிருதச் சொற்கள் தமிழியச் சொற்கள் ஆகியனவற்றைப் பிரித்துக் காட்டுவதற்குப் பல அறிஞர்கள் முயன்றுள்ளதை நாம் அறிவோம். சமற்கிருதச் சொற்களாகக் கருதப்பட்ட பல சொற்கள் தமிழியச் சொற்களாக இருப்பதைப் பல அறிஞர்கள் விளக்கியுள்ளனர். மேனாட்டறிஞர் முனைவர் கிற்றல் தம் கன்னட – ஆங்கில அகரமுதலியில் வடமொழிச் சொற்களாகக் கருதப்பட்டவற்றுள் பல தமிழியச்சொற்களாக இருப்பதை எடுத்துக்காட்டியுள்ளார். இதைப்போல் முனைவர் குண்டர்ட்டு தம் மலையாள –ஆங்கில அகரமுதலியில் பல தமிழியச் சொற்களை இனங்காட்டியுள்ளார். இவை போன்று உள்நாட்டு வெளிநாட்டு அறிஞர்கள் பலர் தமிழியச் சொற்களைச் சமற்கிருதச் சொற்களினின்று பிரித்துக் காட்டியுள்ளனர். சமற்கிருத மொழிச் சொற்களஞ்சியத்தில் உள்ள தமிழியச் சொற்களை எவ்வாறு இனம் கண்டு கொள்வது என்பதற்கு முதன்முதலில் தமிழியமொழிகளுக்கு ஒப்பிலக்கணம் வரைந்த முனைவர் கால்டுவெல் பெருமகனார் ஐந்து நெறிகளைக் குறிப்பிட்டுள்ளார். (Caldwell 1913:566,577).

1. ஒரு சொல் சமற்கிருதத்தில் வேர் மற்றும் ஆக்கம் (*derivative*) இல்லாமல் தனிப்பட்டதாக இருந்து தமிழிய மொழிகளில் வேருடனும், ஆக்கத்துடனும், பல சொற்கள் கிளைத்தும் காணப்பட்டால் அச்சொல்லைத் தமிழியச் சொல் என்று துணியலாம்.

2. ஒரு பொருளை அல்லது கருத்தைக் குறிக்க சமற்கிருதத்தில் பல சொற்கள் இருக்க தமிழிய மொழிகளில் அப்பொருள் அல்லது அக்கருத்தைக் குறிக்க ஒரு சொல் மட்டும் இருந்தால் அதைத் தமிழியச் சொல்லென்று துணியலாம்.

3. ஒரு சொல் சமற்கிருதம் சார்ந்த இந்தைரோப்பிய மொழிகளில் இல்லாமலிருந்து திருந்திய, திருந்தா தமிழிய மொழிகளில் காணப்பட்டால் அச்சொல்லைத் தமிழியச் சொல்லென்று கூறலாம்.

4. ஒரு சொல்லின் ஆக்கம் சமற்கிருதப்புலவர் வலிந்து சொல்லியுள்ளதாகவும் அச்சொல்லின் ஆக்கம் தமிழிய மொழிகளில் இயல்பான வினைவடிவத்தினின்று அல்லது வேறு வடிவத்தினின்று பெற்றதாகவும் அதிலிருந்து உருவான சொற்கள் பல தமிழிய மொழிகளில் இருப்பின் அதைத் தமிழியச் சொல்லென்று கூறலாம்.

5. ஒரு சொல் தமிழிய மொழிகளில் நேரிதாகவும், நேர்த்தொடர்பு உள்ளதாகவும் இருக்க சமற்கிருதத்தில் அது உருவகப் பொருளாகவும் நேர்த்தொடர்பு இல்லாததாகவும் இருந்தால் அதைத் தமிழியச் சொல் என்று துணியலாம்.

இக்கருத்துகள் அடிப்படையில் ஒரு சொல்லின் தமிழியத் தன்மையை வேர், வேரினின்று ஆக்கம் பெற்றுள்ள வடிவம், வினைவடிவம், தமிழியக் குடும்ப மொழிகளுள் காணப்படும் இயல்பு ஆகிய தன்மைகளைக் கொண்டு வரையறுக்கலாம். அதே நேரத்தில் சமற்கிருதத்தில் உருவகமாகச் சொல்லப்படும் நிலை, வலிந்து கூறும் வேர், இந்தைரோப்பிய மொழிகளின் இனச்சொல் ஆகியவற்றையும் பார்க்க வேண்டும்.

சமற்கிருதத்தில் சிறப்பெழுத்துகளாக வரும் ஸ,ஜ,ஷ,ஹ போன்றவற்றுடன் அமைந்த சொற்கள் பல இவ்வாறு பிரிக்க முனைபவர்களைக் குழப்பத்தில் ஆழ்த்திவிடுகின்றன. இவ்வெழுத்துகளுடன் காணப்படும் சொற்களை ஆராயாமல் எடுத்த எடுப்பிலேயே சமறகிருதச் சொற்கள் எனச் சொல்லும்போக்கு பல இடங்களில் இருந்து வருகிறது. ஆனால் உண்மையில் இது சரியான கணிப்பைத் தருவது இல்லை. தத்பவமாகக் காட்டப்பட்டுள்ள பல சொற்கள் தமிழிய வேர் அடிப்படையில் தோன்றியதாகவும் பின்னர் சமற்கிருதம் தன் அமைப்பிற்கேற்ப மாற்றம் செய்துள்ளதாகவும் இருக்கின்றன. ஆகையால் இவ்வடிவங்களையும் நன்கு ஆராய்ந்து, பார்த்துத்தான் அவற்றின் தன்மைகளைக் கூற வேண்டும்.

பெரும்பாலும் திருந்தாத தமிழிய மொழிகளில் சமற்கிருதத்தின் தாக்கம் மிகமிகக் குறைவு. இப்பொழுது இல்லை என்றாலும் இதற்கு முன் ஒரு வகையான தனிமைப்பட்ட நிலையில் திருந்தாத் தமிழிய மொழிகள் இருந்துள்ளன. இந்த அடிப்டையில்தான் நீலமலை மொழிகளை இனக்குழு மொழிகள் என்பர் (McAlpin 1981 19) தனிமைப்பட்டு இருந்ததால் இம்மொழிகளில் சமற்கிருதத்தின் தாக்கம் ஏற்படவில்லை. ஆகையால், ஏறக்குறைய அனைத்துத் திருந்தாத் தமிழிய மொழிச்சொற்களும் தமிழியச் சொற்களாக இருக்கின்றன. திருந்தாத் தமிழிய மொழிச் சொற்களுக்கு இனச் சொற்களாக வரும் திருந்திய தமிழிய மொழிச்சொற்கள் சமற்கிருதச் சொற்களாக இருக்க வாய்ப்பு இல்லை.

சமற்கிருதத்திடம் பெரும் மதிப்பு வைத்துள்ள தமிழ், தெலுங்கு மொழிப் புலவர்கள் ஒரு சொல்லைத் தமிழியச் சொல் எனக் குறிப்பாரேயானால் அதை உண்மை எனலாம் என்று கால்டுவெல் குறிப்பிடுகிறார். ஆனால் இக்கருத்தின் அடிப்படையில் ஆராய்வது அவ்வளவு சரியானதாகப்படாது. ஏனென்றால் இதில் தனிப்பட்டோர் விருப்பு வெறுப்புகளுக்கு இடம் உண்டு. எவ்வாறாயாயினும் இவர் கூறியுள்ள ஐந்து நெறிகள் அடிப்படையில் சமற்கிருதத்தில் உள்ள தமிழியச் சொற்களைக் கண்டுகொள்ளலாம்.

"பொருள் உணர்த்தும் தேவையடிப்படையாலேயே சொற்கள் உருவாகியுள்ளன. பொருளுணர்த்த தேவையற்ற நிலையில் சொற்கள் உருவாக இடமில்லை. "எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே" என்று குறிப்பிடும் தொல்காப்பியத்தில் இக்கருத்து வலியுறுத்தப்பட்டிருக்கிறது. சொல்லுக்கு இரண்டு பக்கம் உண்டு. ஒரு பக்கத்தில் சொல்லின் வடிவம் ஒலியாக அல்லது எழுத்து வடிவமாக இருக்கும். மறுபக்கம் அது உணர்த்தும் பொருள் இருக்கும். சொல்லின் இவ்விரு கூறுகளும் இணைந்தே செயற்படும். இதனைப் "பொருண்மை தெரிதலும் சொன்மை தெரிதலும் சொல்லினாகும் என்மனார் புலவர்" என்று குறிப்பிடுகிறது தொல்காப்பியம்.

இன்று பல்கிப் பெருகிக் காணப்படும் சொற்கள் அனைத்தும் மிகக் குறைந்த எண்ணிக்கையுடைய வேர்களினின்று வளர்ந்து வந்திருக்கின்றன என்பதில் ஐயம் இல்லை. அதேபோல் இன்று ஒன்றுக்கும் மேற்பட்ட பொருள்களுடன் இருக்கும் சொற்கள் அனைத்தும் முன்னர் மூலப்பொருள் ஒன்றுடன் இருந்துள்ளன.

மொழியில் உள்ளன அனைத்தும் பொருளுடையன; மொழியில் தேவையனவை மட்டுமே இருக்கின்றன; யாரானாலும் தன் விருப்பத்திற்கு இணங்க புதிய சொல் படைக்க இயலாது; பழைய சொல்வடிவங்களினின்றே புதிய சொற்களைப் படைக்க வேண்டிய கட்டாயம் இருக்கிறது. அவ்வகையில் மொழியில் பழையன எல்லாம் புதியனவாக இருக்கின்றன; புதியன எல்லாம் பழையனவாக இருக்கின்றன என்பன போன்ற ஆழமான ஆய்வு முடிபுகளை உறுதிப்பட வெளிப்படுத்திய பெருமைக்குரியவர் மாஃசுமுல்லர்.

தமிழில் இடுகுறிச் சொல்லே இல்லையென்பதற்கு 'எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே' என்னும் தொல்காப்பிய நூற்பாவொன்றே போதிய சான்றாம். 'மொழிப்பொருட் காரணம் விழிப்பித் தோன்றா" என்பது சொல்லின் வேர்ப்பொருள் பார்த்தவுடன் மிகத் தெளிவாகத் தோன்றாது (சில சொற்களில்) எனப்பொருள்படுமேயன்றி தோன்றவே தோன்றாது எனப் பொருள்படுவதன்று" – (பாவாணர் மொழி நூற்கட்டுரை 17).

வடசொல் என்பதற்கும் சமற்கிருதச்சொல் என்பதற்கும் ஒரு வேற்றுமையுண்டு. தொன்று தொட்டு வடநாட்டில் தனிச்சிறப்பாக வழங்குஞ் சொல்லெல்லாம் வடசொல்லே. சமற்கிருதச் சொல் என்பது, வேத ஆரியர் வந்த பின் புதிதாக அமைக்கப்பட்ட ஆரியச்சொல். ஆரியர் வரு முன்பே, வடதிரவிடர் (பிராகிருதர்) பல புதுச் சொற்களைப் புனைந்திருந்தனர். அவையும் வடசொல். ஆகவே, வடசொல் என்னும் பெயர், ஆரிய மல்லாத வடநாட்டுச் சிறப்புச் சொற்கும், சமற்கிருதச் சொற்கும் பொதுவாம். எல்லாச் சமற்கிருதச் சொல்லும் வடசொல்லாகும்; ஆயின் எல்லா வடசொல்லும் சமற்கிருதமாகா (பாவாணர்.1972:159).

## தேவமொழியின் இயல்புகள் :

தொன்மை, முன்மை, இயன்மை, வியன்மை, தாய்மை, தூய்மை, எண்மை, ஒண்மை, இளமை, வளமை, அம்மை, செம்மை, இனிமை, தனிமை, மறைமை, இறைமை என்னும் பதினாறும் தேவமொழிக்கு இருக்க வேண்டிய இன்றியமையாத பண்புகளாம். இப்பதினாறும் உடையது தமிழ் ஒன்றே. வடமொழிக்கு ஓரிரு பண்புகளே உள்ளன. (மேலது. பக்.164).

## வல்லொலி எடுப்பாலி:

தமிழ் இலக்கணம் மெய்யெழுத்துகளை வல்லினம், மெல்லினம், இடையினம் என்று மூவகையாகப் பிரிக்கிறது. மெய்யெழுத்துகளுள் க,ச,த,ப ஆகிய நான்கெழுத்துகள் மொழி முதலில் வரும்போதும் இவற்றுடன் ட சேர்ந்து ஐந்தெழுத்துகள் மொழியிடையில் இரட்டித்து வரும்போதும் வல்லொலிகளாக வருகின்றன. இந்த ஐந்தெழுத்துகள் மொழியிடையில் தனித்து வரும்போதும் மெல்லினத்தையடுத்து வரும்போதும் எடுப்பொலியாகிவிடுகின்றன. தமிழியக் குடும்ப மொழிகளுள் தமிழ், மலையாளம் ஆகிய இரண்டு மொழிகளில் க,ச,ட,த,ப ஆகிய ஐந்தெழுத்துகள் வல்லொலியாகவும் எடுப்பொலியாகவும் இடத்திற்கு ஏற்ப மாற்றம் பெற்று ஒலிக்கப்படுகின்றன. எடுப்பொலி மொழி முதலில் வருவது இல்லை. எடுப்பொலி மொழி முதலான பிறமொழிச் சொற்கள் தமிழுக்கு வரும்போது அவை வல்லொலி மொழிமுதற் சொற்களாக ஒலிக்கப்படுகின்றன. இந்த நெறி கூட்டுச் சொற்களுக்கும் பொருந்தும். வருமொழி முதலில் வல்லொலியாக இருக்கும் சொல் நிலைமொழியுடன் இணையும்போது வருமொழி முதலில் உள்ள வல்லொலி மொழியிடையில் தனித்து வருவதாக ஆகிவிடும். ஆகையால் அது எடுப்பொலியாக ஒலிக்கப்படுகிறது. வல்லொலி எடுப்பொலியாக மாறுவது தெலுங்கு, கன்னடம் ஆகிய மொழிகளில் சில கூட்டுச்சொற்களில் காணப்படுகிறது. (எ.டு.) தெலுங்கு அன்ன+தம்முலு–அன்ன த (d)ம்முலு. இந்தோ–ஐரோப்பிய மொழிகளில் வல்லொலி எடுப்பொலி மாற்றம் எதிலும் காணப்டுவது இல்லை. எபிரேய மொழியில் க,த,ப ஆகிய எழுத்துகள் தமிழைப்போன்று மாற்றம் பெறுகின்றன. இந்தியக் குடும்பமொழிகள் சிலவற்றில் தமிழைப்போன்று வல்லொலி எடுப்பொலி மாற்றங்கள் நிகழ்கின்றன.

பின்னி, இலேப்பிசு மொழிகளில் வல்லொலி எடுப்பொலிகளுக்கிடையே தெளிவான மாற்றம் உண்டு. இவ்விரு மொழிகளிலும் எடுப்பொலி மொழி முதலில் வருவது இல்லை. தமிழைப்போன்று அங்கு மொழியிடையில் தனித்து வரும்போது எடுப்பொலியாகவும் இரட்டித்து வரும்போது வல்லொலியாகவும் வருகின்றன. (Caldwell 1987:140,1).

## தமிழொடு பிற மொழிகள் ஒவ்வாமைக்குக் காரணங்கள்

1. தமிழின் பல்வேறு நிலைகளில் மக்கள் பிரிந்து போனமை.

தமிழ் குறிப்பொலி நிலையிலிருந்தபோதும், அசை நிலையிலிருந்தபோதும், புணர்நிலையிலிருந்த போதும், பகுசொன்னிலையிலிருந்தபோதும், தொகு நிலையிலிருந்தபோதுமாகப் பற்பல சமயங்களில், குமரிநாட்டினின்றும் மக்கள் கிழக்கும் மேற்கும் வடக்குமாகப் பிரிந்து போயிருக்கின்றனர்.

2. குறிப்பொலி நிலையிலும் அசைநிலையிலும் பிரிந்த மாந்தர் அவற்றை அடிப்படையாகக் கொண்டு, பல்வேறு சொற்களை அமைத்துக்கொண்டமை.

3. பிரிந்துபோன மக்கள் மூலச்சொற்களை மறந்துவிட்டுப் புதுச்சொற்களை ஆக்கிக் கொண்டமை.

4. தட்பவெப்பநிலை உணவு முதலியவற்றால் உறுப்புத் திரிந்து, அதனால் உச்சரிப்புத் திரிந்தமை.

*(எ.டு)* தோகை > <u>Pers.</u> **tawus**, <u>GK.</u> **taos**, <u>L.</u> **pavo**, <u>A.S.</u> **pawe**, <u>E.</u> **pea** - peacock. சே–சேவு – (சேக்கு) <u>A.S.</u> **ccc**, <u>E.</u> **cock**. ஒ.நோ: நா–நாவு–நாக்கு.

5. பெரும்பாற் சொற்கள் போலி மரூஉ சிதைவு முதலிய முறைகளில் திரிந்தமை.

6. மூலமொழியிலில்லாத வொலிகள் தோன்றினமை.

7. மூலமொழியிலக்கணத்தினின்றும் வேறுபட்ட இலக்கணம் எழுதப்பெற்றமை.

8. பெரியோரை மதித்தல் காரணமாகச் சொற்களை மாற்றல்.

பலநீசியத் (Polynesian) தீவுகளில் தெபி (Tepi) என்றொரு வழக்கமுள்ளது. அதன்படி, அரசன் பெயராவது அதன் பாகமாவது வருகின்ற சொற்களையெல்லாம் மாற்றிவிடுகின்றனர். இவ்வழக்கம் தென்னாப்பிரிக்காவிலும் உள்ளதாம்.

## வடமொழி உலக முதன்மொழியாக முடியாமை:

மொழிகளின் இயல்பையறியாத பலர், வடமொழி உலக முதன்மொழியாயிருக்கலாமென்று கருதுகின்றனர்.

உலகில் முதலாவது தோன்றிய திருந்திய மொழி தமிழே. குமரிநாட்டில் தமிழ் <u>குறிப்பொலி</u> நிலையிலிருந்தபோது பிரிந்த மக்கள், ஆப்பிரிக்கா, தென்கண்டம், அமெரிக்கா முதலிய இடங்கட்கும், <u>அசைநிலையிற்</u> பிரிந்த மக்கள் கடாரம், சீனம், வட ஆசியா, ஐரோப்பா முதலிய இடங்கட்கும் சென்ற தாகத் தெரிகின்றது. அசைநிலையிற் பிரிந்த மக்களின் மொழிகளே, துரேனியம் அல்லது சித்தியம் என்று கூறப்படும் குடும்பத்தவை.

பால்டிக் கடற்பாங்கரில், துரேனியத்தின் திரிபாகவே ஆரியம் தோன்றியிருக்கின்றது. பால்டிக்கின் வடபாகங்களில் பின்னியம் (Finnish) என்னும் துரேனிய மொழி வழங்குவதும், சுவீடியம் (Swedish) டேனியம் (Danish) முதலிய மொழிகளில் தமிழ்ச்சொற்கள் இருப்பதும், செருமானியத்திலுள்ள சில சொற்கள் ஆரிய இலக்கிய மொழிச்சொற்கள் சிலவற்றிற்கு மூலமாயும் தமிழுக்கு நெருக்கமாயு மிருப்பதும், ஆட்டோ சிரேதரும் இதைக் கூறியி ருப்பதும் இக்கொள்கைக்குச் சான்றுகளாம்.

ஆரியஞ்சென்ற தமிழ்ச்சொற்கள் பின்வருமாறு மூவகையன:

1). ஆரியரின் முன்னோர் குமரிநாட்டினின்று பிரிந்து போனபோதே உடன்சென்றவை.

*(எ.டு)*

| தமிழ் | வட இந்தியம் | மேலையாரியம் | கீழையாரியம் |
|---|---|---|---|
| நான் | மைன் | me | – |
| நாம் | அம் | wir, we | vayam |
| நூன் | தூ | du, tu | tvam |
| நூம் | தும் | ye, you | yuyam |
| இருத்தி | – | eart, es | asi |

2). ஆரியர் இந்தியாவிற்கு வருமுன் இடைக் காலத்திற் சென்றவை. அல்லது நேரே மேலை யாரியஞ் சென்றவை.

*(எ.டு)*

| தமிழ் | மேலையாரியம் | கீழையாரியம் |
|---|---|---|
| ஆன்மா | animos | atma |
| நாவாய் | navis | nau |
| வேட்டி | vestis | vasthra |
| இஞ்சிவேர் | zingiber, zingiberi | sringa-vera |
| இரும்(பு) | iren, eisen | ayas |

3). ஆரியர் இந்தியாவிற்கு வந்தபின் அல்லது கீழையாரிய வாயிலாகச் சென்றவை.

*(எ.டு)*

| தமிழ் | மேலையாரியம் | கீழையாரியம் |
|---|---|---|
| கப்பி | ape | kapi |
| குருமம் | thermos, formus, warm | gharma |
| அகம் (மனம்) | ego,lch, | aham |
| தா (நில்) | sta, esta | sta |
| படி–பதி–வதி | wes, wis, was | vas |

**குறிப்பு :**

(1) அரக்கு, அரக்கம், அரத்தம், அலத்தம், அலத்தகம், இரத்தி, இலந்தை முதலிய தென்சொற்களை நோக்கின், அர் அல்லது இர் என்னும் ஒரு வேர்ச்சொல் சிவப்புப் பொருளை யுணர்த்துவது தெளிவாகும். அருக்கன், அருணம், அருணன் முதலிய (வட) சொற்களும் இவ்வேரி னின்றே பிறந்தனவாகும். இங்ஙனம் பல வட தென் சொற்கள் ஒரே மூலத்தன.

(2) கப்பு = மரக்கிளை. கப்பில் வாழ்வது கப்பி. "கோடு வாழ் குரங்கு" (மரபியல், 13) என்றார் தொல்காப்பியரும்.

(3) குரு = வெப்பம், வெப்பத்தால் தோன்றும் கொப்புளம், ஒளி, ஒளிவடிவான ஆசிரியன். குரு = சிவப்பு. குருதி, குருதிக்காந்தள், குருதிவாரம் என்னும் சொற்களை நோக்குக. "குருவுங் கெழுவும் நிறனா கும்மே" (உரி.5) என்றார் தொல்காப்பியர். குருத்தல் தோன்றுதல். குருப்பது குருத்து. குரு–உரு. குருமம்–உருமம்.

(4) அகம் = அவ்விடம், அவ்வுலகம், வீடு, உள், உள்ளம், (நான்). ஒ.நோ: இகம் = இவ்விடம், இவ்வுலகம், இகபரம் என்னும் வழக்கை நோக்குக. வீடு = துறக்கம், இல்லம். இல் = வீடு, உள். உள் = உட்புறம், மனம். உள்+அம் = உள்ளம் – உளம். உள்ளம் என்று பொருள்படும் அகம் என்னும் தமிழ்ச் சொல்லையே, நான் என்னும் பொருளில் வழங்கினர் வடமொழியாரியர். ஆன்மா என்னுஞ் சொல்லை, ஆத்மனேபத, ஆத்மநிவேதனம் முதலிய தொடர்களில் தன்னைக் குறிக்க வழங்குதல் காண்க. அகம் x புறம்.

மேலையாரிய மொழிகளில் முதலாவது தன்மை யொருமைப் பெயராக வழங்கியது me என்பது. min, me, mec முதலிய வேற்றுமை பெற்ற பெயர்கள் me என்பதினின்று தோன்றுமேயொழிய அகம் என்பதினின்று தோன்றா. go என்னும் வினையின் இறந்தகால வடிவம் வழக்கற்று, அதற்குப் பகரமாக wend என்பதின் இறந்தகால வடிவமாகிய went என்பது வழங்குவது போன்றது அகம் என்பது.

(5) sta என்னும் சொல் esta என்று மேலை யாரியத்தில் வழங்குவது, பண்டைக்காலத்தில் மேனோட்டாரும் இஸ்கூல் (School) என்று சொல்லும் தமிழர் நிலையிலிருந்தனர் என்பதைக் காட்டும். தாவு = இடம். தாக்கு = நிலை. தாக்குப் பிடித்தல் என்னும் வழக்கு நோக்குக.

புரி, புரம் என்னும் நகர்ப்பெயர்கள் ஆரிய மொழிகளிலெல்லாம் வழங்குவதும், தொல்லாரியர்க்கும் தமிழர்க்குமிருந்த தொடர்பைக் காட்டும்.

புரிதல் = வளைதல். L. spira, GK. speira, E. spire. புரி = வளைந்த அல்லது திருகிய இழை. ஒ.நோ: thread, from thrawan (திரி), to twist. புரிதல் = மனத்திற் பதிதல், விளங்குதல். L. prehendo = புரிகொள். E. prehend - apprehend, comprehend etc. புரி–புரீ (வ.) = வளைந்த மதில், கோட்டை, மதிலாற் சூழப்பட்ட நகர். ஒ.நோ: கோடு+ஐ = கோட்டை. கோடு+அம்=கோட்டம் –koshta (Skt.) = மதில் சூழ்ந்த கோயில்.

வடமொழியிற் கோஷ்ட என்பதை, கோ (பசு) என்பதினின்று பிறந்ததாகக் கூறுவது பொருந்தாது. அது தொழுவம் என்று பொருள்படினும் கோட்டம் அல்லது கொட்டம் என்னும் தமிழ்ச் சொல்லின் திரிபே. கொடு+அம் = கொட்டம். கொடு+இல்=கொட்டில்.

புரி+சை=புரிசை. புரி+அம்=புரம் –E. borough, burgh, புரி–bury, கோபுரம் = அரசன்மனை, அரசநகர். முதலாவது அரசன் வெள்ளத்தினின்றும் பகைவரி னின்றும் தற்காக்க எழுநிலை மாடத்தில் அல்லது உயர்ந்த கட்டடத்தில் வதிந்தான். பின்பு அது மிகவுயரமாய் வடிவுமாறிக் கோவிலுறுப்பாயிற்று. ஒ.நோ: கோயில் = அரசன் மனை, தெய்வ இருப்பிடம். புரம் – புர. புரத்தல் காத்தல். புரவலன் புரப்பதில் வல்லவன், புரந்தருபவன் புரந்தரன். ஒ.நோ: A.S. beorgan, Ger. bergen, to protect, from burg.

மேலையாசியப் பாங்கரில், துரேனியமும் ஆரியமும் சேர்ந்து சேமியம் தோன்றியிருப்பதாகத் தெரிகிறது.

பால்டிக் பாங்கரினின்று, முதலாரியர் காக்கசு மலையின் தென்பாகத்தில் வந்து குடியேறியிருக் கின்றனர். பின்பு அங்கிருந்து மேற்கொரு பிரிவாரும் கிழக்கொரு பிரிவாரும் பிரிந்து போயிருக்கின்றனர். கிழக்கே வந்தவரே இந்திய ஆரியர். இந்தியாவிற்கு வந்த ஆரியருள் ஒரு பிரிவார் திரும்பவும் மேலையாசியாவிற்குச் சென்றிருக்கின்றனர். அவரே பெர்சிய அல்லது செந்து (Zend) ஆரியர்.

இந்திய ஆரியரது மொழி இந்தியாவிற்கு வருமுன் இப்போதுள்ள நிலையிலில்லை. இலத்தீன், கிரேக்கம், செருமானியம் என்ற மூன்று மொழிகட்கும் நெருங்கிய நிலையிலேயேயிருந்து. அப்போது ஆரியம் என்னும் பொதுப் பெயரேயன்றி ஒரு விதப்புப் பெயரும் அதற்கில்லை.

இந்திய ஆரியர் இந்தியாவிற்கு வந்த பின்னரே, அவரது மொழிக்குச் சமற்கிருதம் என்னும் ஆரியப்பெயரும், வடமொழி என்னும் தென்மொழிப் பெயரும் தோன்றின.

வடமொழிக்கு வேதகால வடிவும் பிற்கால வடிவுமென இரு நிலைகளுண்டு. வேத காலத் திலேயே, வடஇந்தியத் திரவிட மொழிச் சொற்கள் பல வடமொழியிற் கலந்துவிட்டன. வட இந்திய மொழிகளெல்லாம், உண்மையில் திரவிடத்திற்கும் ஆரியத்திற்கும் பிறந்த இரு பிறப்பி மொழிகளேயன்றி, தனி ஆரியக்கிளைகளல்ல.

மேனாட்டாரிய மொழிகட்கில்லாது, சமற்கிருதத் திற்கும் திராவிடத்திற்கும் பொதுவாயுள்ளவை யெல்லாம், தமிழினின்றும் வடமொழி பெற்றவையே.

***(எ.டு.)*** உயிர்மெய்ப்புணர்ச்சி, ட ண முதலிய சில ஒலிகள், எழுத்துமுறை, எட்டு என்னும் வேற்றுமைத் தொகையும் அவற்றின் முறையும், சில கலைநூல்கள் முதலியன.

வடமொழியில் வழங்கும் நூற்றுக்கணக்கான சொற்கள் தென்சொற்களென்பது, பாவாணரால் நிறுவப்பட்டுள்ளது.

வடநூல்களிலுள்ள பொருள்களிற் பெரும்பாலன, ஆரியர் வருமுன்னமே வடஇந்தியாவில் அல்லது இந்தியாவில் வழங்கியவையென்றும், அவற்றைக் குறிக்கும் சொற்களே ஆரியமென்றும் அறிதல் வேண்டும்.

உலகமொழிகள் எல்லாவற்றிலும், வளர்ச்சியிலும் திரிபிலும் முதிர்ந்தது வடமொழியாகும். இதனாலேயே 'நன்றாகச் செய்யப்பட்டது' என்னும் பொருள் கொண்ட 'சமஸ்கிருத்' என்னும் பெயரை வடமொழி ஆரியரே அம்மொழிக்கிட்டுக் கொண்டனர். வடமொழியை ஆரியத்திற்குக்கூட மூல மொழியாகக் கொள்ளவில்லை மேனாட்டார்.

வடமொழி முதிர்ச்சியைக் காட்ட இங்கு ஒரு சான்று காட்டலாம்.

## மெய்யெழுத்துகளின் தொகை:

தென்கண்ட (ஆத்திரேலிய) மொழிகளில் 8; பலநீசிய (Polynesian) மொழிகளில் 10; பின்னி யத்தில் 11; மங்கோலியத்தில் 18; இலத்தீனிலும் கிரேக்கிலும் 17; ஆங்கிலத்தில் 20; எபிரேயத்தில் 23; காப்பிரி(Kaffir)யில் 26; அரபியில் 28; பெர்சியத்தில் 31; துருக்கியத்தில் 32; வடமொழியில் 39; அரபி, பெர்சியம், சமற்கிருதம் என்னும் மூன்றன் கலவையான இந்துத்தானியில் 48. இத்தொகைகள் மாஃசு முல்லர் கூறியன. இவற்றுள் ஒன்றிரண்டு கூடினும் குறையினும் இவற்றைக் கூறியதின் பயன் மாறாதிருத்தல் காண்க.

இங்குக் கூறியவற்றால், மெய்யெழுத்துகள் மிகுந்த வடமொழி உலக முதன்மொழியாக கருதப்பட்டது.

திரவிடம் சிறிய குடும்பமேயாயினும், பல காரணம் பற்றித் தனித்துக் கூறப்படற்கேற்றதாகும்.

## சொல்லாராய்ச்சி நெறிமுறைகள்:

வண்ணனை மொழி நூலார் பேச்சு வழக்கின் அனைத்தியல்புகளையும் ஆய்வுக்கு எடுத்துக் கொள்கின்றனர்.

மரபிலக்கணத்தார் மொழிச் செம்மை காப்பவராதலின் செவ்விய சொல்லாட்சிகளை மொழியில் தக்க வைத்துக் கொள்வதற்காக இலக்கணம் யாத்தனர்.

பேராசிரியர் "காலந்தோறும் வேறுபட வந்த அழிவழக்கும் இழிவழக்கும் முதலாயினவற்றுக்கெல்லாம் நூல் செய்யின் இலக்கணம் எல்லைபடாது இகந்தோடும்" (தொல்–மரபியல்–91) எனக் கூறியிருப்பது கவனிக்கத் தக்கது.

மொழியின் பொது வழக்கிலிருந்து பெருமளவில் திரியும் மொழிகள் தனிமொழிகளாக வளர்வதால் மரபு வழிப்பட்ட செம்மொழிக்கே நெறிமுறை வகுப்பர். எனினும் ஒலித் திரிபுகளுக்கான நெறிமுறை விரிந்து செல்லும் மொழிகளின் திரிபுகளுக்கும் ஒக்கும்.

தமிழே உலக முதல் இலக்கியமொழி. இதன் பெருமை சென்ற 2000 ஆண்டுகளாக மறை பட்டுக்கிடந்து, இன்று மொழிநூற் கலையால் வெள்ளிடை மலையாய் விளங்குகின்றது. பண்டைத் தமிழர்க்கும், இற்றைத் தமிழர்க்கும் எல்லாத் துறைகளிலும் ஆனைக்கும் பூனைக்கும் உள்ள வேறுபாடாகும்.

தமிழை முன்னோர் செந்தமிழாகவும் தனித் தமிழாகவுமே வளர்த்தனர். அங்ஙனமே இனிமேலும் வளர்க்க வேண்டும். வளர்ப்பு முறை தமிழுக்கும் பிறமொழிகட்கும் வேறுபட்டதாகும். பிறமொழிகளில் கொடுவழக்கு களெல்லாம் செவ்வழக்காகும்; தமிழிலோ கொடுவழக்குகள் கொள்ளப்படாது என்றும் செந்தமிழே கொள்ளப்படும்.

*(எ.டு.)* ஆங்கிலத்தில் r, *l* சில சொற்களில் ஒலிக்கப்படாவிட்டாலும் குற்றமில்லை; தமிழிலோ அவர்கள் என்பதை அவக என்றொலித்தால் குற்றமாம். இந்தியில் சொல்லீற்று னகர மெய் அரைமெய்யா யொலிப்பது குற்றமன்று; தமிழில் அங்ஙனம் ஒலிப்பது குற்றம். தெலுங்கில் பருப்பு எனும் சொல்லை பப்பு என்பது குற்றமன்று; தமிழிலோ குற்றம். இங்ஙனமே பிறவும் பற்பல வழக்குகள் தமிழ்நாட்டில் வழங்கினாலும், செந்தமிழையே அளவையாகக் கொண்டதினாலேயே தமிழ் இதுநாள் வரைக்கும் பெரும்பாலும் திரியாது வந்திருக்கின்றது.

தமிழ் கடன்சொற்களால் தளர்ந்ததன்றி வளர்ந்ததன்று, கடன்கோடலால் ஓர் ஏழைக்கு நன்மை; ஆனால் செல்வனுக்கோ இழிவு. அதுபோல் கடன்சொற்களால் பிறமொழிக்கு வளர்ச்சி; தமிழுக்கோ தளர்ச்சியாகும். இந்தியா முழுதும் ஒருகால் பரவியிருந்த தமிழ் இன்று தென்கோடியில் ஒடுங்கிக் கிடக்கின்றது.

# சொற்பிறப்பு ஆராய்ச்சி

சொற்பிறப்பு என்பதை ஆங்கிலத்தில் Etymology என்பர். Etymo என்னும் கிரேக்கச் சொல்லுக்கு "உண்மை" என்று பொருள். logo = சொல்லுதல், Etymology = சொல்லின் உண்மை வரலாறு என்பது சொல்லின் வேரடித் திரிபுகள், சொல்லாக்கத் திரிபுகள், பொருளின் பன்மடிப் பரவல்கள் (morphological and semantic changes) ஆகியவற்றைக் குறிக்கும். சொல்லின் நோக்கமே கண்ணுக்குப் புலப்பட்ட ஒன்றைக் காதுக்குப் புலப்படுத்தும் வகையில் பொருளார்ந்த ஒலிப்பை வாய்மொழியாக வெளியிடுவதாகும்.

ஆயின், இதில் அடங்கிய மாபெரும் வியப்பு என்னவெனில், சொல்லுக்கும் அதனால் எவ்வகையிலும் சுட்டப்படும் காட்சிப் பொருளுக்கும் தொடர்பில்லை என்பதே, தொல்காப்பியரும், பொருண்மை தெரிதல், சொன்மை தெரிதல் என்று இரண்டாகவே கூறுகிறார். சொல்லுக்கும் காட்சிப் பொருளுக்கும் நாம் ஏற்படுத்தும் தொடர்பைச் சொற்பொருள் முக்கோணம் (semantic triangle) என்று மேலை மொழியியலார் குறிப்பிடுவர். முதன்முதலாக விரலைப் பார்க்கின்ற மாந்தன் இதற்கு என்ன சொல்லால் பெயரிடலாம் என்று சிந்திக்கிறான். விரல்கள் விரிகின்ற இயல்பு அவன் மனக்கண்ணில் நிழலாடுகிறது. விரிக்க முடிவதால் அதற்கு விரல் என்று பெயரிடுகிறான். இதிலிருந்து எந்தப்பொருளையும் கண்ணால் கண்டவுடன் அதன் தொடர்புடைய கருத்து மனத்தில் உருவாகிறது. அந்தக் கருத்தே அதற்குப் பொருத்தமான பொருள் தருகின்ற சொல்லை நினைவுத் தொகுப்பிலிருந்து கண்டுபிடித்துத் தருகிறது. ஆதலால் பொருளைப் பார்த்ததும் உடனே சொல் தோன்றுவதில்லையென்பதும், அதன் உருவம் மனத்தில் பதிந்த பிறகு அந்த மனப்பதிவிலிருந்து தோன்றும் உட்கருத்துக் கோவையே (concept) புதிய சொல்லைப் படைத்துத் தருவதால் ***மாந்தனின் மனமே மொழியைப் பெற்றெடுத்து வடிவமைக்கும் பட்டறை என்று கூறப்படுகிறது. அந்தப் பட்டறை எந்தெந்த ஒழுங்குமுறைகளுக்கு உட்பட்டுப் பல்வேறு சொல்வடிவங்களைப் படைத்தளித்திருக்கிறது என்று கண்டுபிடிப்பதே சொற்பிறப்பு ஆராய்ச்சி எனப்படுகிறது.*** பாவாணர் தன்னுடைய வேர்ச்சொற் கட்டுரைகளில் இதன் நுட்பத்தைப் புலப்படுத்தியிருக்கிறார். ***ஒரு கருத்திலிருந்து மற்றொரு கருத்து தோன்றும்போது ஒரு சொல்லிலிருந்து மற்றொரு சொல் பிறக்கிறது என்பது*** அவர் கண்டறிந்த மாபெரும் உண்மை. அவர் நோக்கில் சொற்பொருள் முக்கோணம் (Semantic triangle or The basic triangle of meaning) பின்வருமாறு அமைகிறது.



காணும் பொருள்களைப் பற்றிய ஒப்பீட்டு உட்கருத்து மனத்தில் பதியாவிடின் மாந்தன் ஊமையாகிவிடுவான். ஒப்பீட்டு உட்கருத்து ஒரு கோவைப்பட மாந்தனைச் சிந்திக்க வைக்கிறது. ஒரு சீரான ஒலிப்புச் சொற்களைக் கண்டுபிடிக்கிறது. ஒரே சொல் கிடைக்காதபோது கூட்டுச் சொல்லை உருவாக்கித் தருகிறது.




ஒலி வடிவான சொல்லால் சுட்டப்படும் காட்சிப் பொருளும் (referent or thing), இது இன்னது என உணர்ந்து கொள்ளும் சொல்லின் கருத்துப் பொருளும் (meaning) ஒன்றேயாதலால் தமிழில் thing என்பதற்கும் meaning "பொருள்" என்னும் சொல் பயன்படலாயிற்று. தொல்காப்பியரின் கருத்துப்படி சொல்லின் ஒலிப்பு வடிவமும், வரிவடிவமும் (சொல்லின் தன்மை) – சொன்மை, சொல் என்னும் பெயர்களால் அறியப்படினும் சொன்மை தெரிதல் என்றே குறிக்கப்படும். அதனால் உணரப்பட்ட கருத்துப்பொருள் (meaning) கண்ணால் கண்ட காட்சிப்பொருளொடு ஒன்றிவிடும். இது பொருண்மை தெரிதல் என்று குறிக்கப்படும்.

எழுதுபவனுக்கு அல்லது பேசுபவனுக்குச் சொல் என்பது வரிவடிவம் அல்லது ஓசை வடிவம் கொள்ளும். கண்ணால் பார்ப்பவனுக்கு அல்லது காதால் கேட்பவனுக்கு அது பொருள் வடிவம் பெறும். பொருள் வடிவம் என்பது கண்ணால் காணத்தக்க காட்சிப்பொருளையே மனக்கண்ணில் கொணர்ந்து நிறுத்தும் பொருளிசைவுப் பாங்கு எனலாம். சொல் தன்னையும் உணர்த்தித் தன்னால் உணர்த்தப்படும் பொருளையும் உணர்த்துவதால் ஒலிப்புக்கும் உணர்திறனுக்கும் உள்ள ஒழுங்கான தொடர்புகள் சொற்பிறப்பு நெறிமுறைகளாக வகுக்கப்படுகின்றன.

# பொருட்பாட்டு வகைமை

## (Semantic Typonyms)

மரபிலக்கணம், மொழி நூல், மொழியியல், சொற்பிறப்பியல் ஆகியவை மொழியின் இலக்கணத்தைப் பல்வேறு கோணங்களில் ஆராய்வன. இவை அனைத்தும் மொழிப் பாங்குகள் இவ்வாறு அமைந்திருக்கின்றன என்று மட்டும் வரையறுப்பவை. இவை, ஏன் இப்படி அமைந்தன. எப்பொழுது அமைந்தன, எந்த இடத்தில் உருக்கொண்டன. யாரால் உருப்பெற்றன போன்ற வினாக்களை எவரும் இது காறும் எழுப்பவில்லை. மேற்கண்ட வினாக்களை மொழி ஆராய்ச்சி உலகில் முதன்முதல் எழுப்பியவர் மொழிஞாயிறு பாவாணர் ஒருவரே. சொல்லுக்குப் பொருள் அமைவது தக்க காரணத்தாலா அல்லது இடுகுறியாலா என்று உலக மொழிநூல் அறிஞர்கள் தடுமாறிக் கொண்டிருந்த காலத்தில் இடுகுறி என்பதைப் பொய்யாக்கி எல்லாச் சொல்லும் பொருள் குறித்தன என்னும் தொல்காப்பியர் கருத்தை உலக அரங்கில் நிலைநாட்டப் பிறந்தவரே பாவாணர். சொல் வடிவங்களை வேறாகவும் சொல்லின் பொருட்பாட்டை வேறாகவும் உலக அறிஞர்கள் ஆராயத் தொடங்கினர்.

சொல்லின் பொருளைத் தனியாக ஆராயும் பாங்கு காரல்மார்க்சுக்குப் பிறகே வளர்ந்தது என்று கூறுகின்றனர். கருத்து முதல் கோட்பாடும் பொருள் முதல் கோட்பாடும் காரல் மார்க்சினால் பெரிதும் பேசப்பட்டவை. இதனை அவர்கள் கருத்து முதல் வாதம் எனவும் பொருள் முதல் வாதம் எனவும் வகைப்படுத்தினர். கருத்து முந்தியதா பொருள் முந்தியதா என்பது மரம் முந்தியதா வித்து முந்தியதா என்பதைப் போன்ற சிக்கலான வினா. அறிவியல் அறிஞர்கள் மரம்தான் முந்தியது என்று முடிவு கட்டிவிட்டனர். இதுபோன்று கருத்துதான் முந்தியது என்று முடிவு கட்டி உலகிற்கு பாவாணர் அறிவித்தார். இதுவே பாவாணரின் சுட்டடிக் கொள்கையாக வளர்ந்தது.

கருத்து என்பது எண்ணம். எண்ணமே மொழியாகிறது. ஆதலால் எண்ணத்தின் வளர்ச்சியாகிய பொருட்பாட்டை (சொல்லின் பொருளை) அடிமனையாக வைத்தே இலக்கண நூல்கள் வளர்ந்திருக்க வேண்டும். சொல்லால் பொருள் அமைந்தது என்பது தவறு. பொருளால் சொல் அமைந்தது என்பதே உண்மை.

இதை மனத்தில் கொண்டே தொல்காப்பியர்

“பொருண்மை தெரிதலும் சொன்மை தெரிதலும்
சொல்லின் ஆகும் என்மனார் புலவர்” என்று கூறினார்.

இதன்வண்ணம் பொருளையும் சொல்லையும் சேர்த்தே ஆராய்வதுதான் உண்மையான மொழியாராய்ச்சி என்பதைப் பாவாணர் சுட்டடிக்கொள்கையை அடிமனையாகக் கொண்ட வேர்ச்சொற்கட்டுரைகளின் வாயிலாக நிறுவியிருக்கிறார். உலகில் எந்த நாட்டிலும் பாவாணரைப் போன்று மொழியாராய்ச்சி செய்தவர் எவருமிலர்.

இவர் கண்டறிந்த ஆராய்ச்சி நெறிமுறை தமிழே ஞாலமுதல்மொழி என்பதை நிலைநாட்ட வல்லது எனக் கூறலாம்.

சான்றாக, சொல்லின் பொருட்பாட்டை semantics என்னும் பெயரில் மேலைநாட்டு அறிஞர்கள் ஆராயும் வகைகளையும், பாவாணர் ஆராயும் முறைகளையும் ஒப்பிட்டுக் காண்பது நலம். மேலைநாட்டு மொழியியல் அறிஞர்கள் உளநூல், மன்பதை நூல், ஏரண நூல் (phycology, socialogy and logic) ஆகிய மூன்றின் அடிப்படையில் சொல்லின் பொருட்பாட்டு வகைமைகள் அமைந்திருப்பதாக கூறுகின்றனர். எண்ணமே மொழி என்பது எல்லோர்க்கும் உடன்பாடானது. எண்ணத்தை அவர்கள் notion என்கிறார்கள். எண்ணுவது எல்லாம் கருத்தாகாது ஆதலால் வரையறுத்த எண்ணமாகிய கருத்தையே உளநூல் அடிப்படையில் ஆன notion என்பதற்கு இணையானதாகப் பாவாணர் கண்டறிந்தார். புல்லின் உள்ளே புழையிருப்பதைக் கண்டு அதற்கு ஒருவன் புல் என்று பெயரிட்ட பிறகு அனைத்து மக்களாலும் அது புல் என்றே அறியப்படுகிறது. இப்பொழுது கருத்து நிலையில் மட்டும் இருந்த புல் எனும் சொல் அனைத்து மக்களாலும் ஒத்துக்கொள்ளத்தக்க பயிருக்குப் பெயராகிவிட்டது. மன்பதை நிலையில் (சமூக நிலையில்) எல்லோராலும் அறியப்பட்ட "புல்" எனும் சொல் பயிர் வகையைக் குறிக்கும் பொதுச்சொல் ஆகிவிட்டது (cognition word at socialogical level) என்று குறிப்பிடுகிறார்கள். இனி இச்சொல் விரிந்த பயன்பாட்டு நிலையில் நிலைபேறு எய்தும்போது புல்லுக்குரிய அனைத்துத் தன்மைகளையும் பெற்று மொழியின் நிலைத்த உறுப்பாகிவிடுகிறது. ஒரு சொற் பொருள் விரிந்த பயன்பாட்டு நிலை எய்தும்போது இதனை (meaning stage of a word) பொருட்பாட்டு நிலை என்கிறார்கள்.

இது இச்சொல்லிலிருந்து புல்லன், புன்மை, புல்லென் மாலை போன்ற பல்வேறு கருத்து வளர் சொற்கள் தோன்ற இடமளிக்கிறது. ஒரு சொல் கருத்தால் முதிர்ந்து வளர்ந்து அதிலிருந்து பல்வேறு நுண்கருத்து பொதிந்த பல்வேறு சொற்கள் தோன்ற இடமளிக்கும் தன்மையே பொருட்பாட்டு நிலை (meaningful stage) எனப்படுகிறது. ஒரு மொழியில் உள்ள இயற்சொற்கள் அனைத்தும் பொருட்பாட்டு நிலை எய்தியுள்ள சொற்களே. இயற்சொற்கள் எல்லாம் "எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே" என்னும் நூற்பாவிற்கு எடுத்துக்காட்டானவை. திரி சொற்களும் திசைச் சொற்களும் "மொழிபொருட் காரணம் விழிப்பத் தோன்றா" என்பதற்கு எடுத்துக்காட்டானவை. இவை முற்றிலும் பாவாணரின் வேர்மூலச் சொற்பிறப்பு அல்லது வடிவு மீட்டமைப்புச் சொற்பிறப்பு வாயிலாகப் பொருட்பாட்டு வளர்ச்சியைக் காண இடம் தருபவை. வடசொல் என்று அக்காலத்தில் குறித்த பாங்கை இப்பொழுது உலக மொழிச் சொற்கள் எனக் கொண்டால் பாவாணரின் வேர்ச்சொல்லாராய்ச்சி வாயிலாக உலக உறவு கண்டறிய முடியும்.

பொருட்பாட்டமைப்பு பற்றிப்பேச வந்த தொல்காப்பியர் சொல்லின் தெரிநிலைப் பொருள், குறிப்புப் பொருள் என்று இரண்டை மட்டுமே சுட்டிக் காட்டினார். அதனை இன்றைய மொழியியலார் surface structure, Deep structure எனக் குறிப்பிடுகின்றனர். இந்த வகைப்பாடு முழுமையான பொருட்பாட்டு ஆராய்ச்சிக்குப் போதுமானதன்று. சொல்லின் உயர்பொருட்பேறு, இழிபொருட்பேறு என்பனவும் சொல்லாட்சிச் சூழலில் சொல்லின் மேல் பேசுவோனின் கருத்து திணிக்கப்பட்டதையே காட்டுகிறது என்று மொழியியலார் சிலர் கூறுகின்றனர். பாவாணர் கருத்துப்படி ஒரு சொல்லின் மீது ஒருவன் வேண்டுமென்றே, ஒரு கருத்தை ஒரு

பொருட்பாட்டை திணிக்க முடியாது. ஒரு சொல்லின் கருத்து ஒருவன் நினைக்கும் பாங்குகளில் எல்லாம் விரிகிறதா என்பதைப் பொறுத்தே சொல்லின் ஒரு பொருட்பேறு அல்லது இரு பொருட்பேறுகள் சொல்லாட்சிப் பெற முடியும்.

ஒரே சொல் முரண் பொருள் தருவதாயின் அதனை மொழியியலார் contradictary என்கிறார்கள். அது எப்படி முரண்பட்டது என்னும் காரணத்தை அவர்களால் ஆராயக்கூடவில்லை. ஆனால் பாவாணர் அதனை நுணுகி ஆராய்ந்து முரண்பட்ட வேர்ச்சொற்களிலிருந்து தோன்றிய இருவேறு சொற்கள் திரிபுற்று அல்லது ஒரு வடிவம் கொண்டு முரண் பொருள் தருகின்றன என்று கண்டுபிடித்திருக்கிறார். உயர்வுப் பொருளையும் தாழ்வுப் பொருளையும் ஒரு சேர உணர்த்தும் 'புரை' என்னும் தமிழ்ச்சொல்லை இதற்குச் சான்றாகக் காட்டலாம்.

இதிலிருந்து சொல்லின் பொருட்பாட்டு வகைமைகளைப் பாவாணரும் மொழியியலாரும் வகைப்படுத்துவது ஏறத்தாழ ஒன்றுபோல இருப்பினும் அவற்றின் காரண வகைப்பாடு செய்யும் திறமை பாவாணரின் ஆய்வில் மட்டும் காணப்படுகிறது.

சொல்லின் பொருட்பாட்டை ஆராய்ந்த பாவாணர் பொருட்பாட்டு வகைமைகளைப் பின்வருமாறு வகைப்படுத்தியிருக்கிறார்.

1. அணியியல் வகைமை (உவமைச் சொற்களை விளக்குவது)

கொடிவழி, நூற்பா, கோன், கொடியாள், கொடிச்சி, பெண்கொடி, கொம்பன்,கொம்பு மகள், ஆயிரம் காலத்துப் பயிர், தீயர்.

2. வரலாற்று வகைமை:

பொழில் = நாடு, நாவலந் தண் பொழில், தாயம், பேட்டை.

3. மெய்ப்பொருள் வகைமை:

உயிர், உடம்பு, யாக்கை, கட்டை, வீடுபேறு.

4. ஒரு பொருட் பல சொல் வகைமை:

பொருள், பண்டம், சரக்கு, தாரம்.

5. பல பொருளொரு சொல் வகைமை:

கேழல் – பன்றி, யானை.

வாரணம், கடல், சங்கு, கோழி, வாள்.

இவர் கண்டறிந்த ஆராய்ச்சி நெறிமுறை தமிழே ஞாலமுதல்மொழி என்பதை நிலைநாட்ட வல்லது எனக் கூறலாம்.

சான்றாக, சொல்லின் பொருட்பாட்டை semantics என்னும் பெயரில் மேலைநாட்டு அறிஞர்கள் ஆராயும் வகைகளையும், பாவாணர் ஆராயும் முறைகளையும் ஒப்பிட்டுக் காண்பது நலம். மேலைநாட்டு மொழியியல் அறிஞர்கள் உளநூல், மன்பதை நூல், ஏரண நூல் (phycology, socialogy and logic) ஆகிய மூன்றின் அடிப்படையில் சொல்லின் பொருட்பாட்டு வகைமைகள் அமைந்திருப்பதாக கூறுகின்றனர். எண்ணமே மொழி என்பது எல்லோர்க்கும் உடன்பாடானது. எண்ணத்தை அவர்கள் notion என்கிறார்கள். எண்ணுவது எல்லாம் கருத்தாகாது ஆதலால் வரையறுத்த எண்ணமாகிய கருத்தையே உளநூல் அடிப்படையில் ஆன notion என்பதற்கு இணையானதாகப் பாவாணர் கண்டறிந்தார். புல்லின் உள்ளே புழையிருப்பதைக் கண்டு அதற்கு ஒருவன் புல் என்று பெயரிட்ட பிறகு அனைத்து மக்களாலும் அது புல் என்றே அறியப்படுகிறது. இப்பொழுது கருத்து நிலையில் மட்டும் இருந்த புல் எனும் சொல் அனைத்து மக்களாலும் ஒத்துக்கொள்ளத்தக்க பயிருக்குப் பெயராகிவிட்டது. மன்பதை நிலையில் (சமூக நிலையில்) எல்லோராலும் அறியப்பட்ட "புல்" எனும் சொல் பயிர் வகையைக் குறிக்கும் பொதுச்சொல் ஆகிவிட்டது (cognition word at socialogical level) என்று குறிப்பிடுகிறார்கள். இனி இச்சொல் விரிந்த பயன்பாட்டு நிலையில் நிலைபேறு எய்தும்போது புல்லுக்குரிய அனைத்துத் தன்மைகளையும் பெற்று மொழியின் நிலைத்த உறுப்பாகிவிடுகிறது. ஒரு சொற் பொருள் விரிந்த பயன்பாட்டு நிலை எய்தும்போது இதனை (meaning stage of a word) பொருட்பாட்டு நிலை என்கிறார்கள்.

இது இச்சொல்லிலிருந்து புல்லன், புன்மை, புல்லென் மாலை போன்ற பல்வேறு கருத்து வளர் சொற்கள் தோன்ற இடமளிக்கிறது. ஒரு சொல் கருத்தால் முதிர்ந்து வளர்ந்து அதிலிருந்து பல்வேறு நுண்கருத்து பொதிந்த பல்வேறு சொற்கள் தோன்ற இடமளிக்கும் தன்மையே பொருட்பாட்டு நிலை (meaningful stage) எனப்படுகிறது. ஒரு மொழியில் உள்ள இயற்சொற்கள் அனைத்தும் பொருட்பாட்டு நிலை எய்தியுள்ள சொற்களே. இயற்சொற்கள் எல்லாம் "எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே" என்னும் நூற்பாவிற்கு எடுத்துக்காட்டானவை. திரி சொற்களும் திசைச் சொற்களும் "மொழிபொருட் காரணம் விழிப்பத் தோன்றா" என்பதற்கு எடுத்துக்காட்டானவை. இவை முற்றிலும் பாவாணரின் வேர்மூலச் சொற்பிறப்பு அல்லது வடிவு மீட்டமைப்புச் சொற்பிறப்பு வாயிலாகப் பொருட்பாட்டு வளர்ச்சியைக் காண இடம் தருபவை. வடசொல் என்று அக்காலத்தில் குறித்த பாங்கை இப்பொழுது உலக மொழிச் சொற்கள் எனக் கொண்டால் பாவாணரின் வேர்ச்சொல்லாராய்ச்சி வாயிலாக உலக உறவு கண்டறிய முடியும்.

பொருட்பாட்டமைப்பு பற்றிப்பேச வந்த தொல்காப்பியர் சொல்லின் தெரிநிலைப் பொருள், குறிப்புப் பொருள் என்று இரண்டை மட்டுமே சுட்டிக் காட்டினார். அதனை இன்றைய மொழியியலார் surface structure, Deep structure எனக் குறிப்பிடுகின்றனர். இந்த வகைப்பாடு முழுமையான பொருட்பாட்டு ஆராய்ச்சிக்குப் போதுமானதன்று. சொல்லின் உயர்பொருட்பேறு, இழிபொருட்பேறு என்பனவும் சொல்லாட்சிச் சூழலில் சொல்லின் மேல் பேசுவோனின் கருத்து திணிக்கப்பட்டதையே காட்டுகிறது என்று மொழியியலார் சிலர் கூறுகின்றனர். பாவாணர் கருத்துப்படி ஒரு சொல்லின் மீது ஒருவன் வேண்டுமென்றே, ஒரு கருத்தை ஒரு

பொருட்பாட்டை திணிக்க முடியாது. ஒரு சொல்லின் கருத்து ஒருவன் நினைக்கும் பாங்குகளில் எல்லாம் விரிகிறதா என்பதைப் பொறுத்தே சொல்லின் ஒரு பொருட்பேறு அல்லது இரு பொருட்பேறுகள் சொல்லாட்சிப் பெற முடியும்.

ஒரே சொல் முரண் பொருள் தருவதாயின் அதனை மொழியியலார் contradictary என்கிறார்கள். அது எப்படி முரண்பட்டது என்னும் காரணத்தை அவர்களால் ஆராயக்கூடவில்லை. ஆனால் பாவாணர் அதனை நுணுகி ஆராய்ந்து முரண்பட்ட வேர்ச்சொற்களிலிருந்து தோன்றிய இருவேறு சொற்கள் திரிபுற்று அல்லது ஒரு வடிவம் கொண்டு முரண் பொருள் தருகின்றன என்று கண்டுபிடித்திருக்கிறார். உயர்வுப் பொருளையும் தாழ்வுப் பொருளையும் ஒரு சேர உணர்த்தும் 'புரை' என்னும் தமிழ்ச்சொல்லை இதற்குச் சான்றாகக் காட்டலாம்.

இதிலிருந்து சொல்லின் பொருட்பாட்டு வகைமைகளைப் பாவாணரும் மொழியியலாரும் வகைப்படுத்துவது ஏறத்தாழ ஒன்றுபோல இருப்பினும் அவற்றின் காரண வகைப்பாடு செய்யும் திறமை பாவாணரின் ஆய்வில் மட்டும் காணப்படுகிறது.

சொல்லின் பொருட்பாட்டை ஆராய்ந்த பாவாணர் பொருட்பாட்டு வகைமைகளைப் பின்வருமாறு வகைப்படுத்தியிருக்கிறார்.

1. அணியியல் வகைமை (உவமைச் சொற்களை விளக்குவது)

கொடிவழி, நூற்பா, கோன், கொடியாள், கொடிச்சி, பெண்கொடி, கொம்பன்,கொம்பு மகள், ஆயிரம் காலத்துப் பயிர், தீயர்.

2. வரலாற்று வகைமை:

பொழில் = நாடு, நாவலந் தண் பொழில், தாயம், பேட்டை.

3. மெய்ப்பொருள் வகைமை:

உயிர், உடம்பு, யாக்கை, கட்டை, வீடுபேறு.

4. ஒரு பொருட் பல சொல் வகைமை:

பொருள், பண்டம், சரக்கு, தாரம்.

5. பல பொருளொரு சொல் வகைமை:

கேழல் – பன்றி, யானை.

வாரணம், கடல், சங்கு, கோழி, வாள்.

6. வழக்கற்ற உரிச்சொல் வகைமை:

பாட்டன், பூட்டன்.

7. ஒழுக்கவியல் சொல் வகைமை:

நல் (நலம்) நல்லள், அந்தணர், காவலன், மன்னன், கடப்பாடு.

8. பொருள்திரி சொல் வகைமை:

வாரணம், சேவல்

9. பொருள் திரியாமல் சொல் திரி வகைமை:

உருண்ட–உண்டை

10. வேரடிப்பொருள் திரி வகைமை:

குல்–குன்று. குல்–குலை

11. உட்பொதி இலக்கணக் கட்டமைப்பு வகைமை:

உள்குறு–உட்குறு–உட்கார்

12. நிலைபேற்று பொருட்பாட்டு வகைமை:

மரம், கல்

13. உடன்கொண்ட பொருட்பாட்டுச் சொல் வகைமை:

அம்மா, அப்பா

மேற்கண்டவற்றுள் வேரடிப்பொருள் திரி வகைமையே அனைத்து வகைமைகளுக்கும் பிறப்பிடமானது. மேற்கண்ட வகைமைகளுள் ஞால முதன்மொழி தோன்றிய காலத்திலிருந்து பல்வேறு கால வரம்புகளுள், இடச்சூழல்களிலும், பண்பாட்டு வரலாற்றுச் சூழல்களிலும், உளப்பாங்கு நிலைகளிலும் ஏரணப்படி நிலைகளிலும் உலகமொழிச் சொற்களை ஒப்பீட்டு முறையில் ஆராய்வதற்குப் பொருட்பாட்டு ஆராய்ச்சி பெரிதும் உதவும்.

மரபிலக்கணம் மொழியைச் செம்மையாக ஆள்வதற்கு உதவுகிறது. மொழியியல் மொழியின் பாங்கை உள்ளபடி உணர்வதற்கு உதவுகிறது. பொருட்பாட்டு ஆராய்ச்சி உலக முதன்மொழி எப்படித் தோன்றியது என்றும் அந்த மூல மொழியிலிருந்து பல்வேறு மொழிக் குடும்பங்களும் பன்னூற்றுக்கணக்கான

கிளைமொழிகளும் எவ்வாறு தோன்றின என்று அறிவதற்கும் உதவுகிறது. மேற்கண்ட வகைமைகளை உலகமொழிகள் அனைத்திலும்பொருத்திப் பார்க்கும் முயற்சி பாவாணரின் நெறிமுறைப்படி மேற்கொள்ளப்பட வேண்டும்.

மேனாட்டார் நோக்கில் பொருட்பாட்டு ஆராய்ச்சி என்பது சொல்லில் அல்லது தொடரில் பொருட்பாடு அமைந்துள்ள வகையை மட்டும்தான் சுட்டிக்காட்டுகிறது. ஒப்புமையாக்கம் (Analogy); திரிபாக்கம் (Derivation) பல பொருளொரு சொல் (Ambiguous) என்று வகைப்படுத்துவதால் மட்டும் பொருட்பாட்டை முழுமையாக விளக்கிவிட்டதாகச் சொல்ல முடியாது. அந்தப் பொருட்பாடு ஏன் தோன்றியது எப்படித் தோன்றியது எங்கே தோன்றியது எப்பொழுது தோன்றியது என்று விளக்குவதுதான் உண்மையான பொருட்பாட்டு ஆராய்ச்சியாகும் என்று பாவாணர் கூறியிருக்கிறார். சொற்பிறப்பியல் அகரமுதலி இந்த நோக்கில் தொகுக்கப்பட வேண்டும் என்றும் கூறியிருக்கிறார்.

சொற்பிறப்பு அகரமுதலி என்பது எந்த மொழியிலும் தாய்மொழிக்காகத் தொகுக்கப்படுவது என்றும் தாய்மொழியில் கலந்துள்ள பிறமொழிச் சொற்களை எம்மொழியிலிருந்து வந்து என்று பிரித்துக் காட்டுவது என்றும் இதுவரை கருதப்பட்டு வந்தது.

பாவாணரின் நோக்கம் அதுவன்று. தாய்மொழிச் சொல்லாயினும் பிறமொழிச் சொல்லாயினும் அதன்பொருளை வரலாற்று வழி விரித்துக்காட்டி அதன் சொல் வடிவ மாற்றங்களையும் பொருட்பாடுகளையும் ஒருசேர விளக்கிக் கொண்டு போவதே சொல்லாராய்ச்சி நெறி என்று பாவாணர் உறுதிப்படுத்தினார். இதனைச் சொல்லின் கொடி வழி ஆராய்ச்சி (geneological study) என்று கூறுவார்கள். கொடி வழி ஆராய்ச்சியை மொழியியலார் எவரும் மேற்கொள்வதில்லை. ஏனெனில், மொழி தோன்றிய காலத்திலிருந்து இந்நாள் வரை எம்மொழியிலும் தொடர்பறாத சொல் வளர்ச்சிக்கான சான்றுகள் கிடைக்க வாய்ப்பில்லை என்பது அவர்கள் கருத்து. ஆனால், பாவாணர் தொல்பழங்கால வடிவங்களை மீட்டமைத்துக் கொள்கிறார். தொடர்ந்து தொடர்புற்ற பொருட்பாட்டை எவரும் மறுக்க முடியாது. மரம் என்னும் சொல்லின் பொருள் 50 ஆயிரமாண்டு காலமாகத் தொடர்பு அறவில்லை. இடைக்காலத்தில் சொல் வடிவுகள் திரிந்திருக்கலாம். அந்தச் சொல் வடிவுகளை ஒலியியல் சொல்லியல் கோட்பாடுகளுக்கேற்ப மீட்டமைப்பதில் எப்படித் தவறு ஏற்பட முடியும். வரலாற்று ஒப்பீட்டு வழியில் (Historical and comparative study) சொற்றிரிபுகளை மிக நன்றாக வரையறுக்க முடியும். பொருட்பாட்டு நிலைபேறு அல்லது திரிபுகளைக் கொடிவழி முறையில்தான் ஆராய முடியும். கொடி வழி ஆராய்ச்சி முறையை வேறாகவும் வரலாற்று ஒப்பீட்டு ஆராய்ச்சி முறையை வேறாகவும் மேலை மொழிநூலார் கருதுவது தவறு. இதனை "வண்ணனை மொழி நூலின் வழுவியல்" என்னும் நூலிலும் கூறியிருக்கிறார்.

"சொல்லாராய்ச்சி வளர்ந்த அளவிற்கு உலகில் பொருட்பாட்டாராய்ச்சி வளரவில்லை. அதை நானே ஆலமரமாக வளர்த்திருக்கிறேன். என்னுடைய நூல்கள் என்னும் விழுதுகள் ஆராய்ச்சி உலகில் கால்கொள்ளும்போதுதான் உலக அறிஞர்களுக்கு இதன் பெருமை புரியும்" என்று பாவாணர் ஒரு முறை என்னிடம் கூறினார். இப்பொழுது செய்ய வேண்டுவன எல்லாம் பாவாணரின் பொருட்பாட்டு ஆராய்ச்சிக்கு

அடிமணையாகிய வேரடிப்பொருட்பாட்டு வகைமையை விளக்கி மற்ற பொருட்பாட்டு வகைமைகள் அதனின்று எவ்வாறு கிளைத்து வளர்ந்து சொற்களின் பயன்பாட்டைத் தன் வல்லாண்மையின் கீழ் கொண்டு வந்தன என்று விளக்குவதே.

சொல், பொருளைக் கட்டுப்படுத்துகிறதா அல்லது பொருள், சொல்லைக் கட்டுப்படுத்துகிறதா என்னும் வினாவிற்குப் பொருளே சொல்லைக்கட்டுப்படுத்துகிறது என்று பாவாணர் விடையளிக்கிறார். ஊசி வழி நூல் செல்லுவதைப்போல பொருள் வழி சொல் செல்கிறது. அப்படியானால் இலக்கணம் எழுதுவோர் பொருள் செல்லும் வழிகளைப் புலப்படுத்தி இலக்கணம் எழுதியிருக்க வேண்டும். அதை விடுத்து சொல் திரியும் பாங்குகளுக்கு மட்டும் இலக்கணம் எழுதிவிட்டார்கள். அதனால் மொழியின் தோற்றத்தையும் வளர்ச்சியையும் வரையறுத்து நிலைநாட்டும் வாய்ப்பை மொழியியலாரும் மரபிலக்கணத்தாரும் இழந்துவிட்டார்கள்.

பொருட்பாட்டு வழி சொல்லிலக்கணத்தை ஆராய்வதற்கு பொருட்பாட்டு வகைமைகளை நிரல்படுத்தி ஆராயும் முயற்சி மேற்கொள்ளப்பட வேண்டும்.

மேற்கண்ட பதின்மூன்று வகைமைகளை ஒவ்வொரு சொல்லுக்கும் பொருத்திப் பொருட்பாட்டு இலக்கணம் எழுதும் நாள் என்று வருகிறதோ அன்றே பாவாணரின் கனவு முற்றிலும் நனவாகும் நாளாகும்.

இந்தச் சொல்லுக்குப் பொருள் விளங்கவில்லை என்று சொல்லும்போது சொல் தனக்குரிய பொருளை உணர்த்தத் தவறிவிட்டது என்று குற்றஞ்சாட்டலாம் அல்லவா? என்னும் வினா எழுகிறது. இதற்குத் தொல்காப்பியர்

“பொருட்குத் திரிபில்லை உணர்த்த வல்லின்” எனத் தெளிவு கொளுத்துகிறார்.

வானம் என்னும் சொல் நீட்சியும் பரப்பும் கருதி இடப்பட்டது. வெட்ட வெளியான இடம் என்னும் பொருள் இச்சொல்லின் முதற்பொருட்பாடு. வானத்திலிருக்கும் மேகத்தையும் மேகத்திலிருந்து பொழியும் மழையையும் இதே சொல் குறிக்கிறது. பொருளும் திரிபடைகிறது. இருப்பினும் இச்சொல் ஆளப்படும் சூழல் நோக்கிப் பொருள்புரிந்து கொள்கிறோம். இச்சொல்லின் முதற்கருத்தாகிய நீட்சி பரப்பு என்பன முதற்பொருளிலேயே ஒடுங்கிவிட்டது. அந்தக்கருத்தை மேகம், மழை என்னும் பொருட்பாடுகளில் வெளிப்படக் காண முடியவில்லை. வானம் என்னும் சொல்லால் மூன்று பொருள்களை உணர்த்த முடிகிறது. ஆதலால் பொருள்புரிந்து கொள்வதில் தடுமாற்றம் இல்லை.

இதிலிருந்து சொல் என்பது தொடர்புடைய பொருட்பாடுகளைச் சுமந்து வெவ்வேறு பொருள் தருகிறது எனத் தெரிகிறது. தொடர்புடைய பொருட்பாடுகளை மனம்தான் எண்ணிப்பார்க்கிறது. மனக்கண்ணால் உறவு காணப்பட்ட பொருட்பாடுகள் மட்டும் சொல்லின் மீது ஏற்றப்படுகின்றன.

மரம் என்று முதன்முதல் பெயரிட்டவனின் மனத்தில் ஏனைய பயிர் வகைகளுடன் ஒப்பிடும்போது மரம் பருமனிலும் உயரத்திலும் பெரிதாக இருக்கும் காரணம் நிழலாடியது. மரு என்னும் சொல்லுக்குப் பெரியது

என்று பொருள். வரு – வா எனவும் தரு – தா எனவும் நெடுமுதலாகி ஓரெழுத்து ஒரு மொழியானதுபோல் மரு – மா எனத் திரிந்து பெரியது எனப் பொருள் தந்தது ஆதலால் மரு – மரம் எனப் பெயர் சூட்டப்படும் தகுதிபெற்றது. மனம்தான் அகக்கண்ணில் தோன்றும் பெரியது என்னும் கருத்துக்குரிய மரு என்னும் சொல்லைத் தேர்ந்தெடுத்துக் கொள்கிறது. அதன்பின் ஒப்பீட்டளவில் பெரிதாகத் தெரிந்த பயிர் வகையான மரக்கூட்டம் அனைத்துக்கும் மரம் என்னும் பொதுப்பெயரைச் சூட்டிவிடுகிறது.

ஒருவன் சூட்டிய பெயர் அம்மொழி பேசும் அனைவர் அகக்கண்ணிலும் பொருட் பொருத்தத்தை நிலைநாட்டுகிறது. அம்மொழி பேசும் அனைவர்க்கும் ஒப்பமுடிந்த புதுச்சொல் மொழியில் நிலை பேறு பெற்ற சொல்லாகிவிடுகிறது. மரங்கள் இருக்கும் வரை இச்சொல்லுக்கு வாழ்வுண்டு. மரமே இல்லாத பாலைவனத்தில் குடியேறும் தமிழனிடம் இச்சொல் வழக்கிழந்து போய்விடும்.

உயரமான மரத்தைக் கண்டவர் நீட்சிப்பொருள் தரும் "தரு" என்பதை மரப்பெயராக வழங்கினர். அடி பருத்த மரத்தைக் கண்டவர் பருத்தல் பொருள்தரும் 'பழு' என்பதை மரப்பெயராக்கிக்கொண்டனர். இச்சொல் வடபுலத்து மொழிகளில் 'பேட்' (paed) எனத் திரிந்துள்ளது. அவரவர் நினைத்து ஒரு சொல் படைத்தபோது பெருவழக்கூன்றிய சொற்கள் நிலைபேறு பெற்றன. ஏனையவை திசைச்சொற்களாயின.

முதன்முதல் ஒரு பொருளுக்குப் பெயரிடுபவன் காரணம் கருதி பெயரிடுகிறான். அடுத்துவரும் தலைமுறையைச் சார்ந்தவன் அதன் பொருட்காரணம் உணராமல் அந்தச்சொல்லே பொருள் உணர்த்துவதாக நினைக்கிறான்.

இவ்வாறு சொல்வழி வளர்ந்த வழி நிலைப்பொருள்களை மட்டும் பற்றிக்கொண்டு மூலப்பொருளை மறந்துவிடுகிறான். இதனால்தான் ஒரே இயற்கைப்பொருளுக்கு முந்து தமிழன் இட்ட பெயர் உலகமொழிகளில் தமிழோடு ஒப்புமை காணமுடியாதபடி உருமாறிப் போகின்றன. இந்தச் சிக்கலை நீக்குவதற்கு ஒவ்வொரு மொழியிலும் செப்பமான பொருட்பாட்டுத் திரிபு நெறி தழுவிய வடிவு மீட்டமைப்புகள் மேற்கொள்ளப்பட வேண்டும்.

## சொல்வேர் காண்வழிகள்:

**சொற்பிறப்பியல்** (Etymology) ஒரு தனி மொழி நூற்றுறை என்பதைப் பலர் உணர்வதில்லை, புலவர் தேர்வு தேறியமட்டில், அல்லது கல்லூரியாசிரியப்பதவி பெற்ற மட்டில், எல்லாச் சொற்கும் வேர்காணும் ஆற்றல் தமக்கு வந்துவிட்டதாகப் பலர் கருதி விடுகின்றனர்.

இனி, தமிழ்ப் பேராசிரியராக, அவருள்ளும் பல்கலைக்கழகத் தலைமைத் தமிழ்ப் பேராசிரி யராக, இருப்பவரோவெனின், மேலையறிஞர் எழுதியுள்ள மொழி நூலைக் கற்றவுடன், தம்மையும் மொழி நூல் ஆசிரியராக அல்லது அதிகாரிகளாகக் கருதிக் கொள்கின்றனர். கல்விவேறு, ஆராய்ச்சி வேறு என்பதை அவர் அறிகின்றிலர்.

சொற்பிறப்பியல் என்பது சொற்களின் உண்மையான வரலாற்றைக் கூறுவதேயன்றி ஒலிமுறை தழுவியும் உன்னிப்பாகவும் குறிக்கோள் கொண்டும் கூறுவதன்று. இதை (Etymology) என்னும் பெயரே உணர்த்தும். GK. etumos = true etumon = original form of word; etumologia - E. etymology =

acount of facts relating to formation and meaning of word.

சொற்பிறப்பியல் என்பது ஒரு தனி அறிவிற்றுறையாதலின்,அதற்குரிய நெறிமுறைகளையெல்லாம் அறிந்த பின்னரே சொற்கட்கு வேர்காணும் ஆராய்ச்சியில் ஈடுபடுதல் வேண்டும். அல்லாக்கால், பின்வருமாறு எழுவகை வழுமுடிபாகவே முடியும்.

**1. ஒலிமுறைச் சொல்லியல்**

(Sound Etymology)

எ-டு : பாராளுமன்று – Parliament (F. Parlement) பார், ஆளும், மன்று என முப்பெயர்ச் சொல் கொண்டது தமிழ்ச் சொற்றொடர். Parler (to speak) என்னும் பிரெஞ்சு வினை முதனிலையும் Ment என்னும் ஈறும் கொண்டது ஆங்கிலச் சொல். ஆதலால் இரண்டும் வெவ்வேறாம்.

**2. உன்னிப்புச் சொல்லியல்**

(Guessing Etymology)

எ-டு : வடு–வடை (நடுவில் துளையாகிய குற்றமுள்ளது) இது சரியன்று. உழுத்தமா பிசுபிசுப்புத் தன்மையுடைமையால், எளிதில் எண்ணெய் ஊடுருவி வேகுமாறு உழுந்துவடையின் நடுவில் துளையிடப்பெறும். இது வடுவன்று.

வள்–வட்டை–வடை–வ. வடா. வட்டமானது வடை. இதுவே உண்மையான பொருள்.

**3. குறிக்கோட் சொல்லியல்**

(Tendentious Etymology)

எ-டு : வெறு – வெறுக்கை (வெறுக்கப் படத்தக்கது) = செல்வம். வ. முக்தா (சிப்பியினின்று விடுதலை பெற்றது) த. முத்தம் – முத்து. இக்கூற்றுகள் சரியல்ல. இவற்றுள் முன்னது துறவியர் கூற்று; பின்னது வடவர் கூற்று. வெறுத்தல் = செறிதல், நிறைதல். வெறுக்கை = திரண்ட செல்வம்.

"விறப்பும் உறப்பும் வெறிப்புஞ் செறிவே." (தொல். சொல், 347)

முத்து = உருண்டையானது. முத்து – முத்தம் வ. முக்தா இவையே உண்மையான பொருள்.

**4. அடிப்பட்ட சொல்லியல்**

(Popular Etymology)

எ-டு : உண்மை = உள்ளத்தொடு (கருத்தொடு) பொருந்தியது. வாய்மை = வாயொடு (சொல்லொடு) பொருந்தியது. மெய்ம்மை = உடம்பொடு (செயலொடு) பொருந்தியது. இம்முறைப் பொருட்கூற்று சரியன்று. உண்மை = உள்ளது, வாய்மை = தேற்றமாய் வாய்ப்பது (நிறைவேறுவது). மெய்ம்மை = உடம்பு போற்கண்கூடானது (Substantiality) இங்ஙனம் கொள்வதே பொருத்தமானது.

**5. நகையாட்டுச் சொல்லியல்**

(Playful Etymology)

எ-டு : தோசை = சுடும் போது இருமுறை சை யென்று ஓசை கேட்பது : இஃது ஒரு வேடிக்கைக் கூற்று.

தோய்தல் = மாப்புளித்தல். தோய் – தோயை – தோசை என்பதே பொருத்தம். தோசையைத் தோயப்பம் என்னும் வழக்கை நோக்குக.

**6. பொருந்தப்புகல்வுச் சொல்லியல்**

(Plausible Etymology)

எ–டு : பெருச்சாளி = பெரிய பணப்பை போன்றது. இது பொருந்தாக்கூற்று. பெருத்த எலி = பெருச்சாளி என்பதே உண்மையொடு பொருந்தியது.

**7. அறிவாரவாரச் சொல்லியல்**

(Pedantic Etymology)

கீழ் = ஞாலம் உருளும்போது கிழக்குத் திசையிற் கீழ்நோக்கிச் செல்வது; மேல் = அது அங்ஙனம் உருளும்போது மேற்குத் திசையில் மேனோக்கி எழுவது. இது கணியர் திறம்படக் கூறுவது. கீழ் = தமிழ் நிலப்பரப்பு கீழ்க்கோடியில் கடலாற் பள்ளமாயிருப்பது; மேல் = அது மேற்கோடியில் மலைத்தொடரால் மேடாயிருப்பது. இது கால்டுவெலார் கூற்று. இதுவே உண்மையானது.

இனி, உண்மைச் சொல்லியல் நெறிமுறைகளும் சொல்வேர் காணும் வழி வகைகளும் வருமாறு :–

**1. இலக்கண அறிவுடைமை**

ஒவ்வொரு பகுசொற்கும், முதனிலை, ஈறு, இடைநிலை, சாரியை, புணர்ச்சி, திரிபு ஆகிய அறுவகை யுறுப்புக்களுள்அமைந்துள்ளவற்றைப் பகுத்தறியத் தெரிதல் வேண்டும்.

**2. மொழிநூலறிவும் மொழியாராய்ச்சியும்**

வரலாற்று மொழிநூல் (Philology) அறிவும் சொந்த மொழியாராய்ச்சியும் அடுத்து வேண்டப் பெறும் இன்றியமையாத் தகுதியாம்.

**3. சொல்லிய லறிவுப்பேறு**

கீற்று (Skeat) எழுதியுள்ள ஆங்கிலச் சொல்லியல் நெறிமுறைகளையும்(Principles of English Etymology - 2 Vols). அவரும் சேம்பரரும் (Chambers) தொகுத்த ஆங்கிலச் சொல்லியல் (Etymological)அகர முதலிகளையும் கற்றுத் தெளிதல் வேண்டும்.

**4. அயன்மொழி யறிவு**

மலையாளம் தெலுங்கு போன்ற அகப்புற மொழிகளையும், மராட்டி இந்தி போன்ற புறமொழிகளையும் ஓரளவு கற்றலும் வேண்டும்.

தன்சொற்போல் தமிழில் வந்து வழங்கும் வேற்றுச் சொல்லையும், வேற்றுச் சொற்போல் பிறமொழிச் சென்று வழங்கும் தன் சொல்லையும், பிரித்தறிதற்கு அயன்மொழி யறிவு இன்றியமையாததாம்.

**5.பெரும்பால் தமிழ்ச் சொற்பொருளறிவு**

இருவகை வழக்கிலுமுள்ள தமிழ்ச் சொற்களுட் பெரும்பாலனவற்றின் பொருளை அறிந்திருத்தல் வேண்டும்.

**6. தமிழ் ஒலியியல் பறிதல்**

தமிழ் முதன்முதல் குமரி நாட்டில் தோன்றிய மெல்லொலி மொழியாதலின், வல்லொலி மிக்க திராவிட மொழிகளையும் ஆரிய மொழிகளையும் அடிப்படையாக வைத்தாராயின், உண்மை காணமுடியாது. தமிழின் உண்மையான ஒலியியல்பையும் சொற்றூய்மையையும் அறியவிரும்புவார், இற்றைத் தெண்பாண்டி நாடாகிய நெல்லை வட்டார நாட்டுப்புற உலக வழக்கை அறிதல் இன்றியமைாததாம். தமிழின் மெல்லொலிகளே திராவிடத்திலும் ஆரியத்திலும் வல்லொலிகளாய்த் திரிந்துள்ளன. எ–டு : செய் –Ceyu

(தெ.) கும்பு – Gumpu (தெ.) கல் – Khal (பிரா.) பாகம் – Bhaga (வ.).

**7. எழுத்துகளின் திரிபுகளை யறிதல்**

சொல்லாக்க முறையில், ஒவ்வோரெழுத்தும் சில்வேறழுத்தும் பல்வேறெழுத்துமாகத் திரிகின்றது. அத்திரிபுகளையெல்லாம்அறியாக்கால் பலசொல்வேர்களைக் காண்டல் அரிதாம்.

எ–டு : ள–ஃ: எள்கு – எஃகு, வெள்கு – வெஃகு

ள–க: உளி – உகிர், தளை – தகை

ள–ச: உளி – உசி – ஊசி – வ. சூசி

ள–ட: நளி – நடி, மகள்–மகடூஉ

ள–ண: பெள்–பெண், வள்–வளர்–வணர்

ள–ய: தொள்–தொய், மாள்–மாய்

ள–ர: நீள்–நீர், வள்–வார்

ள–ல: கொள்–கொல்

ள–ழ: காள்–காழ், துளசி–துழாய்

ள–ற: தெள்–தெறு–தெற்று,வெள்–வெறு

ள–ன: முளை–முனை, வளை– வனை

**8. சொற்றிரி பறிதல்**

எ–டு : அரம் (சிவப்பு) – அரத்தம் (சிவப்பு) – அரத்தி – அத்தி – சிவந்த பழம், அப்பழமரம். அகல்–ஆல் = அகன்று படரும் மரம். கோநாய்–ஓநாய். தமப்பன் – தகப்பன். தகு + அப்பன் என்று பிரிப்பது தவறாம்.

**9. சொற்களின் திருந்திய வடிவறிதல்**

இடைகழி–டேழி (கொச்சை) – ரேழி (கொச்சை). மணித்தக்காளி – மணத்தக்காளி (கொச்சை). மணத்தக்காளி என்னும் கொச்சை வடிகளினின்று, வேரையும் வேர்ப் பொருளையும் அறிய முடியாது.

**10. பலபொருளொரு வடிவுச் சொற்களைப் பகுத்தறிதல்**

சில சொற்கள் வெவ்வேறு பொருள் கொண்ட வெவ்வேறு வேரினின்று பிறந்து ஒரு வடிவுகொண்டு நிற்கும். அவற்றை வேறுபடுத்தியறிதல் வேண்டும்.

எ–டு மணி[1] = கரியது. மல்–மால்=கருமை, முகில் = கருமை, மா–மாயோன்=கரிய திருமால். மாயோள் = கரிய காளி. மல்–மள்–மறு - களங்கம், கரும்புள்ளி. மள் – (மய்)–மை =கருமை, முகில், காராடு. மள்–மழை=முகில், முகில் நீர். மள்–மண்–மணி= மள்–மண்–மணி = நீலக்கல், கரும்பாசி. மணி மிடற்றோன் = கரிய கழுத்துள்ள சிவன். மணிவண்ணன் = கரிய திருமால்.

மணி2 = வட்டமானது.

முள் – முரு – முருகு = வளைந்தகாதணி. முரு – முரி – மூரி = வளைவு, முரி – முறி – மறி. முரு–முறு–முற்று. முறு–முறை–மிறை = வளைவு. முள் – (முண்) – (முணம்) – முடம். (முணம்) – முணங்கு – முடங்கு மடங்கு. முள் – (முண்டு) – மண்டு – மண்டலம் = வட்டம். மண்டு, மண்டி. மண்டியிடுதல் = காலை வளைத்தல். முள் – முட்டை. முண்டை = உருண்டையானது.முள்–முண்டு = உருண்ட கட்டை முள் – முடி – முடிச்சு.

மணி 3 = சிறியது.

முள் – (முண்) மள் – மண்–மணி = சிறியது. மணிக்காடை, மணிக்காக்கை, மணிக்குடல், மணிப்பயறு, மணிப்புறா முதலிய வழக்குக்களை நோக்குக. மணி–மாணி = சிறுவன் பள்ளிச் சிறுவன், மணமாகா இளைஞன்

மணி4 = ஒளியுள்ளது.

மண்ணுதல் = கழுவுதல், மினுக்குதல்

"மண்ணுறு மணியின்" மண்–மண்ணி–மணி = ஒளிக்கல்..

11. சொற்களைச் செவ்வையாய்ப் பிரித்தல்

உடக்கெடுத்துப் போதல் =உடக்கு + எடுத்துப் போதல் (கூடாதல், தோலும் எலும்பு மாதல், மிக மெலிதல்). இதை உடல் கெடுத்துப் போதல் என்று சென்னைப் பல்கலைக்கழக அகரமுதலி பிரித்திருப்பது தவறாம்.

உடங்கு – உடக்கு = உடம்புக் கூடு.

**12. பொருள்களின் சிறப்பியல்பறிதல்**

ஒவ்வொரு பொருளின் (பார்த்தமட்டிற் கண்ணைக் கவரும்) சிறப்பியல்பையும் உற்று நோக்கியே, அதற்குரிய பெயரை இட்டிருக்கின்றனர் முன்னைத் தமிழர்.

எ–டு காக்கா என்று கரைவது காகம் (காக்கை). மூன்று அணிகளை (வரிகளை) முதுகில் உடையது அணில். இருமை (கருமை) யான மாட்டினம் எருமை. வழவழவென்றிருக்கும் மரம் வாழை,

முடிவேய்ந்த பேரரசன் வேந்தன். வேய்தல் = முடியணிதல். வேய்ந்தோன் – வேந்தன். கொன்றை வேந்தன் என்று கூறுதல் காண்க. சேர சோழ பாண்டிய முக்குடியரசர்க்கே முடியணியும் உரிமை முதற்காலத்திலிருந்தது.

**13. பொருள் வரிசையறிதல்**

உ–டு : அருகுதல் = சிறுத்தல்,ஒடுங்குதல். அரு – அரை = சிறுத்த அல்லது ஒடுங்கிய இடை, உடம்பின் நடு, பாதி. கால் – தூண் போல் உடம்பைத் தாங்கும் உறுப்பு, உடம்பின் காற்பகுதி (நலிலொடன்று).

உடம்பின் பாதியளவாயிருப்பது அரையென்றும், நாலிலொருபகுதியாயிருப்பது காலென்றும், தலைகீழாய்ப்பொருட்கரணியங் காட்டுவது உண்மைக்கு நேர்மாறாம்.

**14 . ஒப்புயமைப்பு அறிதல்**

எ–டு : குழல் – குடல், புழல் – புடல் – புடலை – க. படவல. தெ. பொட்ல, வ. பட்டோலிக்கா, கடை - கடலை, விடை – விடலை.

மை – மயில், தை – தயிர்; தைத்தல் குத்துதல். முட்குத்தினால் முள் தைத்தது என்பர். பாலிற் பிரைமோர் ஊற்றுதலைப் பிரை குத்துதல் என்பது உலக வழக்கு. பிரை தைத்தது தயிர் – வ – ததி இ. தஹீ.

**15. வரலாற்றறிவையும் ஞால நூலறிவையும் துணைக்கோடல்**

எ–டு : பாண்டவர் தோன்று முன்னரே பாண்டியர் தென்னாட்டை ஆண்டு வந்தனர். பாண்டவருள் ஒருவனான அருச்சுனன் திருநீராடத் தென்னாடு வந்து, சித்திராங்கதன் என்று பாரதங் கூறும் ஒரு பாண்டியன் மகளை மணந்தான். ஆரியர் இந்தியாவிற்குள் அடிவைக்கு முன்னரே, பாண்டியர் வரலாற்றிற் கெட்டாத தொன்மையிலிருந்து கணக்கில் காலம் தென்றமிழ் நாட்டை ஆண்டு வந்திருக்கின்றனர். திருக்குறளுக்கு ஆரிய அடிப்படையில் உரை வரைந்த பரிமேலழகரும், பழங்குடிக்குக் "படைப்பு

காலந்தொட்டு மேம்பட்டுவரும் சேர சோழ பாண்டியர் குடிகள்" என்று மூவேந்தர் குடிகளை எடுத்துக் காட்டினர். இங்ஙனமிருந்தும், பாண்டியன் என்னும் பெயர் பாண்ட்ய என்னும் வட சொல்லினின்று திரிந்ததாகச் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ் அகரமுதலி நெஞ்சாரப் பொய்க்கின்றது. இதை ஊழியிறுதிச் சூறாவளி போற் சுழற்றி யெறிவது குமரிக்கண்டத் தமிழக வரலாறே. பாண்டி = காளை, மறவன். பாண்டி = பாண்டியன்.

சாமை படைப்புக்காலந்தொட்டுத் தென்னாட்டில் விளைந்து வரும் தொண் (ஒன்பான்) கூலங்களுள் ஒன்றாகும். இன்றும் அது நாட்டுப்புற உழவர்க்கு உரிய ஒழுங்கான உணவு வகைகளுள் ஒன்றாக இருந்து வருகின்றது. ஆயினும், அதன் பெயர் ச்யாமா என்னும் வட சொல்லின் திரிபாக, மேற்குறித்த பொய்க்களஞ்சியம் அணிந்து கூறுகின்றது. இதனை வெட்டி வீழ்ப்பது ஞாலநூலறிவே.

சாமைப்பயிர் போல் ஒரு புல்லும் உண்டு. அது சாமைப்புல் எனப்படும். சாமை என்னும் தென் சொல்லையே மொழியாளர் ச்யாமா என்று திரித்துத் தமிழரை ஏமாற்றி வருகின்றனர்.

**16. இடுகுறி தமிழில் இல்லையென்றுணர்தல்**

தமிழ் தானே தோன்றிய இயன் மொழியாதலின், அதிலுள்ள எல்லாச் சொற்களும் கரணியக் குறிகளே.சிலவற்றின் வேர்ப் பொருள் பார்த்த மட்டில் தெரியும்.

எ-டு : சுடலை < சுடல் < சுடு < சுள். சிலவற்றின் வேர்ப் பொருள் ஆழ்ந்து ஆய்ந்தாலன்றித் தோன்றா.

எ-டு:வினை<விளை இவ்வுண்மைகளையே,

"எல்லாச் சொல்லும் பொருள்குறித் தனவே." (640)

"மொழிப் பொருட் காரணம் விழிப்பத் தோன்றா." (877)

என்று தொல்காப்பியர் குறித்தார்.

நன்னூலுரையாசிரியர் இடுகுறியாகக் காட்டியுள்ள தமிழ்ச் சொற்களெல்லாம் கரணியக் குறிகளே. பலா = பருத்த பழத்தையுடையது. பனை = கூரிய பற் போன்ற கருக்குமட்டையுள்ளது. பொன் = பொற்பு அல்லது பொலிவுள்ளது. மரம் = மரத்தது அல்லது உணர்ச்சியற்றது போன்றிருப்பது. மா = கொட்டைக்குள் வண்டுள்ளது.

ஆரிய மொழிகள் திரிபுடைமொழிகளாதலின், அவற்றிற் பல சொற்கள் வேர்ப்பொருள் தோன்றாவாறு திரிந்திருப்பதுடன், பல இடுகுறிச் சொற்களும், சிறப்பாகச் சமற்கிருதத்தில், அமைந்துள்ளன. அதனால், சமற்கிருதத்தை அடிப்படையாக வைத்தாய்ந்த மேலை மொழி நூலாசிரியர், எல்லா மொழிகளும் இடுகுறித் தொகுதிகளே என்பதை அடிப்படை நெறிமுறையாகக் கொண்ட வண்ணனை மொழி நூல் (Descriptive Linguistics) என்னும் வழுப்பட்ட மொழியியல் வகையை உலகமுழுதும் பரப்பி வருகின்றனர். உண்மையான வரலாற்று மொழியாராய்ச்சியால் சமற்கிருத இழிவும் ஆரிய ஏமாற்றமும், உலகிற்கு வெளிப்பட்டு விடுமேயென்று அஞ்சும் வட மொழியாளர், புதிதாய்த் தோன்றியுள்ள வண்ணனை மொழிநூல் தமக்கொரு கேடகமாயிருப்பது கண்டு, அதனை நெஞ்சார நினைந்து வாயார வாழ்த்தி வளர்த்து வருகின்றனர். அவரடியாரான கொண்டான் மாரும் தமிழைக் காட்டிக் கொடுப்பதற்கு இது தலைசிறந்த வழியாயிருப்பதறிந்து, இதனைத் தலைமேல் தாங்கி நிற்கின்றனர்.

ஒரு பொருளை எங்கெங்கும் தேடியும் காணமுடியாதென்று முழுநம்பிக்கை கொண்டவனுக்கு, எங்ஙனம் தேடன் முயற்சி பிறக்கும்? எல்லாச் சொல்லும் இடுகுறிகளேயென்றும், எல்லா மொழிகளும் ஆயிரம் ஆண்டிற்கொருமுறை அடியோடு மாறி விடுகின்றன என்றும், நம்புகின்றவனுக்கு எங்ஙனம் மொழியாராய்ச்சி வேட்கை எழும்? ஆதலால், வண்ணனை மொழிநூல் அறிவு வளர்ச்சிக்கு மாபெரு முட்டுக்கட்டையென்று அறவே புறக்கணிக்க.

**17. பகுத்தறிவைப் பயன்படுத்தல்**

எ–டு : வடவை = வடமுனையில் தோன்றும் ஒருவகை நெருப்பு அல்லது ஒளி. வடம் = வடவை (பிங்.) = வடவனல்.

"வடவைக் கனலை வைத்தூதி" (அந்தகக்கவி வீரராகவர் தனிப்பாடல்) வடம் – வடந்தை = வடகாற்று, வடவைத் தீ.

"சுடர்ந்தெரி வடந்தைத் தீயும்' (காஞ்சிப்பு. இருபத். 384 "அக்கடலின் மீது வடவனல் நிற்க விலையோ" (தாயுமானவர்.)

ஒ–நோ : Aurora Borealis = Nothern Light.

இங்ஙனம் வடவை என்பது தென் சொல்லென்றும் வடவனல் நெருப்பின் பெயரென்றும் தெளிவாயிருக்கவும், அதை வடவா என்று திரித்துப் பெண்குரிரை என்று பொருளுளரைப்பர் வடவர். இத்தகைய சொல்லியயல்களிற் பகுத்தறிவைப் பயன்படுத்துவது இன்றியமையாதது.

**18. அஞ்சாமை**

ஆயிரக்கணக்கான தென் சொற்களை வடவர் கடன் கொண்டிருப்பதால், அவற்றையெல்லாம் தென் சொல்லென்று ஒப்புக் கொள்ளின், சமற்கிருதத்திற்குத் தமிழே மூலம் என்பது வெட்ட வெளியாம். அதனால், அதை மறைத்தற்கு, பல சொற்கட்குப் பொருந்தப் புகலலாகவும் பொருந்தாப் பொய்த்தலாகவும் பொருள் கூறியும், சிலவற்றை இடுகுறியென்று முத்திரையிட்டும், வருகின்றனர். இவற்றை மறுத்து உண்மை கூறுபவர்க்குப் பதவி அல்லது அலுவல் போய்விடும் என்னும் அச்சம் தமிழர் உள்ளத்திற் குடிகொண்டிருப்பதால், வடமொழியில் வழங்கும் தமிழ்ச் சொற்கட்கு வேர்காணத் தனிமறம் வேண்டுவது ஒருதலை.

**19. நடுநிலை**

"காய்தல் உவத்தல்அகற்றி ஒருபொருட்கண்
ஆய்தல்அறிவுடையார்கண்ணதே–காய்வதன்கண்
உற்ற குணந்தோன்றா தாகும் உவப்பதன்கண்
குற்றமுந் தோன்றாக் கெடும்". (அறநெறி. 22)

கவி என்பது வடசொல். பா, செய்யுள் என்பனவே தென்சொல். ஆதலாற் கவிஞனைப் பாவலன் என்றும், கவியரங்கைச் செய்யுளரங்கு அல்லது பாவரங்கு என்றுமே சொல்லுதல் வேண்டும்.

கவிந்து கொள்வது கவி என்றும், தருவது தருமம் என்றும், நாயை வைத்திருப்பவன் நாயன் என்றும், உள்தணமாயிருப்பது உட்டணம் என்றும், இரவுகசிதல் இரகசியம் என்றும், பெரிய வித்து என்று பொருள்படும் வான்வித்து என்பது வித்துவான் என்று தலைமாறிய தென்றும், இவை போன்று பிறவும், கூறுவதெல்லாம் அறிவு வயப்பட்டன வல்லவென்று கூறிவிடுக்க.

**20. பொறுமை**

சிலசொற்கட்கு வேர்காட்டும் உறவுச் சொற்கள் இறந்துபட்டிருப்பதால், அவற்றின் வேர் காண்டற்கு நாட்பலவன்றி ஆண்டு பலவும் ஆகலாம். ஆதலால், சொல்லாராய்ச்சிக்கு மிகுந்த பொறுமையும் வேண்டும்.

ஆண்டு பலவாகியும் வேர்காண வியலாது போகவும் நேரும். அதனால் உள்ளந் தளர்தல் கூடாது.

நெறியறிந்து ஆர அமர ஆராயின், இற்றைத் தமிழ்ச் சொற்களுள் மிகப் பெரும்பாலானவற்றிற்கு வேர்காண வியலும், எனினும், இறைவன் ஏற்பாட்டின் படியே ஒவ்வொருவர்க்கும் ஒவ்வொரு துறையில் ஆற்றலையருள்வான் என்பதை நினைவில் இருத்தல் வேண்டும்.

"வான்குருவி யின்கூடு வல்லரக்குத் தொல்கறையான்
தேன்சிலம்பி யாவர்க்குஞ் செய்யரிதால்–யாம்பெரிதும்
வல்லோமேயென்று வலிமைசொல வேண்டாங்காண்
எல்லார்க்கும் ஒவ்வொன் றெளிது." (ஔவையார்).

சொல்வேர் காண்வழிகள் பற்றிய மேற்கண்ட பாவாணரின் கருத்துரை சொற்பிறப்பு ஆய்வுக்குச் சீரிய வழி காட்டுகிறது.

ஒரு சொல் பல பொருள்படுவது ஏன் என்பதற்கு மொழியிலாரால் சரியான காரணம் சொல்ல முடிவதில்லை. பேராசிரியர் அகத்திலிங்கம் இது குறித்து எழுதும்போது மொழியியல் நோக்கில் இருவேறு இலக்கணக் கட்டமைப்பு இருக்கும்போது இரு வேறு பொருள் தோன்றும் எனத் தொல்காப்பியத் தொடரியல் கோட்பாடு குறித்த ஆய்வில் தெரிவித்திருக்கிறார். ஆனால் பாவாணர் சொற்பிறப்பு நோக்கில் இதனை மிகத் தெளிவாகப் புலப்படுத்தியிருக்கிறார். மணி என்பது பல பொருள் ஒரு சொல். வேரடி வேறுபாடு அமைந்துள்ள பாங்கைப் பாவாணர் பின்வருமாறு காட்டியிருக்கிறார்.

1) முள் – முழு – (உருண்டை) – மள் – மணி (உருண்டையான ஒளிக்கல்)

2) முல் – முள் (சிறியது) – மண் – மணி = சிறியது.

மணிக்காடை, மணித்தக்காளி.

3) மண் (செய்தல்) – மண்ணுதல் = கழுவுதல், தேய்த்தல் – மணி (பட்டை தீட்டப்பட்ட வயிரக்கல்)

இத்தகைய வேரடிப்பொருள் திரிவுகளை மொழியியலார் விரித்துரைத்தால் உலகமொழிகள் அனைத்துக்கும் தமிழே மூலத் தாய்மொழியாதல் உறுதிப்படும் எனப் பாவாணர் தெளிவுப்படுத்தியுள்ளார்.

# தமிழ்ச் சொற்பிறப்பு நெறிமுறைகள்

## பொருளடக்கம்

# குறுக்க விளக்கம் – (Abbreviation)

அசா –அசாமி

ஆ.பா. – ஆண்பால்

ஆகு. – ஆகுபெயர்

இந்.– இந்தி

இ.வ.– இடவழக்கு

இடை – இடைச்சொல்

உ – உயிரெழுத்து

உ.வ. – உலக வழக்கு

ஈ.எ.பெ.எ. – ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்

உரி – உரிச்சொல்

உரு. உருது

எ–டு – எடுத்துக் காட்டு

எபி. – எபிரேயம்

எ.ம – எதிர்மறை

ஒ.நோ. – ஒப்புநோக்குக

ஒரி – ஒரியா

க. கன்னடம்

கு.வி.எ. – குறிப்பு வினை எச்சம்

குச். – குச்சரம் (குசராத்தி)

குட, – குடகு

குறள் – திருக்குறள்

குறுந். –குறுந்தொகை

கொ.வ. –கொள்கை வழக்கு

கோத். – கோத்தம்

கொடுந். – கொடுந்தமிழ்

சந். –சந்தால்

சமற்.– சமற்கிருதம்

சிந். = சிந்தி

சிலப்.– சிலப்பதிகாரம்

சீவக.சிந்.– சீவக சிந்தாமணி

செ,கு.வி.–செயப்படுபொருள் குன்றியவினை

செ.கு.னறா.வி.– செயப்படுபொருள் குன்றாவினை

த. – தமிழ்

தணிகைபுரா– தணிக்கைப் புராணம்

து. – துளு

துட. துடவம்

து.வி. – துணைவினை

தெ. தெலுங்கு

தேவா. – தேவாரம்

தொ.பெ. – தொழிற்பெயர்

தொல்.– தொல்காப்பியம்

நற். – நற்றிணை

நன். – நன்னூல்

நாலடி.– நாலடியார்
நி.காபி. எ. – நிகழ்கால வினை எச்சம்
நெடுநல். – நெடுநெல்வாடை
நெ.மு., –நெறிமுறை
பக்.– பக்கம்
பஞ்.–பஞ்சாபி
பா. – பாலி
பட. – படகம்
பரி. – பரிபாடல்
பாலி
பிரா. பிராகிருதம் (பாகதம்)
பிராகு. – பிராகுவி
பி.ற. =– பிறனை
புறம். – புறநானூறு
பெ. –பெயர்
பெ.எ. – பெயரெச்சம்
பெ.பா. – பெண்பால்
ம. – மலையாளம்
மரா. – மராத்தி
மாலி. – மாலத்தீவு
மெ – மெய்யெழுத்து
வங். – வங்காளம்
வி.அ. – வினை அடை
வி. எ. – வினை எச்சம்
அவ.உருபு – வேற்றுமை உருபு
வே. தொ. – வேற்றுமைத் தொகை

Adj. - adjective
Ar. - Arabia
Ar. - Arya
A.S. - Anglo -Saxon
Cog. - cognate
Conj. - conjunction
Celt - Celtic
Dan. - Danish
Dra. - Dravidian
Dut. - Dutch
E. -English
Fin. - Finnish
Fr. French
Gael. - Gaelic
Gr. - German
Golt. - Galgthic
Gk. - Greek
Ice - Icelandia
It. - Itlaian
L. - Latin
M.E. - Middle English
OFr. - Old French
Skt. - Sanskrit
Pkt. Prakrit
T. - Tamil
V. Vowel
V.i. - Verb intransit
v.t. - verb transit
Vo. - volume

# 1. உலக முதன்மொழியின் தோற்றம்

## (Origin of the Mother tongue of man)

> *"The invention of language was so far reaching so revolutionary that it must have occured just once"*
>
> *- Harry Hoijer"*

நெ.மு.

**1.1 ஞாலமுதன் மொழி உணர்ச்சி வெளிப்பாட்டைக் காட்டும் ஒலிக்குறிப்பு மொழியாகத் தோன்றியது. பிறகு கருத்தை வெளியிடும் பேச்சு முறை வடிவமைப்புகளைத் தாங்கிச் சுட்டடி வளர்ச்சி மொழியாக வளர்ந்தது.**

*(எ.டு).* காகா – காகம்

**1.2 சொல் வடிவத்தில் காணப்படும் சீரான திரிபுகளும் ஒலி வடிவத்தில் காணப்படும் நிகரான ஒலிப்புத் திரிபுகளும் மூலக் கருத்தைத் தழுவியவை.**

*(எ.டு).* ஒ – ஒலம்

ஊ – ஊசல்

**1.3 ஒலிக்குறிப்பு மொழிக் காலத்தில் எதிர்மறைக் கருத்து நெட்டோசையாகவே இருந்தது.**

*(எ.டு).* உ–உம் என்பன இசைவுக் குறிப்பு.

ஊ–ஊம், ஈ–ஈம் என்பன இசைவின்மையாகிய எதிர்மறை ஒலிக்குறிப்பு.

**1.4 ஒலிக்குறிப்பு என்பது உணர்வின் வெளிப்பாடு. கருத்து என்பது எண்ணப் புலப்பாடு.**

*(எ.டு).* ஒல்–ஒலிக்குறிப்பு.

ஒலி–கருத்துச்சொல். கருத்துமொழி என்பது நினைவின் தொடர்ச்சி. இதனையே பாவாணர் ஏரண நெறி என்றார். எனவே சொற்கள் பொருள் பொதிந்தவை ஆயின.

ஒரு வேர்ச்சொல் (அடி) பல நினைவுகளின் தொகுதி. நினைவு என்பது புலப்பாடுகள். நினைவு களின் தொடர்புற்ற பதிவு கருத்து.

**1.15 பேச்சு வழக்கங்கள், உணர்ச்சி வெளிப் பாட்டின் தன்மைக்கு ஏற்ப முதல் தாய் மொழியிலிருந்து பிரியும் மொழிகளின் தன்மையை வடிவமைக்கும்.**

*(எ.டு).* 1. உயிரொலியை மிகுதியாக ஆளும் மக்கள்.

2. வல்லினத்தை மிகுதியாக ஆளும் மக்கள்.

3. மெல்லினத்தை மிகுதியாக ஆளும் மக்கள்.

மூவினப் பேச்சு வழக்கம் உடைய மக்கள் தத்தம்மொழிப்பாங்கை அடிப்படை வினை வடிவங் களாகத் திரித்துக்கொள்வர்.

ஞால முதன்மொழியில் உயிரொலியே மேல் ஓங்கி இருந்தது. அத்தன்மை இன்றும் தமிழில் காணப் படுகிறது.

கல்லாத மக்களிடை உணர்ச்சிக் கூறுகள் மிகுவதால் நீட்டொலியும் முழக்கொலியும் அதட் டொலிகளாகி அசையழுத்தங்கள் மிகுந்து அற்றற்று ஒலிக்கும் தொடர்களை உருவாக்கும். இதனால் கூட்டுச்சொற்களும் தனிச் சொற்களும் ஓரசை களாகக் குறுகிச் சொல் வடிவம் புலப்படாவிடினும்

கருத்து மட்டும் புலப்படும் அசைக்குறி அடையாளங் களாகிவிடும்.

சான்று. 'புகுந்து போ' என்னும் கூட்டுச்சொல் 'பூர்' எனவும், 'போய்விட்டார்' – என்பது 'பூட்டார்' எனவும் குறுகும்.

**1.6 உயிரினத்திரிபில் கூட்டுயிர் கலப்பால் ஏகார ஓகார உயிர் நெடில்களும் ஐ, ஔ கூட்டுயிர்களும் தோன்றும்.**

*(எ.டு).* இ+அ–ஏ

உ+அ–ஒ

அ+இ–ஐ

அ+உ–ஔ

**1.7 முதன்மொழி எது அதன் வழி நிலை மொழி எது என்பதைப் பொருட்பாட்டு விரிவும் முன் சேர்ப்பு மிகையெழுத்தும் காட்டிவிடும்.**

*(எ.டு).* **த.** அரணம் = செருப்பு, மிதியடி – அடிபுதை அரணம் எய்தி படம் புக்கு.

**த.** அரணம் > **Skt.** saranam. (செருப்பு அணிந்த பாதம்).

செருப்பைக் குறித்த சொல் அதனை அணிந்த பாதத்தைக் குறிக்கும் பொருட்பாட்டுப் புடை பெயர்ச்சியும் சகர முன்னெழுத்துச் சேர்ப்பும் சமற்கிருதம் காலத்தால் பிந்தையது என்பதையும் தமிழ் முந்தையது என்பதையும் காட்டுகிறது.

பொருட்பாட்டுப் புடை பெயர்ச்சி ஒன்றே சகரச் சேர்ப்பு காலத்தால் பிந்தையது எனக் காட்டுவதால் பேராசிரியர் பரோ உள்ளிட்ட மேலை மொழியியலார் திரவிட மொழிகளில் சகரம் உயிர்முதற்சொற்களில் சேர்ந்தது என்னும் கருத்து தவறாகிறது. மொழி ஞாயிறு பாவாணரும் முதன்மொழி தோன்றிய காலத்தில் உயிர்முதற்சொற்களொடு வல்லின மெய் முதல் சேர்ந்து சொற்பெருக்கம் ஏற்படுவதை வேர்ச்சொற் கட்டுரைகளில் காட்டியிருக்கிறார்.

அனல்–கனல் (தீப்பிழம்பு)

அளி–தளி (குளிர்ச்சி)

அறை–பறை (பேசு)

அரி–பரி (பரியாரி – முடிவெட்டுபவன்)

**1.8 வாயை ஆவென்று விரிவாகத் திறந்து சேய்மையைச் சுட்டும்போது ஆகார வொலியும் ஈயென்று பின்னோக்கி யிழுத்துப் பின்மையாகிய அண்மையைச் சுட்டும்போது ஈகாரவொலியும் ஊவென்று முன்னோக்கிக் குவித்து முன்மையைச் சுட்டும்போது ஊகார ஒலியும் பிறந்து முதன்மை முச்சுட்டுகளாகும். சுட்டொலிகள் கணிதம்போல் அளவைப்பட்டனவும் திட்டமானவும் எவ்வகையிலும் மாறாத வையும் ஆகும்.**

*(எ.டு).* சேய்மை : ஆ

அண்மை : ஈ

முன்மை : ஊ

நெடிலின் குறுக்கம் குறிலும் குறிலின் நீட்டம் நெடிலுமாதலின் ஆ,ஈ,ஊ எனினும் அ,இ,உ எனினும் ஒன்றே. நெடில் ஒலித்தற்கு எளிதாதலானும் குழந் தைகள் குறில்களைப் பெரும்பாலும் நெடில்களாகவே ஒலித்தலானும் முந்தியல்மாந்தன் வாயில் நெடில்களே முந்திப் பிறந்தவை.

*(எ.டு).* ஆ, ஈ, ஊ, ஏ, ஓ, ஐ, ஔ.

**1.9 முந்தியல் மாந்தர், முன்னிலைக்கும் அண்மைக்குமன்றிப் பயன்படாமையும் தெளிவின்மையும் பல கருத்துகளை அறி வித்தற்கியலாமையும் ஆகிய முக்குறைகள் கைக்குறிப்பு (சைகை) முறைக்கு இருத் தலைக் கண்டதால் சுட்டொலியின் துணை கொண்டு அறுவகை ஒலிகள் முதன்மொழி தோற்றத் திற்கு அடிமனை ஆயின.**

*(எ.டு).* அறுவகை ஒலிகள்.

வாய்ச் செய்கையொலி இடஞ்சுட்டாது வாயின் செயற்பாங்கைச் சுட்டும். ஆயின் சுட்டொலி அண்மை சேய்மை முன்மை எனும் மூவிடத்தையும் அங்குள்ள

பொருள்களையும் சுட்டும். பொருள்களைச் சுட்டும் கட்டாயத்தால் அவற்றின் தன்மை இயக்கம் போன்ற வற்றையும் குறிப்பிட நேர்வதால் சுட்டொலிகளி லிருந்து வினைக் கருத்து – பண்புக் கருத்துகளை உட்கொண்ட வேரடிகள் தோன்றும். வாய்ச்செய்கை ஒலிகளின் இடத்தை சுட்டொலி வழி வந்த பேச் சொலிகள் கைப்பற்றிக்கொள்ளும்.

## 1.1 தமிழ் உலகமுதற்பெருமொழியாயிருக்கலா மென்பதற்குச் சான்றுகளும் காரணங்களும்

1. தமிழ்நாட்டின் பழைமை.

2. தமிழின் பழைமை.

3. தமிழின் எளிய வொலிகள்.

4. தமிழில் இடுகுறிச்சொல்லும் சுட்டசையும் (Definite Article) இல்லாமை.

5. தமிழில் ஒட்டுச்சொற்கள் சிலவாயிருத்தல்.

6. அம்மை அப்பன் என்னும் தமிழ் முறைப் பெயர்கள் பல வடிவில் உலகமொழிகள் பலவற்றில் வழங்கல்.

7. தமிழச் சொற்கள் சிலவோ பலவோ உலக மொழிகள் எல்லாவற்றிலுமிருத்தல்.

8. மும்மொழிக் குலங்களின் சிறப்பியல்புகள் ஒரு சிறிது தமிழிற் காணப்படல்.

வடமொழிக்குரிய நீட்டற்புணர்ச்சி (தீர்க்கசந்தி) தமிழிலுள்ளமை முன்னர்க் கூறப்பட்டது.

சித்தியக் குலத்திற்குச் சிறந்த உயிரொப்புத் திரிபு (Harmonious Sequence of Vowels) பொதியில் (பொது+இல்), சிறியிலை (சிறு+இலை) முதலிய தொடர்மொழிகளில் உளது.

சீனத்தில் ஒரே சொல் இடவேற்றுமையால் வெவ்வேறு சொல் வகையாகும். தமிழிலும் இஃதுண்டு.

***(எ.டு)*** : பொன் (அழகிது) – பெயர்ச்சொல். (அது) பொன் – வினைச்சொல். பொன் (வளையல்) – பெயரெச்சம். பொன் (விளைந்த களத்தூர்) – வினையெச்சம்.

பிறமொழிகளில் உள்ள ஒருமை இருமை பன்மை என்னும் எண்பாகுபாட்டிற்கு, அவன் அவர் அவர்கள், அல்லது ஒரு சில பல என்னும் வழக்குகள் மூலமாயிருக்கலாம்.

(9) தமிழில் ஒலிக்குறிப்பாயுங் குறிப்பொலியாயு முள்ளவை பிறமொழிகளில் சொல்லாய் வழங்கல்.

***(எ.டு)*** தரதர – tear, தகதக–தஹ் (வ.), உசு – hush, சளப்பு – saliva, கெக்கக் கெக்க – L. cachinno, V.E. cachinnation.

10. அயன்மொழிச் சொற்கள் பலவற்றிற்கு வேர் தமிழிலிருத்தல்.

முக்குல மொழிகளிலுமுள்ள சுட்டு வினாச்சொற் களின் அடிகள் தமிழிலிருப்பது முதன்மையாகக் கவனிக்கத்தக்கது.

11. எழுகிழமைப் பெயர்களும், பன்னீரோரைப் பெயர்களும், ஆரிய மொழிகளில் தமிழ்ச் சொற்களின் மொழி பெயர்ப்பாயிருத்தல்.

பண்டைத்தமிழர் வானநூல் வல்லோராயிருந்தமை முன்னர்க் கூறப்பட்டது. அவர் நாளின் (நாண்மீனின்) பெயரால் ஒரு கிழமையளவையும், எழுகோள்களின் பெயர்களால் ஒரு வார அளவையும், மதியின் பெயரால் ஒரு மாதவளவையும், சூரியன் பெயரால் ஓர் ஆண்டளவையும் குறித்திருத்தலே, அவரது வானநூலறிவிற்குச் சிறந்த சான்றாம். இவ்வளவுகள் முதன்முதற் குமரிநாட்டிலேயே தோன்றியவை.

ஆங்கிலத்தில் உள்ள வாரநாட் பெயர்களில், Sunday, Monday, Tuesday, Saturday என்னும் நான்கும் தமிழ்ப்பெயர்களின் மொழி பெயர்ப்பாயிருக் கின்றன.

Tues என்பது Zues என்பதின் மறுவடிவமாகக் கூறப்படுகிறது. இவை முறையே செவ்வாய் சேயோன் என்னும் பெயர்களைச் சொல்லாலும், பொருளாலும் ஒத்திருக்கின்றன. Zues கிரேக்கப் பெருந்தெய்வம். கிரேக்கர் தமிழ்நாட்டில் மிகப்பழங்காலத்திலேயே குடியிருந்தனர். அவரை யவனர் என்று தமிழ் நூல்கள் கூறும். யவனம் என்பது கிரேக்க நாட்டின் பெயர்களுள் ஒன்று. பாண்டியனுக்கும் கிரேக்க மன்னருக்கும் கயல்மீன் சின்னமாயிருந்ததும், தமிழருக்கும் கிரேக்கருக்கும் பல பழக்கவழக்கங்கள் பொதுவாயிருந்ததும் இங்குக் கவனிக்கத்தக்கன.

இலத்தீனில் வழங்கிய பன்னிரு ஓரைப் பெயர்களும் தமிழ்ப் பெயர்களின் மொழி பெயர்ப் பாகவே யிருக்கின்றன.

I. Aries (ram), II. Taurus (bull), iii. Gemini (twins), iv. Cancer (crab), v. Leo (lion), vi. Virgo (virgin), vii.

Libra (balance), vii. Scorpio (scorpion), ix. Sagittarius (archer or bow), x. Capricorn (the goat - horned = shark). xi. Aquarius (water - bearer = pitcher) xii. Pisces (fish).

12. தமிழில் முதல் வேற்றுமைக்கு உருபின்மை.

13. தமிழ் வேற்றுமை யுருபுகளெல்லாம் பின்னொட்டுச் சொற்களாயிருத்தல்.

14. சொற்றொடரில் தமிழ்ச்சொன்முறை இயல்பாயிருத்தல்.

பன்னிரண்டு என்னும் சொன்முறை பத்தோடு இரண்டு சேர்ந்தது என்பதைக் குறிப்பதாகும். வடமொழியில் த்வாதசம் என்னும் முறை இயற்கைக்கு மாறானதாகும்.

15. தமிழ் உலக முதன்மொழி ஆய்வுக்குச் சான்றாய் நிற்றல்.

## 1.2 ஞாலத்தாய்மொழியில் முதலெழுத்துகள் எண்ணிக்கையில் குறைவானவை.

உலகமொழிகளெல்லாம் ஒரே மூலத் தாய்மொழியிலிருந்து பிறந்தன என்னும் உண்மையை மொழிஞாயிறு ஞா. தேவநேயப் பாவாணர் வலியுறுத்தினார். அதற்குச் சான்றாகச் சுட்டடிக் கொள்கையை விரித்துரைத்தார். உயிரெழுத்துகளில் முதன் முதலில் தோன்றியவை அ,இ,உ என்னும் முச்சுட்டுகளே என்றும் அச்சுட்டடியில் தோன்றிய விதைச் சொல் முளைச்சொல் ஆணிவேர் ஆகியவற்றிலிருந்தே ஞாலத் தாய்மொழி உருவாயிற்று என்பதும் அவர் கொள்கை. அக்கொள்கைக்கிணங்க உலக மொழிகள் அனைத்திலும் முச்சுட்டுகள் உயிரெழுத்துகளாகக் கலந்துள்ள பாங்கை பொருள்வழி மீட்டமைப்புகளால் கண்டறியக்கூடும்.

இதுபோன்றே மெய்யெழுத்துகளில் அடியண்ணத்தில் பிறக்கும் அகரம், இடையண்ணத்தில் பிறக்கும் சகரம், முன் அண்ணத்தில் பிறக்கும் தகரம், இதழியைப் பிறக்கும் பகரம் ஆகிய நான்கு வல்லெழுத்துகளும், இடையெழுத்துகளில் லகரம், மெல்லெழுத்துகளில் மகரம் ஆகியனவும் ஆக ஆறு மெய்யெழுத்துகள் ஞாலத்தாய்மொழியில் முதலெழுத்துகளாகவும், மெய் ஆறும் உயிர் மூன்றும் ஆக **<u>ஒன்பது முதலெழுத்துகளாலேயே மொழி இயன்றது.</u>** அதில் தனிச் சொற்கள் உருவாகியபோதும் கூட்டுச்சொற்கள் உருவாகியபோதும் ஏனைய 21 எழுத்துகள் தோன்றின.

## 1.3 நாவொடு நவிலா உயிரெழுத்துகள் முன் தோன்றியவை.

முதலில் உணர்ச்சி ஒலிகளாக முச்சுட்டுகளும் அவற்றின் நீட்சியான ஆ, ஈ, ஊ என்னும் நெடில்களும், மொழி முதலாகும் உயிரெழுத்துகளாக மாறின.

<u>எகர ஒகரம்:</u> சுட்டெழுத்து அளவிலேயே முதன்மொழி உருவாயிற்று என்பதை நிறுவுவதற்கு உயிர் மயக்கத்தால் (Vowel cluster - சந்தியட்சரம்) உருவான ஏனை உயிரெழுத்துகளே சான்றாகின்றன.

**இ+அ–எ**

**உ+அ–ஒ**

இஃது நாவின் துணையின்றி ஒலித்தற்கு எளிதான <u>நாவொடு நவிலாச் சொற்கள்</u> உருவாகத் துணைபுரிந்துள்ளன. வெறும் உயிரெழுத்துகளே இணைந்து பெயர்ச் சொற்களும் வினைச் சொற்களும் ஞாலத்தாய்மொழியில் முதன் முதல் உருவாகி உள்ளன. இதற்குச் சான்றாக இ=அ–இஅ(இய)– இயங்கு, நட என்னும் தமிழ் வினைச்சொல்லையும் இஆ (தந்தை) என்று இன்றளவும் வழங்கும் பஞ்சாபி சிந்தி (சிந்துவெளி தமிழ்ச்சொல்) மொழிச் சொற்களையும் சான்றாகக் காட்டலாம்.

<u>எகார ஒகாரம்:</u> இயல்பு வினைகள் உயிர்க்குறிலை முதலாகக் கொண்டன. அவை ஏவல் வினைகளாக வளரும்போது எடுப்போசை பெறுதலால் உயிர்க்குறில் நெடிலாக வேண்டிய கட்டாயத்திற்குள்ளாகின்றன.

இஅ(இய)–நட, செல் என்னும் பொருளில் பயன்படுத்தப்பட்ட இயல்பு வினை இஃது. உரத்துப் பேசி ஆணையிடுங்கால் இஅ–(எ)–ஏ எனவும் நெடிலாக உருவெடுத்து ஏகு (சொல்) என்னும் பொருளில் வளர்ந்தது. நாளடைவில் ஏ–யா எனத் திரிந்து யா–படர்தல் செல்லுதல். (யா–யாத்திரை, இந்தி. யா–jā (போ) என வழக்கூன்றியது. உஅ–ஒ (ஒல்லுதல், பொருந்தல், மகிழ்தல், உவத்தல்) – ஓ எனத் திரிந்து மகிழ்ச்சியைக் குறிக்கும் குறிப்புச் சொல்லாகவும் மகிழச் செய்யும் அல்லது பாதுகாக்கும் ஓம்பல் வினையடியாகவும் வளர்ந்து உயிர் நெடில் முதலெழுத்தாயிற்று.

<u>ஐகார ஔகாரம்:</u> அகர இகரம் ஐகாரம் ஆகும் எனத் தொல்காப்பியர் கூறுகிறார். அகர உகரம் ஔகாரம் ஆகும் என்பதும் வெளிப்படை. இவற்றை சந்தியட்சரங்கள் என்று வடமொழியாளரும் ஒப்புவர்.

ஐகாரத்தை அஇ என்றும் ஔகாரத்தை அஉ என்றும் எழுதும் வழக்கம் பழங்காலத்தில் நிலவியது. இதற்கு ஓர் காரணமும் இருந்தது. பழங்காலத்தில் உயிர் நெடில்களுக்குத் தனித்த வரிவடிவம் இல்லை. அவை இரு குறில்களாகவே எழுதப்பட்டன.

அஅ–ஆ, இஇ–ஈ, உஉ–ஊ, இஅ–ஏ, அஇ–ஐ, உஅ–ஓ, அஉ–ஔ இரு குறில்களுக்கான இரு மாத்திரை நெட்டெழுத்தாகவே மாறியதால் அவற்றின் குற்றெழுத்தை எழுதிக்காட்ட புதிய எகர ஒகர எழுத்துகளை உருவாக்காமல் ஏகார ஓகார நெட்டெழுத்துகளின் மீது புள்ளியிட்டுக் குறிலாக்கினர்.

*(எ.டு).* இஅ–ஏ நெட்டுயிரானமையின்மையில் எகரக் குறிலுக்கு ஏகாரத்தின் மீது புள்ளியிட்டனர்.

உஅ–ஓ நெட்டுயிரானமையின் ஒகரக் குறிலுக்கு ஓகார நெடிலின் மீது புள்ளியிட்டனர். அதனாற்றான் தொல்காப்பியர் "எகர ஒகரம் புள்ளியெய்தும்" என்று கூறினார்.

ஐகாரத்திற்கும் ஔகாரத்திற்கும் குறில் இன்மையால் தனித்த வரிவடிவம் தேவையற்றதாயிற்று.

## 1.4 நாவொடு நவிலும் மெய்யெழுத்துகள் தொட்டடுத்துத் தோன்றியவை:

க,ச,த,ந,ப,ம என்னும் ஆறும் நாவின் எளிய முயற்சியால் உருப்பெறுவன. ஐகார ஔகாரம் தவிர்த்த பத்து உயிர்களும், ஆறு மெய்யும் ஆக 16 எழுத்துகள் மொழி முதலாகும் எழுத்துகளாக வளர்ந்தன. பெயர் வினை ஆகிய இரு வகைச் சொற்களுக்கும் லகரம் ஒரே ஈற்றெழுத்தாக இருந்தது.

அ–அல்

இ–இல்

உ–உல்

குல், சுல், துல், நுல், புல், முல் என்பனவே மூலச் சொற்கள்.

இவற்றினின்றும் கூட்டுச் சொற்கள் உருவாகும் போது நாவொடு நவிலும் பல்வகை மெய்யெழுத்துக்கள் உருப்பெற்றன.

நல்+கு–நன்கு, நங்கு

நல்+து–நந்து, நன்று

இப்புணர்ப்புகளில் நல்+து–நன்று எனப் புதிதாக றகர ஒலிப்பும், நள்+து–நண்டு என டகர ஒலிப்பும் தோன்றலாயின.

மேற்கண்ட சான்றுகளிலிருந்து மகரம் தளிர்த்த ங, ஞ, ண, ந, ன என்னும் ஐந்து மெல்லெழுத்துகள் ட,ற என்னும் இரு வல்லெழுத்துகள் ஆக ஏழு எழுத்துக்கள் நாவொடு நவிலும் புதிய ஒலிப்புகளாக உருப்பெற்றதை உணர முடிகிறது.

ஆணிவேர்களின் அடியாக அடிப்படையான வினைமுதல்கள் உருப்பெற்ற காலத்தில் குறிப்பிட்ட கருத்தினின்றும் புதிய கருத்துகள் முகிழ்த்தபோது அவற்றைச் சுட்ட புதிய் சொற்களும் தோன்ற வேண்டியதாயிற்று. அப்பொழுது அப்பொருள் வேறுபாட்டைச் சுட்டுதற்கு மொழியிறுதி எழுத்தின் திரிபு அகத்தியமாயிற்று.

நல்–நள், நய், நர், நறு, நல், நழ் (நழு) எனத் திரித்தொலிக்கும் பாங்கு வளர வளர ய,ர,வ,ழ,ள என்னும் ஐந்து இடையெழுத்துகளும் லகரம் என்னும் ஒரே இடையெழுத்திலிருந்து உருப்பெறுகின்றன.

மேற்கண்ட சான்றுகளிலிருந்து ஞாலத்தாய் மொழியில் தொடக்கத்தில் தோன்றிய முச்சுட்டுகளிலிருந்து ஏனைய ஒன்பது உயிர்களும் பெருகி உயிர் வரிசை பன்னிரண்டாயிற்று என்பதும், க,ச,த,ப,ம என்னும் ஐந்தெழுத்தை முதலெழுத்துகளாகவும் லகரத்தை ஈற்றெழுத்தாகவும் கொண்ட ஞாலத்தாய் மொழியில் தொடக்கத்தில் தோன்றிய முச்சுட்டுகளிலிருந்து ஏனைய ஒன்பது உயிர்களும் பெருகி உயிர் வரிசை பன்னிரண்டாயிற்று என்பதும், க,ச,த,ப,ம என்னும் ஐந்தெழுத்தை முதலெழுத்துகளாகவும் லகரத்தை ஈற்றெழுத்தாகவும் கொண்ட ஞாலத்தாய் மொழியின் சொல்வளம் கூட்டெழுத்துகளில் புதிதாகத் தோன்றிய ஒலிப்புத் திரிபுகளால் ட,ற என்னும் இரு வல்லெழுத்துகளையும் ஐந்து மெல்லின எழுத்துகளை யும் ய,ர,வ,ழ,ள என்னும் ஐந்து இடையின எழுத்துகளையும் இடையில் தோன்றிய எழுத்துகளால் பெருக்கிக் கொண்டன என்பதும் அறியமுடிகிறது.

க,ச,த,ந,ப,ம – ஆறும் ஞாலத்தாய்மொழியில் மெய்யெழுத்துகள்.

ட,ற,ங,ஞ,ண,ந,ன,ய,ர,வ,ழ,ள – பன்னிரண்டும் சொல் வளர்ச்சிக் காலத்திய புதிய சேர்ப்புகள்.

ஞாலத்தாய்மொழியில் முச்சுட்டும் ஆறு மெய்யுமாக 9 எழுத்துகளில் இயன்ற சொல் வளத்தை அக்கால மொழிநிலைக்கான சொற்பிறப்பு நெறிகளால் அறியக்கூடும். மெல்லின மெய்களுள் மகரமும் இடையின மெய்களுள் லகரமும் ஒலித்தற்கு எளியன.

இவற்றுள் மகரமும் முந்தையதாயினும் சொல்லாக் கத்திற்கு லகர ஈறே மிகுந்த ஆளுமை பெற்றது.

**1.5 தாயொலிகள் – தாலாட்டு (lullaby)**

*(எ.டு).* லாலா, ராரா, ரோரோ.

**1.6 உணர்ச்சி ஒலிகள் (Emotional sounds) உலக முதன்மொழியாகிய ஞாலத்தாய் மொழியின் தொடக்கக் கூறுகளாகும்.**

*(எ.டு).* ஆ, ஈ, ஊ, ஒ, ஐ.

**1.7 விளியொலிகள் (vocative sounds) ஞாலத் தாய்மொழியின் கூறுகளாகும்.**

*(எ.டு).* ஏ, ஏய், ஓ, ஓய், எலா, எல்லா.

**1.8 சுட்டொலிகள் (deictic sounds). முதல் தாய் மொழியின் முதற் கூறுகளாகும்.**

*(எ.டு).* ஆ, ஈ, ஊ.

**1.9 ஒப்பொலிகள் (imitative) முதல் தாய் மொழியின் கூறுகளாகும்.**

*(எ.டு).* கா,கூ,உர்,இர்,மா, சுர், கிர், கீர்.

**1.10 குறிப்பொலிகள் (symbolic sounds) முதல் தாய்மொழியின் கூறுகளாகும்.**

*(எ.டு).* <u>எழுத முடிவன</u>

உம்–ஊம் (ஊம் கொட்டுதல்)

சீ, போ.

<u>எழுத முடியாதன</u>

மொச்சட்டம் (ச்,சொ)

வீளை (சீழ்க்கை)

<u>விலங்குகளை விளிக்கும் ஒலிகள்</u>

தோ தோ (நாய்) கூவோ (மேச்சல் மாடு) போ போ (கோழி) வேசு வேசு (பூனை).

**1.11 குழவி (குழந்தை) வளர்ப்பொலிகள் (Nursery sounds) முதல் தாய் மொழிக் கூறுகளாகும்.**

*(எ.டு).* இங்–இங்கா (பால்) டும், டும், பிப்பீ (விளையாட்டு ஒலிகள்).

**1.12 வாய்ச் செய்கை ஒலிகள் (gesticulatary sounds) முதல் தாய் மொழிக் கூறுகளாகும்.**

*(எ.டு).* ஆ = அங்காத்தல் (வாய் திறத்தல்)

ஆ – ஆகாட்டு.

அவ்–அவ்வு–கவ்வு–வவ்வு–வௌவு.

**1.13 ஒலிச் செய்கைகள் எனப்படும் (imitative sounds) ஒப்பொலிகள் வாய்ச்செய்கை ஒலிகள் ஆகியன குறில், நெடில் என இரு வகை உயிரெழுத்துகள் தோன்றுவதற்கும் வல்லினம், மெல்லினம், இடையினம் என மூவகை மெய்யெழுத்து தோன்றுவதற்கும் ஒலிப்புறுகளுக்குப் பயிற்சி தந்து எழுத்துகளின் பிறப்பிடத்தை உறுதிப்படுத்தவல்லன.**

*(எ.டு).* <u>ஒப்பொலிகள்</u> (Imitative sounds)

கா (காக்கை) கீர் (கீரி). குறட் (குறட்டை)

<u>வாய்ச்செய்கை ஒலி</u>

ஆ, ஈ, ஊ, அவ்.

**1.14 முந்தியல் மாந்தன் வாயில் நெடில்களே முதலில் தோன்றின.**

*(எ.டு).* ஆ, ஈ, ஊ, ஏ, ஓ (அஇ) ஐ, (அஉ) ஔ.

ஆ, ஈ, ஊ எனும் நெடுஞ்சுட்டுகள் இடக்கட்டு களாகவும், அல்,அன்,அள், அர், அது, அவு என்பன பாலீற்றுச் சுட்டுகளாகவும் ஞாலமுதன் மொழியில் வழங்கிப் பின்னர் ஆ+அன்–அவன், ஈ+அள்–இவள், ஊ+அன்–உவன், ஆ+கர்–அவர், ஆ+து–அது எனத் திரிந்திருத்தல் வேண்டும்.

**1.15 உலக முதல் தாய்மொழியைக் கண்டறி தற்கான இயல்வரையறை 15 வகைப்படும்.**

1. மிகப் பழைமையானதாயிருத்தல்.

2. பெரும்பாலும் எல்லா மொழிக்கும் பொதுவான எளிய ஒலிகளையே கொண்டிருத்தல்.

3. கூட்டுவரி (சம்யுக்தாட்சரம்) மெய்ம்முதல் க,ச,த,ப மெய்களின் பின் வேற்று மெய் வரவு (வேற்று

நிலை மெய் மயக்கம்) வல்லின மெய்யீறு முதலியன இல்லாதிருத்தல்.

4. முன்னொட்டுகளை (உபசர்க்கங்களை) மிகுதியாகக் கொள்ளாமை.

5. இடுகுறிப்பெயரில்லாதிருத்தல்.

6. ஏறத்தாழ எல்லாச் சொற்கட்கும் வேர்ப்பொருள் உணர்த்தல்.

7. பல மொழிகட்கும் அடிப்படைச் சொல் வழங்கியிருத்தல்.

8. பன்மொழிப் பொதுச் சொற்களின் மூல வடிவத்தைக் கொண்டிருத்தல்.

9. சொல்வளமுடைமை.

10. நெடுங்காலம் கழியினும் மிகச் சிறிதே திரிதல்.

11. இயற்கையான முறையில் வளர்ந்திருத்தல்.

12. இயன்மொழியாயன்றித் திரிமொழியாயில்லா திருத்தல்.

13. பொருள் பற்றியன்றி ஈறு பற்றி பாலுணர்த்தாமை.

14. பொருட்பாகுபாடு செய்வதில் எளிய முறையைத் தழுவியிருத்தல்.

15. முதற்கால மக்களின் எளிய கருத்துகளைக் கொண்டிருத்தல்.

## 1.16 சொற்பிறப்புக் கோட்பாடுகள் ஏரணம் தழுவியவை.

மொழியை ஒரு மரத்துக்கு ஒப்பிடுவர். அடிமரமும் கிளையும் வளாரும். சிம்பும், தளிரும், இலையும், பூவும், பிஞ்சும், காயும் கனியுமாகத் தழைத்துச் செழித்து நிழலும் பலனும் தரும் மரம் மக்களின் கண்ணையும் கருத்தையும் கவர்வதாயிற்று. எனினும், இவற்றுக் கெல்லாம் காரணமாகிய ஆணி வேரும் பக்க வேர்களும் கண்ணுக்குத் தெரியாமல் மண்ணில் புதைந்துள்ளன.

இதைப்போன்றே உலக முதன் மொழியும் அதனின்று கிளைத்த பல்லாயிரம் உலக மொழிகளும் ஒரு பூம்பொழில் போலக் காணப்பட்டாலும் அவற்றின் வேர்களைப் பற்றிய ஆராய்ச்சி பயிரினத்தின் பண்புக் கூறுகளை உள்ளடக்கிய கருமூலத்தை வெளிப் படுத்திக் காண முயல்வது போல் சொற்களின் கருமூலத்தை ஆராய்வதே பாவாணரின் வேர்ச்சொல் ஆராய்ச்சியாகும்.

சொற்பிறப்பு குறித்தும் மொழியின் தோற்றம் குறித்தும் உலக அறிஞர்கள் சொன்ன கருத்துகளி லிருந்து பாவாணர் முற்றிலும் வேறுபடுகிறார். எனவே, தானாகவே கண்டறிந்த உண்மைகளை சொற்பிறப்புக் கோட்பாடுகளாகப் படைத்துக் காட்டினார்.

## 1.17 மொழியின் தோற்றம் சொல்லை அடிப்படையாகக் கொண்டது.

சொற்களாகவே மொழி ஒலிகள் தோன்றின. நாகரிகப் படி நிலையில் மாந்தன் மொழியறிவு பெற்ற பின்னரே சொற்களுக்கு எழுத்தொலி பகுப்பு உண்டாயிற்று. சொல் என்பது ஒரெழுத்தாகத் தொடங்கிப் பல எழுத்தின் இயைபாகப் பொருளு ணர்ந்துவது.

*(எ.டு).* ஆ, ஆவு = மாடு

நீன் – நீம் – நீ, நீங்கள்

## 1.18 உலக முதல் மொழியின் வரலாற்றை அதன் பிறந்த இடத்திலிருந்தும் தோன்றிய காலத்திலிருந்தும் தொடங்க வேண்டும்.

முதல் மாந்தன் பிறந்தது தென்னாப்பிரிக்கா என்பதாலும் அங்கிருந்துதான் மக்கள் கிழக்கு நோக்கி நகர்ந்து உள்ளனர் என அமெரிக்க மிச்சிகன் பல்கலைக்கழகத் துறை நிறுவியிருப்ப தாலும் பாவாணரின் கருத்தின்வண்ணம் குமரிக் கண்டத்துத் தமிழ் செந்தமிழாக வளர்ந்த பாங்கு புலனாகிறது. ஏனெனில் குமரிக் கண்டத்து அடிப்படைச் சொற்கள் உலக மொழிகளில் ஊடாடியுள்ளன.

*(எ.டு).* 'அன்' – ஆண்பாலீறு.

உவன் – முன்னிலை இடப்பெயர்.

உந்து – செய்யுந்து – வினைமுற்று.

## 1.19 வேர் என்னும் உவமையாகு பெயர் பற்றி வேர்ச் சொல்லை முத்திறப்படுத்திக் கூறினும், மூலமும் திரிபும் என்னும் முறையில் வேர், அடி, முதனிலை என்னும்

**வகைப்பாடும் ஆணி வேர் பக்க வேர் கிளைவேர் என்னும் வகைப்பாடும் ஒன்றேயாகும்.**

*(எ.டு).*

| வேர்–திரிவு | அடி–திரிபு | முதனிலை – திரிவு |
|---|---|---|
| குல்–குலம் | குழு–குழாம் | குழுவு–குழுவல் |
| குல்–குலை | குழு–குழம்பு | குழுமு–குழுமல் |
| | குழு–குழும்பு | |
| | கல்–கல | கல்–கற்றல் |
| | கல்–கல | கல–கலவி |
| | | கலகம் |
| | | கலக்கம் |

**1.20 வேர்ச் சொல் திரிபுகள் வினைப் பாங்கை வேறுபடுத்தும் கருத்துகளின் வளர்நிலைகளைக் காட்டும். அவற்றின் பொருட்பாடு வினைச் சொல்லில் மறைந் திருக்கும்.**

*(எ.டு).*

கல–கலவி (இருபாற் கலப்பு)

கலகம் – பலர் கலந்து தம்முள் எதிர்த்து தாக்குதல்

கலக்கம் –நீரும் சேறும் போல் வெவ்வேறு பொருள்கள் கலந்த பொருட் கலக்கம்.

கலக்கம் – பல்வேறு முரண் கருத்துகள் அல்லது நினைவுகள் கலந்து மனத்தை வருத்துவது அல்லது குழப்புவது மனக்கலக்கம்.

வருத்துவது அல்லது குழப்புவது மனக் கலக்கம்.

**1.21 முந்நிலை வேரடிகளை கருத்து வளர் படிநிலைகளின் பாங்கில் முறைப் படுத்தினால் உலகமொழிகளின் வேரடி களோடு பொருத்திப் பார்க்கவும் கால இடச் சூழல்களை வரையறுக்கவும் இயலும்.**

*(எ.டு).* அம் – அம்மை – அம்மாள்

**1.22 வேரடிகளில் வேரடிப் பொருள் தேக்கம் நீடித்த காலங்களை நாகரிகப்படி நிலைச் சொல்லாட்சிகளின் வாயிலாக நிறுவ இயலும். இதனை முந்நிலை வேரடிப் பொருள் தேக்கம் எனலாம். (stagnation of verbal roots at primary, secondary and tertiary levels).**

இயன்மொழி வேரடிகளில் பொருள் தேக்கம் நெட்ட நெடுங்காலம் கொண்டவை. திரிமொழிகளில் சொற்றிரிபுகள் உருத்தெரியாது மறைந்த முறையினை மீட்டமைப்பு நெறிமுறைகளால் கண்டறியக் கூடும்.

**1.23 பாவாணர் வகுத்த வேரடிகள் (16 உயிர் முதல் வேர்).**

1. அம் – பொருந்தல் கருத்து வேர், அம், அமை, அமர்.
2. அர் – அறுத்தல் கருத்து வேர்.
3. இல் – இளமைக் கருத்து வேர்.
4. இள் – இணைதற் கருத்து வேர்.
5. உ – உகரச்சுட்டு.
6. உம் – கூடுதல் கருத்து வேர்.
7. உய் – செலுத்தற் கருத்து வேர்.
8. உல் – எரிதல் கருத்து வேர்.
9. உல் – வளைதல் கருத்து வேர்.
10. உல் – உள்ளொடுங்கல் கருத்துவேர்.
11. உள் – துளைத்தற் கருத்து வேர்.
12. ஊது – ஒலிக்குறிப்பு வேர்ச்சொல்.
13. ஏ – தன்மைப் பெயரடி – வினாச்சொல்லடி.
14. ஒல் – பொருந்தற் கருத்து வேர்.
15. ஒ – ஒலிக்குறிப்பு வேர்ச்சொல்.

**1.24 பாவாணர் வகுத்த வேரடிகள் (39 மெய் முதல் வேரடிகள்)**

1. கல் – கருமைக் கருத்து வேர்.
2. குல் – கூடற் கருத்து வேர்.
3. குல் – தோன்றற் கருத்து வேர்.
4. குல் – வளைதல் கருத்து வேர்.
5. குல் – குத்தற் கருத்து வேர்.
6. குல் – எரிதல் கருத்து வேர்.
7. குல் – துளைத்தற் கருத்து வேர்.

8. சுல் – குத்தற் கருத்து வேர்.

9. சுல் – சுடுதற் கருத்து வேர்.

10. சுல் – சிவத்தற் கருத்து வேர்.

11. சுல் – வளைதற் கருத்து வேர்.

12. சுல் – துளைத்தற் கருத்து வேர்.

13. துல் – பொருந்தற் கருத்து வேர்.

14. துல் – வளைதற் கருத்து வேர்.

15. துல் – துளைத்தற் கருத்து வேர்.

16. துல் – தெளிவுக் கருத்து வேர்.

17. நுல்[1] – (தோன்றற் கருத்துவேர்)

18. நுல்[2] – (துளைத்தற் கருத்துவேர்)

19. நுல்[3] – (ஒளிர்தற் கருத்துவேர்)

20. நுல்[4] – (நெகிழ்ச்சிக் கருத்துவேர்)

21. நுல்[5] – (நீட்சிக் கருத்துவேர்)

22. நுல்[6] – (பொருந்தற் கருத்துவேர்)

23. புல்[1] – (பொருந்தற் கருத்துவேர்)

24. புல்[2] – (படுத்தற் கருத்துவேர்)

25. புல்[3] – (திரட்டற் கருத்துவேர்)

26. புல்[4] – (விரும்புதற் கருத்துவேர்)

27. புல்[5] – (வளைதற் கருத்துவேர்)

28. புல்[6] – (துளைத்தற் கருத்துவேர்)

29. முல்[1] – (இளமைக் கருத்துவேர்)

30. முல்[2] – (முன்மைக் கருத்துவேர்)

31. முல்[3] – (மென்மைக் கருத்துவேர்)

32. முல்[4] – (பொருந்தற் கருத்துவேர்)

33. முல்[5] – (வளைதற் கருத்துவேர்)

34. முல்[6] – (துளைத்தற் கருத்துவேர்)

35. வல்[4] – (வளைதற் கருத்துவேர்)

36. வா – (வினை)

37. விள்[1] – (விரும்புதற் கருத்துவேர்)

38. விள்[2] – (வெம்மைக் கருத்துவேர்)
(ஒண்மைக் கருத்துவேர்)
(வெண்மைக் கருத்துவேர்)

39. விள்[3] – (விளைவுக் கருத்துவேர்)

உலக மொழிகளில் ஊடாடியுள்ள தமிழ் வேரடிகளை விளங்கிக் கொள்ளாமல் அவ்வம் மொழியினர் வலிந்தும் நலிந்தும் இட்டுக் காட்டும் வேரடி மீட்டமைப்புகள் பொருந்துவனவாக இருப்பதில்லை.

சபா என்பது அவை – சவை – சபை எனத் தமிழிலிருந்து திரிந்த வடசொல். sa-bha எனப் பிரித்து bha-shining எனக் கூறுவது பொருந்த வில்லை என உணர்ந்து பேராசிரியர் சாட்டர்ச்சி அதனை ஒத்துக் கொள்ளாது sib என்னும் தியுத்தானியச் சொல்லிலிருந்து sabha வட மொழிக்கு வந்ததாகக் காட்டினார். sib உடன் பிறந்தாருள் ஒருவரையோ பலரையோ குறிக்கும் சொல். இருவரது வேர் விளக்கமும் கூடுதல் பொருள் தரவில்லை. அம்மு – அவ்வுதல் (சேர்தல்) – அவை என்னும் தமிழ் வேரடி மூலமே முற்றிலும் பொருந்தியிருப்பதை ஆய்வாளர்கள் உணரவில்லை.

### 1.25 ஒலிப்பு மொழியினுட் புகுந்து கருத்து மொழியை ஆராய்வதே சொற்பிறப்பியல் எனப்படுகிறது.

ஒலிவடிவமும் வரி வடிவமும் ஆகிய ஊடகமின்றி எண்ணக் கோவையைப் பிறர்க்குப் புலப்படுத்தலா காமையின் கருத்தையும் சொல்லையும் இணைத்து மொழி என்கிறோம். வரலாற்றுப் போக்கில் வளர்ந்த கருத்துகள் இன்னின்ன சொல் வடிவங்களில் இது காறும் வெளிப்படுத்தப்பட்டுள்ளன என அறுதிடுவது சொல்லாய்வு. இதன் வழியில் கருத்து இயற்கை யானது. மொழியும் இயற்கையில் இருப்புக் கொண்டது. அதற்குச் சொல்லாய்வு சட்டையாக அணிவிக்கப்பட்ட ஒலிப்பு மொழியாகப் புறத்தோற்றம் தருகிறது.

*(எ.டு).* உலகம் > உலவு > உல்

### 1.14 தமிழ் குறிப்பொலி நிலையிலிருந்து நால்வகைச் சொன்னிலை அடைதற்குப் பல்லாயிரம் ஆண்டுகள் ஆகியிருக்கலாம் என்பது உறுதிப்படுகிறது.

*(எ.டு).* ஆ–ஆகு.

**1.15 குறிப்பொலிகளிலிருந்து நால்வகைச் சொன்னிலைகள் தோன்றியுள்ளன.**

*(எ.டு).* அசைநிலை (Monosyllabic stage)

புணர்நிலை (compounding stage)

பகுசொன்னிலை (Inflexional stage)

கொளுவு நிலை (Agglutinative stage)

**மொழி மாந்தனின் படைப்பாதலின் படிப்படியாகவும் சிறிது சிறிதாகவும் நாகரிக முதிர்ச்சிக்கு ஏற்ற வளர்ச்சி பெற்றது.**

1. மொழி – கருத்தறிவிக்கும் முயற்சி வெளிப்பாடு.

2. உணர்வொலி > ஒப்பொலி > குறியொலி – வாயொலி, மூச்சொலி – விளியொலி.

3. வாய்ச் செய்கை ஒலி.

| செய்கை | செய்கைக்கு ஏற்கும் சொல் |
|---|---|
| வாய்திறத்தல் | ஆ,ஆ – அங்கா |
| கொட்டாவி, பெருமூச்சு | ஆ–ஆவி |
| வாய் பற்றுதல் | அவி–அவ்வு, வவ்வு, கவ்வு |
| பல்லைக் காட்டுதல் | ஈ–களி |
| வாயால் ஊதுதல் | ஊ–ஊது |

**1.23 ஒரு குடும்ப மொழியை அதன் மூலத் தாய்மொழியில் ஒடுக்க வேண்டுமெனின் மூலத்தாய் மொழியின் வேர்ச் சொற்களின் அடிப்படையிலும் அக்குடும்ப மொழியின் சொல்வளம் விரிவடைந்ததாக நிறுவப்பட வேண்டும்.**

*(எ.டு).* த. வெண்ணெய் > **தெ.** வென்ன

த. தம்பி (தம் பின் பிறந்தவன்) > **தெ.** தம்முடு> **க.** தம்முனு.

வெண்ணெய் (வெள்+நெய்) என்பது தமிழில் வென்மையான நெய் எனப் பொருள்படுவது. இதன் திரிபான வென்ன எனும் தெலுங்குச் சொல் இப்பொருளைத் தருவதன்று. தம்முன் (அண்ணன்) என்பதற்கு எதிரான தமக்குப் பின் பிறந்தவனைத் தம் பின் என்றனர். அது கடைக்குறைந்து தம்பி என வழங்கி வருகிறது. ஆனால் தெலுங்கில் தம்முடு எனவும் கன்னடத்தில் தம்முன் எனவும் திரிந்து வேர்ப்பொருளை இழந்துவிட்டது.

திரவிடமொழிச் சொற்களில் பொருளையும் வேரையும் ஆராய்ந்தால் எது காலத்தால் முந்தைய இயற்சொல் (primitive) எது காலத்தால் பிந்தைய திரிசொல் (derivative) எனத் தெளிவாகப் புலனாகும்.

**1.24 ஒரு மொழியை ஏதேனும் ஒரு குடும்பமொழிகளுக்குத் தாயாகக் கருத வேண்டுமாயின் அடிப்படைச் சொல்வளம் அக்குடும்ப மொழிகளின் தாய்மொழியில் மிகத் திருத்தமாகக் காணப்பட வேண்டும் அல்லது மீட்டமைக்கத் தக்கதாக இருத்தல் வேண்டும்.**

*(எ.டு).* த. புழலங்காய் – புடலங்காய்

த. அத்தன்+அத்தன்–அத்தத்தன்–தாத்தன்–தாத்தா.

த. இரும்பொன்–இரும்பு > **தெ.** இனுமு

த. கரும்பொன் (இரும்பு) > **க.** கப்பின (kabbina).

**1.25 கல்லாத மக்களிடையில் வழங்கி வரும் மரபுத் தொடர்கள் இலக்கிய ஆட்சி பெறாத தொன்மையுடையனவாய் காணப் படின் அம்மொழி ஞால முதன்மொழியோடு எளிதில் தொடர்பு காணத்தக்கதா யிருக்கும்.**

*(எ.டு).* அவன் கறுவிக் கறுவிக் கண்ணடையாமே கிடக்குதான் (பொறாமையால் தூக்கமின்றிக் கிடக்கிறான்).

கறுவுதல் = பொறாமையால் மனம் புழுங்கி பொங்கிப் புகைதல், பகைவனை அழிப்பதற்கான சூழ்ச்சி செய்யும் அழுக்காற்றின் வெளிப்பாட்டுணர்வு.

கண்ணடைதல் – கண்மூடி உறங்குதல்.

**1.26 தட்ப வெப்பநிலை, பழக்கவழக்கம், பேச்சியல்பு முதலியவற்றால் எழுத்தொலி திரிவது கிளைமொழியானதற்குக் காரண மாகும். சோம்பலால் திரிவது ஒலிமுறைக் கேடு (phonetic decay) எனப்படும்.**

*(எ.டு).* **ந – ஞ: த.** நான் > **ம.** ஞான்

**ஐ–அ: த.** மலை > **ம.** மல

**ப–ஹ: த.** பாலு > **க.** ஹாலு

**ஐ–எ: த.** மனை > **க.** மனெ

**ழ-ட: த.** ஏழு > **தெ.** ஏடு

**ண–ன: த.** திண்ணை > **தெ.** தின்ன.

**1.27 தோன்றல், திரிதல், கெடுதல் என்னும் மூவகைப்பட்ட புணர்நிலைகளில் தோன்றலும் திரிதலும் பண்படுத்தத்தின் பாற்பட்டன.**

*(எ.டு).* **தோன்றல்:** வடக்குத்திசை, வீட்டுப் பிள்ளை.

**திரிதல்:** மட்குடம், நன்செய்.

தோன்றல் திரிபு தனித்தனி நின்ற சொற்களின் இணைப்பைக் காட்டுகிறது. சொல்லிணைப்பு பொருணைப்பைக் காட்டுவதால் தொகை மொழிகளாகவும் தொடர்மொழிகளாகவும் தமிழ் செப்பமான இலக்கணக் கட்டமைப்பை பெற்றுச் செந்தமிழ் எனும் சிறப்புக்கு உரியதாகிறது.

**1.28 முந்து தமிழில் உயிரும் உயிரும் புணரும்போது யகர வகர உடம்படு மெய் ஆட்சி பெறவில்லை.**

*(எ.டு).* கிளி+அரிது–கிளி அரிது (தொல்.எழுத். 140.உரை).

மூங்கா+இல்லை – அதாஅன்று (தொல்.359 உரை).

பனாஅட்டு (தொல்.284.உரை).

கோஒன் (தொல்.294.உரை).

இவ்வியல்பு சிந்துவெளி பழந்தமிழிலும் அதன் சார்பான வடஇந்திய மொழிகளிலும் தக்கவைத்துக் கொள்ளப்பட்டுள்ளன.

**1.29 கூட்டுச்சொற்கள் மரூஉச் சொற்களாகும் நிலை பெருகும் நிலையில் கிளை மொழி தனி மொழியாகிவிடும்.**

*(எ.டு).* **த.** ஆக (அருது) அரிது > **தெ.** காராது.

**1.30 முன்னிலை அசைமொழிகள் கிளை மொழிகள் தோறும் பரவி அவை தனி மொழிகளாகும் போதும் உடன் கொண்ட சொல்வளமாகப் பரவும்.**

*(எ.டு).* **த.** ஆகும் > **தெ.** அவ்வு, அவு, அவ்னு > **க.** அவ்து > **பட.** அவ். **காட.** ஒ > **மரா.** ஆகே (āhē)> **இந்.** ஐ (hai)> **த.** ஆகும்–ஆம் > **இந்.** ஆ(ங்) (haṅ).

**1.31 பண்புப் பெயர்களொடு பாலீறு சேர்த்துக் குறிப்பு வினைமுற்றைப் படைத்துக்கொண்டமை தமிழ்மொழி செந்தமிழ் வடிவம் பெற்றதற்குரிய அடிப்படை ஆக்கங்களுள் ஒன்றாயிற்று.**

*(எ.டு).* **த.** அவன் நல்லன்.

நல்லன் என்னும் குறிப்பு வினை முற்றே பயனிலையாவதால் கூடுதலாக இரு சேர்த்து நல்லவனாக இருக்கிறான் என நீட்டித்துச் சொல்ல வேண்டியதில்லை.

**1.32 குறிப்பு வினைமுற்றும் தெரிநிலை வினைமுற்றும் வினையாலணையும் பெயராகி எழுவாயாவதும் செந்தமிழ்த் தன்மை சுட்டும்.**

*(எ.டு).* **த.** பெரியவன் வந்தான்.

**த.** வந்தவன்

**1.33 சொற்கள் திரிந்து கொண்டே போனால் மொழிகள் பிரிந்து கொண்டே போகும்.**

*(எ.டு).*

1. பெயர்த்திரிபு
2. வினைத்திரிபு
3. இடைச்சொல் திரிபு

**1.34 பிறமொழிச் சொற்கள் பாதிக்கு மேல் மிகுமாயின் அம்மொழி வேறு மொழி யாகத் திரியும்.**

*(எ.டு).* மலையாளம், கன்னடம், தெலுங்கு.

**1.35 இடம் பெயரும் மக்கள் தாய்மொழி பேசிய தலை நிலத்திலிருந்து 500 கல் தொலைவுக்கும் அப்பால் சென்று தனித்து வாழத் தொடங்கினால் தானாகவே திரியும் ஒலிப்பு மாற்றங்களால் வேறு கிளைமொழி யாகத் திரியும்.**

*(எ.டு).* குருக்கு, ஒரோவான், பிராகுவி – வட திரவிட மொழிகள்.

**1.36 போக்குவரத்துத் தொடர்பில்லாமல் தனிமைப்படுத்தப்பட்ட மக்களின் வட்டார வழக்குகள் தனித்த கிளைமொழியாகி விடும்.**

*(எ.டு).* துளு, குடகு, படகம், துதவம், கோதம் – தென்திரவிட மொழிகள்.

**1.37 திரவிட மொழிகளில் திரிபுற்ற ஏவல் வினை வடிவங்களைப் பொருட்பாட்டு முறை தழுவி மீட்டமைத்தால் பழந்தமிழ் ஏவல் வடிவங்களே அனைத்துத் திரவிட வடிவங்களுக்கும் மூலமாகவும் குடும்ப முதன்மொழியின் இயல்பாகவும் இருப்பதை நிலைநாட்டவியலும்.**

*(எ.டு).* **த.** செத்தான் > **ம.** சத்து > **க.** சத்தனு > **தெ.** சச்சினாடு. இவற்றைப் பின்னோக்கி மீட்டமைத்தால்

**த.** சாய் (வீழ்தல்) – சா > **க.** சாயு > **தெ.** சச்சு எனத் திரிந்த பாங்கு. புலப்படுவதால் தமிழலுள்ள <u>சாய்</u> எனும் முந்துவடிவே அனைத்துத் திரவிட மொழிகளுக்கும் மூலமாகிறது. திரவிடக் குடும்ப மூலத்தாய் மொழி இயல்பைத் தமிழ் முழுமையாகத் தக்கவைத்துக் கொண்டிருப்பது புலனாகிறது.

**1.39 பலபொருள் ஒரு சொல் மூலத்தாய் மொழியிலும் அதனின்றும் கிளைத்த முதல் சேய் மொழியான இயன்மொழியிலும் காணப்படும்.**

*(எ.டு).* பரி – பரிதி

**1.40 ஆணிவேர் தன் தொடக்க நிலை யில் வினைச்சொற் பொருள் கொண்ட தாகவே இருக்கும். வினைச் சொல் வழி வளர்ந்த பெயர்ச்சொற் பொருள்களையும் ஏற்கும். பின்னர் பெயர்ச் சொல் வினை யாகவும் மாறும்.**

*(எ.டு).* **இல்**–குத்தல் கருத்து.

**இல்**–குத்துதலால் கடினத்தன்மை நீங்கி மென்மைத் தன்மை பெறுதல் – அதன்வழி இளமைக்கருத்து தோன்றி பெயர்ச்சொல்லாதல்.

மென்மை அழகு பொருள்களில் வளர்ந்து ஒலித்தல் பொருளில் மீண்டும் <u>இலங்கு</u> என வினயாகும்.

*That the roots of the large majority of Indo European words are to be found in Ancient Tamil, is not a mere theory but a fact ascertained by extensive induction.*

- Rev. Gnanaprakasar.

# 2. எழுத்தியல்

## (ஒலியனியல்–Phonology)

***சிந்துவெளி எழுத்து தமிழரின் சொந்தமொழி எழுத்து***

<u>நெ.மு.</u>

**2.1.** **எழுதப்படுவதால் எழுத்து எனப்பட்டது. எழுதுதல் ஓவியல் வரைதலைக் குறித்தது. பாண்டியன் காய்சினவழுதி நிறுவிய தலைக் கழகம் நிலவிய காலத்தில் <u>உருவெழுத்து</u> (பட எழுத்து) நிலவியது எனலாம்.**

***(எ.டு.)***

1. சிந்துவெளி முத்திரை உருவெழுத்து.



PICTO-SYLLABIC Chānan சானன்

**2.2.** **சிந்துவெளி நாகரிகத்தின் சம காலத்தில் பாண்டியன் வெண்தேர்ச் செழியன் நிறுவிய இடைக் கழகத்தில் தமிழ்மொழி <u>அசையெழுத்து</u>களால் எழுதப்பட்டிருப்பினும் உயிரும் மெய்யுமாய் 30 எழுத்துகளைக் கொண்டிருந்தது. இது சிந்துவெளியிலும் தென்னகத்திலும் கிடைத்துள்ள சான்றுகளால் புலப்படுகிறது.**

சிந்துவெளி எழுத்தின் துணைக் குறியீடுகள்

| உயிர் எழுத்துகள் | சிந்துவெளி எழுத்து | மாறெழுத்துகளும் மற்றும் குறிகளும் |
|---|---|---|
| அ | [illegible] | [illegible] |
| ஆ | [illegible] | [illegible] |
| இ | [illegible] | [illegible] |
| ஈ | [illegible] | [illegible] |
| உ | [illegible] | [illegible] |
| ஊ | [illegible] | [illegible] |
| எ | [illegible] | [illegible] |
| ஏ | [illegible] | [illegible] |
| ஐ | [illegible] | [illegible] |
| ஒ | [illegible] | [illegible] |
| ஓ | [illegible] | [illegible] |
| ஔ | [illegible] | [illegible] |

சிந்துவெளி எழுத்துகள்

| மெய் எழுத்துகள் | சிந்துவெளி எழுத்து | மாறெழுத்துகளும் மற்றும் குறிகளும் |
|---|---|---|
| க | [illegible] | [illegible] |
| ங | [illegible] | [illegible] |
| ச | [illegible] | |
| ஞ | [illegible] | |
| ட | [illegible] | [illegible] |
| ண | [illegible] | [illegible] |
| த | [illegible] | [illegible] |
| ந | [illegible] | [illegible] |
| ப | [illegible] | [illegible] |
| ம | [illegible] | [illegible] |
| ய | [illegible] | [illegible] |
| ர | [illegible] | |
| ல | [illegible] | [illegible] |
| வ | [illegible] | [illegible] |
| ழ | [illegible] | |
| ள | [illegible] | [illegible] |
| ற | [illegible] | [illegible] |
| ன | [illegible] | [illegible] |

| மெய்ம்மயக்கம் - அசையெழுத்துக் கூட்டு | |
|---|---|
| தமிழ் | சிந்துவெளி எழுத்து |
| கக | [illegible] |
| சச | [illegible] |
| ட்ட | [illegible] |
| தத | [illegible] |
| ப்ப | [illegible] |
| ற்ற | [illegible] |
| ஙக | [illegible] |
| ஞ்ச | [illegible] |
| ணட | [illegible] |
| ந்த | [illegible] |
| மப | [illegible] |
| ன்ற | [illegible] |
| யய | [illegible] |
| லல | [illegible] |
| ல்வ | [illegible] |
| ளவ | [illegible] |
| னவ | [illegible] |

**2.3. கி.மு. 1800 அளவில் மூன்றாம் தமிழ்க் கழகம் நிறுவிய பாண்டியன் முடத்திருமாறன் காலத்தில் தோன்றிய தாகக் கருதப்படும் <u>தமிழி</u> (தென்பிராமி) எழுத்து முறையும் முப்பது முதலெழுத்துகளைக் கொண்டிருந்தது.**

"தொல்லை வடிவின எல்லா எழுத்தும்"
(தொல். எழுத்து.) எனக் கூறப்பட்டிருத்தல் காண்க.

<u>எ.டு.</u> தொல்காப்பியர் கால எழுத்து வடிவங்கள்

| | அ | ஆ | இ | ஈ | உ | ஊ | எ | ஏ | ஐ | ஒ | ஓ | ஔ | ஆய்தம் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | | | | | | | | | ஃ |
| க | | | | | | | | | | | | | க் |
| ங | | | | | | | | | | | | | ங் |
| ச | | | | | | | | | | | | | ச் |
| ஞ | | | | | | | | | | | | | ஞ் |
| ட | | | | | | | | | | | | | ட் |
| ண | | | | | | | | | | | | | ண் |
| த | | | | | | | | | | | | | த் |
| ந | | | | | | | | | | | | | ந் |
| ப | | | | | | | | | | | | | ப் |
| ம | | | | | | | | | | | | | ம் |
| ய | | | | | | | | | | | | | ய் |
| ர | | | | | | | | | | | | | ர் |
| ல | | | | | | | | | | | | | ல் |
| வ | | | | | | | | | | | | | வ் |
| ழ | | | | | | | | | | | | | ழ் |
| ள | | | | | | | | | | | | | ள் |
| ற | | | | | | | | | | | | | ற் |
| ன | | | | | | | | | | | | | ன் |

**2.4. கடைக்கழகக் காலத்து இறுதியில் தமிழ்மொழி எழுத்து வட்டெழுத்தாகத் திரிந்தது.**

வட்டெழுத்தில் உயிர்மெய் எழுத்துகள்

| | [illegible] | தமிழ் வட்டெழுத்து (சேரநாடு) | | குறிப்பு | தற்கால தமிழ் எழுத்து |
|---|---|---|---|---|---|
| 1 | | | | | க |
| 2 | | | | | கா |
| 3 | | | | | கி |
| 4 | | | | [illegible] | கீ |
| 5 | | | | | கு |
| 6 | | | | [illegible] | கூ |
| 7 | | | | | கெ |
| 8 | | | | கோட்டயம் செப்பேடு | கே |

நன்றி - தினமலர் கிருட்டிணமூர்த்தி)

**2.5. சோழர் காலுத்தில் தமிழ் எழுத்துகள் சற்றொப்ப இன்றைய தமிழ் வடிவை எய்தின.**

*(எ.டு.)* க, ங, ச, ஞ

**2.6. தமிழ் எழுத்தின் இயல்வரையறை 12 பாங்குகளில் இலக்கண வகைப்பாடு பெறும்.**

*(எ.டு.)*

"எண்பெயர் முறைபிறப் புருவ மாத்திரை
முதலீ றிடைநிலை போலி என்றா
பதம்புணர்ப் பெனப்பன் னிருபாற் றதுவே"
(நன்.எழுத்.2)

**2.7. தமிழ் எழுத்துகள் பிறப்பிட முறைமையைத் தழுவி நிரலே வரிசைப் படுத்தப்பட்டுள்ளன.**

*(எ.டு.)* அ, ஆ,இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ

**2.8. உயிர் முந்தித் தோன்றியது பற்றியும், தானாய் ஒலிப்பது பற்றியும், நெடுங் கணக்கில் முன் வைக்கப்பட்டது. குறுமை பற்றிக் குறில் முன்னும் நெடுமை பற்றி நெடில் பின்னும் அளபிற்கோடல் என்னும் முறையில் வைக்கப்பட்டன.**

*(எ.டு.)* அ, ஆ.,

**2.9. ஏகார ஓகாரங்கள் முறையே ஈகார ஊகாரங்களின் மோனைத் திரிபுகள்.**

*(எ.டு.)* ஈன் – ஏன்

ஊன் – ஓன்

**2.10. ஐ, ஔ இரண்டும் முறையே அஇ, அஉ என்னும் புணரொலிகளாதலால், அடிநா விளிம்பு மேல்வாய்ப் பல்லைப் பொருந்தியொலிக்கும் ஐகாரம் ஏகாரத் தின் பின்னும் இதழ்குவிழ்ந் தொலித்த லால் ஔகாரம் ஓகாரத்தின் பின்னும் வைக்கப்பட்டன.**

*(எ.டு.)* எ, ஏ, ஐ

ஒ,ஓ,ஔ.

**2.11. ஆய்தம் நுண்ணிய ககரம் ஆதலால் ககரத்தின்முன் வைக்கப்பட்டது.**

*(எ.டு.)* ஔ கடிய – அஃ கடிய

**2.12. வல்லின, மெல்லின, இடையின எழுத்துகள் பிறப்பிடம் நோக்கி முறைப் படுத்தப்பட்டன. வல்லின மெய்களுள் கங அடியண்ணப் பிறப்பினவும், சஞ இடை யண்ணப் பிறப்பினவும், டண முன் னண்ணப் பிறப்பினவும் த, ந பல்லடிப் பிறப்பினவும், ப ம இதழ் பிறப்பினவும் ஆதலால் அம்முறையே வைக்கப்பட்டன.**

*(எ.டு.)* க ங ச ஞ, ட ண, த ந, பம.

**2.13. கடல்கொண்ட குமரிநாட்டில் நெடுங்கணக்கு தொடங்கிய போது 14 மெய்களும் 12 உயிர்களும் அடங்கி யிருந்தன என்பர்.**

*(எ.டு.)* உயிர் 12 + மெய் 14 = 26.

**2.14. நாளடைபில் ள,ழ,ற,ன, என்னும் நான்கும் தோன்றின. அதனாலேயே அவை இறுதியில் வைக்கப்பட்டன. அந்நான்கனுள், ள,ழ, முன் தோன்றி மையால் முன்னும் ற,ன, பின்தோன்றிய மையால் பின்னும் வைக்கப்பட்டன.**

*(எ.டு.)* ள,ழ,ற,ன.

**12.15.ள,ழ இரண்டும் முன்னண்ண வருடொலிகளாயினும்** (linguals or cerebrals) **ழகரம் ளகரத்தினும் சற்றுப் பின்னிருந்து வருடப் பெறுவதால் முன்வைக்கப் பெற்றது.**

*(எ.டு.)* ழ, ள.

**2.16. லகர திரண்டு ளகரமும், ளகரம் திரண்டு ழகரமும் ஆகும்.**

*(எ.டு.)* கல் – கருமை

கல் + து = கஃறு, கஃறெனல் = கருமைக் குறிப்பு. கல் – கால் = கருமை.

கால் – காள் = கருமை.

காள் > காழ்> கருமை.

**2.17. ரகரம் திரண்டு றகரம் ஆகும்.**

*(எ.டு.)* அர் – அறு.

ஒளிர் – ஒளிறு.

முரி – முறி.

**2.18. னகரந் தோன்றுமுன் நகரமே சொல்லிறுதியிலும் வழங்கியது.**

*(எ.டு.)* வெரிந், பழுநி.

**2.19 றகரம் தோன்றியபோது, அதற்கின மாகவே னகரமும் உடன் தோன்றியதால் அதன் பின் வைக்கப்பட்டது.**

*(எ.டு.)* ற,ன.

**2.20. தமிழிலுள்ள அடிப்படை எழுத்து களை ஒலிப்பதற்கு உரிய கால அளவு மாத்திரை எனப்படும்.**

*(எ.டு.)* க், ங், மெய்யெழுத்து = 1/2 அரை மாத்திரை

அ,க, குறிலெழுத்துகள் 1 மாத்திரை.

ஈ, தா = உயிர், நெடில்,

உயிர்மெய் நெடில் 2 மாத்திரை.

வீடு, நாடியாது = குற்றியலிகரமும் குற்றியலுகரமும் 1/2 மாத்திரை.

திசையறி மீகானும் போன்ம் = மகரக்குறுக்கம் 1/4 மாத்திரை.

கண்ண் – ஒற்றளபெடை = 1 மாத்திரை.

போஒம் = நெடில் அளபெடை = 3 மாத்திரை.

தமிழில் 1/4 மாத்திரை முதல் 2 மாத்திரை வரை தமிழுக்குரிய ஒலிப்பளவாகும். அளபெடை தவிர்ந்த எந்தத் தமிழெழுத்தும் மூன்று மாத்திரை ஒலிப்பு டையது அன்று.

**2.21 இசை குறைந்த விடத்து அதை நிறைக்க ஆளப்படும் அளபெடை மூன்று வகைப்படும்.**

*(எ.டு.)* 1. இன்னிசையளபெடை

2. சொல்லிசையளபெடை

3. செய்யுளிசைநிறையளபெடை

**2.22. உரைநடையில் வரும் அளபெடை**

**இயற்கையளபெடை எனப்படும்.**

*(எ.டு.)* வெரூஉதல் = அஞ்சுதல்.

நரிவெரூஉத்தலையார்.(இயற்பெயர்)

ஆடூஉ அறிசொல்.(ஆண்பாற் சொல்)

மகடூஉ அறிசொல்.(பெண்பாற்சொல்)

**2.23. பன்னிரெண்டு எழுத்துகள் மொழி முதலில் வரும்.**

*(எ.டு.)* "பன்னீருயிரும் க,ச, த,ந, ப,ம,வ,ய, "

ஞ,ங ஈரைந்துயிர் மெய்யும் மொழிமுதல்.

**2.24.இருபத்து நான்கு எழுத்துகள் மொழியிறுதி எழுத்துகளாக வரும்.**

*(எ.டு.)* ஆவி ஞ ண ந ம ன ய ர ல வ ழ ளமெய் சாயும் உகரம் நாலாறு மீறே.

**2.25. சொல்லினிடையில் உடனிலை மெய் மயக்கமாகவும் வேற்றுநிலை மெய்மயக்க மாவும் வரும் ர,ழ எனும் இரு மெய்களும் இரட்டிப் பதில்லை.**

*(எ.டு.)* ஆர்த்தல்.

ஆழ்த்தல்.

(இவையன்றி வேறு எழுத்துக் கூட்டுகளும் ம்ர, ப்ர, வ்ய, போன்ற வேற்றொலிப்புகளும் தமிழில் எக்காலத்தும் எச்சொல்லிலும் நிகழ்வதில்லை.)

**2.26. ஆய்த எழுத்து மொழிமுதலிலும் இறுதியிலும் வராமையால் உயிரன்று, உயிரேற இடந்தராமையால் மெய்யு மன்று. எனவே தனிநிலை எனப்பட்டது. மொழி யிடையில் மட்டும் திரிபொலியாகச் சார்ந்து வருதலின் சார்பெழுத்தாயிற்று.**

*(எ.டு.)* அல்து – அஃது.

<u>உயிர்த்திரிபுகள்</u>

**2.27 மொழிமுதல் அகரம் ஒகரமாகத் திரியும்.**

*(எ.டு.)* அறுவாய் – ஒறுவாய் (பெரும்பாண்.99 உரை)

கறித்தல் – கொறித்தல்.

**2.28 மொழியில் அகர ஆகாரமாகத் திரியும்.**

*(எ.டு.)* நடத்து – நடாத்து

பனத்து } – பனாத்து (மனம் போனவாறு

(பன்= பேசு) } தன்னையறியாமல் பேசுதல்)

**2.29. அகரம் மொழி முதலிடைகடை களில் ஐகாரமாகத்திரியும்.**

*(எ.டு.)* பசுமை – பைம்மை

இளமை – இளைமை

அம்ம – அம்மை

**2.30. அகரம் சேர்ந்த குறிலிணை ஓகாரக் தனிநெடிலாவது கிளைமொழி வழக்கு எனப்படும். தமிழ் மரபன்று.**

*(எ.டு.)* <u>த.</u> மகன் > <u>ம.</u> மோன்.

மகள் > <u>ம.</u> மோள்

தகப்பன் > தோப்பன்

**2.31. ஆகார முதல் ஓகார நெடிலாகத் திரியும்.**

*(எ.டு.)* ஆம் – ஓம்

வருவான் – வருவோன்

**2.32. ஆகார மொழிமுதல் ஔகாரமாத் திரியும்.**

*(எ.டு.)* வாவல் – வௌவால்

**2.33. இகர மொழி முதல் ஈகாரமாகத் திரியும்.**

*(எ.டு.)* கிள் – கீள்

**2.34. மொழிமுதல் இகரம் ஏகாரமாகத் திரியும்.**

*(எ.டு.)* இயலும் – ஏலும்

வியர்வை – வேர்வை

**2.35. முன்னிலையொருமை வினை முற்றின் ஈகார ஈறு இகரமாகக் குறுகும்.**

*(எ.டு.)* அறிதீ – அறிதி.

**2.36. மொழிமுதல் ஈகாரம் எகாரமாகத் திரியும்.**

*(எ.டு.)* நீள் – நீடு – நெடு

**2.37. மொழியீற்று ஈகாரம் ஏகாரமாகத்**

**திரியும்.**

***(எ.டு.)*** செய்யாதீ – செய்யாதே

மீச் செலவு – மேற்செலவு

**2.38. பெயர்ச்சொல்லின் ஈற்றயல் ஈகாரம் ஆகாரமாத்திரியும்.**

***(எ.டு.)*** கூப்பீடு – கூப்பாடு.

**2.40. மொழிமுதல் உகரம் ஊகாரமாகத் திரியும்.**

***(எ.டு.)*** புழை – பூழை

சுள்ளை – சூளை

குனி – கூனி, கூனை.

**2.41. மொழிமுதல் உகரம் அகரமாகத் திரியும்.**

***(எ.டு.)*** முடங்கு – மடங்கு

குட்டை – கட்டை

**2.42. மொழியிடை உகரம் அகரமாகத் திரியும்** ***(எ.டு.)*** சாயும் காலம் – சாயங்காலம்.

**2.43. மொழிமுதல் உகரம் எகரமாகத் திரியும்.**

***(எ.டு.)*** குழு – கெழு.

**2.44. மொழிமுதல் ஒகரம் அகரமாகும்.**

***(எ.டு.)*** கொப்பு – கப்பு

ஒட்டும் – அட்டும்

ஒட்டோலக்கம் – அட்டோலக்கம்

**2.45. மொழிமுதல் ஓகாரம் அகரமாகும்.**

***(எ.டு.)*** மோட்டிறா (மோட்டிறால்) – மட்டிறா.

**2.46. மொழிமுதல் ஔகாரம் அகரமாகும். இது தமிழில் வழங்கும் வடசொற்களுக்கே பொருந்தும்.**

***(எ.டு.)*** மௌனம் – மவுனம்

மௌலி – மவுலி

**2.47. மொழிமுதல் ஊகரம் ஏகாரமாகும்.**

***(எ.டு.)*** கூழ்வரகு – கேழ்வரகு.

**2.48. மொழிமுதல் ஒகரம் எகரமாகும்.**

***(எ.டு.)*** கொக்கரித்தல் – கெக்கரித்தல்.

**2.49. மொழிமுதல் ஏகாரம் ஆகாரமாகும்.**

***(எ.டு.)*** சேவல் – சாவல்.

**2.50. மொழிமுதல் ஏகாரம் ஓகாரமாகும்.**

***(எ.டு.)*** மேளம் – மோளம்.

<u>மெய்த்திரிபுகள்</u>

**2.51.மொழிமுதல் ககரம் தகரமாகத் திரியும்.**

***(எ.டு.)*** கொப்புள் – தொப்புள்.

**2.52.மொழியிடை ககரம் பகரமாகத் திரியும்.**

***(எ.டு.)*** இறக்க – இறப்ப

**2.53. மொழியிறுதி ககரம் ஞகரமாகத் திரியும்.**

***(எ.டு.)*** கடிகை – கடிஞை.

**2.54. மொழியிடை சகரம் யகரமாகத் திரிரியும்.**

***(எ.டு.)*** பசலை – பயலை.

**2.55 மொழியிறுதி சகரம் ஞகாரமாகவும் னகரமாகவும் திரியும்.**

***(எ.டு.)*** பூசை –பூஞை –பூனை.

பிசை – பினை.

**2.56. மொழியிடை டகரம் ணகரமாகவும் திரியும்.**

***(எ.டு.)*** படம் – பணம்.

**2.57. மொழியிடை டகரம் சகரமாக த் திரியும்.**

***(எ.டு.)*** ஒடி – ஒசி.

**2.58. மொழியிடை டகரம் ரகரமாகத் திரியும்**

***(எ.டு.)*** படவர் – பரவர்.

குடம்பை – குரம்பை.

விடிச்சி – விரிச்சி.

**2.59.மொழியிறுதி டகரம் றகரமகாத்**

திரியும்.

*(எ.டு.)* பட்டடை – பட்டறை.

ஒட்டடை – ஒட்டறை.

**2.61. மொழியிறுதி ணகரம் டகரமாகத் திரியும்.**

*(எ.டு.)* சேண்– சேடு.

ஆண் – ஆடூஉ.

**2.62.மொழிறுதி ணகரம் னகரமாகத் திரியும்.**

*(எ.டு.)* நத்தூண் (நாத்தூணார்) – நாத்தனார்.

**2.63. மொழியிடை தகரம் டகாரமாகும்.**

*(எ.டு.)* மதம் – மடம்.

மத்து – மட்டு.

துவார்த்து – துவட்டு.

**2.64. மொழியிறுதி மகரம் னகரமாகும்.**

*(எ.டு.)* அகம் – அகன்.

**2.65. மொழியிறுதி மகரம் லகரமாகும்.**

*(எ.டு.)* பக்கம் – பக்கல்.

**2.66. மொழிமுதல் மகரம் நகரமாகும்.**

*(எ.டு.)* முப்பது – நுப்பது (கொச்சை வழக்கு)

**2.67. மொழிமுதல் யகரம் நகரமாகும்.**

*(எ.டு.)* யான் – (ஞான்) – நான்.

**2.68.மொழியிடை யகரம் ஞகரமாகும்.**

*(எ.டு.)* வலையன் – வலைஞன்.

அயர் – அஞர்.

**2.69. மொழியிடை ரகரம் தகரமாகும்.**

*(எ.டு.)* பரணம் – பதணம்

குரல்வளை – குதவளை (கொச்சை வழக்கு).

**2.70. மொழியிடை லகரம் தகரமாகும்.**

*(எ.டு.)* மெல் – மெது

சலங்கை – சதங்கை

**2.71. மொழியிடை லகரம் சகரமாகத் திரியும்.**

*(எ.டு.)* அலை – அசை.

**2.72. மொழியிடை லகரம் ழகரமாகத் திரியும்.**

*(எ.டு.)* மல் – மழை.

வியல் – வியலன் – வியழன் – வியாழன்.

**2.73. மொழியிடை லகரம் றகரமாகத் திரியும்.**

*(எ.டு.)* நில் – நிலுவு –நிறுவு.

**2.74. மொழியிடை லகரம் னகரமாகத் திரியும்.**

*(எ.டு.)* புலம் – புனம்.

வலம் (வன்னிலம்) – வனம்.

மேல – மேன.

**2.75. மொழியிடை வகரம் யகரமாகத் திரியும்.**

*(எ.டு.)* நீவிர் – நீயிர்.

**2.76. மொழியிறுதி வகரம் சகரமாகத் திரியும்.**

*(எ.டு.)* பரவு – பரசு.

விரவு – விரசு.

**2.77. மொழியிடை ழகரம் ககரமாகத் திரியும்.**

*(எ.டு.)* தொழுதி – தொகுதி

நிழல் – நிகர் (ஒளி).

**2.78. மொழியிடை ழகரம் சகரமாகத் திரியும்.**

*(எ.டு.)* இழு – இசி – இசிவு.

**2.79. மொழியிடை ழகரம் ணகரமாகும்.**

*(எ.டு.)* தழல் – தணல்

நிழல் – நிணல்.

**2.80. மொழியிடை ழகரம் ரகரமாகும்.**

*(எ.டு.)* பழுவம் – பருவம்.

**2.81. மொழியிடை ழகரம் றகரமாககும்.**

*(எ.டு.)* தொழு– தொறு.

**2.82. மொழியிடை ழகரம் ணகரமாகும்.**

*(எ.டு.)* புழுகு – புனுகு.

**2.83. மொழியிடை ளகரம் சகரமாகும்.**

*(எ.டு.)* உளி – உசி –ஊசி.

உளு – உசு.

கோளம் – கோசம்.

வாளி – வாசி.

**2.84. மொழியிறுதி ளகரம் டகரமாகும்.**

*(எ.டு.)* வெகுளி – வெகுடல் (திருக்கோவை 151)

வெள் – வெளி – வெடி – விடி.

**2.85. மொழியிடை ளகரம் யகரமாகும்.**

*(எ.டு.)* கொள் – (கோள்) – கோய்.

வெள் – வெய்.

மாள் – மாய்.

**2.86. மொழியிறுதி ளகரம் ரகரமாகும்.**

*(எ.டு.)* நீள் – நீர்.

**2.87. மொழியிறுதி ளகரம் ழகரமாகும்.**

*(எ.டு.)* உள – உழி

**2.88. மொழியிறுதி ளகரம் றகரமாகும்.**

*(எ.டு.)* வெளி – வெறு.

வெள்ளிலை – வெற்றிலை.

**2.89. மொழியிறுதி ளகரம் னகரமாகும்.**

*(எ.டு.)* முளை – முனை.

வளை – வனை.

**2.90. மொழியிடை றகரமெய்மயக்க மாகும் சகரமெய் மயக்கமாகும்.**

*(எ.டு.)* முற்றில் – முச்சில்.

குற்றில் – குச்சில்.

பொற்றை– பொச்சை.

**2.91. மொழியிடை றகரம் டகரமாகும்.**

*(எ.டு.)* முசிறு – முசிடு.

**2.92. மொழியிடை றகரம் தகரமாகும்.**

*(எ.டு.)* குறுவாய் – கதுவாய்.

குறுவாலி – கதுவாலி.

அங்குற்றை– அங்குத்தை.

**2.93. மொழியிறுதி றகரம் ரகரமாகும்.**

*(எ.டு.)* கற்பாறை – கற்பார் (யாழ்ப்).

**2.94. மொழியிறுதி னகரம் ஞகரமாகும்.**

*(எ.டு.)* அன்னை – அஞ்ஞை.

**2.95. மொழியிறுதி னகரம் லகரமாகும்.**

*(எ.டு.)* செய்வன் – செய்வல்.

**2.96. மொழியிறுதி னகரம் றகரமாகும்.**

*(எ.டு.)* தென்னை – தெற்று.

மன் – மறு – மற்று.

**2.97.நாலெழுத்துச் சொல்லில் இடையிரு எழுத்துகள் முன்பின்னாக மாறும்.**

*(எ.டு.)* பவழம் – பழவம்.

**2.98. மொழியிறுதி ளகரம் ணகர மெய்யாகவும் டுகரஇறுதியாகவும் திரியும்.**

*(எ.டு.)* ஆள்– ஆண்.

ஆள் – ஆடூஉ.

மகள் – மகடூஉ.

<u>த.</u> பிள்ளையாள் > <u>தெ.</u> பிள்ளாடு.

**2.99.மெல்லினஒற்றெடுத்த இனமெய் யிணைகளின் ஈற்றெழுத்து எடுப்பொலி யாகவே (voiced consonant) இருக்கும்.**

*(எ.டு.)* ங்க, (inga)

ஞ்ச (iṇja)

ண்ட (inḍa)

ந்த (inda)

ம்ப (inba)

இவற்றை inta, inca, inṭa, inta, impa என வல்லின மெய்யாக ஒலிப்பதும் வரிபெயர்ப்பதும் (transliteration) எழுத்துப் பெயர்ப்பதும் (trans-cription) தவறாகும். இவை ஆரிய மொழிகளுக்குரிய ஒலிப்புகளாகும்.

**2.100. <u>ன்ற</u> எனும் வேற்றுநிலை மெய்**

**மயக்கம் பேச்சு வழக்கு சார்ந்த திசைமொழித் திரிபடைந்து ண்ட எனத் திரியும்.**

*(எ.டு.)* தெ. பால் + நிறம் – பானிறம்(பான்றம்)

– பாண்டரம் (வெள்ளை நிறம்)

– புண்டரம் (வெண்ணீறு)

**2.101.மொழியிடை மெல்லினம் கெடும்.**

*(எ.டு.)* பூண்டு – பூடு.

கூண்டு – கூடு.

தாண்டு – தெ. தாடு > இந். தௌட்

பூஞ்சாணம் – பூசணம்

**2.102. மொழியிறுதி மெல்லெழுத்துகள் தம் இனவல்லெழுத்துகளைக் கூட்டுச் சொற்புணர்ச்சியில் வருவித்துக் கொள் கின்றன.**

*(எ.டு.)* முன் + இல்– மூன்றில்.

செம்+ ஊர் – செம்பூர், செந்தூர்.

**2.103. தமிழில் வல்லெழுத்துகள் சொல்லீ றாகத் தொடங்கிய காலத்தில் குற்றிய லுகரம் தோன்றியது.**

*(எ.டு.)* ஆடு, மாடு.

**2.104. இடையின மெய்யீறுகள் தோன்றிய காலத்தில் உகரம் சொல்லின் ஒலித் துணை ஈறாயிற்று.**

*(எ.டு.)* தெரு, கொலு.

**2.105. முதல் முதலாகத் தோன்றிய ஈறுகளும், சுட்டுகளும் சுட்டடிச் சொற் களாகவே இருந்திருக்கின்றன. சுட்டெ ழுத்துகள், முதற்காலத்தில் பெயரெச்ச மாக மட்டுமன்றிப் பெயராகவும் இருந் திருக்கின்றன.**

*(எ.டு.)* ஆ = அது (பெ.), அந்த (பெ.எ.), இக்காலத் திலும் அது போது (அப்பொழுது) என்ற சுட்டுப்பெயர் பெயரெச்சமாய் வழங்குதல் காண்க.

**2.106. முற்காலத்தில் நெடிலாக வேயி ருந்த முச்சுட்டுகளும் பிற்காலத்தில் குறிலாகவும் மாறின.**

*(எ.டு.)* ஆ–அ, ஆது–அது, ஆங்கு–அங்கு

ஈ– இ, ஈது – இது, ஈங்கு– இங்கு

ஊ–உ, (ஊது) – உது, ஊங்கு–உங்கு.

**2.107.உயிரொலிகளைத் தனித்தொ லிக்கும் போது, குறிலினும் நெடிலே இளஞ்சிறார்க்கும் முந்தியல் மாந்தர்க்கும் எளிதாம். ஒலிக்கும் போது மூச்சுப்பை முயற்சிக்கு வேண்டியிருத்தலின், கீழ் வகுப்பு மாணவர் குறில் நெடில் வேறு பாடின்றியே உயிரெழுத்துகளை ஒலித்துப் போதல் காண்க. இதனால் உயிரெழுத் துகள் முதலில் நெடிலாகவே தோன்றி யிருத்தல் வேண்டுமென்பது உய்த் துணரப்படும்.**

*(எ.டு.)* "அ இஉ அம் மூன்றுஞ் சுட்டு" (31).

என்று கூறிய தொல்காப்பியனார், சற்றுப் பின்பு,

"நெட்டெழுத் தேழே ஓரெழுத் தொரு மொழி" (43)

"குற்றெழுத் தைந்தும் மொழிநிறை பிலவே" (44)

என்று அதை ஒருமருங்கு மறுத்திருப்பதும், வினாவெழுத்துகளைக் குறிக்குமிடத்து.

"ஆ ஏ ஓ அம் மூன்றும் வினா"(32).

என எகரத்தை விட்டிருப்பதும், தொல்காப்பியம் நெடுகலுமே "ஆயிடை" என்னும் தொடரே பயின்று வருவதும், ஆண்டு ஈண்டு என்னும் சொற்கட்குக் குறுகிய வடிவின்மையும் ஏகார ஓகாரங்கட்கு இனக்குறில் பிந்தித் தோன்றியுள்ளமையும், இதற்குச் சான்றுகளாகும்.

சுட்டீறுகள்:–

ஆ – உணா, நிலா, இரா, விளா, களா, நுணா, கடா, மிழா.

ஈ – குரீ (குரீஇ = குருவி)

ஊ – கொள் – கொளும் – கொளுமூ – கொண்மூ (முகில்).

**2.108 குறில் ஈறுகள் நெடில் ஈறுகளாகி விடும்.**

***(எ.டு.)*** கொண்மு – கொண்மூ – கடல்நீரைக் கொள்ளும் முகில். கொள்ளுதல் – முகத்தல். கொளுமுதல் – முகத்தல்.

**2.109. ஆவீறு முறையே அ, அவு எனத் திரியும்.**

***(எ.டு.)*** நிலா – நிலவு, இரா–இர–இரவு, கனா–கன=கனவு, 'அவு ஈறு' 'அவம்' என்றும் திரியும்.

அரா–அர–அரவு–அரவம் கனா–கன–கனவம்.

**2.110. எழுத்துகள் தனிநிலையின்றிப் புணர்நிலைப்பட்டுச் சொற்களாகும் போது நெடில் வடிவினுங் குறில் வடிவே பலுக்க (உச்சரிக்க) எளிதாம்.**

***(எ.டு.)*** அ – உண, நில, விள, இர,(செ.வ.)

இ–கண்ணி, கிளி, நரி, புலி, உறுமி, கொடி, வெள்ளி.

உ – கொழு (கலப்பைக் காறு), கரு (சூல்), உருலு, வரகு.

**2.111. சில அகரவீறு 'அவு' எனத் திரியும்.**

***(எ.டு.)*** குழ – குழவு, மழ – மழவு.

**2.112.எல்லாமெய்களுள்ளும் எளிதானது மகரமாதலின், முதலாவது தோன்றிய சுட்டியீறு மகரமெய்யீற்றதே. அது பின்னர்ப் பிற மெய்யீற்றதாகத் திரிந்தும், இறுதியிலும் இடையிலும் வேறெழுத்துப் பெற்றுவிரிந்தும், ஏனையீறுகளோடு கூடியும், பல்வேறு தனியீறுகளையும் கூட்டீறுகளையும் பிறப்பித்துள்ளது.**

***(எ.டு.)*** 'அம்' இக்காலத்தில் தனியீறு: முதற்காலத்தில் கூட்டீறு அம்–அன்–அல். திறம்–திறன்–திறல்.

**2.113. உயிரும் உயிர்மெய்யுமாகிய ஈறுகளெல்லாம் சொற்களும் சொற்சிதைவுகளுமேயாதலின், அத்தகைய ஈறு பெற்ற சொல்லெல்லாம் முதற்காலத்தில் இருசொல்லாகக் கொள்ளப்பட்டன.**

***(எ.டு.)*** உணா (உண்+ஆ) = உண்ணும் அது, உண்ணும் பொருள்.

**2.113.மகர மெய்யீற்று முச்சுடட்டிகள் பெயரீறுகள் ஆகும்.**

***(எ.டு.)***

| | | |
|---|---|---|
| ஆம்– குழாம் | ஆன்–வயான் | ஆல்–வரால் |
| ஈம்– -- | ஈன் – -- | ஈல் – -- |
| ஊம் – -- | ஊன் – -- | ஊல் – -- |
| அம் – மரம் | அன் – அழன் | அல் – குழல் |
| இம்– -- | இந்– வெரிந் | இல் – அணில் |
| உம்– உரும் | உந்– பொருந் | உல்– -- |

**2.115. முதற்காலத்தில், தமிழில் றன்னகரம் தோன்றவில்லை. தந்நகரமேயிருந்தது வெரிந், பொருந் என்பவை அக்காலத்துச் சொற்களே**

***(எ.டு.)*** வெரிந் = முதுகு

**2.116.இறந்துபட்டிருக்கும் அகரச் சுட்டடியீறுகட் கொத்த இகர அல்லது உகரச் சுட்டடியிறுகளுட் சிலபல, இறந்துபடாதிருக்கலாம்.**

***(எ.டு.)***

| | |
|---|---|
| இதம் – தப்பிதம் | இச்சி – புரிச்சி |
| இச்சு– வரிச்சு | இச்சை– பனிச்சை |
| இச்சல்=வரிச்சல் | இஞ்சி–குறிஞ்சி |
| இச்சம்=வெளிச்சம் | |

**2.117. பல்வகை ஈறுகள் சுட்டடியின வாகும்.**

***(எ.டு.)*** அகு, அசு, அடு, அது, அபு, அவு, அது:

அக்கு, அச்சு, அட்டு, அஃது, அப்பு, அற்று: அண், அம், அர், அல், அழ், அள், என்னும் ஈறுகளும் இவற்றிற்கொத்த இகரவுகரமுல் வடிவுகளுமே, இன்று முறையே கு,சு,டு, து, பு, வு, று; க்கு ச்சு, ட்டு, த்து, ப்பு, ற்று; ன், ம்; ர்,ல்,ள்,ழ், ன் எனத் தோன்றுகின்றன. இவையெல்லாம் உண்மையிற் சுட்டடியினவாகும்.

இங்குக் காட்டப்பட்டுள்ள அன், அள், அர், அது, அவை, அ என்பன பாலீறுகளல்ல; அன், அல் என்பன போன்று இயல்பான பொதுவீறுகளே.

**2.119. ஒரெழுத்து தொருமொழியான ஏவல் வினையொடு வகர உடம்படு மெய்யும் உகர ஒலித்துணை ஈறும் சேரும்.**

*(எ.டு.)* ஏ –ஏவு பா – பாவு

கா– காவு பூ– பூவு

சா – சாவு மா –மாவு

தா – தாவு வீ – வீவு

நா – நாவு சீ – சீழ்

நோ – நோவு

**2.120.தனிக்குறிலடுத்த இடையின மெல்லின ஈறுகள் உகர ஒலித்துணை பெறும்.**

*(எ.டு.)*

உண் – உண்ணு தின் – தின்னு பொன் – பொன்னு

கவ் – கவ்வு நெல்– நெல்லு பொல்–பொல்லு

அள–அள்ளு புல்–புல்லு மள் – மள்ளு

கண் –கண்ணு புண் –புண்ணு முள் – முள்ளு

தள் –தள்ளு பெண்–பெண்ணு விண்–விண்ணு

கொல் –கொல்லு.

**2.121. பேச்சு வழக்கில் தனிநெடிலடுத்த இடையின மெல்லின மெய்யீற்றுச் சொற்கள் உகர ஒலித்துணை பெறுவது இலக்கண வழி ஏற்புடைத்தன்று.**

*(எ.டு.)* கூழ் – கூழு

தேள் – தேளு

பால் – பாலு

போல் – போலு

மோர் – மோரு

வால் –வாலு

வேல் – வேலு

**2.122. குறிலிணைச் செல்லின் ஈறாகிய ஆகாரம் அகரமாகி உகரம் பெறும்.**

*(எ.டு.)* ஆ – அ

அரா – அரவு

இரா – இரவு : புறநானூறு.7

கனா – கனவு: திருக்குறள் 1219
மணிமேகலை 8.21.

சுறா – சுறவு: சீவகசிந்.939

நிலா – நிலவு: நெடுநல்வாடை 95

முழா –முழவு: சிலப்பதிகாரம்.7

வயா – வயவு: புறநானூறு.20

விழா – விழவு: சீவகசிந். 856

**2.123. ஈற்றுகரக் குறிலிணை வகர உடம்படுமெய்யும் உகர ஒலித்துணையும் பெறும்.**

*(எ.டு.)* நெடு – நெடுவு மரு– மருவு (மணம்)

தெரு – தெருவு மடு – மடுவு

வழுவு – வழுவு

**2.124.இடையில் மெல்லின மெய் தோன்றும்.**

*(எ.டு.)* அடு – அண்டு

தொடு – தோண்டு

கூடு – கூண்டு பூசனம் – பூஞ்சனம்

**2.125. சொல்லின் கடையில் 'ல்' தோன்றும்.**

*(எ.டு.)* இமி – இமில்

கண்டி – கண்டில் (நிறை)

பரிசு – பரிசில்

புட்டி – புட்டில்

புலா – புலால் – புலவு : புறநானூறு 14

வட்டி – வட்டில்

வண்டி – வண்டில்

வெளி – வெளில்

**2.126. சொல்லின் கடையில்'அம்' தோன்றும்.**

*(எ.டு.)* அரவு – அரவம்

இலவு – இலவம்

கோரோசனை – கோரோசனம்

அனல் – அனலம்

உடல் – உடலம்

சகடை – சகடம்

ஆல் – ஆலம்

குண்டு – குண்டம்

கதவு – கதவம்

சங்கு – சங்கம். சீவக. 70

**2.127.உயிர்மெய்யெழுத்துகளில் இருகுறில் நெடில் திரிபு எய்தும்.**

*(எ.டு.)* அகழ்ப்பை–அகப்பை–ஆப்பை

அகழி–ஆழி

அகன்றோர் – ஆன்றோர்

நிகர் – நேர்

துகள் – தூள்

சொளுப்பு – சொப்பு

பகுத்து – பாத்து,

நிகர் – நேர்

முகத்தல் – மோத்தல்

மிகுதி – மீதி

முகடு – மோடு

பகல் – நாள் – (பகல்நாள்) – பால்நாள் – பானாள்: நாந்.94 தணிகைபுரா. திருநாட்டு.80.

**2.128. இடைநின்ற வகரம் கெட்டு முதல் நீளும்.**

*(எ.டு.)* சிவப்பு – சேப்பு, பரிபாடல்: 7.70

சிவப்ப – சேப்ப. நடதம்.நாட்டுப்பாடல்.15

**2.129.ககரம் யகரமாக மாறும்.**

*(எ.டு.)* அதிகமான் – அதியமான்–அதியன். புறநானூறு.101 உரைக்குறிப்பு.

வாணிகன் – வாணியன்.

**2.130. யகரம் ககரமாகும்.**

*(எ.டு.)* செயல்வீரன் – செகவீரன்.

பணியாரம்–பணிகாரம்:பண்ணியாரம்–பொருநராற்றுப்படை

**2.131. ககரம் வகரமாகும்.**

*(எ.டு.)* பாகற்காய் – பாவக்காய்

கூகை – கூவை

**2.132. சகரம் யகரமாகும்.**

*(எ.டு.)* ஈசெல் – ஈசல் – ஈயல்:புறநானூறு. 51

பசளை – பயளை

மசண்டை – மயண்டை

**2.133. யகரம் சகரமாகும்.**

*(எ.டு.)* அயல் – அசல்

அயறு – அசறு

**2.135. றகரம் தகரமாகும்.**

*(எ.டு.)* கொற்றன் – கொத்தன்

பொற்றை – பற்றை – பத்தை

சிற்றாடை – சித்தாடை

**2.136. பகரம் வகரமாகும்.**

*(எ.டு.)* பாடிவீடு–வாடிவீடு

பகுத்தல் – வகுத்தல்

**2.137. வகரம் பகரமாகும்.**

*(எ.டு.)* வாலை – பாலை

வைராகி – பைராகி

**2.138. வகரம் மகரமாகும்.**

*(எ.டு.)* எண்ணவோ – எண்ணமோ

**2.141. சகரம் லகரமாதல்.**

*(எ.டு.)* இருப்பை – இலுப்பை

உரவுநீர் – உலாவுநீர் : சீவகசிந் .136

கிரிசை – கிலிசை

குரவை – குலவை

**2.141. லகரம் ரகரமாதல்.**

*(எ.டு.)* ஓலாட்டு – ஓராட்டு

கிலிகோலம் – கிரிகோலம்

தாலாட்டு – தாராட்டு

**2.142.ரகரம் றகரமாகும்.**

*(எ.டு.)* ஆராட்டு – ஆறாட்டு. பெருங்கதை 42.2

உருண்டு – உறண்டு

கரடி – கறடி : பாகவதம், காளி. 26

**2.143. லகரம் ளகரமாகும்.**

*(எ.டு.)* அட்டாலை – அட்டாளை

அலப்புதல் – அளப்புதல்

அலமரம் – அளமரல் : சீவகசிந். நாமகள். செய்.20.

**2.144. ளகரம் லகரமாகும்.**

*(எ.டு.)* பொள்ளாமணி – பொல்லாமணி: டடதிருவாசகம்.27.1

பழங்கள்–பலங்கள்:சுந்தரர் தேவா. திருக்கலயநல்.07

*It was quite clear that, though men might frame new out of old words, no man could ever frame at his own pleasure a word entirely new. Nor did nature seem to have supplied primitive humanity with a vocabulary for all vocabularies differed, and every person capable of speaking had to learn his language from his parents.*

MaxMuller

*Right language is right thought and right thought is right language; and if we want to understand, not only the disease, but the health also of our thought, that is to say the whole life of our thought, we can study it nowhere more efficiently in pathology of language. (7-8).*

MaxMuller

# 3. சொல்லியல்

## (உருபனியல் Morphology)

> *"Language is able to express the greatest amount of meaning with the smallest mechanism"*
>
> *- Otto Jesperson*

<u>நெ.மு.</u>

**<u>வினையடி வகைமை மரபிலக்கண நோக்கில் 16 வகைப்படும்:</u>**

**3.1 குறிற்கீழ் ஒற்று ஏவல் வினையடியாகும்.**

***(எ.டு).*** நில், சொல், எய், கொய், அவ், தெவ், அள், கொள், மண், எண், அம், உம், உன், முன்.

**3.2 உயிர்மெய் தனிக்குறில் ஏவல் வினை யடியாகும்.**

***(எ.டு).*** நொ, து.

நொ கொற்றா (கொற்றனே துன்புறு)

து கொற்ற (கொற்றனே உண்)

**3.3 தனி நெடில் ஏவல் வினையடியாகும்.**

***(எ.டு).*** ஈ, தா, வா, போ, ஆ, ஓ, கா, பா.

**3.4 ஒற்றடுத்த நெடில் ஏவல் வினையடி யாகும்.**

***(எ.டு).*** பார், ஊர், கேள், மூள், ஆழ், சூழ், தேய், தூய், ஏல், கால், காண், பூண்.

**3.5 நெடிற்கீழ் ஒற்றடுத்த குற்றுகர வினை ஏவல் வினையடியாகும்.**

***(எ.டு).*** தாங்கு, வீங்கு, தாண்டு, தாட்டு (படகை அக்கரைக்குச் செலுத்து).

**3.6 குறிலிணை வினை ஏவல் வினையடி யாகும்.**

***(எ.டு).*** அணி, பணி, கல, விடு.

**3.7 ஒற்றடுத்த குறிலிணை ஏவல் வினை யடியாகும்.**

***(எ.டு).*** அடர், படர், குளிர், வெரிந், உறிஞ், உரும் (விழுங், அருந் எனும் வினைகள் பண்டைத் தமிழில் இருந்திருக்கலாம்).

**3.8 குறிலடுத்த ஒற்றுசார் குற்றுகர வினை ஏவல் வினையடியாகும்.**

***(எ.டு).*** தங்கு, அஞ்சு, முந்து.

**3.9 குறிலிணை ஒற்றுசார் குற்றுகர வினை ஏவல் வினையடியாகும்.**

***(எ.டு).*** அடங்கு, பதுங்கு, ஒதுங்கு, இலங்கு, உறங்கு, முழங்கு, கறங்கு, உணங்கு.

**3.10 நெடில்சார் ஒற்றடுத்த குற்றுகர ஏவல் பிறவினை வினையடியாகும்.**

***(எ.டு).*** கூட்டு, ஊட்டு.

**3.11 நெடில்சார் ஈரொற்றடுத்த குற்றுகர ஏவல் பிறவினையடியாகும்.**

***(எ.டு).*** ஆர்த்து, சேர்த்து, ஆழ்த்து, வீழ்த்து.

**3.12 குறிலிணை வினையடிகள் அகர இகர உகர ஐகார ஈற்றனவாய் வழங்கும்.**

***(எ.டு).***

**அகரஈறு:** கட, நட, பிள, அள, பற, திற, கல, புல, அண, உண.

**இகரஈறு:** அடி, படி, குளி, களி, கலி, ஞெலி, பறி, முறி, அணி, கணி, முரி, கரி, அவி, கவி, உமி, குமி, அழி, ஒழி.

**உகரஈறு:** புகு, நகு, உசு, நுசு, அடு, விடு, உது, நொது, தடி, கடி, அறு, உறு, இரு, உரு, குலு, நலு, அழு, எழு.

**ஐகாரஈறு:** அகை, நகை, அசை, இசை, அடை, தடை, அதை, உதை, அறை, பறை, குரை, உரை, அலை, கலை, அழை, உழை, இயை, அவை, இளை, களை, அமை, குமை, இணை, அணை, நனை, இனை.

**3.13 குறிலிணையடுத்த குற்றுகர வினை ஏவல் வினையடியாகும்.**

*(எ.டு).* இடறு, அலசு, முழுகு, வருடு, எழுது, துருபு (துருவு).

**3.14 தனிக்குறிலடுத்த பகரமூர்ந்த முற்று கரம் ஓரேவினைச் சொல்லில் இடம் பெறும்.**

*(எ.டு).* தபு (எடுத்தொலிப்பிலும், படுத்தொலிப் பிலும் தன் வினையாகவும், பிற வினையாகவும் பொருள் வேறுபடும்).

**3.15 நெடிலடுத்த உகர ஈற்று ஏவல் வினை யடியாகும்.**

*(எ.டு).* ஆகு, போகு, போது, மோது, கூறு, ஏறு, கூசு, வீசு, கூவு, ஏவு.

**3.16 குறில் நெடில் சார் ஒற்றடுத்த குற்று கர வினை ஏவல் வினையடியாகும்.**

*(எ.டு).* பிறாண்டு, இறாட்டு.

(நான்கெழுத்துக்கு மேற்பட்ட வினையடிகளும், நெடிலிணை வினையடிகளும் வல்லின மெய்யீற்றுச் சொற்களும் தமிழில் இல்லை).

**3.17 குகர புகர ஈறுகள் பெற்ற வினை களில் இடையில்மெல்லெழுத்துத் தோன்றி தன் வினையாகவும் அந்த மெல்லெழுத்து வல்லெழுத்தாக மாறிப் பிறவினையாகவும் மாறும்.**

*(எ.டு)* உற – உறகு – உறங்கு – உறக்கு.

கற – கறகு – கறங்கு – கறக்கு.

நிறை – நிறைபு – (நிரபு) – நிரம்பு – நிரப்பு.

**3.18 இருசொற் புணர்வு நாலசைச் சொல்லாகவோ அதற்கு மிக்கோ அமைந் தால் அக்கூட்டுச் சொல் மரூஉச் சொல் லாகி, ஈரசை அல்லது மூவசைச் சொல் லாகிக் குறுகிவிடும்.**

*(எ.டு)* ஆதன் + அந்தை – ஆதந்தை – ஆந்தை

பூதன் + அந்தை – பூதந்தை – பூந்தை

ஆதன்தந்தை, பூதன் தந்தை என இலக்கண ஆசிரியர் பிரித்திருப்பது ஏற்புடைத்தன்று. அந்தை என்பது ஐயா எனவும் தந்தை எனவும் பொருள் தரும் மதிப்புரவுச் சொல்.

**3.19 தனிக்குறிலடுத்த வல்லின உடனிலை மெய் மயக்கமான ஏவல்வினை கூட்டுச் சொல்லாகும்போது குறிலடுத்த மெய் மெல்லினமாகும். பேச்சு மொழியில் மெல் லின உடனிலை மெய் மயக்கமாகவும் திரியும்.**

*(எ.டு)* தப்பு = அடித்தல்

தப்பு – தப்பட்டை, தம்பட்டை – தம்பட்டம்

தம்பட்டம் – தம்மட்டம் – தமுட்டு

**3.20 ஈரசை ஏவல் வினை ஓரசையாகும்.**

*(எ.டு)* இறக்கு > <u>இந்.</u> றக்

இழிகு > <u>தெ.</u> டிகு, திகு.

**3.21 குறிலிணை ஏவல் நெடுமுதல் ஏவ லாகும்.**

*(எ.டு)* இய – யா (செல்லுதல்)

வரு – வா

தரு – தா

மரு – மா.

**3.22 பிறப்பிட ஒற்றுமையால் திரியும் குறி லடுத்த மெய்யீற்று ஏவல் வினைகள் நுண்ணிய பொருள் வேறுபாட்டை ஏற்றுக் கொள்ளும்.**

*(எ.டு)* வல் – வலை ( வளைந்த, வேட்டை வலை)

வள்– வளை (வளைந்த துளையுடைய புற்று அல்லது குழி)

வள் – வழை–வாழை (வளைந்த இலையுடைய வாழை)

வழி – விரலை வளைத்து வழித்தல், வளைந்த பாதை

வழு – வளைவு, கோணல், குற்றம்

**3.23 குழந்தை மொழியிலும், கல்லாதார் மொழியிலும் ஈரசை, ஓரசைச் சொல்லாகக் குறுகும்.**

*(எ.டு)*அப்பா – பா குழந்தை மொழி

அம்மா – மா

இருக்கிறது – கீது கல்லாதார் மொழி

இருக்கிறது – இருக்கு

**3.24 ர ல ள ஈற்றுச் சொற்கள் பேச்சு வழக்கில் தெளிவான பொருள் புலப்பாடு கருதி உகரச் சேர்ப்பு பெறும். இவை, இலக்கண மரபிலமையாதவை. தவிர்க்கத் தக்கவை.**

*(எ.டு)* பார் – பாரு

யார் – யாரு

நில் – நில்லு

சொல் – சொல்லு

நெல் – நெல்லு

கேள் – கேளு.

**3.25 ஏவல் தனிவினைகள் ஓரசையாகவே பிறந்து திரிபுற்றாலும் ஓரசையாகவே தமிழிலும் தமிழடியாகப் பிறந்த மொழி களிலும் ஊடாடியுள்ளன.**

*(எ.டு)* த. இய – யா இந். jā. சமற். ga. E.go.

**3.26 ஏவல் வினைகள் பொருளழுத்தம் பெறுதற்காகவும் கேட்போருக்கு ஒலி யழுத்தம் உணர்த்தவும் 'கு' ஒலிப்புத் துணை ஈறு பெறும். இது பெயர்ச் சொல்லுக்கும் பொருந்தும்.**

*(எ.டு)* உண் – உண்கு

காண் – காண்கு.

செல் – செல்கு (செல்க)

முசல் – முசல்கு (மாலத் தீவு மக்கள் தமிழ்)

யானை – தெ. யேனிகு

**3.27 பெயர்ச் சொற்களில் அல்லீற்று எதிர் மறை இடம்பெறுவது உண்டு.**

*(எ.டு)* மண்+அல் – மணல் (மண் அல்லாதது)

அள்+ அல் – அள்ளல் = சேறு (செறிவு இல்லாதது)

**3.28 'அம்' ஈறு உடைமை சார்ந்த தன்மை குறிக்கும்.**

*(எ.டு)* மண்+அம் – மணம் (மண்ணின் தன்மை, பண்பு குறித்தல்)

**3.29 முன்னிலை ஏவல் ஒருமையில் 'கு' 'து' ஈறுகள் மாறி வருதல் உண்டு. திரவிட மொழியில் கூடுதல் திரிபுகள் பெறும்.**

*(எ.டு)* போகு – போது

தெ. போது – பத. (செல், போ)

பிராகிருதம். பத–பய–பயணம். Pkt. பயண>Skt. ப்ரயாண

**3.30 பன்மை குறிக்கும் 'கள்' ஈறு பெயர்ச் சொல்லோடு சேரும் போது வல்லினம் மிகாது. ஏனெனில் ஒரு சொல் நீர்மைத் தாகிய 'கள்' ஈற்றுப் பன்மைச் சொல் புணர்ச்சி முடிபு ஏற்காது. 'கள்' நிலைமொழி ஈறன்றி வருமொழியாகாது என்பதே இதற் குரிய காரணமாகும்.**

*(எ.டு)* 1. ஆடு – ஆடுகள்

தென்னை – தென்னைகள்

தென்னைக்கள் எனில் தென்னை நிலைமொழி யாகவும் கள் வருமொழி தனிச் சொல்லாகவும் நின்று வேற்றுமைத் தொகையாதல் காண்க).

2. ஆக்கள், பூக்கள் போன்றவை ஒரு சொல்லா யினும் ஆவு+கள், பூவு+கள் எனப் புணர்ந்து உகர ஈறுகெட்டதால் வல்லெழுத்து மிக்கது.

3. தெரு+கள் – தெருக்கள்

புழு+கள் – புழுக்கள்

மடு+கள் – மடுக்கள்

இவை தனிக்குறில் சார்ந்த முற்றுகர ஈற்றின் முன் வந்த 'கள்' ஈறாதலின் வல்லெழுத்து மிகுவனாயின.

**3.31 முக்காலத்தில் புடைபெயரா சீரற்ற பால்பகா அஃறிணை வினைமுற்றுகள் பொது வினை வகைப்பட்டவை.**

*(எ.டு).)* உண்டு, இல்லை, வேறு.

**3.32 ஒரு குறில் சார்ந்த முற்றுகர வினைகளில் ஒற்று இரட்டிப்பின் வினையெச்சமாகும். நெடிற்றொடர் குற்றுகர வினைகளில் ஒற்று இரட்டிப்பின் பெயர்ச்சொற்களாகும்.**

*(எ.டு).)* உறு–உற்று

நடு–நட்டு (வினையெச்சம்)

பாடு – பாட்டு

வீசு – வீச்சு (பெயர்ச்சொல்)

ஊறு – ஊற்று

**3.33 ஒரு குறில் சார்ந்த முற்றுகரப் பெயர்கள் இயல்பாகவே உருபேற்கும். நெடிற்றொடர் உயிர்த்தொடர் குற்றுகரப் பெயர்கள் ஒற்றிரட்டித்து உருபேற்கும்.**

*(எ.டு).)* மடு – மடுவை, மடுவுக்கு

மறு – மறுவை, மறுவுக்கு

ஆடு – ஆட்டை, ஆட்டுக்கு

ஆறு – ஆற்றை, ஆற்றுக்கு

**3.34 கூட்டுவினைச்சொற்கள், குறுகிய சொல்லாக மரூஉ முடிபாகும். வேர் முதனிலை மறையும். பின் கூட்டுச்சொல் புதிய வினை கொடுந்தமிழ் வடிவு கொள்ளும்.**

*(எ.டு).)* உள்குறு – உட்கார் – கோரு (கொ.வ.).

**3.35 குறிலடுத்த மெய்யீறு வினைச்சொல்லாயின், முதற் குறில் நெடிலாகும் அல்லது 'து' கர ஈறுபெறும்.**

*(எ.டு).)* (அ) குள்+உ– குள்ளு. க. கூலு. தெ. கூர்ச்சொ.

(ஆ) குள்+து – குந்து. க. குன்துகொள்

**3.36 குறுமுதல் வினா ஏவல் நெடு முதலாகும்.**

*(எ.டு).)* த. இழு : ஈர். தெ. ஈடு.

**3.37 நிலைமொழியும் வருமொழியுமாய் புணரும் சொற்புணர்ச்சிகள் இயல்புப் புணர்ச்சி, திரிபுப்புணர்ச்சி என இரு வகைப்படும்.**

இயல்புப் புணர்ச்சி:

*(எ.டு).)* 1. நல்ல+பையன் – நல்ல பையன். நிலைமொழியும், வருமொழியும் எவ்வித மாற்றமுமின்றி இயல்பாகப் புணர்ந்தன.

திரிபுப் புணர்ச்சி:

*(எ.டு).)* பனை+தோப்பு – பனந்தோப்பு. இப் புணர்ச்சியில் னை–னகரமாகத் திரிந்து 'அம்' சாரியை பெற்றுப்புணர்ந்தது.

**3.38 தோன்றல், திரிதல், கெடுதல் எனத் திரிபுப்புணர்ச்சி மூவகைப்படும். பொருட்பாங்கிற்கு ஏற்ப திரிபுகள் அமையும். தோன்றல் புணர்ச்சியில் பொருட்பாங்கிற்கு ஏற்பத் திரிபுகள் அமையும்.**

*(எ.டு).)*

1. பூ+செடி – பூச்செடி (பூக்கும்செடி)
2. பூ+செடி – பூஞ்செடி (அழகிய மலர்ச்செடி)
3. நாடு+ஆண்மை – நாட்டாண்மை (நாடாளும் அதிகாரி). இரண்டன் உருபும் பயனும் உடன்தொக்க தொகை.
4. நாடு+கிழவோன் – நாடுகிழவோன் (நாட்டிற்கு உரிமையுடைய தலைவன்)

நான்காம் வேற்றுமைத் தொகையாதலின் வல்லொற்று இரட்டாமல் இயல்பாயிற்று.

**3.39 மொழியின் தொடக்க காலத்தில் வினையின் முதல் நிலையே, இருதிணை ஐம்பால் மூவிட முக்காலப் பெயராகவும் தொழிற்பெயராகவும் வழங்கியது. அக்**

**காலத்தில் முற்று, எச்சம் என்ற வேறுபாடு இருந்திருக்கவியலாது.**

*(எ.டு).)* செய்=செய்கை. "பெருஞ்செய் யாடவர்" (நெடுநல். 171.).

இல்=இல்லை "பித்தரிற் பேதையார் இல்" (நாலடி.52).

மலையாள மொழியிலும் உள், நள்,உள்ளு (உள்ளது), நன்னு (நல்லது) என வழங்குதல் காண்க.

**3.40 வினைச்சொல்லின் வளர்நிலைகளில் இறந்தகாலம் காட்டுவதற்கு 'து' ஈறும், நிகழ்காலம் எதிர்காலம் இரண்டும் காட்டு வதற்கு உம் ஈறும், ஏவல் வினையடியோடு சேர்ந்து வழக்கிலிருந்தன.**

*(எ.டு).)* செய்+து = செய்து (இறந்த காலம்)

உண்+டு–உண்டு (இறந்த காலம்)

செய்+உம் = செய்யும் (நிகழ்காலம்)

செய்+உம் = செய்யும் (எதிர்காலம்)

நிகழ்காலத்திற்கும் எதிர்காலத்திற்கும் ஒரே வினையடி வடிவம் ஆளப்பெறும் நிலை, சித்திய மொழிகளிலும் ஐரோப்பிய மொழிகளிலும் ஊடாட்டம் பெற்றுள்ளன.

**3.41 ஏவல் வினையடிக்கு வினையழுத்தம் தருதற்காக 'கு' உருபு ஈறாகச் சேரும்.**

*(எ.டு).)* யான் செய்கு (நான் உறுதியாகச் செய்கிறேன்).

நீ உண்கு (நீ கட்டாயமாக உண்ண வேண்டும்).

**3.42 இறந்த காலம் காட்டுதற்காக சேர்க் கப்பட்ட "து" ஈறு நிகழ்கால, எதிர்கால ஈறாகவும் "உம்" சேர்ந்தும் சேராமலும் வழங்கப்படும்.**

*(எ.டு).)* யான் வருது (நான் வருகிறேன், நான் வருவேன்).

யாம் வருதும் (நிகழ், எதிர்காலங்களுக்குப் பொது).

**3.43 குகர ஈறு சேர்ந்த ஏவல் வினையோடு துகர மிகையீறும் ஐம்பாலீறும் மூவிடங் களிலும் நிகழ்கால வினைமுற்றுகளாக வழங்கும்.**

*(எ.டு).* 1. செய்+கு+த்+ஆன்=செய்குதான் (செய் கிறான்–நிகழ்காலம்)

2. காண்+கு+த்+ஆன் (காண்குதான்–காண் கிறான்–நிகழ்காலம் 'த்' எழுத்துப்பேறு.

இப்பழந்தமிழ் வழக்கு தென்பாண்டி மக்களின் பேச்சுவழக்கில் சொல்லுதான், கேட்குதான், நடக்குதான், பாக்குதான் – என வழங்கி வருகிறது.

**3.44 நிகழ்கால வினைமுற்று வடிவம் பெறு தற்காக ஏவல் வினையடியில் சேர்ந்த 'கு' வடிவும் மிகையீறாக வந்த 'து' கரமும் சேர்ந்து பேச்சு வழக்கில் கு+து–குது–கிது– 'கிறு' என்னும் திரிபடையும்.**

*(எ.டு).* உண்+கு+து+ஆன்–உண்குதான் (உண்கிறான்).

கேள்+கு+து+ஆன்=கேட்குதான் (கேட்கிறான்).

எனவே கிறு, கின்று என்னும் இடைநிலைகள் செந்தமிழ் மரபிற்கு ஏற்புடையனவல்ல. இதனை 'கிறு' என்னும் நிகழ்கால இடைநிலையாக இலக்கண ஆசிரியர்கள் வரையறுத்துள்ளனர். இந்தத் திரிபிடை நிலையை இயல்பு இடைநிலை எனக் கொள்ள இயலாது.

**3.45 ஏவல் வினையடியோடு 'கு' ஈறும், 'உம்' ஈறும் சேர்ந்து ஒரு முதனிலையாகி மீண்டும் 'து' மிகையீறும், ஐம்பால் மூவிட ஈறுகளும் சேர்ந்து பேச்சுவழக்கில் திரி புற்று நிகழ்கால வினைமுற்றாகும்.**

*(எ.டு).* செய்+கு+உம்+த்+ஆன்–செய்கும்தான் –செய்குந்தான் – செய்கின்றான்.

பேச்சு வழக்கில் திரிபுற்ற இந்நிகழ்கால வினை முற்று வழுவமைதியாவதல்லது வழாநிலையன்று.

**3.46 இல்,அல்,அ என்னும் எதிர்மறை இடைநிலைகள் புணர்ந்து எதிர்மறை வினைமுற்றுகளையும், எதிர்மறை எச்சங் களையும் உருவாக்கும்.**

*(எ.டு).* இல் – வந்தான் X வந்திலன்

செல்கின்றான் X செல்கின்றிலன்

அல் – செல்வான் X செல்லலன்

ஆ –உண்பான் X உண்ணான்

**3.47 இல் எதிர்மறை இடைநிலை இறந்த கால வினைமுற்றில் மட்டும் இடம் பெறும், அல், அ என்னும் எதிர்மறைகள் நிகழ்கால, வருங்கால எதிர்மறை இடைநிலைகளாக அமையும்.**

*(எ.டு).* 1. இறந்தகாலம் – கேட்டிலன்

2. நிகழ்காலம் – உண்ணலன்

3. எதிர்காலம் – உண்ணான், உண்ணலை, உண்ணலி.

**3.48 முன்னிலை ஒருமையில் ஆய் ஈறு புணர்ந்தவை உடன்பாட்டு வினைமுற்றாகவும், 'ஆ அ அய்' என அளபெடுத்தாற் போன்ற நெட்டீறு பெற்றவை முன்னிலை எதிர்மறை வினைமுற்றாகவும் அமையும். எழுத்து வழக்கிலும், பேச்சு வழக்கிலும் அளபெடை மறைந்து வெறும் 'ஆ' எனும் நெட்டீறாக ஆளப்படும் நிலைப்பாடு அறியாமல் தமிழ் மொழியில் முன்னிலை ஒருமையில் இன்மை எதிர்மறை (Zero negative) அமைந்துள்ளது என்பது தவறு.**

*(எ.டு).* 1. காண்+ஆய்– (உடன்பாடு) – காணாய்– முன்னிலை ஒருமை.

கேள்+ஆய் (உடன்பாடு) – கேளாய்.

2. காண்+ஆ+ஆய் – காணாஅஅய் (காண மாட்டாய் – எதிர்மறை).

கேள்+ஆ+ஆய் – கேளாஅஅய்.

இதில் இடையில் உள்ள ஆகார எதிர்மறை இடைநிலை புணர்ந்து கெட்டது. ஆயின் நாட்டுப்புற மக்களின் பேச்சுவழக்கில் ஆய் என்னும் ஈறு ஆ (அஅ) அளபெடையாய் ஒலித்து இடையில் ஆகார எதிர்மறை இருத்தலைப் புலப்படுத்துகிறது.

**3.49 செயப்படுபொருள் உள்ளது செயப்படு பொருள் குன்றாவினை என்றும், செயப்படுபொருள் இல்லாதது செயப்படு பொருள் குன்றியவினை என்றும் கூறப் படும்.**

*(எ.டு).* நடக்கிறான், வருகிறான் – செயப்படு பொருள் குன்றிய வினை (Intranstive verb)

செய்கிறான், உண்பான் – செயப்படு பொருள் குன்றா வினை (Transitive verb)

**3.50 செயப்படுபொருள் குன்றிய வினை ஈறுபெற்றுப் பிறவினையாகிச் செயப்படு பொருள் குன்றா வினை ஆகும். செயப்படு பொருள் குன்றாவினை, செயப்படு பொருள் குன்றிய வினையாக மாறாது.**

*(எ.டு).* நில்–நின்றான் (செயப்படுபொருள் குன்றிய வினை).

நில்–நிறு–நிறுத்து (செயப்படுபொருள் குன்றா வினை).

**3.51 தன்வினையைக் குறிக்கும் வினை யடியோடு பிறவினைப் பொருள் தரும் ஈறுகள் சேர்ந்து பிறவினை அடிகளாக மாறும்.**

*(எ.டு).* கல்–கற்பி–கற்பித்தான்.

வா–வருவி–வருவித்தான்.

**3.52 வினைமுதலே எழுவாயாய் நின்று ஒன்றைச் செய்தலைக் குறிக்கும் வினை செய்வினை எனப்படும். செயப்படு பொருள் எழுவாயாகி வினைமுதலால் ஏதேனும் செய்யப்படுதலைக் குறிக்கும் வினை செயப்பாட்டு வினை எனப்படும்.**

*(எ.டு).*

1. கண்ணன் ஓவியம் வரைந்தான். (செய்வினை).

ஓவியம் கண்ணனால் வரையப்பட்டது. (செயப்பாட்டு வினை).

2. அகத்தியர் தொல்காப்பியருக்குத் தமிழ் கற்பிக்கவில்லை. (செய்வினை)

தொல்காப்பியருக்கு அகத்தியரால் தமிழ் கற்பிக்கப்படவில்லை. (செயப்பாட்டு வினை).

**3.53 ஒருவினை தலைமை வினையாக வும் துணைவினையாகவும் இரு வேறு நிலைகளில் ஆளப்படும்.**

*(எ.டு).* 1. கீழே இருக்கிறான். கூட்டம் முடிகிறது. இவற்றில் இரு–முடி என்னும் இரண்டும் தலைமை வினை.

2. அவன் வந்திருக்கிறான். என்னால் நடக்க முடிகிறது. இவற்றில் இரு, முடி இரண்டும் துணை வினைகள்.

**3.54 ஈரெண் மூவிடத்தும் முக்காலத் திலும் புடை பெயரும் வினை நிறை வினை; அங்ஙனம் புடை பெயராவினை குறை வினை எனப்படும்.**

*(எ.டு).* வா, போ–நிறைவினை (Perfect verb)

மாட்டு, வேண்டும் – குறை வினை – (Defective verb)

(செய்ய) மாட்டுவேன், (எனக்கு) வேண்டும் என்பன வந்தான், போனான் என்றாற் போல் இறந்த காலத்திலும் வராமை காண்க.

**3.55 ஒருவரை, ஒரு பொருளை அல்லது அமைப்பை நீடு நிற்குமாறும், தழைத் தோங்குமாறும் வாழ்த்துகின்ற வாழ்த்து வினை வியங்கோள் வினைமுற்றாகும். இது தன்மையிடத்து வராது.**

*(எ.டு).* வரையாது கொடுத்தோய் நடுக்கின்றி நிலீயர் (புறம்:2).

தென்னவன் வாழி (சிலப்.11:22).

வரப்புயர (ஔவையார்)

தமிழ் வாழ்க, தமிழ் வெல்க.

**3.56 எளிய இயற்கைச்சொல் வளர்ச்சி, திரிபுற்ற செயற்கைச் சொல் வளர்ச்சி எனும் இரு வகையுள், தமிழ் தன் இயற்கைச் சொல் வளர்ச்சியை தொடக்க காலம் முதலே கொண்டிருக்கிறது.**

*(எ.டு).* அ,இ,உ எனும் முச்சுட்டு இயற்கை வளர்ச்சிக்கு அடிமணையாகும்.

**3.57 ஒரு தனிமொழிக்குரிய தோற்ற வளர்ச்சி முறைகளைத் தமிழ் தன்னகத்தே கொண்டுள்ளது.**

*(எ.டு).* எயில், எயிறு என உயிர் முதல் உயிரீற்று முடிபுகளும் இடையின மெல்லின சொல்லீறுகளும் உலக முதன்மொழிக்குரிய இயல்புகளாகும்.

**3.58 மூவின மெய்களுள் லகர ஈற்று வினையடியே சொல்லாக்கத்திற்கு அடிப் படையாகிறது.**

*(எ.டு).* உ–உல், இ–இல், அ– அல், அள், அய், அர், அல்–அகு, அடு, அது.

**3.59 யகர மெய்யீறாகத் திரியாத ளகர மெய்யீற்று இயற்சொற்கள் எல்லாம், பொதுவாக ரகர ஈற்றனவாகத் திரியும்.**

*(எ.டு).* கள் – கரு (கார்)

தள் (தள்ளை–தாய்) – தரு–தார் (தாரு)

எனக்குத்தாரு (தா) என்பது கொங்கு நாட்டு வழக்கு. “கடல்படுதாரம்” தாரம் – தரப்பட்ட பொருள். (புறம்.30).

**3.60 சுட்டடிச் சொல்லாக்கத்திற்கு மும் மிகை, இனத்திரிபு, மோனைத் திரிபு எனும் முத்திரிபுகள் பெருந்துணை புரியும்.**

*(எ.டு).* 1. மும்மிகை:

முதன்மிகை: உந்து–நுந்து

இடைமிகை: இலகு – இலங்கு

கடைமிகை: முன்–முன்பு

2. இனத்திரிபு:

உயிரினத்திரிபு : பரு–பெரு, வாயில்–வாயல்

மெய்யினத்திரிபு : சலங்கை–சதங்கை

தொழுதி–தொகுதி

வல்லினத்திரிபு: பொற்கை – பொச்சை

அத்தன்–அச்சன்

மெல்லினத்திரிபு : கழங்கு–கழஞ்சு

இடையினத்திரிபு : பிள்–பிய்

ஒலியினத்திரிபு : ஒளிர்–ஒளிறு

பலதிரிபு: மலங்கு–விலங்கு (விலாங்கு)

இலந்தை – இரத்தி

3. மோனைத்திரிபு

கிண்டு–கெண்டு (ஒருமடி மோனை)

நீள்–நெடு –நட (இரு மடிமோனை)

தேம்–தீம்–தித்தி –தித்திப்பு (மும்மடி மோனை)

குள்–(குடம்)–குடு–கொடு–கோடு (பல மடிமோனை)

**3.61 உயிரெழுத்துகளில் எதுவும் எது வாகவேனும் திரியலாமேனும் உ–அ, உ–இ எனும் திரிபுகள் பெருவழக்கானவை; மொழி வளர்ச்சிக்கு வழி வகுத்தவை.**

| *(எ.டு).* 1. உ>அ | உ>இ |
| --- | --- |
| உகை–அகை | துற்றி–திற்றி |
| குள்–கள் | புணை–பிணை |
| குடும்பு – கடும்பு | புட்டம்–பிட்டம் |
| குட்டை–கட்டை | புய்–பிய் |
| குலை–கலை | புரள்–பிறழ் |
| குறுவாய்–கதுவாய் | புரண்டை–பிரண்டை |
| துக்குணி–தக்குணி | புழுக்கை–பிழுக்கை |
| துளிர்–தளிர் | முடுக்கு–மிடுக்கு |
| துணை–தனை | முண்டு–மிண்டு |
| முடங்கு–மடங்கு | முல்லு–மில்லு |
| முறி–மறி | முழுங்கு–விழுங்கு |
| முடி–மடி | முளகு–மிளகு |
| 2. ஊ>ஆ | ஊ>ஈ |
| மூட்டு–மாட்டு | தூண்டு–தீண்டு |
| | நூறு–நீறு |
| | பூறு–பீறு |
| | நாள்–நீள் |
| | பூளை–பீளை |
| | பூட்டை–பீட்டை |

3. ள்>ய்

கொள்–கொய்

தொள்–தொய்

மாள்–மாய்

4. அ+ய்–ஐ:

கள்–கண்+அய்–கணை

நொள்–நள்–நய்–நை

பொள்–பொய்–பை

வள்–வய்–வை (கூர்மை) (தொல்.சொல். மொழி மரபு–23).

**3.62 அன்றாடு வழக்கிலுள்ள கூட்டுச் சொல் ஒருசொல் நீர்மைத்தாய் வழக் கூன்றும்.**

*(எ.டு).* தம்+ஆய்–தாய்

தம்+அந்தை–தந்தை

(குழந்தையை வயிற்றிற் சுமந்து பெற்றுத் தந்த தாயை தள்ளை என்பது வழக்கு. தந்தை நேரடியாகக் குழந்தை பெற்றுத் தந்தவன் அல்லன். ஆதலின் தந்தவன் தந்தை என்பது பொருட்பாட்டு மரபு இகந்தது.

**3.63 சொல்லிடையில் உடனிலை மெய் மயக்கமாகிய தகர ஒற்றிரட்டலில் முதல் மெய் மெல்லினமாகத் திரியும்.**

*(எ.டு).* அத்தன்(தந்தை) – அந்தன்–அந்தை (தந்தை).

**3.64 தந்தையைக் குறித்த முறைப் பெயரும் தாயைக் குறித்த முறைப்பெயரும் இயற்பெயர்களின் பின்னடையாய் மதிப் புரவு குறித்த ஈறாகும். சில மரூஉச் சொல் லாகவும் திரியும்.**

*(எ.டு).* ஆதன்+அந்தை–ஆதந்தை–ஆந்தை (மரூஉ)

பூதன்+அந்தை–பூதந்தை–பூந்தை (மரூஉ)

இவற்றை இலக்கண ஆசிரியன்மார் ஆதன் தந்தை எனவும், பூதன் தந்தை எனவும் பிரித்துப்

புணர்ப்பது தவறாம். சோழ நாட்டுப் பழங்குடியினர் என்ன ஐயா என்பதை என்ன அந்தே எனப் பேச்சு வழக்கில் 'அந்தை' சொல்லாட்சியைத் தக்க வைத்துக் கொண்டிருத்தலைக் காணலாம். மகன் பெயரால் தந்தை அறியப்படுவது பொருந்தாது.

**3.65 உயிரினத்திரிபொடு மோனைத் திரிபு கலந்து சொல்வடிவுகளைச் சொல்லாலும் பொருளாலும் வேறுபடுத்தும்.**

*(எ.டு).*

| 1. ஒ > அ | உ > அ | ஒ>எ |
|---|---|---|
| ஒழி–அழி | உகிர்–எகிர் | சொருகு–<br>சொருகு–செருகு |
| ஒடுங்கு–அடங்கு | குழுமு–கெழுமு | மொழுகு–மெழுகு |
| கொம்பு–கம்பு | துளி–தெளி | |
| தொள்ளாடு–தள்ளாடு | | |
| தொளத்தி–தளத்தி | | |
| பொலிசை–பலிசை | | |
| மொக்கை–மக்கை | | |

| 2. ஓ > ஆ | ஊ >ஏ |
|---|---|
| கோல்–கால் | ஊர்–ஏர் |
| நோடு–நாடு | கூழ்வரகு–கேழ்வரகு |
| நோட்டம்–நாட்டம் | |

| 3. ஓ>ஏ | ஆ>அ |
|---|---|
| தோண்டு–தேண்டு | ஆங்கு–அங்கு |
| நோடு–நேடு | ஆது–அது |
| மோடு–மேடு | |
| போடு–பேடு | |
| மோளம்–மேளம் | |

**3.66 சொல்லாக்கத்திற்கு லகர மெய்யீற்று வினையடிகளே பெரும்பாலும் பயன்கொளப் பெற்றுள்ளன. அவற்றுட் பிறந்த சில கிளையடிச் சொற்கள் வழக்கிழந்தன அல்லது உலக வேற்று மொழிகளில் ஊடாடி மறைந்துபோன தமிழ்ச் சொற்களாயின எனலாம்.**

*(எ.டு).* **த.** அல் (அது) > **க.** அல்லி (அங்கு)

**த.** அல் > F.le (definite article).

**3.67 கூட்டுச்சொல்லான முறைப் பெயர்கள் அன்றாடு வழக்கில் அடிக்கடிப் பேசப் படுதலால் ஒரு சொல்லாகக் குறுகும்.**

*(எ.டு).* அத்தன்+அத்தன்–அத்தத்தன்–தாத்தன்–தாத்தா (விளி)

அத்தள் = ஆத்தாள். அத்தன்+அத்தள்–அத்தத்தள்–தாத்தள்–தாத்தி (பாட்டி) (இந்.–தாதி)

அப்பன்+அத்தன்–அப்பாத்தன்–பாத்தன்–பாட்டன்

அப்பன்+ஆத்தி–அப்பாத்தி–பாத்தி–பாட்டி

அம்மை (அம்மாள்) + ஆத்தாள் – அம்மாத்தாள்(அம்முதா என்பது கொச்சை வழக்கு)

அப்பன்+ஆத்தாள்–அப்பாத்தாள்–(அப்புதா என்பது கொச்சை வழக்கு)

அம்மா+அம்மா–அம்மம்மா

அப்பா+அப்பா–அப்பப்பா (ஈழநாட்டு வழக்கு)

**3.68 வகரம் உகரத்தொடு கூடி மொழி முதலாகாமையின் வகர முதற்சொற்கள் அனைத்து பகர மகர முதற்சொற்களின் திரிபாகும்.**

| *(எ.டு).* ப>வ | ம>வ |
|---|---|
| பண்டி–வண்டி | முழுங்கு–விழுங்கு |
| | முடுக்கு–விடுக்கு |

**3.69 ஊகாரச் சுட்டடிப் பிறந்த முன்னிலைச் சொற்கள் காலத்தொன்மை வழி (மூலத்தாய்மொழி முதல்) இற்றை நாள் பெற்ற திரிபுகள் வரை பேணிக்காக்கப் பட்டுள்ளன.**

*(எ.டு).*

| முந்தியல் நிலை | பிந்தியல் நிலை | இற்றை நிலை |
|---|---|---|
| (முந்நிலை) ஊன் | – நூன்–நீன் | – நீ |
| (வேற்றுமையடி) ஊம் | – நூம் | – நீம்(நீம்+கள்)நீங்கள் |
| உன் | – நுன் | – நின் –உன் |

உம் - நும் - நிம்-உம்

**3.70 மூவிட மாற்றுப்பெயர்கள் (pronoun) நெடுமுதல் குறுகியே வேற்றுமை உருபு ஏற்கும். னகர ஈறு ஒருமையும் மகர ஈறு பன்மையும் உணர்த்தும். நீ என்பது வேற்றுமை ஏலாதிருப்பது, நீன் என்பதன் திரிபாய் இருத்தலை உணர்த்தும்.**

*(எ.டு).* நூன்வீடு–நுன்வீடு–உன்வீடு

நூம்வீடு–நும்வீடு (நுமதுவீடு)

நூன்வீடு–நீன்வீடு–நின்வீடு என்பன இலக்கண வழக்கு. நீன்–நீ என ஈறு கெட்டு நின்ற பின் வேற்றுமை ஏற்க இயலாமையின் நீ என்பது இலக்கண வழக்கன்று எனப்புலனாகும். தென்னாட்டுப் பழங்குடி மக்களிடையில் நீன் நீம் எனும் செந்தமிழ் வழக்கே இன்றும் வழக்கூன்றி உள்ளது.

**3.71 முன்னிலைப் பன்மைப் பெயர் 'இர்' ஈறு பெறும். 'கள்' சேர்ந்து இரட்டைப் பன்மை பெறுவது தமிழ் வழக்காயினும் செந்தமிழ் வழக்கன்று.**

*(எ.டு).*

செந்தமிழ்–ஊம்–நூம்–நீம்–நீ+இர்–நீயிர், நீவிர்.

பேச்சுத்திரிபு–ஊம்–நூம்–நீம்+கள்–நீங்கள்.

('கள்' ஈறு உயர்திணையில் தவிர்க்கத்தக்கது. காண்க – 'கள்' பெற்ற பெருவாழ்வு – மு.வ.)

**3.72 மெல்லின ஒற்றடுத்த குற்றுகர ஈற்று ஏவல்வினை, செயப்படுபொருள் குன்றியவினையாகவும் தன் வினையாகவும் அமையும்.**

*(எ.டு).* ஊங்கு, தூங்கு, ஏங்கு.

**3.73 மெல்லின ஒற்றடுத்த குற்றுகர ஈற்று ஏவல் வினையின் மெல்லெழுத்து வல்லெழுத்தாக வலித்தல் திரிபடையும் போது, செயப்படுபொருள் குன்றிய வினை தானாகவே செயப்படுபொருள் குன்றா வினையாகவும், தன் வினை பிற வினை யாகவும் திரியும்.**

*(எ.டு).* ஊங்கு (முன்சொல்) –ஊக்கு (முன்னால் செலுத்து)

தூங்கு (உயர்ந்துசெல்) – தூக்கு (உயர்த்து)

நூங்கு(முன்செல்)–நூக்கு (முன்னால் தள்ளு)

தாங்கு (ஏற்றுநில்) – தாக்கு (எதிர்த்து அடி)

நூ–நூந்நு–நீந்நு–நீந்து – நீத்து (நீத்தல்)

**3.74 சொல்லின் இடைமெல்லெழுத்து வல்லெழுத்தாகி வலித்தல் திரிபடையும்.**

*(எ.டு).* குறிஞ்சி–குறிச்சி

குண்டு–குண்டம்–குட்டம் (குளம்)

நந்து–நத்து–நத்தம்(மேடு)

**3.75 சொல்லின் இடைவல்லெழுத்து மெல்லெழுத்தாகி மெலித்தல் திரிபடையும்.**

*(எ.டு).* ஒப்பு–ஓம்பு(விரும்பு)

குத்து–குந்து (உட்கார்)

போக்கு–போங்கு–பாங்கு

**3.76 மொழி முதலிலும் மொழியிறுதி யிலும் உள்ள குறில் நெடிலாகும்.**

*(எ.டு).* நகரிகம்–நாகரிகம்

குட–குடா

**3.77 சொல்லின் இரண்டாம் எழுத்தை அடுத்து மூன்றாம் எழுத்து எழுத்துப் பேறாக வந்து விரித்தல் திரிபடையும்.**

*(எ.டு).* பரவர்–பரதவர்

**3.78 மெய்முதற்சொல்லில் மெய் நீங்கி உயிர்முதற் சொல்லாகும்.**

*(எ.டு).* சிப்பி–இப்பி

நீரம்–ஈரம்

**3.79 உயிர்முதற் சொற்கள் உயிர்மெய் முதற்சொற்களாகும்.**

*(எ.டு).* ஏண்–சேண்

இளை–கிளை

**3.80 சொல்லினிடையில் மெல்லின எழுத்து அல்லது வல்லின எழுத்து மிகும்.**

*(எ.டு).* இலகு–இலங்கு

மூசு – மூஞ்சு

பிறகு – பிறக்கு

**3.81 வினைச் சொல்லிலும் பெயர்ச் சொல்லிலும் இறுதியில் மிகையீறுகள் தோன்றும்.**

*(எ.டு).* திரும்–திரும்பு

கடை–கடைசி

**3.82 வினைச்சொல்லுக்கு உடன்பாடு எதிர்மறை என இரு வடிவங்களும் உள்ள தாயின் அது முதல் தாய்மொழி யாகிய இயல்பு வினையாகக் கருதப்படும்.**

*(எ.டு).* ஒல்லும் x ஒல்லாது

செல்லும் x செல்லாது

**3.83 உடன்பாடு எதிர்மறை என்பன வற்றுள் ஒரு வடிவம் மட்டும் திரிந்தோ திரியாமலோ காணப்பட்டால் அது கிளை மொழித்திரிபாகிய திசைச் சொல்லாக அல்லது தனியாகப் பிரிந்த இனமொழிச் சொல்லாகக் கருதப்படும்.**

*(எ.டு).* <u>த</u>. ஒல்லும் – ஒல்லாது > <u>தெ</u>. வத்து (ஒல்லாது)

தெலுங்கில் (ஒல்லாது–ஒல்லது) வத்து (vaddu - வேண்டாம்) எனும் எதிர்மறைக்கு உடன்பாட்டு வினைச்சொல் இல்லை.

**3.84 நாலசைக் கூட்டுச்சொல் மூவசை அல்லது ஈரசைச் சொல்லாகக் குறுகிக் கடுங்கொச்சை வழக்காக மாறும்.**

*(எ.டு).* வா+செய்கையில் – வரச்சே

போக+செய்கையில்–போகச்சே

**3.85 குறிப்பு வினைமுற்றில் ஒன்றன்பால் ஈறாகும் 'து' கரம் றுகர ஈறாகத் திரியும்.**

*(எ.டு).* நல்+து–நன்று. அல்+து–அன்று (எதிர்மறை).

சொல்(நெல்)+து–சொன்று–சொன்றி–(சோறு)

**3.86 'அல்' சொல்லாக்கப் பெயரீறாக வரும்.**

*(எ.டு).* அல்–அன்+அல்– அனல்

கான்+அல்–கானல்

**3.87 தனிக்குறிலடுத்த ளகர மெய்யீற் றுச் சொல் தொழிற்பெயர் அல்லது நிறத்தைக் குறிப்பின் இரட்டும். பண்பு அல்லது வேறு பொருள் குறிப்பின் இரட்டாது.**

*(எ.டு).*

வெள்(நிறம்) – வெள்ளி

வெள் (இடம்) –வெளி

கள் (முள்) – கள்ளி

கள் (மருட்சி) – களித்தல்

கள் (அடர்த்தி) – களி (களிமண் சேறு)

முள்–முள்ளி–கொள்–கொள்ளி

வள்–வள்ளி. வள்–வளி

**3.88 ஒப்பொலிகளிலிருந்தும் பெயர்ச் சொற்கள் தோன்றும்.**

*(எ.டு).* கா–காகம். கரைதல் > E. Crow

கூ–குயில்

**3.89 அகர முதற்பெயர்ச்சொற்கள் பகர முதற் பெயர்ச் சொற்களாகத் திரியும்.**

*(எ.டு).* அஞ்சவர்–பஞ்சவர்

அப்பளம்–பப்பளம்–பப்படம்

**3.90 ஒலிக்குறிப்பின் அடிப்படையிலும் அது தொடர்பான வினைக் கருத்தைப் புலப்படுத்தவும் குறிப்புவினைச்சொல் தோன்றும்.**

*(எ.டு).* தொப்பு, தொப்பு=துணி துவைக்கும் ஒலிக்குறிப்பு.

தொப்புதல்=அடித்தல். தொப்பு–தப்பு–தப்புதல்= துணி துவைத்தல்.

பட்டு பட்டு = சம்மட்டியால் அடிக்கும் ஒலிக்குறிப்பு

பட்டு–பட்டுதல்=அடித்தல் (தெ. பெட்டு)

பட்டு–பட்டம்=பட்டையான தகடு. – ஒரு தலைவனுடைய சிறப்பைப் பொறுத்து அவனது நெற்றியிற் கட்டும் தகடு. அத்தகட்டிற் பொறிக்கப்படும் சிறப்புப் பெயர். ஒருவனுக்கு மக்கள் புகழ்ச்சியாகவோ, இகழ்ச்சியாகவோ வழங்கும் சிறப்புப் பெயர், தட்டையான காற்றாடி, மரப்பட்டை, மரவுரி, சீலை போன்ற துணி.

பட்டம்–படம்–பணம்=தகடான காசு

படம்–படங்கம்–படவு–படகு=பாய் கட்டிய தோணி.

பட்டு–பட்டாக்கத்தி=பட்டைவாள்

பட்டு–பட்டி=தட்டியாலமைத்த கால்நடைத் தொழுவம், அதைச்சார்ந்த சிற்றூர்.

பட்டை–பற்றை–பத்தை=தட்டையானது

பட்டை–மட்டை=தட்டையான ஓலைக்காம்பு.

## 3.91 அச்சம், விரைவு, ஓசை,ஒளி, வண்ணம், ஊறு, அசைவு எனப் பல்வேறு பொருள் சுட்டும் குறிப்புச் சொற்கள் ஓர் ஒழுங்குபட்ட கருத்தைப்புலப்படுத்தும் பாங் குடையன.

*(எ.டு).*

1. அச்சக்குறிப்பு – திடுக்கு, திசைக்கு
2. விரைவுக்குறிப்பு – அவக்கு, குபீல், குபீர், சரேல், சரேர், படக்கு, பொசுக்கு, விசுக்கு, விருட்டு, வெடுக்கு
3. ஓசைக்குறிப்பு – கணீர், கீறீச்சு, சளார், தடால், தடார், புளிச்சு, துருட்டு, மொளோர்.
4. ஒளிக்குறிப்பு – பளிச்சு, பளிர், மினுக்கு
5. வண்ணக்குறிப்பு – செவேல், செவேர், சிவீர், வெளேர்.
6. அசைவுக்குறிப்பு – கிளிக்கு, கிளுக்கெட்டி, சவக்கு, தொதுப்பு, புதுக்கு
7. ஊறு – கடுக்கு, சுறுப்பு, சளீர், பரபர, பொதுக்கு, நொறுக்கு, மெதுக்கு

## 3.92 பெயர்ச்சொற்கள்

*(எ.டு).* இருதிணை ஐம்பால் பெயர்ச் சொற்களும் முதல் கருஉரி தொடர்பான சொற்களும் பெயர்ச்சொற்களாகும்.

அவை பின்வரும் வகையின:

ஆண்பால் பெண்பால் பெயர்கள்

**அ. ஆண்பாற் பெயர்:**

*(எ.டு.)*

| உயர்திணை | அஃறிணை |
|---|---|
| ஆண், ஆடவன், ஆண் மகன், மாந்தன் | ஆண், அப்பர், இரலை, ஏறு, கடா, கடுவன், கன்று, காளை, சேவல் |

**ஆ. பெண்பாற் பெயர்:**

*(எ.டு.)*

| உயர்திணை | அஃறிணை |
|---|---|
| பெண், பெண்டு, பெண்டாட்டி, பெண்பிள்ளை மகள், மந்தி (அரசி) | ஆண், ஆ, கடாரி, பிடி, பாட்டி, பெட்டை, பெடை, மூடு, மறி |

**இ. திரிபால்:**

*(எ.டு.)*

| உயர்திணை | அஃறிணை |
|---|---|
| பேடன், பேடி, அலி | |

## 3.93 இளமை முதுமைப் பெயர்கள்

**அ. இளமைப் பெயர்**

*(எ.டு).*

| உயர்திணை | அஃறிணை |
|---|---|
| மக, குழவி, குழந்தை, சேய், பிள்ளை | கன்று, குஞ்சு, குட்டி, குருளை |

**ஆ. முதுமைப் பெயர்**

*(எ.டு).*

| உயர்திணை | அஃறிணை |
|---|---|
| கிழவன்–கிழவி | கிழம், கிழடு |

முதுமகன்-முதுமகள்

## 3.94 முறைப்பெயர்கள்

*(எ.டு).*

தந்தை–அப்பன்,அத்தன்,அச்சன்

தாய்–அம்மை, அன்னை, ஆத்தாள், ஆச்சி

| ஆண்பால் உறவுப்பெயர் | பெண்பால் உறவுப்பெயர் |
|---|---|
| மகன், அண்ணன், தம்பி, | மகள், அக்காள், தங்கை, மாமி, |
| மாமன், மருமகன், கணவன், | அத்தை, மருமகள், மனைவி, |
| ஓரகத்தான், பாட்டன், பூட்டன், | ஓரகத்தாள், பாட்டி, பூட்டி, |
| பேரன், கொள்ளுப்பேரன் | பேத்தி, கொள்ளுப்பேத்தி |

## 3.95 இயற்பெயர்

*(எ.டு).* அருள்மொழித்தேவன், பரிமேலழகன்

## 3.96 சிறப்புப்பெயர்

*(எ.டு).* காக்கை பாடினி

## 3.97 பட்டப்பெயர்

*(எ.டு).* தொண்டர்சீர்பரவுவார், கலையிளைஞர், புலவன்.

## 3.98 விருதுபெயர்

*(எ.டு).* மும்முடிச்சோழன்,கங்கை கொண்டான், கடாரம் கொண்டான், இமயவரம்பன்.

## 3.99 புலமைப்பெயர்

*(எ.டு).* அறிஞர், பண்டிதன், நாவலன், பாவலன்.

## 3.100 பகடிப்பெயர்

*(எ.டு).* நரிகுளிப்பாட்டி

## 3.101 குலப்பெயர்

*(எ.டு).* வேளாளன்

அ. குலப்பட்டப் பெயர் – செட்டி, நாடான், பிள்ளை.

ஆ. குடிப்பெயர் – குறுக்கையன், சேக்கிழான்

## 3.102 இடவியல் பெயர்

*(எ.டு).*

அ. திணைநிலை–குன்றவன், வேட்டுவன், ஆயன்.

ஆ. நாட்டுநிலை–சோழியன், கொங்கன்.

## 3.103 காலவியற்பெயர்

*(எ.டு).* ஆதிரையன், வேனிலான்.

## 3.104 தலைமைப்பெயர்

*(எ.டு).* திணைநிலை–வெற்பன்.

குலநிலை–அம்பலக்காரான்.

## 3.105 வாழ்நிலைப்பெயர்

*(எ.டு).* துறவி, அடிகள், அந்தணன், முனிவன் (தமிழ்த் துறவி)

### சினை முதற்பெயர்

*(எ.டு).* கருங்கண்ணன்.

### உடைமைப் பெயர்

*(எ.டு).* செல்வன்

### பண்பியற்பெயர்

*(எ.டு).* அன்பன்

### தொழிலியற்பெயர்

*(எ.டு).* எழுத்தாளன், தச்சன்.

### மதவியற்பெயர்

*(எ.டு).* சிவநெறியன், சமணன்.

## 3.106 இடப்பெயர்கள்

*(எ.டு).* குறிஞ்சி – குறிச்சி, மலை, கோடு, குன்று, குன்றம், கடவு, கணவாய்.

முல்லை – பாடி, சேரி, பட்டி, வாடை

மருதம் – <u>முற்காலம்:</u>

ஊர், பேரூர், மூதூர், புத்தூர், நல்லூர், ஆற்றூர், குளத்தூர், நாடு, மங்கலம், ஏரி, ஆறு, கிணறு, நெல்லூர், வேலி.

<u>பிற்காலம்:</u> நகர், நகரம், புரி, புரம், கோயில்

நெய்தல் – <u>முற்காலம்:</u> குப்பம், கழி, காயல், கரை, துறை.

<u>பிற்காலம்:</u> பட்டினம், பாக்கம், புகார்.

பாலை – கானம், குடிக்காடு, நத்தம், வலசை.

## 3.107 சிறப்பு வகை இடப்பெயர்கள்

*(எ.டு).* காணி, முற்றூட்டு, இறையிலி, அறப்புறம், அடிசிற்புறம், கோயிற்புறம், பண்டாரவாடை.

## 3.108 சில ஊர்ப்பெயர்

*(எ.டு).* நத்தம், குடியேற்றம்.

### 3.109 தங்குமிடங்கள்

*(எ.டு).* பாசறை, கட்டூர், பாளையம், தாவளம், கரிசல், முரம்பு.

### 3.110 நாட்டுப்பிரிவுகள்

*(எ.டு).* மண்டலம், கோட்டம், வளநாடு, கூற்றம், பற்று, உட்கிடை.

### 3.111 காலப்பெயர்

*(எ.டு).* ஆண்டு, மாதம், கிழமை.

காலை, நண்பகல், எற்பாடு, மாலை, யாமம், வைகறை.

இளவேனில், முதுவேனில், கார், கூதிர், முன்பனி, பின்பனி.

### 3.112 சினைப்பெயர்

*(எ.டு).* நிலத்திணை : வேர், அடி, கிளை.

இயங்கு திணை : பாதம், கால், வயிறு, மார்பு, கழுத்து, தலை.

### 3.113 குணப்பெயர்

*(எ.டு).* நல்லன், தீயன், பெரியன்.

**3.114 பொருள் மாறா நிலையில் ஒரு சொல்லில் தனி எழுத்துக்கு மாற்றாக வேறோர் தனி எழுத்து அல்லது வினை எழுத்துக்கு மாற்றாக வேறு வினை எழுத்து வருவது போலி எனப்படும் (interchanging of letters). இது முதற்போலி, இடைப்போலி, கடைப்போலி என மூன்று வகைப்படும். பொருள் மாறாத போலிச்சொற்கள் செய்யுளில் எதுகை மோனை அமைப்பிற்குப் பயன்படும்.**

*(எ.டு).*

முதற்போலி – நாயிறு – ஞாயிறு
மடலி–வடலி

இடைப்போலி – நெசவு–நெயவு
அரசு–அரைசு
நீந்து–நீஞ்சு

கடைப்போலி – கடம்–கடன்
கூதல்–கூதர்

**3.115 பொருள் வேறுபடும் போலிச் சொற்களும் மூவகைப்படும். இவை மொழியை வளப்படுத்தும் திரிபுச்சொல் ஆக்கங்களாகும்.**

*(எ.டு).*

முதற்போலி – தருக்கு–செருக்கு
பகு–வகு
மீறு–வீறு

இடைப்போலி – கதளி–கசளி
குழல்–குடல்
பழம்–பயம்–பயன்
வாயில்–வாசல்

கடைப்போலி – மொச்சை–மொத்தை
இடம்–இடன்
நாளி–நாழி
நாளி–நாடி

**3.116 ஒரு தனிச்சொல்லின் எழுத்துகள், கூட்டுச்சொல்லின் உறுப்புகள் அல்லது உறுப்புச்சொற்கள் தம்முள் முன்பின்னாக முறை மாறிவரின் இலக்கணப்போலி எனப்படும்.**

*(எ.டு).*

தனிச்சொல் – அலரி–அரளி
கொப்புளம் – பொக்குளம்
சதை–தசை
ஞமிறு–மிஞிறு
விசிறி–சிவிறி

கூட்டுச்சொல்– இல்வாய்–வாயில்
இல்முன்–முன்றில்
கதுவாலி–கவுதாரி
தானைமுன்–முன்றானை

**3.117 தனிச்சொல், கூட்டுச்சொல், தொடர்ச்சொல் என்னும் கூட்டுச்சொல் வகைகள், தனிப்பெரும்பாங்கு உடையன. அவை 11 வகைப்படும்.**

*(எ.டு).*

| | |
|---|---|
| 1. இரட்டைக்கிளவி | – கலகல, விறுவிறு |
| 2. இரட்டித்த சொல் | – செக்கச் செவேர், சின்னஞ்சிறு |
| 3. அடுக்குத்தொடர் | – பலப்பல, திரும்பத்திரும்ப |
| 4. மீமிசைச்சொல் | – கன்றுக்குட்டி, ஓங்கியுயர்ந்த |
| 5. இருபெயரொட்டு | – குமரிமலை, மக்கட் செல்வம் |
| 6. மிகவுச்சொல் | – ஆண்மகன், பெண்மகள் பெண்டாட்டி |
| 7. முரண்படுசொல் | – பெண்மகன், பெட்டைப் பசங்கள் |
| 8. இணைமொழி | – காய்கறி, வாழ்வுதாழ்வு |
| 9. அடைபெற்ற சொல் | – நன்செய், தலைக்கழகம் |
| 10. கிளவியம் (எச்சத்தொடர்) | – ஆட்சி மாறி, வந்து செல்ல |
| 11. தொடரியம் (முற்றுத்தொடர்) | – தமிழ் வாழும், தமிழன் உயர்வான் |

**3.117 அடுக்குத்தொடர், ஒற்றிடை மிக்கும் திரிந்தும் தொக்கும் வரும்.**

*(எ.டு).*

பலப்பல, பற்பல, மென்மேலும், நந்நான்கு, வெவ்வேறு.

சில சொற்கள் தனிச்சொற்கும் கூட்டுச் சொற்கும் பொதுவாயிருக்கும்.

**3.118 அடுக்குக் கிளவி, மீமிசைச் சொல், மிகவுச் சொல், அடையடுத்த பெயர் ஆகியவை பொருள் விளக்கம் கருதிய வழக்காற்று மிகைச் சொற்களாம். மிகைச் சொல் எனப்படும் இவை மிகைப்படக் கூறலின் வழுவமைதிகளாம்.**

*(எ.டு).*

| | |
|---|---|
| 1. அடுக்குக்கிளவி | – குடுகுடு |
| 2. மீமிசைச்சொல் | – முதுபழந்தொன்(மொழி) |
| 3. அடுக்குத்தொடர் | – திதிதிதி |
| 4. மிகவுச்சொல் | – அரைஞாண் கயிறு பெண்பிள்ளை (பொம்பளை)ப் பிள்ளை |
| 5. அடைபெற்ற சொல் | – தூங்கெயிலெறிந்த தொடி தோட்செம்பியன், மதுரை கணக்காயன் மகனார் நக்கீரன் |

**3.119 செயலும், காலமும் வெளிப்படையாகத் தெரிய நிற்பது தெரிநிலை வினை. அவற்றைக் குறிப்பாகக் காட்டுவது குறிப்பு வினை.**

*(எ.டு).*

| | |
|---|---|
| 1. தெரிநிலைவினை | –வந்தான், சென்றான் |
| 2. குறிப்புவினை | –நல்லவன், பெரியவன், உண்டு, இல்லை |

**3.120 பொருள், இடம் காலம், சினை, குணம், தொழில் எனும் அறுவகைப் பொருட் பெயரை அடிப்படையாகக் கொண்டு குறிப்பு வினை ஆளப்படும். உடைமை, உரிமை, செய்கை என்னும் மூவகைப் பொருள் நிலைக்களத்தில் நின்று, இருத்தல் அல்லது ஆதல் நிலையைக் குறிப்பாக உணர்த்தும். இருத்தல் வினை முக்காலத்திற்கு உரியதாகவும், ஆதல் வினை ஒரு காலத்திற்கு உரியதாகவும் இருக்கும்.**

*(எ.டு).*

| பொருள் நிலைக்களம் | அடிப்பெயர் | குறிப்பு வினை |
|---|---|---|
| 1. உடைமை | குழை (பொருள்) | குழையன் |
| 2. உரிமை | மதுரை | மதுரையான் |

| | | |
|---|---|---|
| 3. உடைமை | கை(சினை) | கையன் |
| 4. உடைமை(பெருமை) | பெரு | பெரியன் |
| 5. செய்கை | (நடை) தொழில் | நடையன் |

**3.121 வினைச்சொல்லின் பொருட்பாட்டை மேலும் விளக்கிச் சொல்வதற்காக எச்ச வினைகள் ஆளப்பெறும். அவை பெயரெச்சம், வினையெச்சம் என இரு வகைப்படும்.**

*(எ.டு).*

வந்த, நல்ல – பெயரெச்சம் (relative participle)

வந்து, இனிய – வினையெச்சம் (verbal participle)

பெயரெச்சம் குறிப்புப் பெயரெச்சம், தெரிநிலைப் பெயரெச்சம் என இரு வகைப்படும். குறிப்புப் பெயரெச்சம் மேலும், தெரிநிலைக் குறிப்புப் பெயரெச்சம், குறிப்புப் பெயரெச்சம் என இரு வகைப்படும். மூவிட வினைமுற்றுகள், பழந்தமிழில் வழங்கிய 'செய்து' வாய்பாட்டு வினை முற்றோடு மூவிடமாற்றுப் பெயர்களையே ஈறாகக் கொள்ளும். அவை நாளடைவில் இக்காலத் திற்குரிய மூவிட ஐம்பால் ஈறுகளாகத் திரிபுற்றன.

*(எ.டு).*

| | |
|---|---|
| வந்து+நான் | – வந்து நான் – வந்தேன் |
| வந்து+நாம் | – வந்துநாம் – வந்தோம் |
| வந்து+நீ | – வந்துநீ – வந்தனை |
| வந்து+நீர் | – வந்துநீர் – வந்தனிர் |
| கண்டு+அவன் | – கண்டுஅவன் – கண்டான் |
| கண்டு+அவள் | – கண்டுஅவள் – கண்டாள் |
| கண்டு+அவர் | – கண்டுஅவர் – கண்டார் |
| கண்டு+அது | – கண்டுஅது – கண்டது |
| வந்து+அவை | – வந்த அவை – வந்தவை – வந்த – வந்தன |

**பெயர்ச்சொல் வகை:**

**3.122 எல்லாப் பொருள்களும், பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில் என ஆறு வகைப்படும்.**

*(எ.டு).* காட்சிப் பொருளும், கருத்துப் பொருளும் என ஏதேனும் ஒரு பொருளிருப்பின் அது இருக்க இடமும் காலமும் வேண்டும். பொருள்கள், இயற்கையாயினும், செயற்கையாயினும் பெரும்பாலும் பல உறுப்புகளை உடையன. ஒவ்வொரு பொருட்கும் சில தன்மைகள் உண்டு. அத்தன்மைகளே உறுப்பையும், உடலையும் துணை கொண்டு தொழிலாக வெளிப்படும்.

**3.123 திணைவழி பெற்ற பெயர், மூன்று வகைப்படும்.**

*(எ.டு).*

| | |
|---|---|
| உயர்திணைப்பெயர் | – மாந்தன், முருகன் |
| அஃறிணைப்பெயர் | – கல், மரம் |
| விரவுத்திணைப்பெயர் | – ஆண், பெண், தாய், பிள்ளை |

**3.124 உயர்திணைப்பால் மூன்றும், அஃறிணைப்பால் இரண்டும் என பால் வகைப் பெயர் ஐந்தாகும்.**

*(எ.டு).*

| | | |
|---|---|---|
| ஆண்பாற்பெயர் | – | ஆடவன், மகன் |
| பெண்பாற்பெயர் | – | மகள், சிறுமி |
| பலர்பால் பெயர் | – | ஆடவர், மகளிர் |
| ஒன்றன்பால் பெயர் | – | மாடு, மரம் |
| பலவின்பால்பெயர் | – | ஆடுகள், கோழிகள் |

இவற்றுள் இளமைப் பெயர், முதுமைப் பெயர்களும் அடங்கும்.

**3.125 பகுத்தறிவுள்ள ஆறறிவுயிர்களாகிய மக்கள் உயர்திணையாகவும், ஓரறிவு முதல் ஐந்தறிவு உடைய உயிரிகளும், உயிரற்றவைகளும், அஃறிணையாகவும் கருதப்படும்.**

*(எ.டு).*

| | |
|---|---|
| உயர்திணை | – கந்தன், முருகன், வள்ளி |
| அஃறிணை | – ஆடு, மாடு, மரம், கல் |

**3.126 முறைப்பெயர்கள் தமிழ்மொழி தோன்றிய காலத்திலேயே தோன்றியவை யாதலின் முந்து தமிழ் வினையடியிலிருந்து தோன்றினவாம். ஞாலமுதன் மொழி தமிழே என வேர்ச்சொல் வழி விளக்கிக் காட்டும் தகவுடையனவாம்.**

*(எ.டு).*

அப்பா, அம்மா, மகன்

**3.127 குழந்தைகளுக்குப் பெற்றோர் இட்ட பெயர் இயற்பெயர் எனப்படும்.**

*(எ.டு).*

அருண்மொழித்தேவன்

இளநாகனார்

**3.128 சிறப்புக் கருதி இட்டப்பெயர் சிறப்புப் பெயர் எனப்படும்.**

*(எ.டு).*

காக்கைபாடினி

மருத்துவன் தாமோதரன்

**3.129 தகுதி குறித்து இட்ட பெயர் தகுதிப் பட்டப்பெயர் எனப்படும்.**

*(எ.டு).*

தொண்டர் சீர் பரவுவார்

கடலகப் பெரும்படைத் தலைவன்

**3.130 ஏதேனும் ஒரு துறையில் பெற்ற வெற்றியைப் பாராட்டித் தரப்படும் பெயர் விருதுப் பெயர் எனப்படும்.**

*(எ.டு).*

மும்முடிச்சோழன்

கங்கைக் கொண்டான்

**3.131 நகைச்சுவை கருதி இடப் பெறும் பெயர், பகடிப்பெயர் (nick name) எனப்படும்.**

*(எ.டு).* நரிக்குளிப்பாட்டி

**3.132 குழுவாக வாழ்வோர்க்கு இடப்படும் பெயர் குலப்பெயர் எனப்படும். அக் குழுவின் பெயருக்குச் சிறப்புக் காரண மிருப்பின் அதற்குக் குடிப்பெயர் என்று பெயர்.**

*(எ.டு).*

குலப்பெயர் – வேளாளன், பாணன்

குடிப்பெயர் – குறுக்கையன், சேக்கிழான்

**3.133 குலத்தலைவனுக்கு இடப்படும் பெயர் குலப்பட்டப்பெயர் எனப்படும்.**

*(எ.டு).* செட்டி, நாடான், பிள்ளை

**3.134 வாழும் இடத்தான் அல்லது செய் யுந்தொழிலாற் பெற்ற பெயர் திணை நிலைப்பெயர் எனப்படும்.**

*(எ.டு).* குன்றன், ஆயன், வேட்டுவன் (திணை நிலை), சோழியன், கொங்கன் (நாட்டுநிலை), உறந்தையான், கூடலான் (ஊர்நிலை).

**3.135 காலநிலை அல்லது பருவநிலை யோடு சார்ந்து இடப்படும் பெயர் கால இயற்பெயர் எனப்படும்.**

*(எ.டு).* ஆதிரையான், வேனிலான்

**3.136 ஓரிடத்தில் வாழும் நிலை கருதி இட்ட பெயர் வாழ்நிலைப் பெயர் எனப்படும்.**

*(எ.டு).* இல்லறத்தான், துறவி, முனிவன்

**3.137 நிலைத்திணை, இயங்குதிணை ஆகியவற்றின் உறுப்புகளால் பெற்ற பெயர் சினைப் பெயர் எனப்படும்.**

*(எ.டு).* வயிற்றன், மூக்கன்

**3.138 உறுப்பின் தனித்தன்மையைக் காரணமாகக் கொண்டு இடப்பட்ட பெயர் சினை முதற்பெயர் எனப்படும்.**

*(எ.டு).* கரிகாலன், பெருந்தலையன்

**3.139 செல்வ உடைமை, பொருளுடைமை காரணமாகப் பெற்ற பெயர் உடைமை இயற்பெயர் எனப்படும்.**

*(எ.டு).* செல்வன், நாடு கிழவோன்

**3.140 பண்பு காரணமாகப் பெற்ற பெயர் பண்பு இயற்பெயர் எனப்படும்.**

*(எ.டு).* அன்பன், நல்லோன்

**3.141 தொழில் காரணமாக இடப்பட்ட பெயர் தொழிற்பெயர் எனப்படும்.**

*(எ.டு).* எழுத்தன், தச்சன், பொருளன்

**3.142 மதம் காரணமாகப் பெற்ற பெயர் மத இயற்பெயர் எனப்படும்.**

*(எ.டு).* சமணன், பௌத்தன், கிறித்தவன்.

**3.143 ஐந்நிலம் சார்ந்த வாழ்விடம் காரணமாகப் பெற்ற பெயர் இடப்பெயர் எனப்படும்.**

*(எ.டு).*

குறிஞ்சி – சிறுகுடி, குறிச்சி, கடவு, கோடு

முல்லை – பாடி, சேரி, பட்டி, வாடை

மருதம் – பேரூர், மூதூர், நல்லூர், ஆமூர்

நெய்தல் – குப்பம், கழி, காயல், கானல்

பாலை – கடம், காடு, கானம், பறந்தலை

**3.144 ஏதேனும் தொழிலைக் குறித்த பெயர்கள் தொழிற்பெயர் எனப்படும்.**

*(எ.டு).* உழவு, நெசவு, தச்சு

**3.145 ஒரு குழுவாக இயங்கும் நிலை காரணமாகப் பெற்ற பெயர் குழுப்பெயர் எனப்படும்.**

*(எ.டு).* மந்தை, கழகம்.

**3.146 ஏவல் வினையடிகள் பொருள் அழுத்தத்திற்காகக் குகரஉயிர்மெய்யைக் கூடுதல் சொல்லீறாகப் பெறும். அது குற்றியலுகரமாகவே ஒலிக்கும்.**

*(எ.டு).* உண்–உண்கு

நில்–நில்கு

கல்–கல்கு

ஏவல் வினையொடு குகரத் துணையீறுகள் சேர்ந்து பொருளழுத்த ஏவலாக ஆகும்போது குகரத்தின் ஒலிப்பை எடுப்பொலியாகப் பலுக்காமல் வல்லொலியாகப் பலுக்கும்போது வல்லொலியாகப் பலுக்கும் பேச்சியல்பின் விளைவாக மற்றுமோர் வல்லெழுத்து மிகுந்து கல்+கு>கல்கு>கல்க்கு எனத் திரிபுறும். இச்சொல்லே 'கற்கு' என்னும் வினையடியாகிக் 'கற்கிறான்' என வினைமுற்று வடிவமும் கொண்டது.

<u>பொருள் திரியாச் சொற்றிரி மரபுகள்</u>

**3.147 பெயர்ச்சொல், வடிவில் பன்மடித் திரிபுற்றாலும் பொருளில் மாறுபடாது.**

*(எ.டு).* மழ > மக > மகன் > மவன் > <u>ம.</u> மோன்

மழ > மக > மகள் > மவள் > <u>ம.</u> மோள்

**3.148 ஓரெழுத்து ஒருமொழியாய் நின்று தனிப்பொருள் உணர்த்தும் சொல்லாட்சிகள் சுட்டடிக்கருத்திலிருந்து வளர்ந்தவை. இச்சுட்டடிகள் தனிச்சொல்லாக மீண்டும் ஓரெழுத்துச் சொல்லாகி உள்ளன.**

<u>உகரசுட்டு</u>

உ–<u>ஊ</u>–<u>ஊர்</u>–ஏர்–ஏ–

**3.149மருஉமுடிபாகிய ஏகார உயிர் தன்னளவால் ஓரெழுத்துச் சொல்லாய் நின்றும், உயர்ச்சிக் கருத்தை உணர்த்தும்.**

*(எ.டு).*

ஏ: மேனோக்குகை

1. கார்நினைந் தேத்தகு மயிற்குழாம் (சீவக.87).

2. கழுத்தை நிமிர்த்துதல், தலையெடுப்பு ஏக்கழுத்தம் என்பது உலக வழக்கு.

"காதிரண்டு மில்லாதான் ஏக் கழுத்தஞ் செய்தலும்" (சிறுபஞ்.5).

3. இறுமாப்பு "ஏக்கழுத்த நாணல் (பரிபா. 7:55).

4. அடுக்கு. "ஏபெற்றாகும்" (தொல்.304) ஏகல்லடுக்கம் (நற்.116).

5. உயர்வு, பெருக்கம், மிகுதி – மொப்பு.

**3.150 உயிர் முதற்சொற்கள் ஏதேனும் மெய்யை முன் மிகையாகப் பெறும்.**

***(எ.டு).*** இளை–சிளை–சிளைத்தல்=சோர்தல், இளைத்தல்

அவனைப்போலே பிரிவுக்குச் சிளையாதபடி (ஈடு. 9:5:3).

உதை=சுதை(பிங்)=உதை காற்பசு.

வருகன் றூட்டாப் புன்சுதை (குற்றா.தல.தக்கன் வேள்வி.117).

**3.151 பல ணகர மெய்ச் சொற்கள் ளகர மெய்ச்சொற்களின் திரிபாயுள்ளன.**

***(எ.டு).*** ஆள்–ஆண். எள்–எண். கோள்–கோண், பெள்–பெண். வேள்–வேண். களவாளி–களவாணி. வளரி–வணரி. சுருளை–சுருணை. திரளை–திரணை.

ளகர மெய்யீறு பல சொற்களில் யகர மெய்யீறாகத் திரிகின்றது. சேய்மையுணர்த்தும் சேய் என்னும் சொல்லும் சேள் என்னும் இறந்துபட்ட சொல்லின் திரிபாகலாம்.

ஏ–ஏள்–ஏண். ஏள்–சேள்–சேய்.

# உரிச்சொல்

**3.152 ஆணி வேர்ச் சொல்லிலிருந்து கிளைத்த குல், சுள், துள் போன்ற கிளை வேரடிகள் மொழியின் தொடக்க காலத்தில் பெயருக்கும் வினைக்கும் பொதுவாய் அமையும். இவை மொழியில் ஆளப்படும் தன்மை நோக்கி இவற்றைப் பெயருக்கோ வினைக்கோ உரிமையாக்கிக் கொள்வதால் உரிச்சொல் என்னும் பெயர் பெறும்.**

***(எ.டு).*** கடி

1. கடி வினை (நீக்கன்–வினை)
2. கடி, கடி நகர், (காவல் – பெயர்)
3. கடி மலர் தூவி – (மணம்–பெயர்)

இவை மொழியின் தொடக்க கால முந்துநிலை குறித்தலின் உரிச்சொல் என்னும் தனி இலக்கண வகையாயிற்று. இதன் ஊடாடல்கள் மூலத்தாய் மொழியிலிருந்து பிரிந்த உலக மொழிகளிலும் காண லாம். இத்தகைய தொல்வடிவங்கள் முந்துநிலை எனத் தொன்மையாக்கி இலக்கண வகைப்பாடு பெற்றன. பெயரினும், வினையினும் மெய் தடுமாறுவது உரிச் சொல் இயல்பு.

**3.153 இலக்கண வகையிற் போன்றே தமிழ்ச் சொற்பிறப்பியல் முறையிலும் சொற்கள் நான்கு வகைப்படும்.**

முதலாவது தன்சொல் அயற்சொல் என்னும் முறையில் தென்சொல் வடசொல் என்ற பாகுபாடும், பின்பு தன் சொற்குள் செந்தமிழ் கொடுந்தமிழ் என்னும் முறையில் நாட்டுச்சொல் திசைச்சொல் என்ற பாகுபாடும், பின்பு நாட்டுச் சொற்களுள் இயல்பும் திரிபும் பற்றி இயற்சொல் திரிசொல் என்ற பாகுபாடும் தோன்றின. இவ்வடிப்படையில் சொல் வகைகள் இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் என நான்காயின.

***(எ.டு).*** தென்சொல் — செந்தமிழ், கொடுந்தமிழ்

வடசொல்

திசைச்சொல்

இயற்சொல்

திரிசொல்

**3.154 குறிப்பொலியும் சுட்டொலியும் நேரடியாக உணர்வையும் கருத்தையும் வெளிப்படுத்துகின்றன. வேர்நிலையாக வும், திரிநிலையாகவும் அமைந்த சொல் வடிவங்கள் முதலில் சொல்லை அறிமுகப் படுத்தி பிறகு அதனுட் பொதிந்த கருத்தை அல்லது பொருளை வெளிப்படுத்து கின்றன.**

***(எ.டு).*** உல் – உன் – உன்னு (முன்னுதல், கருதுதல்)

**3.155 "நன்" வினையாலணையும் பெயரீறாக வரும்.**

*(எ.டு).* கொள்+நன்–கொள்நன் (கொழுநன்–கொண்கன்). கொள்நன்=(ஒரு பெண்ணை மனைவியாகக்) கொள்பவன். கொள்நன் எதிர்காலம் குறித்த சொல்லன்மையின் வினைத்தொகைப் பொருள் ஈறாகவே 'நன்' பயின்றது எனக் கருத வேண்டும்.

**3.156 வேரும் (root), அடியும் (stem), முதனிலையும் (theme) என இயல்பான சொல் இயற்சொல் (primitive) எனப்படும்.**

*(எ.டு).* நல், வெள், செல்.

**3.157 வேர், அடி, முதனிலை ஆகியவற்றினின்று திரிந்த சொல் திரிசொல் (derivative) எனப்படும்.**

*(எ.டு).* நல்>நலம், நன்கு, நன்றி, நல்கு

செல் > செலவு, செல்வம், செல்கை.

**3.158 ஒரு சொல்லின் தொன்மை கண்டறிய காலத்தால் முந்தைய நூலில் பயின்ற காரணமே போதும் என்பது புதிதாகத் தோன்றிய மொழிகளுக்கே பொருந்தும்.**

*(எ.டு).* மகன் > ம. மோன் ஆயின், மழ > மகவு >மகன் என்பதே தமிழ்ச் சொற்பிறப்பு மூலம்.

**3.159 முழு வளர்ச்சி பெற்ற தொன்மொழியில் ஒரு சொல்லின் பொருள்கள் அவை தோன்றிய வரிசையிலன்றி இடத்தின் தேவைக்கேற்ப ஆளப்பெறுவதால் அவற்றினின்று அவற்றின் முன்மை, பின்மையை வேர்ச் சொல்லாய்வின் வாயிலாகத்தான் கண்டறிய முடியும்.**

*(எ.டு).*

பள்ளி என்னும் சொல்லின் பொருள்களில் இடைப்பட்டதாகிய பள்ளி (இடம்) என்பது தொன்முது நூலாகிய தொல்காப்பியத்தில் "சொல்லிய பள்ளி எழுதரு வளியின்" (120) எனப் பயின்றுள்ளது.

**3.159 திசைச்சொல் என்பது செந்தமிழ் நிலத்து வழங்காது கொடுந்தமிழ் நிலங்களில் மட்டும் வழங்கிய திருந்திய சொற்களும் சொல் வழக்குகளும் ஆதலின், திசைச் சொல் தமிழுக்கு அகக்கடன் சொல் (internal loan) எனப்படும்.**

*(எ.டு).* தாய் – தள்ளை (குட்டநாடு)

சிறுகுளம் –கேணி (அருவாநாடு)

ஆ, எருமை –பெற்றம் (தென்பாண்டி நாடு)

கொடுந்தமிழே திரவிட மொழிகளாகப் பிரிந்தன.

அகக் கொடுந்தமிழ் நாடுகள் (12). தென்பாண்டி குட்டம் குடம் முதலியன.

புறக்கொடுந்தமிழ் நாடுகள் (12) சிங்களம், பழந்தீவு, கொல்லம், கூபம், கொங்கணம், துளு, குடகம், கருநடம், கூபம், வடுகு, தெலுங்கு, கலிங்கம்.

**3.160 தன்மை, முன்னிலை, படர்க்கை இடப்பெயர்களன்றி தமிழில் உது–உவன் என்றாற் போன்ற சேய்மை, முன்னிலை சுட்டுகள் முன்னிலை இடத்தில் சற்று தொலைவில் உள்ளவரை அல்லது உள்ளவற்றைச் சுட்டும்.**

*(எ.டு).* உவக்காண், உதுநோக்கு, உதோளி.

## சாரியைகள்

**3.161 தாமாகச் சேராத சொல்லுறுப்புகளையும் சொற்களையும் சார்ந்து இயைக்கும் அசைகளும் சொற்களும் சாரியை எனப்படும்.**

(இயைத்தல்–இசைத்தல். தாமாக ஒலிக்காத எழுத்துகளை ஒலித்தற்கும், ஒலிக்கும் எழுத்துகளை எளிதாய் ஒலித்தற்கும், அவற்றைச் சார்ந்து வரும் ஒலிகளும் சாரியை எனப்படும்).

சாரியை – எழுத்துச்சாரியை, சொற்சாரியை எனச் சாரியை இரு வகையாம்.

**எழுத்துச்சாரியை:**

உயிரெழுத்துகளுள் குறிலுக்குக் காரமும் நெடிலுக்குக் காரமும் சாரியைகளாம். நெடில்களுள் ஐ, ஔ என்னும் இரண்டிற்கும் 'கான்' என்பது சிறப்புச் சாரியை.

ஆய்தத்திற்குச் சாரியை 'ஏனம்' என்பதாம். அது சேரும்போது ஆய்தத்திற்கு முன் அகரமும் பின் ககர மெய்யும் சேர்ந்து அஃகேனம் என்றாகும்.

மெய்யெழுத்திற்கு 'அ' சாரியை. அது மெய்க்குப் பின் வரும். 'க' என்பது சாரியையேற்ற மெய்யெழுத் திற்கும் 'க' என்னும் குறிலுக்கும் பொதுவாயிருப்பதால் மெய்யெழுத்தை விதந்து குறிக்கும்போது ககரமெய் என்பது மரபு.

**3.162 உயிர்மெய்யெழுத்துகளுள், குறிலுக்குக் கரம் சாரியை; நெடிலுக்குத் தனிச் சாரியை இல்லை. அதனால் மெய்யையும், நெடிலையும் பிரித்துக் ககர ஆகாரம் (கா.) ககர ஈகாரம் (கீ) என்ற முறையிற் சொல்லப் பெறும்.**

**சொற்சாரியை:**

1. அ – தட்டாரப் பாட்டம், எனக்கு
2. அத்து – பட்டினத்தான்
3. அற்று – அவற்றை
4. இற்று – பதிற்றுப்பத்து
5. இன் – பதினொன்று
6. அன் – அதனை
7. ஆம் – கல்லாங்கொள்ளி, கானாங்கோழி
8. உ – அவனுக்கு
9. ஐ – வேரினை
10. அம் – பாட்டம்

இவற்றுள் அற்றுச்சாரியைப் புணர்ச்சியும் இற்றுச் சாரியைப் புணர்ச்சியும் இன்று உலக வழக்கு அற்றன.

அவைகள் – என்பது மிகையுறக்கூறும் வழூஉச் சொல்.

அதுகள் – இழிவழக்கு.

ஆதலால் அவற்றை, இவற்றை, எவற்றை என்றே குமரி நாட்டுப் பொதுமக்கள் வழங்கியிருத்தல் வேண்டும். சாரியைகளும் சுட்டடியினவே.

**3.163 தன்மையொருமைப் பெயரினின்று தோன்றியவை தன்மை வினையீறுகள்.**

ஏன் – செய்தேன்.

என் – செய்தென்.

அன் – செய்வன்.

அல் – செய்வல்.

இவற்றில் அன், அல், இரண்டும் எதிர்காலத்தில் மட்டும் வரும்.

செய்து என்னும் வாய்பாட்டு இறந்த கால வினையினின்று தோன்றியவை 'அது' ஈறு.

செய்+அது = (செய்தது) – செய்து–து. து–டு. து–று.

**3.164 எதிர்கால வினைமுற்றினின்று தோன்றியது 'ஏன்' ஈறு.**

செய்யும்+ஏன் = (செய்யுமேன்)–செய்யுவேன்–செய்வேன் – செய்கேன் – செய்கு – கு.

வ.க. போலி. ஒ.நோ. ஆவா–ஆகா, சிவப்பு – சிகப்பு.

**3.165 உகரச்சுட்டடியாய்ப் பிறந்தது (எதிர் காலம்) 'உது' ஈறு.**

உது (எ–டு) செய்யுது, கூறுது, வருது.

**3.166 உது ஈறு துவ்வளவாகக் குறுகி, அடிநீண்ட லகர னகரவீற்று வினை முதனிலைகளோடு கூடும்போது றுகர குகர மாகத் திரியும்.**

(எ–டு.) செல்–செல்+து=சேறு.

கொள்–கோள்+து = கோடு

ஒ.நோ. செல்–சேல்+தல் = சேறல் (தொழிற்பெயர்)

கொள்–கோள்+தல் = கோடல் (தொழிற்பெயர்)

**3.167 தன்மைப் பன்மைப் பெயர்களினின்று தோன்றியவை தன்மைப் பன்மை ஈறுகள்.**

ஏ–எம் (நாம்) ஆம்–அம்; ஆம்–ஓம்.

**3.168 செய்து என்னும் வாய்பாட்டு இறந்த கால வினையினின்று தோன்றியவை. தும், றும் ஈறுகள்.**

து+உம் (பன்மையீறு) – தும்.

தும்–டும். தும்–றும்.

**3.169 எதிர்கால வினைமுற்றினின்று தோன்றியது 'கும்'' ஈறு.**

கு+உம் (பன்மையீறு) – கும்.

**3.170 எதிர்கால வினைமுற்றுகளில் உகரம் இடையில் மிகலும் து ஈறு டு, று எனத் திரிதலும் உண்டு.**

(எ–டு). செய்யுதும்,

து–று. சேறு+உம் (பன்மையீறு) – சேறும்.

து–டு. கோடு+உம் (பன்மையீறு) – கோடும்.

**3.171 ஈ, ஏ, ஐ, ஆய் என்பன முன்னிலைப் பெயரிகளினின்று தோன்றிய ஈறுகளாகும்.**

ஒருமை. (நீ) ஈ–இ.

ஈ. ஏ–ஐ–ஆய்.

(எ–டு.) வந்தீ–வந்தே–வந்தை – வந்தாய்.

ஒ.நோ. சீ–சே–சை (இகழ்ச்சிக் குறிப்பு)

உரை–உராய், குழை–குழாய்.

**3.172 ஈம், ஈர், கள் என்பவை முன்னிலைப் பன்மை ஈறுகளாகும்.**

பன்மை. (நீம்). – ஈம். ஈம்+கள் = ஈங்கள்.

(நீர்) – ஈர்–இர். ஈர்+கள் = ஈர்கள்.

நீம் செய்தீம் என்பது இன்றும் தென்னாட்டு வழக்கு. எப்போது வந்தீங்கள் என்னும் வழக்கத் தையும் நோக்குக.

**3.173 ஈறிலாத ஏவல் தவிர ஏனையன உது+ஈ எனும் ஈறுகளைப் பெறும்.**

ஒருமை. 1. ஈறற்றது. (எ–டு.) செய்.

2. எதிர்கால வினைமுற்றினின்று தோன்றியது.

செய்+உது+ஈ = செய்யுதீ – செய்தி.

"வழிபடுவோரை வல்லறிதீயே'' (புறம். 10:1).

என்னும் புறப்பாட்டில் வரும் அறிதீ என்பதற்கு 'அறிவை' என்று பழைய உரையாசிரியர் பொருள் கூறியிருப்பதையும், அறிதீ – அறிதி = அறிவாய் என்று சாமிநாதையர் அருஞ்சொற்குறிப்பு வரைந்திருப் பதையும் ஊன்றி நோக்குக!.

சென்றீ (சென்று+ஈ) என்பது சென்றுதவுக என்று பொருள்படும் உதவிவினை. நின்மே (நில்லும்+ஏ) என்பது நில்லுங்களேன் என்று பொருள்படும் ஆர்வ வினை. நில்லும் என்பது உகரந்தொகின் நின்ம் என்றாகும். ஒ.நோ. போலும்–போன்ம். ஏன் என்பது எனக் குறைந்து நின்றது. உலக வழக்கிலும் வரட்டே என வழங்குதல் காண்க. நின்மே (நின்+மே) என்னும் தவறான பகுப்பு. அதை ஒருமையெனக் கொள்ளச் செய்திருக்கின்றது. இதையறியாது,

''முன்னிலை முன்னர் ஈயும் ஏயும்

அந்நிலை மரபின் மெய்யூர்ந்து வருமே'' (934).

என நூற்பா யாத்தார் தொல்காப்பியர். அதைப் பின்பற்றினார் பவணந்தியார்.

**3.174 செய்யாய் என்னும் முன்னிலை யொருமை வினை குரல் வேறுபாட்டால் செய் என்று பொருள்படும்.**

***(எ.டு.)*** ஆய் என்பது ஏவவொருமையீறென்றே கூறாது.

''செய்யாய் என்னும் முன்னிலை வினைச்சொல்

செய்யென் கிளவி ஆகிடன் உடைத்தே'' (933).

என்றே தொல்காப்பியர் கூறுவதால் அதன் அருகிய வழக்குப் புலனாகும். 'ஆய்' என்பது முன்னிலையொருமை யீறேயாயினும், ஏவலொருமை வினை அதை ஏற்க வேண்டும் என்னும் யாப்புற வில்லை என அறிதல் வேண்டும்.

**3.175 ஊம், உம், கள் என்பவை. முன் னிலைப் பன்மைப் பெயரிலிருந்து தோன்றி யவை.**

ஊம்–உம் (எ.டு) – செய்யும்

உம்+கள் (எ.டு) – செய்யுங்கள்

உம்+நீம்+ஈம்+இம்–இன். (எ.டு.) = செய்யுமின், செய்ம்முன்.

மீன்+கள் (எ.டு.) – செய்ம்மின்கள்.

மின் என்னும் ஈற்றின் மகரம் நெறி (விதி) முதல் என அறிக.

**3.176 கள் என்பது படர்க்கை யீறேனும் இரட்டைப் பன்மை குறித்து மூவிடத்தும் வழுவமைதியாக வரும்.**

*(எ.டு.)* நாங்கள், நீங்கள், அவர்கள்.

**3.177 செய்யுமின் என்பதிலுள்ள உம்மின் (உம்+இன்) என்னும் இரட்டைப் பன்மை, செய்யுங்கள் என்பதிலுள்ள உங்கள் (உம்+கள்) என்பது போல வரும்.**

*(எ.டு.)* செய். செய்யும்+இன்

செய்ம்மின் என்பதன் இரட்டைப் பன்மைப் பொருள் மறைந்த பின், கள்ளீறு பிறவற்றொடு சேர்ந்ததுபோல் அதனோடும் சேர்ந்தது. இப்பன்மையைப் பெண்–பெண்டாட்டி என்பது போன்ற மீமிசைச் சொல்லாகக் கொள்ளல் வேண்டும்.

**3.178 எதிர்கால வினைமுற்று 'த்' எழுத்துப் பேறும் 'ஈர்' எனும் மிகை ஈறும் பெறும்.**

செய்+உது+ஈர் = செய்யுதீர் – செய்யுதிர் – செய்திர்

**3.179 தொழிற்பெயரீறுகள் வியங்கோள் ஈறுகளாக வரும்.**

அல்–(எ.டு.) செயல்.

"ஒல்லும் வகையான் அறவினை யோவாதே
செல்லும் வாயெல்லாம் செயல்" குறள் (33)

தல் (எ.டு.) செய்தல்.

"இயற்கைப் பொருளை இற்றெனக் கிளத்தல்" (தொல். 502).

**3.180 அகரவீற்று வினையெச்ச ஈறு வியங் கோள் ஈறாக வரும்.**

செய்ய – அ (எ.டு.) வரப்புயர!

நடக்க–க. (எ.டு.) வாழ்க!

**3.181 'செயல்' வாய்பாட்டு ஈயல் என்னும் துணைவினை, தொழிற்பெயர் வியங்கோள் ஈறாக வரும்.**

*(எ.டு.)* ஈயல் – ஈயர்–இயர்–இய–இ.

"நிலீஇயர் அத்தை நீயே யொன்றே" (புறம். 375)

"நடுக்கின்றி நிலீயரோ அத்தை யடுக்கத்து" (புறம். 2)

"உள்ளேன் வாழியர் யானெனப் பன்மாண்" (புறம். 365)

"எங்கோ வாழிய குடுமி தங்கோ" (புறம்.9).

"தென்றிசை யாண்ட தென்னவன் வாழி" (சிலப்.11.22).

**3.182 அகரவீற்று வினையெச்சத்தோடு 'உம்' சேர்ந்து வியங்கோள் ஈறாகும்.**

*(எ.டு.)* இக்கடிதம் கண்டவுடன் புறப்பட்டு வரவும். (திருமுக வழக்கு).

இன்னும் ஒரு கிழமைக்குள் சரக்குகளை அனுப்பி வைக்கவும் (வணிக வழக்கு).

இவ்வழக்கு இலக்கிய நடைக்கு ஏற்காது.

**3.183 பிறவினையீறுகள் தன் வினையைப் பிற வினையாக்கும்.**

1. முதனிலை வலித்தல்.

*(எ.டு.)* நீங்கு–நீக்கு, பொருந்து–பொருத்து.

2. இடைநிலை வலித்தல்

*(எ.டு.)* தேய்ந்தது–தேய்த்தது.
தீர்ந்தான்–தீர்த்தான்.

3. முதனிலை வலியிரட்டல்

*(எ.டு.)* போகு–போக்கு
தேறு–தேற்று.

4. ஈறுபெறுதல்

*(எ.டு.)* ஈ–வி–வி–பி.

செய்ய+ஈ=செய்யவீ–செய்வீ–செய்வி.

நடப்ப+ஈ=நடப்பவீ–நடப்பீ–நடப்பி

செய்யவீத்தான் =செய்யவுதவினான், செய்யவிட்டான், செய்யச் செய்தான்.

"ஈத்துவக்கும் இன்பம்" (குறள். 228).

"எமக்கீத்தனையே" (புறம்.911).

என ஈதல் வினை வலித்தும் இறந்த காலம் காட்டுதல் காண்க.

வி, பி. பிறவினையீறுகளாயினபின், வினைகள் அவற்றை ஏற்ற பெற்றி ஒன்றும் பலவும் ஏற்றன.

செய்விப்பி, நடத்துவி–இருமடிப் பிறவினை.

செய்விப்பிப்பி, நடத்துவிப்பி–மும்மடிப் பிறவினை.

இவை செய்விப்பித்தான், செய்விப்பிப்பித்தான் என நிகழ்ச்சி வினையாம். எல்லா வினைகளும் முதனிலையளவில் ஏவல் வடிவாயிருந்தலின், பிறவினை முதனிலைகளை ஏவல் வினையென்று விதந்து கூற வேண்டியதில்லை.

ஒத்து–அத்து–து.

ஒத்து–ஒட்டு–அட்டு.

ஒத்துதல்=பொருந்துதல்

ஒற்றுதல், இசைதல்.

ஒ.நோ. கொம்பு–கம்பு, மொண்டை–மண்டை. மொத்திகை–மத்திகை.

வாழ+அத்து = (வாழத்து) வாழ்த்து–வழுத்து.

தாழ+அத்து=(தாழத்து) – தாழ்த்து.

ஒட்டு–அட்டு. வர+அட்டு= வரட்டு.

'அத்து' என்னும் துணைவினை துவ்வீறாகக் குறைந்த பின் அதன் திரிபாகச் சு,டு,று ஈறுகள் தோன்றின.

*(எ.டு.)* பாய்+து=பாய்த்து–பாய்ச்சு.

நீள்+து=நீட்டு, காண்+து = காட்டு.

நால்+து = நாற்று. தின்+து= தீற்று.

ஒரு சில வினைகள் உவு ஈறு பெற்றுப் பிறவினையாகின்றன.

*(எ.டு.)* எழு–எழுவு. கொள்–கொளுவு.

எழுவுதல் = எழச் செய்தல், ஓசையெழுப்புதல்

கொளுவுதல் = கொள்ளச் செய்தல்.

இவ் உவு ஈறு ஒவ்வு என்னும் துணை வினையின் சிதைவாகும். ஒவ்வுதல் = ஒத்தல், பொருந்துதல், இசைதல்.

எழ+ஒவ்வு=எழுவு.

கொள+ஒவ்வு=கொளுவு

உகரத்தின் முன் அகரம் தொக்கது.

**3.184 தன் வினைகள் துணைவினை பெற்றுப் பிறவினையாகும்.**

*(எ.டு.)* ஊறவை, காயப்போடு, நிற்பாட்டு, மறக்கடி, எழச்செய், வரப்பண்ணு.

**3.185 இக்காலத்தில் கட்டு, மண்டு முதலிய குற்றுகரவீற்று வினைச்சொற்கள் கட்டி, மண்டி என இகரவீறேற்று இறந்த கால வினையெச்சம் ஆவது போல், முற்காலத்தில் இரு, உடு முதலிய முற்றுகர வீற்று வினைச் சொற்களும் இகர வீறேற்று, இரி, உடி என இறந்த கால வினையெச்சமானதாலும் இவ்வடிவங்களை அளபெடைப் படுத்தியதாலும் பிறவினை வடிவுக்காக அளபெடை கொள்வன ஆயின.**

*(எ.டு.)* இரி–இரீஇ=இருத்தி

உடி–உடீஇ = உடுத்தி

கொளி–கொளீஇ = கொளுத்தி

கொளி (கொள்ளி) என்பதை அள்ளி, எள்ளி, தள்ளி, துள்ளி என்பன போல் கொள்ள வேண்டும்.

**3.186 அகரவீற்று வினையெச்சம் துணை வினை பெற்று செயப்பாட்டு வினைவடிவம் கொள்ளும்.**

*(எ.டு.)* எழுதப்படு–எழுதப்பட்டது.

வாழ்த்தப் பெறு – வாழ்த்தப் பெற்றான்.

**3.187 பெறு என்பது பெரும்பாலும் பேறு பற்றியும் படு என்பது பெரும்பாலும் பாடு பற்றியும் வரும்.**

*(எ.டு.)* பாடு=கேடு, செய்யப் படுகை.

பரிசளிக்கப் பெற்றான், உயர்த்தப் பெற்றான், கொல்லப்பட்டான், தள்ளப்பட்டான், உண்ணப்பட்டது.

**3.188 தொழிற்பெயர் துணை வினை பெற்றுச் செயப்பாட்டு வினை வடிவம் கொள்ளும்.**

*(எ.டு.)* கொலையுண்டான், கொலைப்பட்டான், குத்துபட்டுச் செத்தான்.

**3.189 வினை முதனிலை துணை வினை பெற்றுச் செயப்பாட்டு வினை வடிவம் கொள்ளும்.**

*(எ.டு.)* கொல்லுண்டான், வெட்டுண்டான்.

இவற்றின் வினை முதனிலையை முதனிலைத் தொழிற் பெயராகவும் கொள்ளலாம்.

**3.190 செயப்பாட்டு வினை பெருவழக்கன்று என்பதால் பெரும்பாலும் செயப்பாட்டு வினைப் பொருள் செய்வினை வடிவில் கூறப்படும்.**

*(எ.டு.)* புலியடித்துச் செத்தான்.

மறைமலையடிகள் எழுதிய நூல்.

தச்சன் செய்த பெட்டி.

**3.191 அ, இ, உம் ஈறுகள் தெரிநிலைப் பெயரெச்ச ஈறுகளாக வரும்.**

*(எ.டு.)* அ–இ. கா. ஈறு. (எ–டு). செய்த (செய்து+அ).

அ–நி.கா. ஈறு (எ.டு.) செய்கின்ற (செய்கின்று +அ–செய்கிற)

உம்–எ.கா. ஈறு. (எ.டு.) செய்யும் (செய்+உம்)

உ–உம். (முன்மைச் சுட்டடிச் சொல்).

**3.192 அகரம் குறிப்புப் பெயரெச்ச ஈறாக வரும்.**

அ. (முக்காலப்பொது) (எ–டு.) நல்ல.

இறந்த கால நிகழ்காலக் குறிப்புப் பெயரெச்ச வீறாகிய 'அ' அந்த என்று பொருள்படும் சேய்மைச் சுட்டாகும். செய்து, செய்கின்று என்பன முற்காலத்தில் முற்றுச் சொற்களாயும் இருதிணையைம்பால் மூவிடப் பொதுவாயும் இருந்ததினால் வினையாலணையும் பெயராகி,

செய்த என்பது
செய்தேனாகிய அந்த
செய்தேமாகிய அந்த
செய்தாயாகிய அந்த
செய்தீராகிய அந்த
செய்தனாகிய அந்த
செய்தாயாகிய அந்த
செய்தாராகிய அந்த
செய்ததாகிய அந்த
செய்தனவாகிய அந்த

என்று தொடக்கத்தில் பொருள்பட்டிருக்கும்.

**3.193 செய்யும் என்னும் பெயரெச்சம் 6–ஆம் வேற்றுமைப் பெயர் போல முன் பின்னாக மாறிய செய்யும் என்னும் எதிர் கால வினைமுற்றாயிருக்கலாம்.**

*(எ.டு.)*

| <u>முற்று</u> | | <u>எச்சம்</u> |
|---|---|---|
| நான் செய்யும் | – | செய்யும் நான் |
| நாம் செய்யும் | – | செய்யும் நாம் |
| நீ செய்யும் | – | செய்யும் நீ |
| நீர் செய்யும் | – | செய்யும் நீர் |
| அவன் செய்யும் | – | செய்யும் அவன் |
| அவள் செய்யும் | – | செய்யும் அவள் |
| அவர் செய்யும் | – | செய்யும் அவர் |
| அது செய்யும் | – | செய்யும் அது |
| அவை செய்யும் | – | செய்யும் அவை |

செய்யும் என்னும் முற்று முதற்காலத்தில் மலையாளத்திற் போன்றே முந்நாட்டுத் தமிழிலும் இருதிணையைம்பால் மூவிடப் பொதுவாயிருந்த தென்பதை நினைவிற் கொள்ள வேண்டும்.

**3.194 து, என, பு, ஆ, ஊ, இ, இய் என்பன இறந்த காலத் தெரிநிலை வினையெச்ச ஈறுகளாகும்.**

*(எ.டு.)*

| | | |
|---|---|---|
| அது–து | – | செய்து |
| து+என | – | செய்தென (செ.வ.) |
| பு | – | செய்பு (செ.வ.) |
| ஆ | – | செய்யா (செ.வ.) |
| ஊ | – | செய்யூ (செ.வ.) |
| இ | – | ஓடி |

இ–ய் – போய்

**கு–று என்பன துவ்வீற்றின் புணர்ச்சித் திரிபு.**

செய்தென = செய்தானென்று சொல்லும்படி, செய்த பின், செய்ததினால்.

இப்பொருளை ஏனைப் பாலெண்ணிடங்கட்கும் ஒட்டுக. 'இ' என்பது இகரச்சுட்டு. அது அண்மை குறியாது சுட்டளவாய் நின்றது. வலது, பெரிது என்பவற்றில் அது, இது என்பன சேய்மை யண்மை குறியாது நிற்றல் காண்க.

அது, இ என்பன முற்காலத்தில் வினை முதலீறாய் இருந்திருக்கலாம்.

(ஒ.நோ.)

| <u>இ.கா.வி.எ.</u> | <u>வினை முதற்பெயர்</u> |
|---|---|
| ஓடி | ஓடி–ஓடினவன் |
| நன்று=நன்றாய் | நன்று=நல்லது |

பு, ஆ, ஊ என்பவற்றின் மூலமும் பொருளும் முந்துதமிழ்ப் பாங்குகள் எனலாம். இவை செய்து, ஓடி என்பவற்றிற்குப் பிற்பட்டவையாகும்.

ஆ என்பது வடதிரவிட வழிப்பட்ட இந்தியில் இறந்த கால வினைமுற்றீறாகவும் வினையெச்ச வீறாகவும் வழங்குகின்றது. செய்து என்பது முதற் காலத்தில் வினைமுற்றாகவும் இருந்ததினால் ஆவீறும் தமிழில் அங்ஙனம் இருந்திருக்கலாம்.

### 3.195 செய்+ஊ+ஊம் வடிவின் திரிபுகளே காலப்போக்கில் நிகழ்கால வினையெச்ச ஈறுகளாயின.

செய்ய என்னும் வாய்பாட்டுச் சொல்லே நிகழ்கால வினையெச்சமாகப் பண்டைத் தமிழிலக்கண நூல்கள் எல்லாவற்றிலும் தவறாகக் குறிக்கப்பட்டுள்ளது. அது ஆங்கிலத்தில் (infinitive mood) என்று சொல்லப் பெறும் எதிர்கால வினையெச்சமேயன்றி வேறன்று.

உரையும் இலக்கணமும் உட்பட பண்டைத் தமிழிலக்கியமெல்லாம் பொதுவாயினும் சிறப்பாயினும், செய்யுள் வடிவிலேயே இருந்தன. அதனால் பண்டைத் தமிழிலக்கணங்களும் செய்யுள் நடைக்கே எழுதப்பெற்றன. பல சொற்களும் சொல்வடிவுகளும் செய்யுள் நடையில் இடம் பெறுவதில்லை. முன்னூல் நடையையே பின்னூல்களும் மரபாகப் போற்றி வந்தன.

ஆரியர் தென்னாடு வந்து தமிழ் கற்றுத் தமிழிலக்கண நூலாசிரியருமானதால், தம் அறியாமையால் கால்டுவெலாரைப் போன்றே பல தவறுகள் செய்துள்ளனர்.

'கின்று' என்னும் நிகழ்கால வடிவம் காலத்தால் பிற்பட்டது. செய்யும் என்னும் எதிர்கால வினையையே நிகழ்காலத்திற்குப் புலவர் பயன்படுத்தி வந்திருக்கின்றனர். ஆயினும் பண்டை நிகழ்கால வினையின் எஞ்சு குறிகள், இலக்கியத்திலும் இலக்கணத்திலும் தொடர்ந்து இருந்தே வந்திருக்கின்றன.

'கின்று' இடைநிலை கொண்டது போன்ற வினையா லணையும் பெயரின் பாங்குகள், தொல்காப்பியத்தில் ஆங்காங்குத் தனிப்பட வருவதுடன், ஒரே நூற்பாவில் பல ஒருங்கு கூடியும் வருகின்றன.

*(எ.டு.)*

"புணரியல் நிலையிடைப் பொருணிலைக் குதநவும்
வினைசெயல் மருங்கில் காலமொடு வருநவும்
வேற்றுமைப் பொருள் வயின் உருபாகுநவும்
அசைநிலைக் கிளவி யாகி வருநவும்
இசைநிறைக் கிளவி யாகி வருநவும்
தத்தம் குறிப்பிற் பொருள்செய் குநவும்
ஒப்பில் வழியாற் பொருள் செய்குநவும்"

(தொல்.735)

உதந என்பது, உதவுந என்பதன் தொகுத்தல்.

செய்கு+உந்து – செய்குந்து+ந – செய்குந.

வருகு+உந்து–வருகுந்து+ந–வருகுந–வருந– எனத் திரிபுற்றமை தெளிவாகிறது.

### 3.196 செய்வாய்எனின் எனும் தொடரே செயின் வாய்பாடாகக் குறுகியது.

செய்யின் அல்லது செய்தால் என்னும் வாய்பாட்டெச்சம் நிலைப்பாட்டு வினையெச்சமாதலின் (subjunctive or conditional mood) சரியான எதிர்கால வினையெச்சம் ஆகாது. இலக்கண முறைப்பட்ட முக்கால வினையெச்ச வாய்பாடு கீழ்க்காணும் முறையிலேயே இருத்தல் கூடும்.

| இ.கா. | நி.கா. | எ.கா. |
|---|---|---|
| செய்து | செய்துகொண்டு | செய்ய |
| (past participle) | (present participle) | (future participle or infinitive mood) |

செய்துகொண்டு என்று தமிழிலும், சேசிக்கொனி என்று தெலுங்கிலும் நிகழ்கால வினையெச்சம் உலக வழக்கில் தொன்றுதொட்டு வழங்கி வருகின்றது. செய்துகொண்டு என்னும் சொல்லேயன்றி, செய்ய என்னும் சொல் நிகழ்காலத்தை உணர்த்தாது செய்துகொண்டு இருக்கிறான், செய்ய இருக்கிறான் என்னும் இரு தொடரின் பொருளையும் ஒப்பு நோக்கி உண்மை தெளிக.

செய்ய என்னும் சொல் இயல்பாக எதிர்காலத் திற்கே உரியதேனும், முன்னிகழ்ச்சி, ஒருங்கு நிகழ்ச்சி, பின்னிகழ்ச்சி என்னும் முக்கால நிலை யையும் உணர்த்துமாறு ஆளப் பெறும்.

***(எ.டு.)***

மழைபெய்யக் குளம் நிறைந்தது – முன்னிகழ்ச்சி

மணியடிக்கக் கழுதை கத்திற்று – ஒருங்குநிகழ்ச்சி

பயிர்விளைய மழைபெய்தது – பின்னிகழ்ச்சி (எ.கா.)

இவற்றுள் முன்னிகழ்ச்சி பின்வருந் தொடராலும், ஒருங்கு நிகழ்ச்சி ஆட்சியினாலுமே அறியப்படும். செய்து என்னும் சொற்போல், செய்ய என்னும் சொல் தனி நின்று இறந்த காலத்தையுணர்த்தாது. அங்ஙனமே, செய்து கொண்டு என்னும் சொற்போல் அது தனி நின்று நிகழ்காலத்தையுணர்த்தாது. மேலும், நிகழ்கால நிகழ்ச்சி வேறு; ஒருங்கு நிகழ்ச்சி வேறு. ஆயினும் நீரில் ஆழ்பவன் சிறுகோலையும் பற்றுவது போல, இலக்கணியர் ஒருங்கு நிகழ்ச்சியைப் பற்றுக் கோடாகக் கொண்டு, 'செய்ய' என்னும் சொல்லை நிகழ்கால வினையெச்சமாகக் காட்டியுள் ளனர். ஆயின், அதற்கு நிகழ்கால முணர்த்தும் ஆற்றலின்மை அறிக.

**3.197 மூவகைத் தொடர்ச்சிக் காலங்கள் முறையே, 7 ஆம் வேற்றுமைத் தொழிற் பெயராலும் இறந்தகால வினையெச்சத் தாலும் முற்றெச்சத்தாலுமே உணர்த்தப் படும்.**

***(எ.டு).***

"தட்டுப் புடைக்கண் வந்தான்" (தொல்.சொல்.77. இளம்.உரை) – இறந்தகாலத் தொடர்ச்சி.

"கண்கவரோவியங் கண்டு நிற்குநரும்" (மணிமே.3:131) – நிகழ்காலத் தொடர்ச்சி.

"நீர் வார்த்துக் கால் கழுவா நின்று" (நள.232).

"ஆடினிர் பாடினிர் செலினே" (புறம்.109) – எதிர்காலத் தொடர்ச்சி.

செய்துகொண்டு என்னும் நிகழ்கால வினை யெச்சம் (present participle) உலக வழக்கில் இருக்கவும், அதைப் பயன்படுத்தாது இங்ஙனம் இடர்ப்படுவது, கனியிருக்கப் பூம்பிஞ்சைக் கவர்வதொப்பதாகும்.

பண்டையிலக்கியத்தில் இல்லாத சொல்லெல்லாம் பிற்காலத்தவையெனக் கொள்வது பெருந்தவறாகும். பண்டை நூல்கள் இற்றை அகரமுதலிகள் அல்ல. பொதுமக்கள் பழஞ்சொற்றொகுதி தலைக்கழக காலத் தினின்று சற்றும் மாறாது இருந்து வந்திருக்கின்றது. ஆரியர் வருகைக்கு முந்திய தமிழ்நூல் அனைத்தும் இறந்துபோயின.

செய்து கொண்டு என்னும் சொல், தமிழின் அடிப்படைச் சொற்களுள் ஒன்றாயும், நாட்டுப்புற மக்கள் பேச்சில் ஆழவேரூன்றியதாயும், தமிழ்நாடெங் கணும் இன்றும் 'செய்து கிட்டு', 'செய்துகிண்டு', 'செய்துகினு' எனப் பல்வேறு கொச்சை வடிவில் வழங்குவதாயும் தமிழினின்று நீக்க முடியாததாயும் உள்ளது.

காடைக்கண்ணி, குதிரைவாலி என்னும் சிறு தவசங்கள் தொன்றுதொட்டுப் பாண்டி நாட்டில் விளைந்துவரினும் அவை இன்றுள்ள பண்டையிலக் கியத்தில் இடம்பெறவேயில்லை.

இங்ஙனமே 'செய்துகொண்டு' என்னும் நிகழ்கால வினையெச்சமும் என்க.

ஆங்கில நிகழ்கால வினையெச்சத்தின் ஈறாகிய 'ing' என்பதன் தொல்வடிவாகச் சொல்லப்பெறும் 'inde' என்பதும் 'செய்திண்டு' என்னும் கொச்சை வடிவீற்றை ஒத்திருப்பது பெரிதும் கவனிக்கத் தக்கதாம்.

செய்ய என்னும் வாய்பாட்டெச்சம் நிகழ்காலச் சொல்லன்மையாலேயே அகரவீற்று வினையெச்சம் என இதுகாறும் குறிக்கப்பட்டது. இனி இஃது எதிர்கால வினையெச்சம் என்றே குறிக்கப் பெறும்.

**3.198 அகரம் எதிர்கால வினையெச்ச வீறு ஆகும்.**

**அ** *(எ–டு)* செய்ய, கொடுக்க, இறப்ப.

செய்ய என்பது செய்யல் என்னும் அல்லீற்றுத் தொழிற்பெயரின் ஈறு கேடாம்.

செய்யல் (செயல்) வேண்டும் = செய்ய வேண்டும்.

கொடுக்கல் வேண்டும் = கொடுக்க வேண்டும்.

"ஒல்வழி ஒற்றிடை மிகுதல் வேண்டும்" (114).

"ஈறாககரமுனைக் கெடுதல் வேண்டும்" (115)

"வேற்றுமை மருங்கிற் போற்றல் வேண்டும்" (156).

"மெய்ந்நிலை பொதுச்சொல் கிளத்தல் வேண்டும்" (725).

என்னும் தொல்காப்பிய அடிகளெல்லாம் அல் அல்லது தல்லீற்றுத் தொழிற்பெயர் செய்ய என்னும் நிகழ்கால வினையெச்சப் பொருள்படுதல் காண்க.

தொழிற்பெயரீறுகள் பற்பலவேனும், அல்லீற்றுத் தொழிற்பெயரே ஈறுகெட்டு அகரவீற்றைக் கொண்டிருக்கும்.

ஆதலால் அதனின்றே எதிர்கால வினையெச்ச ஈறு பிறந்ததாகும். செய்தல் என்பது தல்லீற்றது; அல்லீற்றதன்று.

இறக்க, சிறக்க, விழிக்க, கழிக்க முதலியவற்றை உயர்நடையாளர் இன்னோசை கருதி இறப்ப, சிறப்ப, விழிப்ப, கழிப்ப எனத் திரிப்பர்.

**3.199 செய்ய என்பது நோக்கங் குறித்த சொல்லாதலின் செய்யுமாறு, செய்யும்படி, செய்தற்கு, செய்தற்காக, செய்தற்கென்று, செய்ய வேண்டுமென்று, செய்தற் பொருட்டு, செய்ய வேண்டி, செய்வான் வேண்டி, செய்யும் நோக்கத்துடன் என்று இத்தொடக்கத்துச் சொற்றொடர்களும் எதிர்கால வினையெச்சப் பொருளில் வரும்.**

*(எ.டு).*

| | | |
|---|---|---|
| இயர் | – | செய்யியர் |
| இயர்–இய | – | செய்யிய |
| அல்+கு | – | செயற்கு (செயல்+கு) |
| தல்+கு | – | செய்தற்கு (செய்தல்+கு) |
| உம்+என | – | செய்யும்+என – செய்யுமென |
| | | செய்ம்மென–செய்ம்மன. |
| வான் | – | செய்வான் (வி.மு.) செய்வான் (வி.எ.) |
| பான் | – | உண்பான் (வி.மு.) உண்பான் (வி.எ.) |
| மார் | – | செய்மார் (வி.மு.) செய்மார் (வி.எ.) |
| பாக்கு | – | உண்பாக்கு, செய்பாக்கு (வி.எ.) |

செய்ம்மன என்பதைச் செய்தென என்பதனோடு ஒப்பு நோக்குக. செய்ம்மன=செய்யும் என்று சொல்லும்படி.

'ஈ' என்பது ஒரு துணைவினை. ஈயல்=ஈதல், ஈயல் வேண்டும். ஈய வேண்டும்.

ஈயல்–ஈயர். ல–ர, போலி.

ஈயர்–இயர்–இய. இது உதவி வினையீறு; பின்னர்ப் பொதுவினை ஈறாயிற்று.

வான், பான், மான், மார் என்பன முற்றெச்ச வீறுகளே. இவற்றுள் முதலிரண்டு மட்டும் இருதிணை ஐம்பால் மூவிடப் பொதுவாக்கப்பட்டன.

பாக்கு=பகுதி. பகு–பாகு–பாக்கு–பாக்கம், செய் பாக்கு=செய்யும் பகுதியில், செய்யுமாறு, வந்தால் என்பதை வரும் பக்கத்தில் (வரும் பட்சத்தில்) என்று கூறும் வழக்கை இதனொடு ஒப்பிடுக. ( பகு–பக்கம்.47).

**3.200 ஆல், இல், கால என்பன நிலைப் பாட்டு வினையெச்ச ஈறுகள் ஆகும்.**

*(எ.டு).*

| | | |
|---|---|---|
| ஆல் | – | செய்தால் (செய்து+ஆல்) |
| இல் | – | வரில் |
| இல்–இன் | – | செய்யின்–செயின் |
| கால் | – | செய்தக்கால் |

இல் என்பது இடப்பொருள் அல்லது கருவிப் பொருளுருபு. வரில் என்பது வருகையில் அல்லது

வருகையினால் என்று பொருள்படுவது. ஆதலால் அது வினைமுதனிலையெல்லாம் தொழிற்பெயராய் ஆளப்பட்ட காலத்துத் தோன்றியதாகும். வருகையில்–வருகையின் பேரில்.

ல்–ன். வரில் > வரின்

ஆல் என்பது இல் என்பதன் திரிபு. காலத்திலே என்பதைக் காத்தாலே என்று கூறும் வழக்கை நோக்குக.

'வந்தது' என்னும் வினைவடிவு தொழிற்பெயராயும் வழங்குவதுபோல் 'செய்து' என்னும் பண்டை வினைமுற்று வடிவும் தொழிற்பெயராயும் வழங்கியிருத்தல் கூடும். வந்தால்=வந்ததினால், வருகையால், ஓடியால்= ஓடினால் = ஓடினதினால். போயியால்–போயினால்= போனதினால்.

கால் என்பது காலத்தைக் குறிக்கும் சொல்லே; ஆயின், வலிமிக்குப் புணரும். செய்தகால்=செய்த காலம். செய்தக்கால் = செய்தால். கண், கடை என்பனவும் எதிர்கால வினையெச்ச வீறாய் வரும். (எ.டு.) செய்தல்கண், செய்தக்கடை, கண், கடை என்பன இடப்பெயர்கள்.

துவ்வீறு புணர்ச்சியில் கு–று வாகத் திரியுமாதலால், செய்து என்பது உண்டு, சென்று என்பவற்றையும்; செய்தென என்பது உண்டென, சென்றென என்பவற்றையும் செய்தால் என்பது உண்டால், சென்றால் என்பவற்றையும்; செய்தக்கால் என்பது உண்டக்கால், சென்றக்கால் என்பவற்றையும் தழுவும்.

**3.201 அ, து, று, துய், ஆக என்பவை குறிப்பு வினையெச்ச ஈறுகள் ஆகும்.**

*(எ.டு).*

| | | |
|---|---|---|
| அ | – | வலிய, செல்ல |
| து | – | சிறிது, எளிது |
| து–று | – | நன்று |
| ஆய் | – | நன்றாய், அழகாய் |
| ஆக | – | விரைவாக |

**3.202 இல், இல்லை என்பன எதிர்மறை வினைமுற்றுககளில் ஆளப்பெறும்**

| இ.கா | நி.கா. | எ.கா. |
|---|---|---|
| செய்திலன் | செய்கின்றிலன் | செய்கிலன்=இல் (இடைநிலை) |
| செய்ததில் (லை) | செய்கின்றதில் (லை) | செய்வதில் (லை) இல்(லை) ஈறு |
| செய்யவில்லை | செய்யவில்லை | செய்யவில்லை இல்லை (ஈறு) |

இல், இல்லை என்னும் இரண்டும் இயல்பாக எதிர்மறைப் பொருள் கொண்ட துணைவினைகளே. இவற்றை ஏனைப் பாலிடங்களுக்கும் ஒட்டுக.

இல், இல்லை என்பன ஈறாய் வரின் இருதிணை ஐம்பால் மூவிடப் பொதுவாம். செய்யவில்லை என்னும் எதிர்மறை முற்றும், இங்ஙனம் பொதுவாம்.

**3.203 எதிர்கால வினைமுற்று எதிர்மறையிடை நிலையும் ஈறும் பெறாது, பாலீற்றின் அடி நீட்சியினாலேயே எதிர்மறை குறிப்பதுமுண்டு. ஈற்று நீட்சியில் உயிரளபெடைக் குறுக்கமாய் 'ஆ' எதிர்மறை இடைநிலை உள்ளொடுங்கும்.**

*(எ.டு).*

| தன்மை | முன்னிலை | படர்க்கை |
|---|---|---|
| செய்யேன் | செய்யாய் | செய்யான் |
| செய்யேம் | செய்யீர் | செய்யாள் |
| | | செய்யார் |
| | | செய்யாது |
| | | செய்யா |

பிற தன்மைப் பன்மை யெதிர்மறை வினைகள் செய்யாம், செய்யோம் என்பன.

'மாட்டு' என்னும் துணைவினையும் இங்ஙனமே புடைபெயரும்.

இவற்றில் காலவிடைநிலையின்மை, வினையின் மையையும் அதனால் எதிர்மறையையும் காட்டுவதாகக் கருதுவார் கால்டுவெலார்.

**3.204 அல், ஆல், அரிது, ஆது என்பன எதிர்மறை ஏவல் வினையீறுகள் ஆகும்.**

*(எ.டு).*

<u>ஒருமை:</u> அல் – செய்யல், செயல்

அல்–ஆல் – அழால்

ஆல்–ஏல் – செய்யேல்

அரிது–ஆது+இ – செய்யாதி

அரிது–ஆது+ஏ – செய்யாதே

<u>பன்மை:</u> அல்+மின் – செய்யன்மின்

ஆது+இர் – செய்யாதிர்

ஆது+ஈர் – செய்யாதீர்

ஆது+ஈர்+கள் – செய்யாதீர்கள்

ஆது+ஏ+உம் – செய்யாதேயும்

ஆது+ஏ+உம்+கள் – செய்யாதேயுங்கள்

**3.205 அல் என்னும் ஈறு அன்மை குறிக்கும். அல் என்னுஞ் சொல்லே அரிது என்னும் குறிப்பு வினையாகி அருமைப் பொரு ளிலும் இயலாமைப் பொருளிலும் வரும்.**

*(எ.டு).*

காரோதிமத்தை காண்பது அரிது – அருமை.

மாந்தன் பறப்பது அரிது– இயலாமை.

இயலாமைப் பொருளுணர்த்தும் 'கூடாது' என்னும் சொல் விலக்குப் பொருளில் வருவது போன்றே, அரிது என்னும் சொல்லும் வரும். அரிது என்பது மலையாளத்தில் அருது எனத் திரியும்.

மழையத்துப் போகருதே, வெயிலத்துப் போகருதே என்பன மழையிற் போகாதே, வெயிலில் போகாதே என்று பொருள் பொருள்படும் மலையாள (சேர) நாட்டு வழக்காம்.

''ஆர்க்கானும் கொடுக்கும்போழ் அருதென்று விலக்கருது'' என்னும் மலையாளப் பழமொழியில் 'அருதென்று விலக்கருது'' என்னும் தொடர், 'கூடா தென்று தடுக்கக் கூடாது என்று பொருள் படுதல் காண்க.

கூடாது என்னும் சொற்போன்றே அருது என்பதும் மலையாளத்தில் தனி வினையாக வரும்.

(எ.டு.) 'ஈ ஆள்க்கு வேறே பணி அருது' =

இந்த ஆளுக்கு வேறு வேலை கூடாது.

போகருதே என்னும் மலையாள வினையொடு போகாதே என்னும் தமிழ்வினையை ஒப்பு நோக்கும்போது 'அருது' என்பது 'ஆது' என மருவியதாகத் தெரிகின்றது. இதினின்று

செய்யரியேன் – செய்யரியேம்

செய்யரியாய் – செய்யரியீர்

செய்யரியான் – செய்யரியாள்

செய்யரியார் – செய்யரிது செய்யரிய

என்னும் வடிவங்களே முறையே

செய்யேன், செய்யேம், செய்யாய், செய்யீர், செய்யான், செய்யாள், செய்யார், செய்யாது, செய்யா எனத் தொக்கன என எண்ண இடந்தருகின்றது. அரிது என்பதன் மூலமான அருமைச் சொற்கு இன்மைப் பொருளுண்மையும் இயலாமைப் பொருளுணர்த்த வேண்டிய செய்யக்கூடாது என்னும் சொல் செய்யாதே என்று பொருள்படுவதும் இவ்வெண்ணத்தை வலியுறுத்துகின்றன.

**3.206 'மார்' என்பது படர்க்கையெதிர்கால ஏவற் பன்மை யீறு ஆகும்.**

*(எ.டு).*

அல்+மார் – செய்யன்மார்

''பீடின் மன்னரைப் பாடன்மார் எமரே'' (புறம். 375).

''நோய்மலி வருத்தங் காணன்மார் எமரே'' (நற்.64).

மார் என்பது செய்மார் என்னும் பலர்பால் எதிர்கால வினை முற்றீறாம்.

**3.207 'அல்' எதிர்மறை வியங்கோள் வினையீறு ஆகும்.**

*(எ.டு).* அல் – எனல் = என்னற்க.

''பயனில் சொல் பாராட்டுவானை மகனெனல்'' (குறள்.196).

அல்+க – செய்யற்க.

**3.208 'ஆது' எதிர்மறைப் பெயரெச்ச ஈறு.**

*(எ.டு).* <u>தெரிநிலை:</u> ஆது+அ – செய்யாத

செய்யாத – செய்யா (ஈறுகெட்ட எதிர்மறை பெயரெச்சம்).

### 3.209 ஆது, ஆ, ஆமை, ஆமல் என்பன எதிர்மறை வினையெச்ச ஈறுகள் ஆகும்.

*(எ.டு.)*

<u>தெரிநிலை:</u> ஆது – செய்யாது (ஆ, இடைநிலை)

ஆ+மை – செய்யாமை

மை–மே – செய்யாமே.

மை–மல் – செய்யாமல்

ஆ என்பது, அருமை என்னும் பண்புப் பெயரின் முதனிலையான அரு என்னும் சொல்லின்திரிபா யிருக்கலாம். 'அரிது' என்னும் சொற்கும் அரு என்பதே மூலம்.

'மை' என்பது பண்புப் பெயர் ஈறு.

<u>குறிப்பு:</u>

*(எ.டு).*

| | | |
|---|---|---|
| அது | – | அல்லது |
| ஆது | – | அல்லாது, இல்லாது |
| ஆது+ஏ | – | அல்லாதே, இல்லாதே |
| அது–து–று | – | அன்று, இன்று |
| து–று–றி | – | அன்றி, இன்றி |
| மை | – | அல்லாமை, இல்லாமை |
| மை–மே | – | அல்லாமே, இல்லாமே |
| மை–மல் | – | அல்லாமல், இல்லாமல் |
| ஆல் | – | அல்லால் |
| கால் | – | அல்லாக்கால் |
| கடை | – | அல்லாக்கடை |

அது, ஆது என்பன சுட்டடிச் சொற்கள். 'ஏ' என்பது இசைநீட்டம். அன்று, அன்றி என்பவற்றை நன்று, நன்றி என்பவை போலக் கொள்க. அல்லா என்பது ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். மை பண்புப் பெயரீறு. அல்லால் என்பது அல்லாமல் என்பதன் தொகுத்தலாயிருக்கலாம். கால் காலப் பெயர். கடை இடப்பெயர். கட–கடை = கடந்து செல்லும் இடம், இடம்.

### 3.210 அல், இல், என்பன எதிர்மறை இடைச்சொற்கள் ஆகும்.

அல், இல் என்னும் இருசொல்லும் ஒலியிலும் பொருளிலும் பேரளவு ஒத்திருப்பினும், ஒரே வேரினின்று தோன்றியவையல்ல. அன்மை வேறு; இன்மை வேறு.

அல்லுதல் = பொருந்துதல், முடைதல், பின்னுதல். ஒல்லுதல், பொருந்துதல். ஒல்–அல்.

அல்–அள் = செறிவு. அன்–அள்ளல். நெருக்கம். "அள்ளற் பழனத்து அரக்காம்பல் வாயவிழ" (முத்தொள்ளாயிரம்) அள்ளுதல்= செறிதல். அள்–அண்–அண்மை = நெருக்கம். அண்–அடு. அடுத்தல் = அண்மையாதல், நெருங்குதல். அடுத்த = அண்மை யான. இன்னொரு. அடுத்தவன் = நெருங்கியவன், நெருங்கிய இன்னொருவன், இன்னொருவன். அல் என்னும் சொல்லும் இங்ஙனமே அண்மைக் கருத் தினின்று மறுபொருண்மைக் கருத்தைப் பெறும்.

அல்லது = அண்ணியது, அண்ணிய இன் னொன்று, இன்னொன்று.

இம்மறுபொருண்மைக் கருத்தினின்றே, தெரிப்புக் கருத்தும் அன்மைக் கருத்தும் தோன்றியுள்ளன.

*(எ.டு).*

திருக்குறள் அல்லது நாலடியார் – தெரிப்பு (Alternative choice)

தமிழ் அல்லாதது பிறமொழி – அன்மை.

தமிழ் இன்னொன்று பிறமொழி என்னும் கருத்தி னின்று தமிழினின்று வேறானது பிறமொழிஎன்னும் கருத்துத் தோன்றியுள்ளமை காண்க.

அன்மைப்பொருட்கு ஆகார விடைநிலை வேண்டா விடினும் அல்லது என்னும் சொல் சொல்லாது, பொல் லாது – சொல்லாதது, பொல்லாதது, சொல்லாமை, பொல்லாமை முதலிய சொற்களோ டொப்புமை கொண்டு ஈற்றடி நீளப்பெற்றது. அதனால், பொருளும் தெளிவுற்றது. சொல்லாது என்னும் தெரிநிலை வினைச்சொல் வடிவம் முற்றாயும், எச்சமாயும் இருப்பது போன்றே அல்லது என்னும் குறிப்பு வினைச் சொல் வடிவும் முற்றாயும் எச்சமாயும் இருக்க முடியும்.

அன்மைப் பொருட் சொற்றொடரில் வரும் இரு வினை முதலையும் அன்மைப்பொருள் சார்தலின் சொற்றொடர் தலைமாறினும் பொருள் மாறாது.

*(எ.டு).* இளம்பூரணர் உரையாசிரியரல்லர்.

உரையாசிரியர் இளம்பூரணல்லர்.

இளம்பூரணல்லர் உரையாசிரியர்.

உரையாசிரியரல்லர் இளம்பூரணர்.

அல் என்னும் சொல்லடியாய், அஃறிணை, அல்வழி அன்மொழித் தொகை, அல்லகுறி என்னும் இலக்கணக் குறியீடுகள் தோன்றியுள்ளன.

**3.211 இல் என்னும் சொல், அடிப்படையில் சிறுமை அல்லது குன்றற் பொருளது. குன்றற் கருத்தினின்று இன்மைக் கருத்தும் தோன்றும்.**

ஒ.நோ. செயப்படுபொருள் குன்றிய வினை = செயப்படு பொருள் இல்லாவினை. less = of smaller quantity. senselessness = absense of sense.

'இல்' என்பது ஒரு சிறுமைப் பொருள் பின்னொட்டு. *(எ.டு.)* தொட்டி – முற்றம் – முற்றில் – முச்சில். இல் என்பது திண்மையிற் சிறிய இலை வகை. இலவு என்பது சிறிது என்னும் பொருள்படுவது.

இடுகியது – இடை. இட்டிகை – சிறு செங்கல். இட்டேறி – இது வரப்பிடப்பட்ட சிறுபாதை.

உல்லி, ஒல்லி என்பன ஒடுக்கங் குறிப்பதால் 'உல்' என்பதனின்று இல் என்னும் சொல் தோன்றியிருக்கலாம்.

சிறுமையுணர்த்தும் இவ் இல்லென்னும் சொல்லே, இன்மையுணர்த்தும் குறிப்பு வினையாயிருக்கலாம்.

அல் என்னும் சொற்போன்றே, இல் என்பதும் ஒப்புமையமைப்பால் இல்லா, இல்லாது, இல்லாதவன், இல்லாமை என்னும் வடிவுகளைப் பெற்றுள்ளது.

இல், இல்லை என்னும் இரு வடிவும், இரு திணை யைம்பால் மூவிடப் பொதுவான குறிப்பு வினைமுற்று எனலாம்.

இல் என்பது பாலீறு பெற்றுத் திணைபால் எண்ணிட வேறுபாடு காட்டும்.

அல் என்பது இல் என்பதுபோல் தனித்து நின்று பயனிலையாகாது என்றும் பாலீறு பெற்றே வரும்.

இல்–இலம் = இன்மை, வறுமை. இலம்படு–இலம்பாடு = வறுமை.

அல், இல். இரண்டும் ஆரிய மொழிகளிலும் சென்று வழங்குகின்றன.

**3.212 ஆ, அது என்பவை எதிர்மறைத் தொழிற் பெயரீறுகள் ஆகும்.**

*(எ.டு).* ஆ+மை – செய்யாமை

ஆது+அ+(அ)து – செய்யாதது = செய்யாத அது.

ஆ என்பது எதிர்மறையிடைநிலை. அரு என்பதன் திரிபு.

**3.213 இயல்பு வினைமுற்றுகளும் சுட்டுப் பெயர்களும் எதிர்மறை வினையாலணையும் பெயரீறுகள் ஆகும்.**

<u>தெரிநிலை:</u>

1. இயல்பு வினை முற்றீறு *(எ.டு.)* செய்திலன், செய்கின்றிலன், செய்யான்.

2. சுட்டுப் பெயர் *(எ.டு.)* செய்யாதவன் – செய்யாதான். செய்யாதவன் – செய்யாத அவன்.

3. 'ஆ' ஓவான ஈறு. *(எ.டு.)* செய்திலான் – செய்திலோன்/செய்யாதான்–செய்யாதோன்.

<u>குறிப்பு:</u>

1. இயல்பீறு *(எ.டு.)* அல்லான், இல்லான்.

2. சுட்டுப்பெயர் *(எ.டு.)* அல்லாதவன்–அல்லாதான், அல்லாதவன்–அல்லாத அவன்.

3. ஆ ஓவான ஈறு. *(எ.டு.)* இல்லான்–இல்லோன்.

**3.214 இசின் என்பது இடைநிலை ஆகும்.**

இசின் என்பது ஓர் இறந்த கால இடைநிலை என்று சங்கரசமச்சிவாயரும் (நன்.145.உரை). ஓர் அசைநிலையென்று நச்சினார்க்கினியரும் (தொல். சொல்.296. உரைத்தனர்.

இசின் என்பது வினையுறுப்பாக வரும் இடமெல்லாம் அது இறந்தகால வினையெச் சத்தோடு சேர்ந்தேயிருக்கின்றது. இசின் என்பதைக் கொண்ட வினைகளெல்லாம் இறந்த கால முற்றாகவேயிருப்பினும் படர்க்கை வினைமுற்றுகளே பெரும்பாலும் பாலீறு கொண்டனவாகவும், ஏனை யீரிட முற்றுகளும் பாலீறு அற்றனவாகவுமேயிருக்கின்றன.

இறந்த கால இடைநிலைகள் எல்லாம் இறந்த கால வினையெச்சத்துள்ளேயே அடங்கி நிற்றலின் அதனோடு சேர்ந்துள்ள இசின் என்பது ஒரு துணை வினையாகவேயிருத்தல் வேண்டும். அது ஈ என்பதே.

அது உதவி வினையீறுகளுள் ஒன்றென்பது முன்னர்க் கூறப்பட்டது.

ஆயினோர், போயினோர், மேயினோர், தாயினோர் என்பன போன்று, ஈயினோர் என்பதும் படர்க்கைப் பலர்பால் இறந்த கால வினையாலணையும் பெயராம். யகர சகரப் போலியில் அது ஈசினோர் என்றாகி இசினோர் என்று குறுகும். பின்பு அது இறந்த கால வினையெச்சத்துடன் துணை வினையாகச் சேர்ந்து

"சிறந்திசினோர்" (தொல்.295).

"உணர்ந்திசினோர்" (தொல்.601).

"அறிந்திசினோர்" (தொல்.643).

முதலிய சொற்களைப் பிறப்பிக்கும்.

தொல்காப்பியர் இவ்வினையின் அமைப்பை முற்றும் அறியாதிருந்ததினால் இசின் என்பதை அசைநிலையாகக் கொண்டு அதையும் சின் என்று தவறாகப் பிரித்து,

"மியாஇக மோமதி இகும் சின் என்னும்
ஆவயின் ஆறும் முன்னிலை அசைச்சொல்" (759).

"அவற்றுள்
இகுமும் சின்னும் ஏனையிடத்தொடுந்
தகுநிலை யுடைய என்மனார் புலவர்" (760).

என்று வழுப்பட நூற்பா யாத்து,

"மெய்திரி வளியிசைஅளவு துவன்றிசினே" (102).

எனத் தன்மையொருமை இறந்த கால வினைமுற்றை எண்ணீறின்றியும் அமைத்துவிட்டார். அதனால் பிற்காலப் புலவர்

"வழிபடல் சூழ்ந்திசின் அவருடை நாட்டே" (குறுந்.11).

"கேட்டிசின் வாழி தோழி" (குறுந்.30).

எனத் தன்மை முன்னிலை வினைமுற்றுகளை மட்டுமின்றி

"வேந்த னும்மே............ புறம் பெற் றிசினே"

"பாடினி யும்மே............. இழை பெற்றிசினே"

"பாண்மக னும்மே........... பூப்பெற்றிசினே" (புறம்.11).

எனப் படர்க்கை வினைமுற்றுகளையும், எண்ணீறும் பாலீறும் அற்றனவாக அமைத்து விட்டனர். அதனால் தொல்காப்பியர்க்குப் பதினெண் நூற்றாண்டு பிந்திய பவணந்தியாரும்

"................... சின்............ அசைமொழி" (நன்.441).

என மயங்கிவிட்டார்.

சின் என்பது அசைநிலையாயின் அது நீங்கிய பின், துவன்றிசினே என்னும் தன்மையொருமை வினைமுற்று நுவன்றியே என்றும்;

புறம் பெற்றிசினே என்னும் படர்க்கை ஆண்பால் வினைமுற்றும் "அறிந்திசினோரே" (தொல்.643). என்னும் படர்க்கைப் பலர்பால் வினைமுற்றும் முறையே, புறம் பெற்றியே, அறிந்தியோரே, என்றும் நிற்கும். அவை ஆசிரியர் குறித்த சொல்லாகாமை காண்க.

தன்மையொருமை : ஈயினேன்–ஈசினேன்–இசினேன்.
முன்னிலையொருமை : ஈயினை–ஈசினை–இசினை.
படர்க்கையொருமை : ஈயினன்–ஈசினன்–இசினன்
ஈயினள்–ஈசினள்–இசினள்.

**3.215 அல் – அது, சேய்மைச் சுட்டு முன்னிலை ஒருமை ஈறாக ஆளப்படும் போது அஃறிணை உயர்திணை இருதிணைக்கும் பொதுவாகும்.**

*(எ.டு.)* அல் – (அது) – அன் – சுட்டுகள் இயல்பீறு ஆகும்.

அலவன் (நண்டு) – 'அன்' ஒன்றன் பாலீறு.

கந்தன் – 'அன்' ஆண்பாலீறு.

**3.216 வினையடியைப் பெயர்ச் சொல்லாக்கும் போது இடவழக்குப் பேச்சியல்புகளால் பலவகைப் பெயர் ஈறுகளைப் பெற்று பல்வேறு பெயர்ச் சொற்களாக மாறும்.**

*(எ.டு.)* உடு–த்தல்: உடுப்பு, உடுக்கை, உடுகை, உடுத்தை.

கடு–த்தல் : கடுப்பு, கடுக்கம், கடுமை

நல் – நள் – நண்பு – நட்பு, நட்டல்

–நல் – நன்மை, நன்று, நன்றி.

**3.217 பெயரோடு சேர்ந்து ஈறாக வரும் ஆக எனும் வினையெச்சத்தின் ஈற்றுக் ககரம் கெடும்.**

*(எ.டு.)* குண்டாக இருந்தான் – குண்டா இருந்தான்.

பஞ்சாகப் பறந்தது – பஞ்சாப் பறந்தது.

**3.218 பாகதச் சிதைவு எனப்படும் (பிராகிருத) வட தமிழ்ச் சொற்கள் தமிழில் நெடிய வழக்கு பெற்று வருவனை வழுவ மைதியாக ஒருசார் ஏற்றுக் கொள்ளப்படும்.**

*(எ.டு.)* தொழு – வணங்கு. தொழுது – தொது– தொதி – துதி, துதித்தல் – வணங்குதல், போற்றுதல், போற்றிப்பாடுதல், இச்சொல்லை வடதமிழ் (பாகதம்) வாயிலாகச் சமற்கிருதம் துதி > stuti என வடமொழிச் சொல்லாக்கிக் கொண்டது.

**3.219 ஏவல் வினை முதனிலை நீண்ட தொழிற்பெயராகி மீண்டும் ஏவல் வினை யாகும்.**

*(எ.டு.)* பெள் – வளர் தெ. பென்சு

பெள் – வளர்நிலை, இளமை, மென்மை

பெள் – பெண் (இளையவள்). தங்கை சிந்தி. பெண் (தங்கை).

பெள் – பெண் – பேண் (காப்பு, ஒப்புரவு)

பெண் – பேண் (காப்பாற்று எனும் வினை).

## இடைச்சொல்

**3.220 பெரும்பாலும் தனித்து வராமல் பெய ருக்கும் வினைக்கும் உறுப்பாக அவற் றிடை வரும் சொல் இடைச்சொல் எனப்படும். இடைச்சொல்லாகவே தோன் றியவை, இயற்கை இடைச்சொல். பெயரும் வினையும் பல்வேறு பொருளுணர்த்தி இடைச்சொல்லாகத் திரிந்தவை செயற்கை இடைச்சொல்.**

இயற்கை இடைச்சொல் 15 வகைப்படும். இவை தமித்து வருவனவாம்.

**1. சுட்டிடைச் சொற்கள்:**

*(எ.டு).* அந்தா, அதோ, அன்னா, இந்தா, இதோ, இன்னா, உவ, உது.

ஆ, அ, ஈ, இ, ஊ, உ என்பன அந்த, இந்த, உந்த என்று பொருள்தரும் சுட்டுக் குறிப்புப் பெயரெச் சங்களாயினும் (Demonstrative adjectives) தமித்து வழங்காமையின், இடைச் சொல்லாகக் கொள்ளப் படும்.

**2. வினாவிடைச்சொல்**

*(எ.டு).* எந்தா, எதோ, எதா.

ஏ, எ, யா என்பன எந்த என்று பொருள்படும் வினாக்குறிப்புப் பெயரெச்சங்களாயினும் (Interrogative adjectives) தமித்து வழங்காமையின், இடைச் சொல்லாகக் கொள்ளப்படும்.

**3. உவம உருபுகள்**

1. சுட்டடி : அன்ன, ஆங்க.

2. வினையடி: வெல்ல, வீழ.

*(எ.டு).* போல், நிகர் – (முதனிலை)

போன்று, செத்து – (இ.கா.வி.எ.)

போல, புரைய – (எ.கா.வி.எ.) (Infinitive mood)

போன்ற, ஒத்த – (இ.கா.பெ.எ.)

போலும், ஒக்கும் – (எ.கா.பெ.எ.)

போலும், ஒக்கும் – (எ.கா.வி.மு.)

**4. உடன்பாட்டிடைச் சொற்கள்**

*(எ.டு).* சரி, சரி சரி, ஆகட்டும்.

**5. ஒத்துக்கோளிடைச் சொற்கள்**

*(எ.டு).* ஆம், நல்லது, மதி (புத்தி.வ.).

**6. ஆவலாதி இடைச்சொற்கள்**

*(எ.டு).* பார்த்தையா பார்த்தையா, கேட்டையா கேட்டையா, ஆவலாதி-முறையீடு.

**7. அரற்றலிடைச் சொற்கள்**

*(எ.டு).* கூகேகூ, குய்யோ முறையோ.

**8. வேசாற்றிடைச் சொற்கள்**

*(எ.டு).* அக்கடா, சிவாசிவா, வேசறல் : இளைப்பாறல்.

**9. விளியிடைச் சொற்கள்**

*(எ.டு).* இந்தா, ஏன்காணும் – உலக வழக்கு.

அம்ம – செய்யுள் வழக்கு.

ஏ, ஓய், வே – என்பன இழிவழக்காம்.

**10. உரை முக இடைச் சொற்கள்**

***(எ.டு).*** அந்த, இந்த – உலக வழக்கு.

ஆங்க – செய்யுள் வழக்கு.

**11. தொகைமுக இடைச்சொற்கள்**

***(எ.டு).*** ஒரு, ஒருபத்து

**12. விழுக்காட்டிடைச் சொற்கள்**

பேச்சில் இடையிட்டுத் திரும்பத் திரும்ப வரும் பொருளற்ற சொல் விழுக்காட்டுச் சொல்லாம்.

***(எ.டு).*** வந்து, பின்னே.

**13. தோல்வியாட்டிடைச் சொல்**

***(எ.டு).*** குழமணி தூரம், பொங்கத்தம் பொங்கோ, தோலே தோலே.

**14. அடைக்கலம் வேண்டிடைச் சொல்**

***(எ.டு).*** ஓலம்.

## 3.221 இணைப்புச் சொற்கள் 14 வகைப்படும்

**1. அடுக்கிணைப்புச் சொற்கள் (cumulative conjunctions)**

***(எ.டு).*** என, எனவும், எனா, என்று, என்றும், என்றா இவை சொற்களையும் சொற்றொடர்களையும் இணைக்கும்.

**2. மறுப்பிணைப்புச் சொற்கள் (Adversative conjunctions)**

***(எ.டு).*** ஆனால், ஆனாலும், ஆயின், ஆயினும் இருந்தாலும், இருந்தபோதிலும், இருந்தாற்கூட, எனினும், என்றாலும். இவை சொற்றொடர்களையே இணைக்கும்.

**3. மறுநிலையிணைப்புச் சொற்கள் (Alternative conjunctions)**

***(எ.டு).*** அல்லது, எனினும், என்றாலும், என்றா.

இவற்றுள், 'அல்லது' சொல்லையும் சொற்றொடரையும் இணைக்கும். சொல்லையிணைப்பின் ஒவ்வோர் இரு சொல்லிடையும் ஒவ்வொரு முறை வரும்; ஏனைய சொற்களை மட்டும் இணைக்கும்.

**4. உய்த்துணர்விணைப்புச் சொற்கள் (Illative conjunctions)**

***(எ.டு).*** ஆகையால், ஆகையினால், ஆதலால், ஆகவே, எனவே. இவை சொற்றொடர்களை இணைப்பன.

**தனிப்பொருளிடைச் சொற்கள்**

**__என:__** இது கரணியம் (காரணம்), பொருட்டு, பெயரீடு, இணைப்பு, ஒலிக்குறிப்பு, விரைவுக் குறிப்பு, வண்ணக் குறிப்பு, காலக்குறிப்பு முதலிய பொருள் களில் வரும்.

இது 'என்' என்னும் வினையின் அகரவீற்று எச்சமாகும்.

வெள்ளென வா – காலக்குறிப்பு.

வெள்ளென = கிழக்கு வெளுக்கும்போது, விடி காலையில், குறித்த நேரத்திற்கு முன்பே.

**__என்று:__** இது பெயரீடு, இணைப்பு, ஒலிக்குறிப்பு, விரைவுக்குறிப்பு, வண்ணக்குறிப்பு முதலிய பொருள் களில் வரும்.

இது என் என்னும் வினையின் இறந்த கால எச்சமாகும்.

உலக வழக்கில், நேர்க்கூற்றை (Direct speech) முடிக்குஞ் சொல்லோடு இணைப்பது இஃதொன்றே.

***(எ.டு.)*** அவன் 'நாளை வருவான்' என்று சொன்னான். முடிக்குஞ்சொல் 'என்றான்' என்னும் வினை முற்றாயின் இணைப்புச்சொல் வராது.

***(எ.டு.)*** அவன் 'நாளை வருவேன்' என்றான்.

அடிஅடி என்று அடித்தான், தின் தின் என்று தின்றான் என்பவற்றில், என்று என்னும் சொல் கூற்றைக் குறியாது வினை மிகுதியை அல்லது கடுமையை உணர்த்தும்.

மறை என்பது தோற்றமும், தஞ்சம் என்பது எளிமையும் எல்லே என்பது இரக்கமும் உணர்த்தும்.

'எல்லே இலக்கம் (தொல்.இடை.21) என்னும் பாடம் தவறானதாகும். எல் என்பது ஒளியையும், பகலையும், கதிரவனையும் குறிக்கும் பெயர்ச் சொல்லாதலால் இடைச்சொல் ஆகாது. "ஏதிலேன் அரங்கற் கெல்லே" என்று நாலாயிரத் தெய்வப் பனுவலில் (திருமாலை 26) எல்லே என்பது இரங்கற் பொருளில் வந்திருத்தல் காண்க.

**5. தாலாட்டிடைச் சொற்கள்**

***(எ.டு).*** லாலா, ரோரோ.

இவை இலக்கிய நடையில் தாலா, தாரோ என்றெழுதப்பெறும்.

**6. புள்ளோப்பலிடைச் சொல்**

*(எ.டு).* ஆலோலம்.

**7. பிதற்றற்குறிப்பிடைச்சொல்**

*(எ.டு).* ஆலே பூலே, கன்னா பின்னா, கன்னாரை பின்னாரை, காமாசோமா.

**8. ஆளத்தியிடைச் சொற்கள்**

*(எ.டு).* தரனன்னா தன்னானா, தரனன தோம்நோம்.

**9. வண்ணமெட்டிடைச் சொற்கள்**

*(எ.டு).* தன்னன்னே நானனன்னே நானனன்ன நானா.

**10. வண்ணக்குழிப்பிடைச் சொற்கள்**

*(எ.டு).* தான, தத்த, தந்த, தய்ய, தன்ன, தனன, தனதான.

**11. தில்லானா இடைச்சொற்கள்**

*(எ.டு).* தீம்தீம் உதரிதான தனதிரனா தீம்.

**12. மகுட இடைச்சொற்கள்**

*(எ.டு).* தாலாட்டுப்பாட்டு – தாலோ தாலேலோ

கப்பற்பாட்டு – ஏல ஏலோ ஏலஏலோ

**13. கூப்பீட்டிடைச் சொற்கள் (அஃறிணை பற்றியன)**

*(எ.டு).* தோ தோ (துவா துவா) பேபே (போ போ).

**14. நாயேவலிடைச் சொற்கள்**

*(எ.டு).* உசு, உரீசு.

## 3.222 இரக்கக் குறிப்பிடைச் சொற்கள்

பிள்ளைகள் துன்புறுமிடத்தும் வியக்கத்தக்க பொருளைக் காணும்போதும், தம் பெற்றோரை விளிப்பது இயல்பாதலால் பெற்றோர் பெயர்களினின்று இரக்கக் குறிப்பிடைச் சொற்களும் வியப்புக் குறிப்பிடைச் சொற்களும் தோன்றியுள்ளன.

**இரக்கம்:**

| பெற்றோர் பெயர் | | இடைச்சொல் |
|---|---|---|
| ஐயன் | – | ஐயா, ஐயவோ ஐயகோ, ஐயே |
| அன்னை | – | அன்னோ |
| அத்தன் | – | அத்தோ, அந்தோ, அந்தகோ, அந்தவோ |
| அச்சன் | – | அச்சோ |
| அக்கை | – | அக்கோ – அகோ. |

## 3.223 வியப்புக் குறிப்பு இடைச்சொற்கள்

| பெற்றோர் பெயர் | | இடைச்சொல் |
|---|---|---|
| அப்பன் | – | அப்ப, அப்பா |
| அம்மை | – | அம்ம, அம்மா |
| அச்சன் | – | அச்சோ |
| அக்கை | – | அகோ |
| ஆத்தை | – | ஆத்தே |

உலக வழக்கில் வியப்புக் குறிப்பிடைச் சொற்கள் ஆண்பாற் பெயர்த் திரிபாயின் அடா (அடே) என்னும் சொல்லையும் பெண்பாற் பெயர்த்திரிபாயின் அடி (அடீ) என்னும் சொல்லையும் முற்கொள்ளும்.

ஆஆ என்னும் உணர்ச்சியொலியடுக்கு, ஆவா என்று புணர்ந்து இரக்கக் குறிப்பிடைச் சொல்லும், அதன் பின் ஆகா என்று திரிந்து வியப்புக் குறிப்பிடைச் சொல்லும் ஆகும்.

அட, அடா, அடடா என்பன வியப்பும் கழிவிரக்கமும் உணர்த்தும் இடைச் சொற்களாம். அளிது, கெட்டேன் என்னும் இரக்கச் சொற்களுள் முன்னது செய்யுள் வழக்காம்.

## 3.224 அசைநிலைச் சொற்கள்

மா : 'புற்கை யுண்கமா கொற்கை யோனே' மா கொற்கையோனே என்று பிரிந்திசையும்.

மியா : கேளுமையா–கேளுமியா–கேள்மியா–கேண்மியா.

இக : 'கண்பனி யான்றிக'. ஆன்றுஇக=நிறைந்து விழ.

ஏ : செல்லுமையே–செலுமியே–சென்மியே–சென்மே. ஐயே–(இயே)– ஏ–ஏன். எ.கா: வாருமே, வாருமேன்.

மோ : மொழியுமையோ–மொழியுமியோ–மொழிமியோ–மொழிமோ.

மதி : மதி=அளவு, போதும். செல்மதி=போ, அது போதும்.

அத்தை: அதை–அத்தை. ஒ.நோ: 'எத்தால் வாழலாம்'.

இத்தை: இதை–இத்தை.

வாழிய : வியங்கோள்வினை.

மாள : 'தவிர்ந்தீக மாள'. மாள=முடிய. முற்றிலும்.

ஈ : சென்று+ஈ=சென்றீ=சென்றாய்.

யாழ : 'யாழநின்' = யாழ்போலும் இனிய நினது (கலித்.18).

யா : யா! பன்னிருவர் மாணாக்கர். யார் அல்லது யாம் என்பதன் ஈற்றுமெய் விட்டுப் போயிருக்கலாம். யா என்னும் அஃறிணைப் பன்மை வினாப்பெயரே ஒரு காலத்தில் உயர்திணைக்கும் வழங்கிற்று.

கா : 'இவள் காண்டிகா' காண்டி = பார். கா= காத்துக்கொள்.

பிற : 'ஆயனையல்ல பிற' = ஆயனையல்லாத மற்றவை.

பிறக்கு : 'பிறக்கதனுட் செல்லான்'. பிறக்கு = பிறகு.

அரோ : அரன் என்பதன் விளி. அரோ = சிவனே.

போ : இது வெளிப்படை, மறுப்புப் பொருளில் உலக வழக்கிலும் வழங்கும்.

மாதோ : மகடூஉ முன்னிலை. மாதோ = பெண்ணே.

இகும் : 'கண்டிகும்'. இகும்= இடு. இடுதல் = கொடுத்தல்.

சின் : உரைத்து+ஈ=உரைத்தீ. உரைத்தீயினோர் – உரைத் தீசினோர் – உரைத்திசினோர். ஈ துணைவினை. ஈதல்=கொடுத்தல். என்றீ யேன் (என்றிட்டேன்) – என்றியேன் – என்றிசேன் –என்றிசின்.

குரை : குரு+அ=குர–குரை=பெருமை. ஒ.நோ: குரு+அவு = குரவு. குரவு+அன் = குரவன் = பெரியோன். "பல்குரைத் துன்பம்". "பெறலருங் குரைத்தே".

ஒரும் : ஓர் = உணர், ஒன்று. "அஞ்சுவதோரும் அவா"=அஞ்சுவதொன்றும் அவாவே; (அல்லது) அஞ்சுவது அவா, அதை நீர் உணரும். அதனோரற்றே – அதனொடு ஒரு தன்மைத்து. அன்றே = அல்லவா.

போலும் இருந்து முதலிய பிற சொற்கள் வெளிப்படை.

சில இடைச்சொற்கள் வீண் வழக்கால் பொருளிழந்துள்ளன. எ.கா: ஊரிலே – ஏ; மரத்தி னின்றும் – உம்.

## கூட்டுச்சொல் நெறிமுறை

**3.225 தமிழில் கூட்டுச்சொற்கள் பின்வரும் தொண் வகைகளில் அமையும்.**

1. பெயரும் பெயரும் – கல்விச்சாலை, போக்குவரத்து.
2. வினையும் பெயரும் – அணிகலம், செய்வினை.
3. பெயரும் வினையும் – கண்ணோடு, குலைவெடி.
4. வினையும் வினையும் – எழுந்திரு, கண்டுபிடி.
5. அடையும் பெயரும் – நன்செய், பெருந்திணை.
6. அடையும் வினையும் – உட்கொள், முன்னேறு.
7. இரட்டைக் கிளவி – அருவரு, சலசல.
8. இணைச்சொல் (மரபிணைமொழி) – காய்கறி, சின்னபின்னம்.
9. அடுக்குத் தொடர் – போ போ, நில் நில்.

**3.226 இரு சொற்களுக்கு மேல் கூடுதலாக வரும் சொற்புணர்ப்புகள் தொடர் மொழிகளாகும்.**

***(எ.டு).*** செய்கால் நாரை, அடித்துப் பிடுங்கும் சுத்தியல், தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்.

**3.227 பலபொருட்சொல் ஒரு வேர்ப் பொருட் சொல்லாகவோ பலவேர் பல பொருட் சொல்லாகவோ இருக்கலாம்.**

***(எ.டு).*** 1. கால்

2. மணி.

**3.228 மரபிணைமொழி மூவகைப்படும்.**

எதிர்பொருள் மரபிணைமொழி –ஏற்றத்தாழ்வு

இனப்பொருள் மரபிணைமொழி – தாய் தந்தை, காய்றி.

மீமிசைப் பொருள் மரபிணை மொழி – சீர்சிறப்பு, பொய் புரட்டு.

**3.229 தனிச்சொல் பொருட்பாங்கு விரிவு கருதி கூட்டுச்சொல் – கூட்டுத் திரிசொல் – தொடர்ச்சொல் திரிசொல் என வளரும்.**

1.தனிச்சொல் – கண் (தலைப்புச்சொல், வியைபுச்சொல்).

2. கூட்டுச்சொல் – கடைக்கண்.

3. கூட்டுத் திரிசொல் – கடைக்கணித்தல்.

4. தொடர்ச்சொல் – கடைக்கண் சாத்துதல்.

5. திரிசொல் – கடைசி.

நட – நடக்க – நடத்த – நடப்பு – நடை (வினைப் பெயர்).

**3.230 கூட்டுச் சொற்களின் போந்த பொருள் மட்டும் கருத்தில் கொண்டு தனிச்சொற்களின் பொருள் மறத்தலால் வழூஉச் சொற்கள் உருவாகின்றன. (அவை விலக்கல் வேண்டும் அல்லது வழாநிலைகளாக மீட்டமைக்கப்பட வேண்டும்) வழூஉச் சொற்கள் வழூவாயிருப்பதொடு பொருளையும் மாற்றி விடுகின்றன.**

| <u>வழூஉச்சொல்</u> | <u>வழாநிலை</u> |
|---|---|
| அருகாமை (நெருக்கம்) | அருகண்மை |
| முடக்கற்றான் | முடக்கொற்றான் |
| பெண்சாதி | பெண்டாட்டி |

**3.231 வினைச்சொல்லின் ஏவல் வடிவில் வெளிப்படைப் பொருள் தோன்றாது. முதனிலையும் ஈறும் சேர்ந்த தொழிற் பெயர் வடிவில் அமையும் போது பொருள் விளங்குவதாக அமையும்.**

*(எ.டு).* உழு–தல், நட–த்தல்

**3.232 புடைபெயர்ச்சியில் உருமாறும் வினைகளுள் குறிலிணைவினையடியை முன்னதாகவும், அக்குறிலிணை தனி நெடிலான வினையடியைத் திரிபுற்ற பின்னையதாகவும் கொள்ளவேண்டும்.**

*(எ.டு).* வள் > வரு – வா

தள் > தரு – தா

(நெடுமுதல் தனி வினைகள் இயல்பு வினை யடிகள் ஆகா).

**3.233 குறிலொற்று வினையடிகளின் மெய்யீறு லகர மெய்யீற்றில் அசையழுத்தம் விழுந் தால் 'அல்' ஈறு பெற்று தொழிற் பெயராகும்; இயல்பாக ஒற்றிரட்டித்துப் புணரும்.**

*(எ.டு).* அல்+அல்–அல்லல், செல்+அல் = செல்லல்.

**3.234 குறிலொற்று வினையடிகளின் லகர மெய்யீற்றில் அசையழுத்தம் விழாமல் தொழிற்பெயரீறாக வரும் 'அல்' மீது அசையழுத்தம் விழும்போது நில்+அல்–நில்அல் எனப் புணரும். விட்டிசை தவிர்க்க தகர எழுத்துப் பேறு ஈற்றசை அகர உயிருடன் புணர்ந்து நில்+த்+அல்–நிற்றல் என றகர மெய்யாகத் திரிந்து இரட்டித்து வரும்.**

*(எ.டு).* நில்+அல்–நில்+த்+ல்– நிற்றல்

கல்+அல்–கல்+த்+அல்– கற்றல்.

கேள்+அல்–கேள்+த்+அல் – கேட்டல்.

**3.235 வல்லினத்துக்கு மெல்லினம் இன எழுத்து ஆவது போல இடையெழுத்து களும் பிறப்பிடம் நோக்கிச் சார்புள்ள வல்லெழுத்துகளும் மெல்லெழுத்துகளும் சொற்புணர்ச்சிகளில் இனவெழுத்து போலப் புணர்வு பெறும்.**

*(எ.டு).*

| இடையெழுத்து | இனவெழுத்து | இனவெழுத்து |
|---|---|---|
| ல் | ன் | ற் |
| ள் | ண் | ட் |
| ர் | | த் |

ழ் ண்

ய் ஞ் ச்

வ் ங் க்

நில்+த்+அல்–நிற்றல் – 'ல்' ஈறு பிறப்பிட இயைபு றகர மெய்யாக திரியும் என்பதால் த்–ற் ஆகத் திரிந்தது.

கேள்+த்+அல்–கேட்டல். 'ள்' ஈறு பிறப்பிட இனமான டகர மெய்யாகத் திரியும் என்பதால் த்–ட் ஆகத் திரிந்தது. இங்ஙனம் பிறவும் உண்+தல்–உண்டல்.

**3.236 அசையழுத்தம் இடையில் விழும் சொற்களில் உகரச் சாரியை தோன்றும்.**

*(எ.டு).* செல்+தல்–செல்லுதல்.

கொள்+உ+தல்–கொள்ளுதல்.

**3.237 குறிலிணைகள் வரும் வினையடிகள் தொழிற்பெயராகும் போது குறிலிணைகள் நெடுமுதலாவது போல் குறிலொற்று வரும் வினையடிகள் தொழிற்பெயராகும்போது நெடுமுதலாகி இடையொற்று பிறப்பிட வல்லொற்றாகத் திரியும்.**

*(எ.டு).* கொள்+அல்–கொள்ளல் – கோடல்.

கொள்+அல்=கொள்>கொள்ளல்–கொள்>கோள்+அல்>கோளல்–கோடல்.

**3.238 மூவசைச் சொற்களில் ஈற்றிரண்டு அசைகளில் மெய் மட்டும் இடவலமாய் மாறும்.**

*(எ.டு).* கோபுரி–கோடாலி>இந். கோலாடி–kulhāḍi

**3.239 மூவசைச் சொற்களில் முன்னசை குறிலிணையாகும். குறிலிணையின் அயலெழுத்து கெட்டு ஈற்றெழுத்து நெட்டசையாகும்.**

*(எ.டு).* குடமூக்கு–குடந்தை

**3.240 சொற்களைப் புணர்த்து எழுதாவிடின் சிலவிடத்துப் பொருள் வேறுபடுவதுண்டு; இயற்கையொலிப்பிற்கு மாறாயிருத்தலின் இன்னாவோசையும் தோன்றும்.**

*(எ.டு).* அவன் உடனே = He at once

அவனுடனே = with him

வந்தான், ஆனால் = He came, but

வந்தானானால் = if he came or comes

ஊருக்கு போனான் – இன்னாவோசை எழுகிறது காண்க.

ஆகையால் 'ஊருக்குப் போனான்' (புணர்ச்சி) என்பது வேண்டியதே.

**3.241 கூட்டுச் சொல்லைக் குறிக்க நிலைமொழி என்றும், பிந்தினது வருமொழி என்றுங் கூறப்படும்.**

*(எ.டு).* மரம்+கிளை.

**3.242 புணர்ச்சி இயல்பாயிருப்பின் இயல்புப் புணர்ச்சியென்றும், வேறுபடின் திரிபுப் (விகாரம்) புணர்ச்சியென்றும் கூறப்படும். திரிபு (வேறுபாடு) தோன்றல், திரிதல், கெடுதல் என மூவகைப்படும்.**

*(எ.டு).* இயல்புபுணர்ச்சி

1. முருகன்+வந்தான்= முருகன் வந்தான்

பால்+ஆடை = பாலாடை

திரிபுபுணர்ச்சி

2. வாழை+காய் = வாழைக்காய் – தோன்றல்

கல்+மலை = கன்மலை – திரிதல்

மரம்+வேர் = மரவேர் – கெடுதல்

**3.243 நிறுத்தக்குறிகள் இருக்குமிடத்தில் புணர்ச்சி இராது. அவை இல்லாவிடத்துச் சொற்றொடர்களைத் திரிதற் புணர்ச்சியின்றி எழுதலாம். ஆனால் தோன்றற் புணச்சியும் கெடுதல் புணர்ச்சியுமின்றி எழுதுதல் கூடாது.**

*(எ.டு).* பொழுது போயிற்று. போனவனைக் காணோம்.

**3.244 புணர்கின்ற இரு சொற்களுக் கிடையில் 2ஆம் வேற்றுமை முதல் 7ஆம் வேற்றுமை வரை ஏதேனும் ஒரு வேற்றுமை யுருபு தொக்கேனும் வெளிப்பட்டேனும் வரின், வேற்றுமைவழிப் புணர்ச்சியென் றும், அல்லாத வழி அல்வழிப் புணர்ச்சி யென்றும் கூறப்படும்.**

*(எ.டு).* 1. மாட்டைக் கட்டு (வேற்றுமை)

2. மாடு வந்தது (அல்வழி)

<u>உயிரும் உயிரும் புணர்தல்</u>

**3.245 உயிரோடுயிர் புணரும்போது, நிலை மொழி யீற்று இ, ஈ, ஐ என்னும் உயிர் களின் பின் யகர மெய்யும் ஏனையுயிர் களின் பின் வகர மெய்யும், ஏகாரத்தின் பின் இவ்விரு மெய்களும் உடம்படு மெய் யாகத் தோன்றும் (உடம்படுத்தல் – இசைத்தல்).**

*(எ.டு).* வாழை+இலை = வாழையிலை (ஐ+இ)–ய்

திரு+அடி = திருவடி (உ+அ) – வ்

ஒரே+இடம் = ஒரேயிடம் (ஏ+இ) – ய்

சே+அடி = சேவடி (ஏ+அ) – வ்

இப்புணர்ச்சியை அறிதற்கு, ஆவன்னா, ஈயன்னா, ஊவன்னா, ஏயன்னா, ஐயன்னா, ஓவன்னா, ஔ வன்னா என்னும் பண்டையெழுத்துச் சாரியையைக் கவனித்தல் வேண்டும். 'யன்னா' வருமெழுத்தின் பின் யகர மெய்யும், 'வன்னா' வருமெழுத்தின் பின் வகர மெய்யும் உடம்படு மெய்யாகுமென்றறிக. ஒரு நெடில் போன்றே அதன் குறிலும் புணரும்.

ஏகாரம் ஓரெழுத்துச் சொல்லாயிருக்கும்போது தான் வகரவுடம்படுமெய் பெறும்; அதுவும் சிறு பான்மையே.

ஒருமாரை (ஒருமா+அரை)

குளாம்பல் (குளம்+ஆம்பல்)

மராடி (மரம்+அடி)

பராரை (பரு+அரை)

முதலியன மரூஉப் புணர்ச்சியாம்.

**3.246 சுட்டெழுத்தும் வினாவெழுத்தும் நாற்கணத்துடன் புணர்தல்.**

வன்கணம், மென்கணம், இடைக்கணம், உயிர்க் கணம் என்பன நாற்கணமாகும்.

கணம் – இனம், கூட்டம்.

சுட்டெழுத்துகளும் எகரவினாவெழுத்தும் உயி ரோடும் இடையின மெய்யோடும் புணரின் இடையில் வகரம் தோன்றும். உயிரோடு புணரின் அவ்வகரம் இரட்டும். வல்லின மெல்லின மெய்களோடு புணரின் அவ்வம் மெய்கள் மிகும்.

அ+உயிர் = அவ்வுயிர் – உயிர்

அ+யானை = அவ்யானை – இடையின மெய்

அ+ரகரம் = அவ்ரகரம் – "

அ+லகரம் = அவ்லகரம் - "

அ+வரி = அவ்வரி – இடையின மெய்

அ+ழகரம் = அவ்ழகரம் – "

அ+ளகரம் = அவ்ளகரம் – "

அ+காலம் = அக்காலம் – வல்லினமெய்

அ+மனிதன் = அம்மனிதன் – மெல்லின மெய்

இவ்வாறே பிறவும் வரக்காணலாம்.

**3.247 னகர வீறு கெட்டு அகர வீறாய் நிற்கும் உயர்திணைப் பெயர்கள் உயிர் முதற் சிறப்புப் பெயரோடு புணரின், அவ்வகரவீறு கெடும்.**

*(எ.டு).* அரங்க+ஆச்சாரி = அரங்காச்சாரி.

சாமிநாத+ஐயர் = சாமிநாதைய்யர்

**3.248 அது என்னும் சொல் தனித்து வரினும், சொல்லீறாய் வரினும் ஏகாரத் தோடு புணரும்போது உகரங் கெட்டும், கெடாதும் இரு வகையாய்ப் புணரும்.**

*(எ.டு).* அதே, அதுவே, அழைப்பதே, அழைப்பதுவே.

**3.249 குறு, நடு, நெடு, புது, சிறு என்ற சொற்கள் குற்றுயிரொடு புணரும்போது அவற்றின் ஈற்றுயிரேறிய மெய் இரட்டும்.**

*(எ.டு).* குற்றுயிர், நட்டாறு, நெட்டுயிர்ப்பு, புத்தூர், சிற்றன்னை.

நடுவூர் (நடு+ஊர்)

சீறடி (சிறு+அடி)

சிறியிலை (சிறு+இலை)

என்ற வழக்கும் சிறுபான்மையுண்டு.

<u>எண்ணுப் பெயர்கள் பிற சொற்களுடன் புணர்தல்</u>

**3.250 ஒன்று என்பது உயிர்க்கு முன் ஓர் என்றும், மெய்க்கு முன் ஒரு என்றும் திரியும்.**

*(எ.டு).* ஓர் ஊர், ஒரு மாந்தன்.

**3.251 ஓர் என்பது மெய் முன்னும் வருவது செய்யுட்கு ஏற்கும்; உரைநடைக்கு ஏற்காது.**

*(எ.டு).* "ஓர்யான்மன்ற".

**3.252 இரண்டு என்பது உயிர்க்கு முன் ஈர் என்றும் மெய்க்கு முன் இரு என்றும் திரியும்.**

*(எ.டு).* ஈர் ஆயிரம், இரு திணை.

**3.253 மூன்று என்பது உயிர்க்கு முன்னும் இடையின மெய்க்கு முன்னும் மூ என்றும் பிற மெய்கட்கு முன் மு என்றும் திரியும்.**

*(எ.டு).* மூவுலகு, மூவேந்தர், முக்காலம், மும்மழை.

**3.254 நான்கு என்பது நால் என்று திரியும்.**

*(எ.டு).* நாலாள், நாற்பொருள்.

**3.255 ஐந்து என்பது ஐ என்று திரியும்.**

*(எ.டு).* ஐயாயிரம், ஐம்பூதம், ஐந்நூறு.

**3.256 ஆறு என்பது உயிர்க்கு முன் இயல்பா யிருக்கும். மெய்க்கு முன் குறுகும்.**

*(எ.டு).* ஆறாயிரம், அறுகால்.

**3.257 ஏழு என்பது உயிர்க்கு முன் ஏழ் என்றும், மெய்க்கு முன் ஏழ், எழு என்றும் திரியும்.**

*(எ.டு).* ஏழுலகு, ஏழ்தெங்க நாடு, ஏழு பிறவி, எழுபது.

**3.258 எட்டு என்பது எண் எனத் திரியும்.**

*(எ.டு).* எண்ணாயிரம், எண்குணம்.

**3.259 இரண்டு முதல் எட்டு வரையுள்ள எண்ணுப் பெயர்கள் இரண்டு பேர், மூன்று நாள் எனத் திரியாது பெயரைத் தழுவும்; ஆயினும் அஃது அத்துணைச் சிறப்பின்று.**

*(எ.டு).* இரண்டு பேர், 'மூன்று அரசர்' எனின் அஃறிணை எச்சம் உயர்திணைப் பெயருக்கு அடையாய் வந்த வழுவாகிவிடும் என்பதால் தவிர்க்கத் தக்கது.

**3.260 முதற் பத்தெண்ணுப் பெயர்களும் பகிர்வுப் (Distributive) பொருளில் இரட்டும்.**

*(எ.டு).* ஒவ்வொன்று, இவ்விரண்டு, மும்மூன்று, நந்நான்கு, அவ்வைந்து, அவ்வாறு, எவ்வேழு, எவ்வெட்டு, ஒவ்வொன்பது, பப்பத்து எனப் புணரும்.

**3.261 ஒன்றொன்றாய், இரண்டிரண்டாய் என்பதினும், ஒவ்வொன்றாய், இவ்விரண்டாய் என்பது சாலச் சிறந்ததாகும். வெவ்வேறு (வேறு+வேறு) பப்பாதி (பாதி+பாதி) என்பனவும் இங்ஙனமே.**

*(எ.டு).* ஒன்று+ஒன்று – ஒவ்வொன்று.

இரண்டு+இரண்டு – இவ்விரண்டு

**3.262 ஒரு, இரு முதலிய எண்ணுப் பெயரெச்சங்களை உயர்திணைப் பெயர்க்கு முன் இடலாகாது.**

*(எ.டு).* ஒருவர் புலவர், இருவர் அரசர் அல்லது புலவர் ஒருவர், அரசர் இருவர் என்றெழுதுவதே இலக்கண மரபு.

**3.263 தனிக்குறிலையடுத்து ருகரமான சில பண்புச் சொற்கள், வருமொழி உயிர் முதலாயின் அடிநீண்டு ஈற்றுகரங்கெடும். வல்லின மெய் முதலாயின் திரியாது நின்று இனமெலி மிகும். மெல்லின இடையின மெய் முன் இயல்பாய் நிற்கும்.**

*(எ.டு).* பெரு – பேராசை (பெரு+ஆசை)

பெருங்குடி, பெருநிலம்.

**3.264 பெரிய என்ற 'இய' ஈற்றுப் பெயரெச்ச மாயின் உயிரோடு புணரும்போது உடம்படுமெய் பெற்றும் மெய்யோடு புணரும் போது இயல்பாயும் புணரும்.**

*(எ.டு).* பெரிய +அடி = பெரிய அடி

பெரிய+படி = பெரிய படி

**3.265 வருமொழி ஆகார முதலாயின், பெரிய என்பதன் ஈற்றகரம் அவ்வாகாரத்துள் அடங்கி விடும்.**

*(எ.டு).* பெரிய+ஆழ்வார்= பெரியாழ்வார்.

பெரிய+ஆண்டி = பெரியாண்டி

பெரும் ஆனை என்றெழுதுவது தவறு. பேரானை அல்லது பெரிய ஆனை என்றெழுத வேண்டும்.

**3.266 மெய்யெழுத்துகள் உயிரோடு கூடின் உயிர் மெய்யாகும். இஃது இயல்பு புணர்ச்சியே.**

*(எ.டு).* போய்+இருக்கிறான் = போயிருக்கிறான்.

**3.267 தனிக்குறிலையடுத்த மெய்கள் உயிரோடு கூடின் இரட்டும். இது திரிபு புணர்ச்சியாம்.**

*(எ.டு).*பொய்+உரைத்தான் = பொய்யுரைத்தான்.

போய்யிருக்கிறான் என்றெழுதுவது தவறு.

**3.268 ண், ம், ல், ன் என்ற மெய்கள் வல்லினத்தோடு புணரின் இருவழியிலும் பெரும்பாலும் பின்வருமாறு திரியும்.**

*(எ.டு).*

| எண் | எழுத்து | திரிபு | எடுத்துக்காட்டு |
|---|---|---|---|
| 1. | ண் | ட் | மண்+கலம் = மட்கலம் |
| 2. | ம் | ங் | மரம்+குறிது = மரங்குறிது |
| | | ஞ் | மரம்+சிறிது = மரஞ்சிறிது |
| | | ந் | மரம்+தழைக்கும் = மரந்தழைக்கும் |
| 3. | ல் | ற் | கல்+பலகை = கற்பலகை |
| 4. | ள் | ட் | கள்+குடம் = கட்குடம் |
| 5. | ன் | ற் | பொன்+பணி = பொற்பணி |

**3.269 ண், ள் என்னும் மெய்கள் தகரத்தொடு புணர்ந்து டகரமாகும்போது, அத் தகரமும் டகரமாகும்.**

*(எ.டு).* மண்+தாழி = மட்டாழி, மண்டாழி

முள்+தாழை = முட்டாழை

மட்தாழி, முட்தாழை என எழுதுதல் தவறு.

விற்போர் (வில்+போர்) என்பதை வில்போர் என்றெழுதுவது பெரும் பிழையன்று. வில்ப்போர் என்றெழுதுவது பெரும் பிழையாகும்.

**3.270 நகரம், ண், ள் என்ற மெய்களுக்குப் பின்வரின் ணகரமாகவும் இரு வழிகளிலும் திரியும்.**

ளகரத்தோடு புணர்ந்து நகரம் ணகரமாகும்போது அவ் லகரமும் ணகரமாகும்.

*(எ.டு).*

கண்+நீர் – கண்ணீர். ண்+ந – ண்ண

கள்+நீர் = கண்ணீர். ள்+ந – ண்ண

பொன்+நகை = பொன்னகை. ன்+ந – ன்ன

கல்+நகை = கன்னகை. ல்+ந–ன்ன.

மேற்கூறிய புணர்ச்சிகளுள் நிலைமொழியீறு தனிக்குறிலையடுத்த மெய்யாயிருந்தால்தான் புணர்ச்சியால் தோன்றிய இரு ணகரமும், இரு னகரமும் நிற்கும்.

**3.271 நெடிலை அல்லது பலவெழுத்துகளை யடுத்த மெய்யாயின் வருமொழி முதல் நகர மெய் நீங்கிய உயிரொடு புணரும் ளகர ஈறு ணகரமாகும்.**

*(எ.டு).* தூண்+நெடிது = தூணெடிது

ஆள்+நலம் = ஆணலம். பரண்+நீளம் = பரணீளம் பனங்கள்+நன்று = பனங்கணன்று.

**3.272 தந்தை பெயரும் மகன் பெயரும் முறையே நிலைமொழியும் வருமொழியுமாய் நின்று புணரின், நிலைமொழியீற்று னகரமெய் வருமொழி முதலிலுள்ள வல்லி னத்திற்கேற்ற மெல்லினமய்த் திரியும்.**

*(எ.டு).* கீரங்கொற்றன் – கீரன்மகனாகிய கொற்றன்.

பிட்டஞ்சாத்தன் – பிட்டன் மகனாகிய சாத்தன்.

**3.273 'ம்' என்ற மெய் நகரத்தொடு புணரும் போது, தான் தனிக்குறிலையடுத்த மெய் யாயின் நகரமாகத் திரியும். நெடிலை யல்லது பலவெழுத்துகளையடுத்த மெய் யாயின் கெடும்.**

*(எ.டு).* வெம்+நீர் = வெந்நீர் – திரிதல்

வேம்+நீர்= வேநீர்

பரம்+நெறி = பரநெறி = கெடுதல்

**3.274 தந்நகரமும் றன்னகரமும் ஏறத்தாழ ஒன்றுபோல் ஒலிப்பதால் அவற்றை ஒன் றிற்கு இன்னொன்றாக எழுதக்கூடாது. எழுதின் பொருள் மாறும்.**

*(எ.டு).* முந்நாள் = மூன்று+நாள்; (முன்னாள் – முன்+நாள்)

தந்நலம் – தம்+நலம்; தன்னலம் – தன்+நலம்.

**3.275 தனிக்குறிலையடுத்த யகர மெய்யின் பின்னும் தனி ஐகாரத்தின் பின்னும் வரும் மெல்லினம் மிகும்.**

*(எ.டு).* செய்+நன்றி – செய்ந்நன்றி

கை+மாறு = கைம்மாறு

**3.276 2ஆம் வேற்றுமைக்கும் 4ஆம் வேற்றுமைக்கும் பின் (வேற்றுமை விரியில்) வல்லினம் கட்டாயம் மிகும்.**

*(எ.டு).* பாடத்தைப் படித்தான்.

ஊருக்குப் போனான்.

**3.277 2ஆம், 4ஆம் வேற்றுமைத் தொகை யாயின் மிகாது.**

*(எ.டு).* உரைகண்டான் (2ஆம் வேற்றுமை)

ஊர் போனான் (4ஆம் வேற்றுமை)

**3.278 நிகழ்கால வினையெச்சத்திற்குப் பின்னும் (after the infinitive mood) அகர வீற்றுக் குறிப்பு வினையெச்சத்தின் பின்னும் வலி மிகும்.**

*(எ.டு).* செய்யப் போனான் (நி.கா.வி.எ.)

வலியச் சொன்னான் – கு.வி.எ.

விரைவாகப் பேசினான்

**3.279 யகர மெய்யீற்று இறந்த கால வினையெச்சங்களுக்குப் பின்னும் (past participle) குறிப்பு வினையெச்சத்திற்குப் பின்னும் வலி மிகும்.**

*(எ.டு).* போய்ப் படித்தான்– (இ.கா.வி.எ.)

ஆய்ப்போயிற்று

விரைவாய்ப் போனான் – கு.வி.எ.

ஆய் என்பது ஆ என்னும் பகுதியடியாகப் பிறந்த இறந்தகால வினையெச்சம்.

**3.280 அ, இ, உ, எ; அந்த, இந்த, உந்த, எந்த; அப்படி, இப்படி, உப்படி, எப்படி என்னும் சுட்டுச் சொற்களுக்குப் பின்னர் வலி மிகும்.**

*(எ.டு).* அப்பையன்,

அந்தப் பையன்,

அப்படிச் சொன்னான்.

**3.281 அங்கு, இங்கு,உங்கு, எங்கு; ஆங்கு, ஈங்கு, ஊங்கு, யாங்கு; ஆண்டு, ஈண்டு, யாண்டு என்னும் சுட்டு வினாச் சொற் களுக்குப் பின்னும் வலி மிகும்.**

*(எ.டு).* அங்குச் சென்றான்,

ஈண்டுத் தந்தான்,

யாண்டுப் பெற்றான்.

**3.282 அங்கு, அப்படி, ஆங்கு, ஆண்டு முதலியவை இறுதியில் ஏகாரம் பெறின் என்றும் இயல்பாம்.**

*(எ.டு).* அங்கே போனான்,

அப்படியே போனான்,

ஆங்கே சென்றான்,

ஆண்டே போனான்.

**3.283 படி என்னும் சொல் சுட்டு வினா எழுத்துகளையடுத்து வராமல் பெயரெச்சங்களையடுத்துவரின் இயல்பாம்.**

*(எ.டு).* சொன்னபடி செய்

சொல்லுகிறபடி செய்,

சொல்லும்படி செய்.

**3.284 ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்ச வினையெச்சங்களுக்கும் 'செய்யா' என்னும் வாய்பாட்டு வினையெச்சத்திற்குப் பின்னும் வலி மிகும்.**

*(எ.டு).* உண்ணாக்குதிரை – ஈ.எ.பெ.எ.

படியாச் சென்றான் – ஈ.எ.பெ.எ.

பெய்யாக் கொடுக்கும் – செ.வா.வி.எ.

**3.285 மகர ஈறு கெட்டுக் குறிப்புப் பெயரெச்சமாய் நிற்கும் பண்புப் பெயர்களுக்குப் பின் (பண்புத் தொகை) வலி மிகும்.**

*(எ.டு).* மரப்பலகை

வட்டக்கல்

**3.286 ட,ற இரட்டித்த நெடிற்றொடர் உயிர்த் தொடர்க் குற்றியலுகரச் சொற்கட்குப் பின்னும் வன்றொடர், மென்றொடர்க் குற்றியலுகரச் சொற்கள் நிலைமொழியாயமைந்த தொகைச் சொற்களிலும் வலி மிகும்.**

*(எ.டு).* ஆட்டுக்கால்,

முரட்டுப் பயல்

கிணற்றுத் தவளை

ஆற்றுப் பாய்ச்சல்

நூற்றுக் கணக்கு

(கேடுகாலம், பேறுகாலம், வீடுபேறு, நாடு கிழவோன் முதலிய நான்காம் வேற்றுமைத் தொகைகளில் ட,ற இரட்டா மையின் வலி மிகவில்லை).

<u>வன்றொடர்:</u> பட்டுத்துணி, கொக்குக்கால், பாட்டுக்கூட்டம், கிழக்குத் திசை.

<u>மென்றொடர்:</u> குண்டுக்கல், பாம்புத் தோல், கன்றுக்குட்டி, மருந்துப் பொருள்.

**3.287 சில மென்றொடர்க் குற்றியலுகரச் சொற்கள் புணர்ச்சியில் வன்றொடராவதும் உண்டு.**

*(எ.டு).* பாப்புத் தோல்,

மருத்துப்பை

**3.288 ஆறு என்னும் பெயர் எண்ணைக் குறிப்பின் இரட்டாது இயல்பாய்ப் புணரும்; பிறவற்றைக் குறிப் பின் இரட்டும்.**

*(எ.டு).* ஆறில் ஐந்தைக் கழி – எண்ணுப்பொருள்.

ஆற்றில் இறங்கு, அவ்வாற்றால் – பிற பொருள்

**3.289 புணர்ச்சியில் வன்றொடராகி 'அம்' சாரியை பெறாத மென்றொடர்க் குற்றியலு கரங்களுக்குப் பின்னர் வலி மிகும்.**

*(எ.டு).* இருப்புப்பாதை.

**3.290 ஐகாரச் சாரியை பெற்ற குற்றிய லுகரச் சொற்களுக்குப் பின்னர் வலிமிகும்.**

*(எ.டு).* பண்டைக் காலம், அற்றைக் கூலி,

ஒற்றைப்பனை, இரட்டைப் பிள்ளை.

**3.291 அத்து இற்றுச் சாரியைப் பெயர் களுக்குப் பின் வலி மிகும்.**

*(எ.டு).* பட்டினத்துப் பிள்ளையார்.

பதிற்றுப் பத்து.

**3.292 மு (பெ.எ.), எட்டு, பத்து என்னும் எண்ணுப் பெயர்களுக்குப் பின்னர் வலி மிகும்.**

*(எ.டு).* முக்கால், எட்டுத்தொகை, பத்துப்பாட்டு.

**3.293 உயிரையும் ய ர ழ மெய்களையும் இறுதியாகவுடைய நிலைமொழிகளுள்ள தொகைச் சொற்களில் (compound words) வலி மிகும்.**

*(எ.டு).* கிளிக்கூண்டு, இடைச்சேரி,

ஏப்புழை (ஏ–அம்பு), வாய்க்கால்,

ஊர்க்குருவி, தமிழ்ச்சங்கம், பயிர்க்கடன்.

**3.294 உயிரிசைவு மாற்றத்தால் (Harmonic sequence of vowels) நிலைமொழியீற்று உகரம் வருமொழி முதலிலுள்ள இகர ஈறாக ஒரு தன்மை எய்தும்.**

*(எ.டு).* குருசில்–குரிசில்.

**3.295 அன்றாடு வழக்கிலுள்ள சொல் இரு வேறு பொருளில் ஆளப்படுதலைத் தவிர்க்க பொருட்பாட்டுத் தெளிவுக்காக இடையில் ஏதேனும் ஓரெழுத்தை எழுத்துப் பேறாகப் பெறும்.**

*(எ.டு).* இல் – இல்லாள் (மனைவி).

இல் – இல்லான் (இச்சொல் கணவனைச் சுட்டாமல் கையில் ஒன்றும் இல்லாத ஏழையைச் சுட்டியது).

இல் – இல்லான் – இல்லாதான் (இல்லாதவன்) இல்லான் என்னும் சொல் வீட்டுக்குத் தலைவன் எனும் பொருளைச் சுட்டுவதைத் தவிர்ப்பதற்காக 'ஆ' என்னும் எதிர்மறை இடைநிலையை அடுத்து 'த்' எனும் எழுத்துப்பேறு சேர்க்கப்பட்டது.

மனை – மனைவி (வீட்டுக்குத் தலைவி)

மனைவி என்பதற்கு ஆண்பாற் சொல்லாக மனைவன் எனும் சொல் தோன்றவில்லை. தமிழர் மரபில் பெண்ணே இல்லத்தரசியாகத் தலைமை பூண்ட வழக்கத்தை நிலைநிறுத்தும் பொருட்டு மனைவன் எனும் சொல் உருப்பெறவில்லை.

**3.296 'அர்' எனும் பலர்பாலீறு ஒருமைப் பொருளில் உயர்வுப்பன்மை ஈறாக ஆளப் படுவது உலக வழக்கு. இது இலக்கண நெறியன்று என்பதால் ஈறு மயக்க வழு வமைதியாகக் கொள்ளப்படும்.**

*(எ.டு).* அவன் வந்தான் – அவர் வந்தார்.

ஒருவன் சொன்னான் – ஒருவர் சொன்னார்.

மன்னன் வந்தான் – மன்னர் வந்தார்.

**3.297 'அர்' எனும் பலர் பாலீறு செய்யுள் வழக்கில் மட்டும் முறைப்பெயரில் உயர்வுப் பன்மை குறித்து ஆளப்படுவது அருகிய வழக்கு வழுவமைதி எனப்படும். முறைப் பெயரில் 'ஆர்' ஈறு உயர்வுப் பன்மை சுட்டு வது உலக வழக்கு வழா நிலையாகும்.**

*(எ.டு).* தந்தை – தந்தையர். ('அர்' பலர் பாலீறு).

தந்தை – தந்தையார் ('ஆர்' உயர்வுப் பன்மையீறு.

அப்பன் – அப்பனார்.

அப்பனார் என்பதை அப்பார் என்பது உலக வழக்கு. **அப்பர்** என ஞானசம்பந்தர் திருநாவுக் கரசரை குறிப்பிட்டது செய்யுள் வழக்கில் ஆளப்பட்ட வழூஉச் சொல் எனினும் செய்யுள் வழுவமைதியாகக் கருதப்படுகிறது.

**3.298 ஆர், ஆர், மார் என்பன பலர் பாலீறுகள் எனினும் 'ஆர்' ஈறு ஒன்றே முறைப் பெயரிலும் இயற்பெயரிலும் உயர்வுப் பன்மை ஈறாகும். 'அர்', 'மார்' ஈறுகள் பலர் பாலில் மட்டும் வரும்.**

*(எ.டு).* <u>உயர்வுப் பன்மை</u>

1. அண்ணன் – அண்ணனார்

அண்ணி – அண்ணியார்

கண்ணன் – கண்ணனார்.

<u>பலர் பால்</u>

2. தம்பி – தம்பியர், தம்பிமார்

தங்கை – தங்கையர், தங்கைமார்

**3.299 எண்ணுப் பெயர்களில் நெடுமுதலாகிய எண்ணுப் பெயர்கள் புணர்மொழிகளான தொகைகளில் நெடுமுதல் குறுகும்.**

*(எ.டு).* ஆறு+பொழுது – அறுபொழுது.

ஏழு+நாள் – எழுநாள்.

**3.300 ஓடும் வெள்ளத்தைக் குறித்த ஆறு எனும் காட்சிப் பொருள் குறித்த சொல் எண்ணுப் பெயராகிய ஆறு எனும் கருத்துப் பொருளாகிய சொல்லும் பொருளால் வேறுபட்டு, சொல்லால் ஒத்திருப்பினும் தொகையாட்சியில் காட்சிப் பொருள் (பருப்பொருள்) சொற்களின் ஈறு இரட்டும். கருத்துப் பொருள் சொற்களில் வரும் ஈறு இரட்டாது.**

***(எ.டு).*** ஆறு+வெள்ளம் – ஆற்றுவெள்ளம் – (நெடில் தொடர் குற்றுகர ஈறு இரட்டித்தது).

த. ஆறு+கொடு – ஆறு கொடு (ஆறு பொருள் களைக் கொடு) எண்ணுப் பெயரில் ஈறு இரட்டிக்க வில்லை.

**3.301 'அன்' ஈறு ஒரு சொல் நீர்மைத் தாகவும், 'அவன்' ஈறு இரு சொல் நீர்மைத் தாகவும் அமையும்.**

***(எ.டு).*** மன்+அன்–மன்னன் (அரசன்)

மன்னன்+அவ்வன் – மன்னவ்வன் – மன்னவன் = தந்தை போல்வானாகிய மன்னன். அவ்வன் (தந்தை) – அவன் என இடைக்குறையாயிற்று).

**3.302 கூட்டுச் சொல்லில் வருமொழி யாகும் பெயர்ச்சொல் தன் பெயர்ப்பொருள் மறைந்து இடைச்சொல்லாகும்.**

***(எ.டு).*** தென்+அவன் – தென்னவன் = தென் திசைக்கண் உள்ளவன். 'அவன்' எனும் படர்க்கை ஆண்பால் ஒருமை சுட்டுப்பெயர் 'அன்' எனக் குறுகிப் பெயரீறாகி இடைச்சொல் தன்மை பெற்றது.

**3.303 செய்யுள் வழக்கில் மென்றொடர் குற்றுகர ஈற்று வினையெச்சம் இடைக் குறையாகும்.**

***(எ.டு).*** "கோடு கொடேறும் என் நெஞ்சு" (குறள்)

கோடு கொண்டு ஏறும் என்பதில் கொண்டு – கொடு என 'ண்' மறைந்து இடைக்குறையாயிற்று.

*There are three things that have to be explained in roots, such as we find them.*

*1. Their being intelligible not only to the speaker but to all who listen to him.*

*2. Their having a definite body of consonants and vowels.*

*3. Their expressing general concepts.*

MaxMuller

*"What is the origin of those roots which stand like a rampart between the chaos of sounds expressive of mere feelings and the kosmos of words expressive of concepts?".*

MaxMuller

## தமிழ் வினைச்சொற்கள்

1. அஃகு– தல் (5 செ.கு.வி.) சுருங்குதல்

2.அகல்(லு)– தல் (3 செ.கு.வி.) நீங்குதல்

3.அகவு– தல் (5 செ.கு.வி.) ஒலித்தல்

4. அகழ்– தல் (4 செ.குன்றாவி) தோண்டுதல்

5. அகை– தல் (4 செ.கு.வி.) செழித்தல்

அகை– த்தல் (11 செ.கு.வி.) கிளைத்தல்

6. அங்கா– த்தல் (11 செ.கு.வி.) வாய்திறத்தல்

7. அசங்கு– தல் (5 செ.கு.வி.) அசைதல்

8. அசக்கு– தல் (5 செ.குன்றாவி) அசைத்தல்

9. அசர்– தல் (4 செ.கு.வி.) அயர்தல்

10. அசாவு– தல் (5 செ.கு.வி.) தளர்தல்

11. அசிர்– த்தல் (11 செ.குன்றாவி) சந்தேகித்தல்

12. அசும்பு– தல் (5 செ.கு.வி.) ஒழுகுதல்

13. அசை– தல் (4 செ.கு.வி.) இயங்குதல்

14. அசை– த்தல் (11 செ.குன்றாவி) ஆட்டுதல்

15. அஞர்–தல் (4 செ.கு.வி.) சோம்புதல்

16. அடசு– தல் (5 செ.கு.வி.) செறிதல்

17. அடர்– தல் (4 செ.கு.வி.) நெருக்குதல்

23. அடர்–த்தல் (11 செ.குன்றாவி) அமுக்குதல்

24. அடாசு– தல் (5 செ.கு.வி.) விலகுதல்

25. அடி–த்தல் (4 செ.கு.வி.) விளையாடுதல்

26. அடு– தல் (6 செ.குன்றாவி) சமைத்தல்

27. அடு–த்தல் (11 செ.கு.வி.) சமீபமாதல்

28. அடை– தல் (4 செ.கு.வி.) சேர்தல்

29. அடை–த்தல் (11 செ.குன்றாவி) சேர்ப்பித்தல்

30. அண்டு– தல் (5 செ.குன்றாவி) கிட்டுதல்

31. அண்ணா–த்தல் (12 செ.கு.வி.) மேல்நோக்குதல்

32. அண்ணு– தல் (5 செ.குன்றாவி) கிட்டுதல்

33. அண்பு– தல் (5 செ.குன்றாவி) அண்மு–தல் பார்க்க

34. அண்மு– தல் (5 செ.குன்றாவி) அண்ணுதல்

35. அண–த்தல் (12 செ.கு.வி.) பொருந்துதல்

36. அணங்கு– தல் (5 செ.கு.வி.) வருந்துதல்

37. அணர்– தல் (4 செ.கு.வி.) மேனோக்கிச் செல்லுதல்

38. அணவா– தல் (18 செ.கு.வி.) மேலுயர்த்தப்படுதல்

39. அணவு– தல் (5 செ.குன்றாவி) அணுகுதல்

40. அணாப்பு– தல் (5 செ.குன்றாவி) ஏமாற்றுதல்

41. அணாவு– தல் (5 செ.குன்றாவி) கிட்டுதல்

42. அணி– தல் (2 செ.கு.வி.) அழகாதல்

43. அணுகு– தல் (5 செ.குன்றாவி) கிட்டுதல்

44. அணை– தல் (2 செ.கு.வி.) உண்டாதல், பிறத்தல்

45. அணை–த்தல் (4 செ.குன்றாவி) உண்டாக்குதல்

46. அத்து– தல் (5 செ.குன்றாவி) அப்புதல்

47. அதக்கு– தல் (5 செ.குன்றாவி) மெல்ல அமுக்குதல்

48. அதட்டு– தல் (5 செ.குன்றாவி) உறுக்குதல்

49. அதம்பு– தல் (5 செ.குன்றாவி) அடங்காது பேசுதல்

50. அதவு– தல் (5 செ.குன்றாவி) எதிர்த்து நெருக்குதல்

51. அதறு– தல் (5 செ.கு.வி.) பதறுதல்

52. அதி–த்தல் (4 செ.கு.வி.) மிகுதல்

53. அதிர்– தல் (2 செ.கு.வி.) குலுங்குதல்

54. அதிர்–த்தல் (4 செ.கு.வி.) முழங்குதல்

55. அதுக்கு– தல் (5 செ.குன்றாவி) அமுக்குதல்

56. அதும்பு– தல் (5 செ.கு.வி.) மொய்த்தல்

57. அதை–த்தல் (4 செ.கு.வி.) வீங்குதல்

58. அப்பளி–த்தல் (4 செ.குன்றாவி) சுவரிற் சாந்து பூசும்போது சமனாக்கித் தேய்த்தல்

59. அப்பு– தல் (5 செ.குன்றாவி) பூசுதல்

60. அம்பறு–த்தல் (4 செ.கு.வி.) அம்பைத் தூணியினின்று உருவுதல்

61. அம்மு– தல் (5 செ.கு.வி.) முகில் படிந்து வானம் மந்தாரமாதல்

62. அமட்டு– தல் (5 செ.கு.வி.) புரளுதல்

63. அமர்– தல் (2 செ.கு.வி.) இருத்தல்

64. அமர்–த்தல் (4 செ.கு.வி.) பொருதல், மாறுபடுதல்

65. அமல் – தல் (3 செ.கு.வி.) நெருங்குதல்

66. அமிழ்– தல் (4 செ.கு.வி.) ஆழ்தல்

67. அமிழ்த்து– தல் (5 செ.குன்றாவி) ஆழ்த்துதல்

69. அமுங்கு– தல் (5 செ.கு.வி) அமிழ்தல்

70. அமுக்கு– தல் (5 செ.குன்றாவி) அழுத்துதல்

71. அமை– தல் (4 செ.கு.வி) அடங்குதல்

72. அமைத்– தல் (11 செ.குன்றாவி) செய்து முடித்தல்

73. அயங்கு– தல் (5 செ.குன்றாவி) விளங்குதல்

74. அயக்கு– தல் (5 செ.குன்றாவி) அசைத்தல்

75. அயர்– தல் (4 செ.கு.வி.) தளர்தல்

76. அயர்–த்தல் (11 செ.குன்றாவி) மறத்தல்

77. அயர்க்கு– தல் (4 செ.குன்றாவி) மறத்தல்

78. அயல்– தல் (3 செ.கு.வி.) காரம் உறைத்தல்

79. அயாவு– தல் (5 செ.கு.வி.) வருந்துதல்

80. அயிர்–த்தல் (11 செ.கு.வி.) ஐயமுறுதல்

81. அயில்– தல் (3 செ.குன்றாவி.) உண்ணுதல்

82. அரங்கு– தல் (5 செ.கு.வி.) அம்பு முதலியன தைத்தல்

83. அரக்கு– தல் (5 செ.குன்றாவி) தேய்த்தல்

84. அரசளித்– தல் (4 செ.குன்றாவி) அரசாளுதல்

85. அரட்டு– தல் (5 செ.குன்றாவி) அச்சுறுத்தல்

86. அரணி–த்தல் (4 செ.கு.வி.) உரத்தல், கடினப்படுதல்

87. அரள்(ளு)– தல் (16 செ.கு.வி.) மாமேச்சல் கொள்ளுதல்

88. அரற்று– தல் (5 செ.கு.வி) திடுமென்று அஞ்சிக் கதறுதல்

89. அரறு– தல் (5 செ.கு.வி.) பேரொலி செய்தல், முழங்குதல்

90. அராகி–த்தல் (4 செ.கு.வி.) செய்யுளோசை இடையறாது கடுகிச் செல்லுதல்

91. அராத்து– தல் (5 செ.குன்றாவி) அராவுதல்

92. அரவு– தல் (5 செ.கு.வி.) மாறுபடுதல்

93. அரி– தல் (2 செ.குன்றாவி) நெல், சாமை, வரகு முதலியவற்றின் தாளையறுத்தல்

அரித்– தல் (11 செ.கு.வி.) தினவெடுத்தல்

94. அருக்கு– தல் (5 செ.கு.வி.) அஞ்சுதல்

95. அருகு– தல் (5 செ.கு.வி.) குறைதல்

96. அருந்து– தல் (5 செ.குன்றாவி) உண்ணுதல்

97. அரும்பு– தல் (5 செ.கு.வி.) அரும்பு தோன்றுதல்

98. அருள்(ளு)– தல் (11 செ.கு.வி.) இரக்கங்காட்டுதல்

99. அரை– தல் (2 செ.கு.வி.) தேய்தல்

100. அரை–த்தல் (4 செ.குன்றாவி) தேய்த்தல், அம்மி முதலியவற்றால் அரைத்தல்

101. அல்கு– தல் (5 செ.கு.வி.) தங்குதல்

102. அல்லா–த்தல் (3 செ.கு.வி.) துன்புறுதல்

103. அல்லு– தல் (5 செ.கு.வி.) பின்னிக்கொள்ளுதல்

104. அல–த்தல் (3 செ.கு.வி.) அலைதல்

105. அலங்கு– தல் (5 செ.கு.வி.) அசைதல்

106. அலக்கு– தல் (5 செ.குன்றாவி) அசைவித்தல்

107. அலசு– தல் (5 செ.கு.வி.) அசைதல்

108. அலட்டு– தல் (5 செ.கு.வி.) வீண் பேச்சுப் பேசுதல்

109. அலம்பு– தல் (5 செ.கு.வி.) ஒலித்தல்

110. அலப்பு– தல் (5 செ.கு.வி.) வீண் பேச்சு பேசுதல்

111. அலர்– தல் (2 செ.கு.வி.) மலர்தல், பூ விரிதல்

112. அலற்று– தல் (5 செ.கு.வி.) இடைவிடாமலும் முறையின்றியும் பேசுதல்

113. அல று– தல் (5 செ.கு.வி.) அச்சத்தால் திடுமென்று கதறுதல்

114. அலுங்கு– தல் (5 செ.கு.வி.) சிறிது அசைதல்

115. அலுக்கு– தல் (5 செ.குன்றாவி) சிறிது அசைத்தல்

116. அலை– தல் (2 செ.கு.வி.) அசைதல்

117. அலை–த்தல் (4 செ.கு.வி.) அலைமோதுதல்

118. அவ்வி–த்தல் (4 செ.கு.வி.) பொறுமை நீங்குதல்

119. அவலி–த்தல் (4 செ.கு.வி.) வருந்துதல்

120. அவி– தல் (2 செ.கு.வி.) வேதல், சமைதல்

121. அவி–த்தல் (5 செ.குன்றாவி) வேகவைத்தல்

122. அவிர்– தல் (2 செ.கு.வி.) விளங்குதல், ஒளிர்தல்

123. அவிழ்– தல் (5 செ.கு.வி.) நெகிழ்தல்

124. அவிழ்–த்தல் (4 செ.குன்றாவி) கட்டு நீக்குதல்

அவை–தல் (5 செ.குன்றாவி) அவித்தல்

125. அழல்– தல் (13 செ.கு.வி.) எரிதல்

126. அழற்று– தல் (5 செ.குன்றாவி) வெம்மை செய்தல்

127. அழி– தல் (2 செ.கு.வி.) நாசமாதல்

128. அழி–த்தல் (4 செ.குன்றாவி) நாசஞ் செய்தல்

129. அழு– தல் (1 செ.கு.வி.) கண்ணீர் விட்டுக் கதறி வருந்துதல்

130. அழுங்கு– தல் (5 செ.கு.வி.) வருந்துதல்

131. அழுந்து– தல் (5 செ.கு.வி.) அமுங்குதல்

132. அழுத்து– தல் (5 செ.குன்றாவி) அழுந்தச் செய்தல்

133. அழும்பு– தல் (5 செ.கு.வி.) செறியக்கலத்தல்

134. அழைத்– தல் (4 செ.கு.வி.) கூப்பிடுதல்

135. அழைப்பித்– தல் (1 பி.வி.) தருவித்தல்

136. அள்ளு– தல் (5 செ.கு.வி.) செறிதல்

137. அள–த்தல் (3 செ.கு.வி.) கலத்தல்

138. அளவு– தல் (5 செ.கு.வி.) விரவுதல்

139. அளாவு– தல் (5 செ.கு.வி.) கலத்தல்

140. அளறு– தல் (5 செ.கு.வி.) நெரிதல்

141. அளி– தல் (2 செ.கு.வி) செறிதல்

142. அளி–த்தல் (4 செ.குன்றாவி) செறித்தல்

143. அளை– தல் (2 செ.குன்றாவி) தழுவுதல்

144. அறாவு– தல் (5 செ.குன்றாவி) அடித்தல்

145. அறி– தல் (2 செ.குன்றாவி) ஐம்புலனால் உணர்தல்

146. அறு– தல் (20 செ.கு.வி.) கயிறு முதலியன இறுதல்

147. அறு–த்தல் (4 செ.குன்றாவி) மன்னறுவாளாற் கதிரறுத்தல்

148. அறை– தல் (2 செ.குன்றாவி) அடித்தல்

149. அன்று– தல் (5 செ.குன்றாவி) சினத்தல்

150. அனல்(லு)– தல் (13 செ.கு.வி) அழலுதல்

151. ஆ– தல் (6 செ.கு.வி.) உண்டாதல்

152. ஆ–த்தல் (5 செ.குன்றாவி) கட்டுதல்

153. ஆக்கு– தல் (5 செ.குன்றாவி) செய்தல்

154. ஆகு– தல் (7 செ.கு.வி.) உண்டாதல்

155. ஆங்கு– தல் (7 செ.கு.வி.) போதியதாதல்

156. ஆசி–த்தல் (11 செ.குன்றாவி) விரும்புதல்

157. ஆசிடு– தல் (12 செ.கு.வி.) பொன் நகைகளிற் பற்றாசு வைத்தல்

158. ஆட்டு– தல் (5 செ.குன்றாவி) அசைத்தல்

159. ஆடு– தல் (5 செ.கு.வி.) அசைதல்

160. ஆதரி–த்தல் (11 செ.குன்றாவி) பாதுகாத்தல்

161. ஆய் – தல் (2 செ.கு.வி.) நுணுகுதல்

162. ஆர்– தல் (2 செ.கு.வி.) ஒலித்தல்

163. ஆர்–த்தல் (தொ.பெ.) அணிதல்

164. ஆர்த்து– தல் (5 செ.குன்றாவி) கொடுத்தல்

165. ஆரம்பி–த்தல் (4 செ.குன்றாவி) தொடங்குதல்

166. ஆலி–த்தல் (4 செ.கு.வி.) ஒலித்தல்

167. ஆலு– தல் (5 செ.கு.வி.) ஒலித்தல்

168. ஆவரி– த்தல் (14 செ.குன்றாவி) மறைத்தல்

169. ஆவலி–த்தல் (4 செ.கு.வி.) அழுதல், புலம்பல்

170. ஆவி–த்தல் (4 செ.கு.வி.) வாய்விடுதல்

171. ஆழ்– தல் (1 செ.குன்றாவி) அகழ்தல்

172. ஆழ்த்து– தல் (12 செ.குன்றாவி) அமிழ்த்துதல்

173. ஆழா–த்தல் (11 செ.குன்றாவி) முகத்தல் முகந்து அளத்தல்

174. ஆழித்– தல்

175. ஆள்(ளு)– தல் (2 செ.குன்றாவி) அரசு செய்தல்

176. ஆளா– தல் (9 செ.கு.வி.) அடிமையாதல்

177. ஆறு– தல் (10 செ.கு.வி.) நீங்குதல்

ஆற்று– தல் (தொ.பெ.) புண்ணைக் குணப்படுத்துதல்

178. இளஃகு–தல் (5 செ.கு.வி.) தளிர்த்தல்

179. இளகு–தல் (7 செ.கு.வி.) நெகிழ்தல்·

180. இளக்கு–தல் (3 செ.குன்றாவி) நெகிழச் செய்தல்

181. இளி–தல் (4 செ.குன்றாவி) இனுக்குதல்

இரங்கு–தல் (5 செ.கு.வி.) பரிதவித்தல்

இரத்–தல் (3 செ.குன்றாவி) பிச்சையெடுத்தல்

இகு–தல் (6 செ.கு.வி.) கரைந்துவிழுதல்

182. இகு–த்தல் (11 V.caus) கொல்லுதல்

183. இச்சி–த்தல் (11 செ.குன்றாவி) விரும்புதல்

184. இசங்கு– தல் (5 செ.கு.வி.) போதல்

185. இசல்(லு)– தல் (5 செ.கு.வி.) மாறுபடுதல்

186. இசி– தல் (11 செ.கு.வி.) நரம்பிழுத்தல்

187. இசை–த்தல் (11 செ.கு.வி.) ஒலித்தல்

188. இசை– தல் (4 செ.கு.வி.) பொருந்துதல்

189. இஞ்சு– தல் (5 செ.கு.வி.) சுண்டுதல்

190. இடத்– தல் (12 செ.கு.வி.) பிளவுபடுதல்

191. இடக்கு– தல் (5 செ.கு.வி.) விடுதல்

192. இடறு– தல் (5 செ.கு.வி.) கால் தடுக்குதல்

193. இடாசு– தல் (5 செ.குன்றாவி) மோதுதல்

194. இடி– தல் (4 செ.கு.வி.) தகர்தல்

195. இடி–த்தல் (11 செ.கு.வி.) முழங்குதல்

196. இடு– தல் (6 செ.குன்றாவி) வைத்தல்

197. இடுங்கு– தல் (5 செ.கு.வி.) உள்ளொடுங்குதல்

198. இடுக்கு– தல் (5 செ.குன்றாவி) கவ்வுதல்

199. இடை– தல் (4 செ.கு.வி.) சோர்தல்

200. இணங்கு– தல் (5 செ.கு.வி.) பொருந்துதல்

201. இணக்கு– தல் (5 செ.குன்றாவி) இசைவித்தல்

202. இணர்– தல் (2 செ.கு.வி) நெருங்குதல்

203. இனுங்கு– தல் (5 செ.குன்றாவி) பறித்தல்

204. இனுக்கு– தல் (6 செ.குன்றாவி) பறித்தல்

205. இணை– தல் (2 செ.கு.வி.) சேர்தல்

206. இணைத்– தல் (4 செ.குன்றாவி) கட்டுதல்

207. இமிர்– தல் (2 செ.கு.வி.) உலர்தல்

208. இமிழ்– தல் (2 செ.கு.வி.) ஒலித்தல்

209. இமிழ்–த்தல் (3 செ.குன்றாவி) கட்டுதல்

210. இமைத்– தல் (4 செ.குன்றாவி) இமை கொட்டுதல்

211. இயங்கு– தல் (15 செ.கு.வி.) அசைதல்

212. இயக்கு– தல் (5 செ.குன்றாவி) செலுத்துதல்

213. இயம்பு– தல் (11 செ.கு.வி.) ஒலித்தல்

214. இயல்(லு)– தல் (13 செ.கு.வி.) சித்திரம் முதலியன எழுதுதல்

215. இயை– தல் (2 செ.கு.வி.) பொருந்துதல்

216. இயை–த்தல் (2 செ.குன்றாவி) பொருத்துதல்

217. இர–த்தல் (3 செ.குன்றாவி) பிச்சையெடுத்தல்

218. இரங்கு– தல் (15 செ.கு.வி.) பரிவு காட்டுதல்

219. இரட்டு– தல் (5 செ.கு.வி.) இரட்டித்தல்

220. இரட்டு– தல் (5 செ.கு.வி.) இரு பொருள்படுதல்

221. இரி– தல் (4 செ.கு.வி.) கெடுதல், தோற்றோடுதல்

222. இரி–த்தல் (4 செ.குன்றாவி) தோற்றோடச் செய்தல்

223. இருத்– தல் (2 செ.கு.வி.) உளதாதல்

224. இருத்து– தல் (5 செ.குன்றாவி) உட்காரச் செய்தல்

225. இருள்(ளு)– தல் (16 செ.கு.வி.) ஒளிமங்குதல், இருட்டாதல்

226. இரை– தல் (2 செ.கு.வி.) ஒலித்தல்

227. இரை–த்தல் (2 செ.கு.வி.) மூச்சு வாங்குதல்

228. இலங்கு– தல் (5 செ.குன்றாவி) வெட்டுதல். குழித்தல்

229. இலக்கு– தல் (5 செ.குன்றாவி) ஒளிர்தல்

230. இலகு– தல்(7 செ.கு.வி.) விளங்குதல்

231. இலங்கு–த்தல் (5 செ.கு.வி.) பிரகாசித்தல்

232. இலயி–த்தல்

233. இலிர்– தல்

இலிர்–த்தல் (9 செ.குன்றாவி) சிலிர்த்தல்

234. இலிற்று– தல் (5 செ.குன்றாவி) சுரத்தல்

235. இலை–த்தல் (4 செ.கு.வி.) சோர்தல்

236. இவர்– தல் (15 செ.கு.வி.) உயர்தல்

237. இவரி–த்தல் (18 செ.குன்றாவி) எதிர்த்தல்

238. இவறு– தல் (8 செ.குன்றாவி) விரும்புதல்

239. இழத்– தல் (3 செ.குன்றாவி) தவறவிடுதல்

240. இழி– தல் (2 செ.கு.வி.) இறங்குதல்

241. இழி–த்தல் (2 செ.குன்றாவி) இறக்குதல்

242. இழிசு– தல் (12 செ.குன்றாவி) பூசுதல்

243. இழிச்சு– தல் (12 செ.குன்றாவி) இறக்குதல்

244. இழித்து– தல் (12 செ.குன்றாவி) வரி நீக்குதல்

245. இழுத்– தல் (4 செ.குன்றாவி) ஈர்த்தல்

246. இழுக்கு– தல் (7 செ.கு.வி.) தவறுதல்

247. இழை– தல் (2 செ.கு.வி.) மெலிதல்

248. இழைத்– தல் (4 செ.குன்றாவி) நூற்றல்

249. இளஃகு– தல் (7 செ.கு.வி.) நெகிழ்தல்

250. இளி– தல் (4 செ.குன்றாவி) இணுக்குதல்

251. இளித்– தல் (4 செ.குன்றாவி) இகழ்தல்

252. இளைத்– தல் (4 செ.கு.வி.) சோர்தல்

253. இற–த்தல் (3 செ.குன்றாவி) கடத்தல்

254. இறங்கு– தல் (5 செ.கு.வி.) விட்டு நீங்குதல்

255. இறக்கு– தல் (15 செ.கு.வி.) இறங்கச் செய்தல்

256. இறட்டு– தல் (5 செ.குன்றாவி) முகந்து வீசுதல்

257. இறாஞ்சு– தல் (5 செ.குன்றாவி) பறவையறைதல்

258. இறாட்டு– தல் (5 செ.குன்றாவி) உரைசுதல்

259. இறு– தல் (4 செ.கு.வி.) முறிதல்

260. இறுத்– தல் (4 செ.குன்றாவி) முறித்தல்

261. இறுகு– தல் (5 செ.கு.வி.) முடிச்சு முதலியன நெகிழாது அழுத்தமாதல்

262. இறுக்கு– தல் (5 செ.குன்றாவி) அழுந்தக்கட்டுதல்

263. இறுமா–த்தல் (19 செ.கு.வி.) பெருமை பாராட்டுதல்

264. இறை– தல் (2 செ.கு.வி.) வணங்குதல்

265. இறை–த்தல் (4 செ.குன்றாவி) நீரை வீசித் தெளித்தல்

266. இனித்– தல் (4 செ.கு.வி.) தித்தித்தல்

267. இனை– தல் (2 செ.கு.வி.) வருந்துதல்

268. இனை–த்தல் (4 செ.குன்றாவி) வருத்துதல்

269. ஈ– தல் (2 செ.குன்றாவி) ஈனுதல்

270. ஈண்டு– தல் (15 செ.கு.வி.) கூடுதல்

271. ஈர்– தல் (2 செ.குன்றாவி) அறுத்தல்

272. ஈர்–த்தல் (2 செ.குன்றாவி) இழுத்தல்

273. ஈரி–த்தல் (4 செ.கு.வி.) ஈரமாதல்

274. ஈவி–த்தல் (4 செ.குன்றாவி) பங்கிடுதல்

275. உக்கரி–த்தல் (4 செ.குன்றாவி) வாயாலெடுத்தல்

276. உக்கு– தல் (5 செ.கு.வி.) மக்கிப்போதல்

278. உக–த்தல் (3 செ.கு.வி.) உயர்தல்

279. உகட்டு– தல் (20 செ.கு.வி.) அருவருப்பாதல்

280. உகளு– தல் (5 செ.கு.வி.) தாவுதல்

281. உகளி–த்தல் (4 செ.கு.வி.) குதித்தல்

282. உகு– தல் (21 செ.கு.வி.) உதிர்தல்

283. உகு–த்தல் (4 செ.குன்றாவி) சிதறச் செய்தல்

284. உகை– தல் (4 செ.கு.வி.) செல்லுதல்

285. உகை–த்தல் (4 செ.குன்றாவி) செலுத்துதல்

286. உங்கரி–த்தல் (4 செ.கு.வி.) உம்மென்றொலிதல்

287. உசவு– தல் (5 செ.குன்றாவி) சிந்தித்தல்

288. உசாவு– தல் (5 செ.குன்றாவி) சிந்தித்தல்

உசுப்பு–தல் (5 செ.குன்றாவி) எழுப்புதல்

289. உசுப்பி –த்தல் (5 செ.குன்றாவி) சேர்த்தல்

290. உசும்பு– தல் (5 செ.கு.வி.) அசைதல்

291. உசுப்பு– தல் (5 செ.கு.வி.) எழுப்புதல்

292. உஞற்று– தல் (5 செ.குன்றாவி) முயலுதல்

293. உட்கு– தல் (5 செ.கு.வி.) அஞ்சுதல்

294. உடக்கு– தல் (5 செ.குன்றாவி) செலுத்துதல்

295. உடல்(லு)– தல் (13 செ.கு.வி.) சீற்றங்கொள்ளுதல்

296. உடறு– தல் (5 செ.கு.வி,) சினத்தல்

297. உடற்று– தல் (5 செ.குன்றாவி) பொருதல்

298. உடு–த்தல் (18 செ.குன்றாவி) சேர்தல், பொருந்துதல்

299. உடை– தல் (3 செ.கு.வி) தகர்தல்

300. உடை–த்தல் (4 செ.குன்றாவி) தகர்த்தல்

301. உண்(ணு)– தல் (13 செ.குன்றாவி) உண்ணுதல்

302. உண்டா– தல் (6 செ.கு.வி.) உளதாதல்

303. உணங்கு– தல் (செ.கு.வி.) உலர்தல்

304. உணத்து– தல் (5 செ.குன்றாவி) காயவிடுதல்

305. உணர்– தல் (2 செ.குன்றாவி) அறிதல்

306. உணர்த்து– தல் (15 செ.கு.வி.) அறிவித்தல்

307. உதவு– தல் (5 செ.குன்றாவி) கொடுத்தல்

308. உதி–த்தல் (4 செ.கு.வி.) எழுதல், உதயமாதல்

309. உதிர்– தல் (2 செ.கு.வி.) கீழ்விழுதல்

310. உதிர்–த்தல் (2 செ.குன்றாவி) வீழ்த்துதல்

311. உதை– தல் (4 செ.குன்றாவி) காலால் எற்றுதல்

312. உதை–த்தல் (4 செ.குன்றாவி) காலாலெற்றுதல்

313. உந்து– தல் (5 செ.குன்றாவி) தள்ளுதல்

314. உப்பு– தல் (15 செ.கு.வி.) பருத்தல்

315. உபுக்கு– தல்

316. உமி– தல் (4 செ.குன்றாவி) கொப்புளித்தல்

317. உமி–த்தல் (2 செ.கு.வி.) கொப்புளங்கொள்ளுதல்

318. உமிழ்– தல் (2 செ.குன்றாவி) துப்புதல்

319. உய் – தல் (2 செ.கு.வி.) பிழைத்தல்

320. உய்த்– தல் (4 செ.குன்றாவி) உய்யச்செய்தல்

321. உயங்கு– தல் (5 செ.கு.வி.) வருந்துதல்

322. உயர்– தல் (4 செ.கு.வி.) மேலெழுதல்

323. உயர்த்– தல் (4 செ.கு.வி.) மேலெழுதல்

324. உயர்த்து– தல் (5 செ.குன்றாவி) அதிகப்படுத்துதல்

325. உயல்(லு)– தல் (13 செ.கு.வி.) அசைதல்

326. உயவு– தல் (5 செ.கு.வி.) வருந்துதல்

327. உயிர்–த்தல் (4 செ.கு.வி.) உயிர் பெற்றெழுதல்

328. உரத்– தல் (3 செ.கு.வி.) கெட்டியாதல்

329. உரசு– தல் (10 செ.கு.வி.) உராய்தல்

330. உரப்பு– தல் (15 செ.கு.வி.) அதட்டியொலித்தல்

331. உரவு– தல் (5 செ.கு.வி.) உலாவுதல்

332. உரறு– தல் (5 செ.கு.வி.) முழங்குதல்

333. உரற்று– தல் (5 செ.கு.வி.) முழங்குதல்

334. உராவு– தல் (5 செ.கு.வி.) பரவுதல்

335. உரி– தல் (4 செ.குன்றாவி) ஆடை களைதல்

336. உரி–த்தல் (2 செ.குன்றாவி) தோல், பட்டை முதலியவற்றைக் கழற்றுதல்

337. உரிஞ்சு– தல் (5 செ.கு.வி.) உராய்தல்

338. உரு–த்தல் (4 செ.கு.வி.) பெருஞ்சினங் கொள்ளுதல்

339. உருகு– தல் (9 செ.கு.வி.) வெப்பத்தால் இளகுதல்

340. உருக்கு– தல் (5 செ.குன்றாவி) இளகிவிழச் செய்தல்

341. உருட்டு– தல் (5 செ.குன்றாவி) உருளச்செய்தல்

342. உருள்– தல் (16 செ.கு.வி.) தொடர்ந்து புரளுதல்

343. உருமி–த்தல் (4 செ.கு.வி.) வெப்பமாதல்

344. உருமு– தல் (5 செ.கு.வி.) உரப்புதல்

345. உருவு– தல் (7 செ.கு.வி.) தப்பித்துக் கொள்ளுதல்

உருள் (ளு)–தல் (16 செ.கு.வி.) தொடர்ந்து புரளுதல்

346. உரை– தல் (3 செ.கு.வி.) தேய்தல்

347. உரை–த்தல் (3 செ.குன்றாவி) தேய்த்தல்

348. உல–த்தல் (3 செ.கு.வி.) குறைதல்

349. உலம்பு– தல் (15 செ.கு.வி.) பேரொலி செய்தல்

350. உலவித்– தல் (4 செ.கு.வி.) கூசியொழுகுதல்

351. உலவு– தல் (5 செ.கு.வி.) திரிதல்

352. உலாவு– தல் (6 செ.கு.வி.) அலைதல்

353. உலறு– தல் (5 செ.கு.வி.) வற்றுதல்

354. உலாஞ்சு– தல் (5 செ.கு.வி.) அசைந்தாடுதல்

355. உலாத்து– தல் (6 செ.கு.வி.) உலாவச் செய்தல்

356. உலுக்கு– தல் (5 செ.குன்றாவி) குலுக்குதல்

357. உலுத்து– தல் உலுப்புத–தல் பார்க்க

358. உலுப்பு– தல் (8 செ.குன்றாவி) உதிர்த்தல்

359. உலு–த்தல் (8 செ.குன்றாவி) உதிர்த்தல்

360. உலை– தல் (2 செ.கு.வி.) நிலைகுலைதல்

361. உலை–த்தல் (5 செ.குன்றாவி) கெடுத்தல்

362. உவட்டு– தல் (5 செ.கு.வி.) வெறுப்புறுதல்

363.உவர்–த்தல் (5 செ.கு.வி.) உப்புக்கரித்தல்

364. உவள்(ளு)– தல் (15 செ.கு.வி.) துவளுதல்

365. உவற்று– தல் (6 செ.குன்றாவி) சுரக்கச் செய்தல்

366. உவளி–த்தல் (4 செ.குன்றாவி) தூய்மை செய்தல்

367. உவறு–தல் (6 செ.கு.வி.) சுரத்தல்

368. உவி– தல் (2 செ.கு.வி.) வற்றுதல்

369. உவி–த்தல் (18 செ.குன்றாவி) அவித்தல்

370. உழத்– தல் (3 செ.கு.வி.) வருந்துதல்

371. உழக்கு– தல் (5 செ.குன்றாவி) கலக்குதல்

372. உழப்பு– தல் (6 செ.குன்றாவி) சொற்களால் மழுப்புதல்

373. உழல்(லு)– தல் (13 செ.கு.வி.) அசைதல்

374. உழற்று– தல் (6 செ.குன்றாவி) அலையச் செய்தல்

375.உழறு– தல் (5 செ.கு.வி.) அலைதல்

376. உழி– தல் (2 செ.கு.வி.) அலைதல்

உழி–த்தல்

377. உழு– தல் (1 செ.குன்றாவி) உகளுதல்

378. உழு–த்தல் (2 செ.கு.வி.) பதனழிதல்

உழை–தல்

379. உழை–த்தல் (4 செ.கு.வி.) முயற்சி செய்தல்

380. உள்கு– தல் (2 செ.கு.வி.) உள்ளழிதல்

381. உள்ளு– தல் (6 செ.குன்றாவி) நினைதல்

382. உள்ளுறு–த்தல் (4 செ.குன்றாவி) உட்செலுத்துதல்

383. உளம்பு– தல் (6 செ.குன்றாவி) அலைத்தல்

384. உளர்– தல் (5 செ.குன்றாவி) கோதுதல்

385. உளறு– தல் (10 செ.கு.வி.) ஆரவாரித்தல்

386. உளு–த்தல் (4 செ.கு.வி.) மரம் முதலியவை புழுவால் அரிக்கப்பட்டு கெடுதல்

387. உளுக்கா–த்தல் (4 செ.கு.வி.) உள்ளொடுங்குதல் ஓரிடத்தில் இருத்தல்

388. உளுக்கு– தல் (15 செ.கு.வி.) சுளுக்குதல்

389. உளை– தல் (2 செ.கு.வி.) குடைச்சல் நோவடைதல்

390. உளை–த்தல் (2 செ.குன்றாவி) வருத்துதல்

391. உற்கு– தல் (5 செ.கு.வி.) விண்ணினின்றும் எரி கொள்ளி விழுதல்

392. உற்குவி–த்தல்

393. உற–த்தல் (3 செ.கு.வி.) சிறிதாதல்

394. உறங்கு– தல்

395. உறக்கு– தல் (5 செ.குன்றாவி) தூங்கச் செய்தல்

396. உறண்டு– தல் (5 செ.குன்றாவி) வறளுதல்

397. உறட்டு– தல் (6 செ.குன்றாவி) வறட்டுதல்

398. உறழ்– தல் (2 செ.கு.வி.) வேறுபடல்

399. உறாவு– தல் (7 செ.கு.வி.) சோர்தல்

400. உறி– தல் (2 செ.குன்றாவி) உறிஞ்சுதல்

401. உறிஞ்சு– தல் (10 செ.குன்றாவி) வாயால் உள்ளிழுத்தல்

402. உறு– தல் (4 செ.கு.வி.) இருத்தல்

403. உறுக்கு– தல் (5 செ.குன்றாவி) அதட்டுதல்

404. உறுத்து– தல் (5 செ.குன்றாவி) உண்டாக்குதல்

405. உறுவி–த்தல் (4 செ.குன்றாவி) நுகர்வித்தல்

406. உறை– தல் (2 செ.கு.வி.) இறுகுதல்

407. உறை–த்தல் (2 செ.கு.வி.) துளித்தல்

408.உன்னு– தல் (12 செ.குன்றாவி) இழுத்தல்

409. ஊக்கு– தல் (5 செ.குன்றாவி) ஆட்டுதல்

410. ஊகித்– தல் (4 செ.குன்றாவி) முன்னதாகக் கருதுதல்

411. ஊச்சு– தல் (5 செ.குன்றாவி) உறிஞ்சுதல்

412. ஊசு– தல் (7 செ.கு.வி.) அழுகுதல்

413. ஊட்டு– தல் (5 செ.குன்றாவி) உண்ணும்படி உணவைப் பிறர் வாயிலேயிடுதல்

414. ஊடு– தல் (5 செ.கு.வி.) புலத்தல்

415. ஊது– தல் (5 செ.குன்றாவி) குழல் முதலியன ஊதுதல்

416. ஊர்– தல் (2 செ.கு.வி.) அடர்தல்

417. ஊர்த்– தல்

418. ஊழ்– தல் (2 செ.கு.வி.) முதிர்தல்

419. ஊழ்த்– தல் (2 செ.குன்றாவி) நினைத்தல்

420. ஊழ்கு– தல் (5 செ.குன்றாவி) அடிமனம் ஒன்றித்தல்

421. ஊழலித்– தல் (4 செ.குன்றாவி) அருவருத்தல்

422. ஊற்று– தல் (5 செ.குன்றாவி) வார்த்தல்

423. ஊறு– தல் (5 செ.கு.வி.) நீரூறுதல்

424. எஃகு– தல் (5 செ.குன்றாவி) பன்னுதல்

425. எக்களித்– தல் (4 செ.கு.வி.) பெருக மகிழ்தல்

426. எக்கு– தல் (5 செ.கு.வி.) குவிதல்

427. எச்சரித்– தல் (4 செ.குன்றாவி) முன்னறிவித்து எச்சரிக்கை செய்தல்

428. எஞ்சலித்– தல் (4 செ.குன்றாவி) எஞ்சல் குறைவு செய்தல்

429. எஞ்சு– தல் (5 செ.கு.வி.) குறைதல்

430. எட்டு– தல் (5 செ.கு.வி.) ஒன்றையடைய நெருங்குதல்

431. எடுத்– தல் (4 செ.கு.வி.) உயர்த்துதல்

432. எடுப்பு– தல் (5 செ.குன்றாவி) துயிலெழுப்புதல்

433. எடுவு– தல் (5 செ.குன்றாவி) எடுத்தல்

434. எண்ணு– தல் (12 செ.குன்றாவி) நினைத்தல்

435. எண்பித்– தல் (4 செ.குன்றாவி) மெய்ப்பித்தல்

436. எத்து– தல் (5 செ.குன்றாவி) ஏய்த்தல்

437. எதிர்– தல் (4 செ.கு.வி.) தோன்றுதல்

438. எதிர்த்– தல் (4 செ.குன்றாவி) இகலித்தாக்குதல்

439. எம்பு– தல் (7 செ.கு.வி.) மேலெழுதல் அல்லது துள்ளுதல்

440. எய்– தல் (1 செ.குன்றாவி) அம்பெய்தல்

441. எய்த்– தல் (1 செ.கு.வி.) இளைத்தல்

442. எய்து– தல் (10 செ.கு.வி.) அணுகுதல்

443. எரி– தல் (4 செ.கு.வி.) தீமூளல், சொலித்தல்

444. எரித்– தல் (4 செ.குன்றாவி) தீயால் வெந்தழியச் செய்தல்

445. எருக்கு– தல் (5 செ.குன்றாவி) கொல்லுதல்

446. எருகு– தல் (4 செ.கு.வி.) மாடு கழிதல்

447. எவ்வு– தல் (5 செ.குன்றாவி) செலுத்துதல்

448. எழு– தல் (2 செ.கு.வி.) எழுந்திருத்தல்

449. எழுது– தல் (10 செ.கு.வி.) அழுந்திப்பதிதல்

450. எழும்பு– தல் எழ பார்க்க

451. எழுப்பு– தல் (5 செ.குன்றாவி) எழும்பச் செய்தல்

452. எழுவு– தல் (5 செ.குன்றாவி) எழச்செய்தல்

453. எள்கு– தல் (5 செ.குன்றாவி) இகழ்தல்

454. எள்ளு– தல் (6 செ.குன்றாவி) இகழ்தல்

455. எளி– தல் (1 செ.கு.வி.) எளிமையடைதல்

456. எளித்– தல் (2 செ.குன்றாவி) தாழ்த்திக்கூறுதல்

457. எற்றித்– தல் (4 செ.கு.வி.) இரங்குதல்

458. எற்று– தல் (5 செ.குன்றாவி) அடித்தல்

459. எறி– தல் (2 செ.குன்றாவி) வீசியெறிதல்

460. எறித்– தல் (4 செ.கு.வி.) ஒளிவீசுதல்

461. என்(னு)– தல் (14 செ.குன்றாவி) சொல்லுதல்

462. என்பித்– தல் (4 செ.குன்றாவி) சொல்லச்செய்தல்

463. ஏகு– தல்(7 செ.கு.வி.)போதல்

464. ஏங்கு– தல் (7 செ.கு.வி.) ஒலித்தல்

465. ஏசறு– தல் (4 செ.கு.வி.) ஆசைப்படுதல்

466. ஏசு– தல் (5 செ.குன்றாவி) இகழ்தல்

467. ஏத்து– தல் (5 செ.குன்றாவி) வாழ்த்துதல்

468. ஏந்து– தல் (5 செ.குன்றாவி) உயரத்தூக்குதல்

469. ஏம்பலித்– தல் (4 செ.கு.வி.) அவாக்கொள்ளுதல்

470. ஏம்பு– தல் (5 செ.கு.வி.) பெருகக்களிப்படைதல்

471. ஏமார்– தல் (18 செ.கு.வி.) மனங்கலங்குதல்

472. ஏமார்த்– தல் (5 செ.குன்றாவி) வலுப்படுத்துதல்

473. ஏமாறு– தல் (2 செ.கு.வி.) ஏய்க்கப்படுதல்

474. ஏமாற்று– தல் (5 செ.குன்றாவி) ஏமஞ்செய்தல்

475. ஏமுறு– தல் (13 செ.கு.வி.) மகிழ்வுறுதல்

476. ஏய்– தல் (4 செ.கு.வி.) பொருந்துதல்

477. ஏர்– தல் (2 செ.குன்றாவி) ஒத்தல்

478. ஏரடித்– தல்= (4 செ.கு.வி.) உழுதல்

479. ஏல்– தல் (4 செ.கு.வி.) துயிலெழுதல்

480. ஏலு– தல் (13 செ.கு.வி.) நிகழ்தல்

481. ஏற்படு– தல் (20 செ.கு.வி.) உண்டாதல்

482. ஏற்று– தல் (5 செ.குன்றாவி) தூக்குதல்

483. ஏறடு– தல் (19 செ.குன்றாவி) மேல் வைத்தல்

484. ஏறு– தல் (5 செ.கு.வி.) உயர்தல்

485. ஏ– த்தல் (5 செ.குன்றாவி) வாழ்த்துதல்

486. ஏ   கு– தல் (7 செ.கு.வி.) போதல்

487. ஏக்கறு– த்தல் (4 செ.கு.வி.) அவித்தல்

488. ஏகு– தல் (7 செ.கு.வி.) போதல்

489. ஏச்சி –த்தல்

490. ஏசு– தல் (5 செ.குன்றாவி) இகழ்தல்

491. ஏசித்– தல்

492. ஏஞ்சரி – த்தல்

493. ஏஞ்சி – த்தல்

494. ஏங்சு– தல்

495. ஏட்டு– தல்

496. ஏடி– தல்

497. ஏடி– த்தல்

498. ஏடுங்கு– தல்

499. ஏடுக்கு– தல்

500. ஏடுக்கு– தல்

501. ஏண்டு– தல்

502. ஏண்ணு– தல்

503. ஏத்து– தல்

504. ஏதுங்கு– தல்

505. ஏதுக்கு– தல்

506. ஏப்பி– த்தல்

507. ஏப்பு– தல்

508. ஏய்– தல் (4 செ.கு.வி.) பொருந்துதல்

509. ஏரி– த்தல்

510. ஏருங்கு– தல்

511. ஏல்கு– தல்

512. ஏலு– தல் (13 செ.கு.வி.) நிகழ்தல்

513. ஏலி– தல்

514. ஏலி– த்தல்

515. ஏவு– தல் (8 செ.குன்றாவி) ஆணையிடுதல்

516. ஏழி– தல்

517. ஏழி– த்தல்

518. ஏழிச்சு– தல்

519. ஏழுங்கு– தல்

520. ஏழுக்கு– தல்

521. ஏழுகு– தல்

522. ஒளி– தல் (4 செ.கு.வி.) மறைதல்

523. ஒளி– த்தல் (4 செ.குன்றாவி) மறைத்தல்

524. ஒளிர்– தல் (2 செ.கு.வி.) ஒளி செய்தல்

525. ஒளிறு– தல் (2 செ.கு.வி.) விளங்குதல்

526. ஒற்றி– த்தல் (4 செ.கு.வி.) ஒற்றுமைப்படுதல்

527. ஒற்று– தல் (5 செ.குன்றாவி) ஒன்றிற்படும்படிச் செய்தல்

528. ஒறு– த்தல் (4 செ.குன்றாவி) உறுப்புக் குறைத்துத் தண்டித்தல்

529. ஒற்றறு – த்தல் (4 செ.கு.வி.) தாளத்தை அறுதியிடுதல்

530. ஒன்றி– த்தல் (5 செ.கு.வி.) பொருந்துதல்

531. ஒன்று– தல் (5 செ.கு.வி.) ஒன்றாய்ச் சேர்தல்

532. ஒன்னு– தல் (15 செ.கு.வி.) பொருந்துதல்

533. ஒ– த்தல் (5 செ.குன்றாவி) புணர்தல்

534. ஒக்கு– தல் (5 செ.குன்றாவி) உயர்த்துதல்

535. ஒக்காளி– த்தல் (4 செ.கு.வி.) வாய்க்குமட்டல்

536. ஓங்கு– தல் (7 செ.கு.வி.) உயர்தல்

537. ஒச்சு– தல் (5 செ.கு.வி.) எறிதல்

538. ஒசனி– த்தல் (4 செ.கு.வி.) பறவை சிறகடித்தல்

539. ஒட்டு– தல் (5 செ.கு.வி.) செலுத்துதல்

540. ஓடு– தல் (5 செ.கு.வி.) ஓட்டமாய்ச் செல்லுதல்

541. ஒடுவி– த்தல்

542. ஓது– தல் (5 செ.குன்றாவி) படித்தல்

543. ஓதுவி– த்தல் (1 பி.வி.) சிறந்த நூல் முதலியன கற்பித்தல்

544. ஓம்பு– தல் (5 செ.குன்றாவி) பாதுகாத்தல்

545. ஓமி– த்தல்

546. ஓமிடி– தல் (4 செ.கு.வி.) கேடுறுதல்

547. ஓய்– தல் (2 செ.கு.வி.) முடிவுறுதல்

548. ஓர்– தல் (2 செ.குன்றாவி) ஆய்ந்தறிதல்

549. ஓர்– த்தல் (2 செ.குன்றாவி) ஆராய்தல்

550. ஓலாட்டு– தல் (5 செ.கு.வி.) தாலாட்டுதல்

551. ஓராட்டு– தல் (5 செ.குன்றாவி) தாலாட்டுதல்

552. ஓவு– தல் (7 செ.கு.வி.) நீங்குதல்

553. கக்கு– தல் (5 செ.குன்றாவி) வாயாலெடுத்தல்

554. கச்சு– தல் (5 செ.குன்றாவி) கடித்தல்

555. கச– த்தல் (3 செ.கு.வி.) கைத்தல்

556. கசங்கு– தல் (5 செ.கு.வி.) குழைதல்

557. கசகு– தல் (9 செ.கு.வி.) பின்வாங்குதல்

558. கசக்கு– தல் (5 செ.குன்றாவி) கசங்கச்செய்தல்

559. கசி– தல் (4 செ.கு.வி.) ஈரங்கசிதல்

560. கஞல்(லு)– தல் (13 செ.கு.வி.) எழுதல்

561. கஞற்று– தல் (8 செ.குன்றாவி) நிரம்புதல்

562. கட்டு– தல் (5 செ.குன்றாவி) பிணைத்தல்

563. கட– த்தல் (3 செ.கு.வி.) கடந்துபோதல்

564. கடவு– தல் (5 செ.குன்றாவி) செலுத்துதல்

565. கடா– தல் (5 செ.குன்றாவி) வினாதல்

566. கடாசு– தல் (5 செ.குன்றாவி) ஆணி, ஆப்பு முதலியன அடித்தல்

567. கடாவு– தல் (5 செ.குன்றாவி) ஏவுதல்

568. கடி– தல் (4 செ.குன்றாவி) குற்றஞ் செய்தவனை சினந்து கண்டித்தல்

569. கடி– த்தல் (4 செ.குன்றாவி) பல்லாற்கடித்தல்

570. கடு– தல் (4 செ.குன்றாவி) வெட்டுதல்

571. கடு– த்தல் (4 செ.கு.வி.) நோவெடுத்தல்

572. கடுகு– தல் (9 செ.கு.வி.) விரைதல்

573. கடுக்கு– தல் (5 செ.கு.வி.) நச்சுயிரிகளின் கடியினாலும் முள்ளின் குத்தலினாலும் கடிவாய் வலித்தல்

574. கடை– தல் (2 செ.குன்றாவி) கெட்டி நீர்மப் பொருளில் மத்துப் போன்றவற்றைக் கொண்டு சுழலச் செய்தல்

575. கணி– த்தல் (4 செ.குன்றாவி) கணக்கிட்டுக் கண்டுபிடித்தல்

576. கணிசி– த்தல் (செ.கு.வி.) சிந்தித்தல்

577. கத்தரி– த்தல் (4 செ.குன்றாவி) சிறிது சிறிதாய் வெட்டியறுத்தல்

578. கத்து– தல் (5 செ.கு.வி.) பறவைகள் விலங்குகள் ஒலி எழுப்புதல்

579. கதறு– தல் (5 செ.கு.வி.) உரக்க அழுதல்

580. கதாவு– தல் (5 செ.கு.வி.) செல்லுதல்

581. கதித்– தல் (4 செ.குன்றாவி) கடத்தல்

582. கதிர்– த்தல் (4 செ.கு.வி.) ஒளிர்தல்

583. கதுக்கு– தல் (5 செ.குன்றாவி) பெருந்தீனி கொள்ளுதல்

584.கதுவு– தல் (5 செ.குன்றாவி) நார் முதலியன வரிந்து இழுத்தல்

585. கதை – த்தல் (4 செ.குன்றாவி) சொல்லுதல்

586. கந்தித்– தல் (4 செ.கு.வி.) மணத்தல்

587. கந்து– தல் (10 செ.கு.வி.) கெடுதல்

588. கப்பு– தல் (5 செ.கு.வி.) தோண்டுதல்

589. கம்பி– த்தல் (4 செ.கு.வி.) அசைதல்

590. கம்மு– தல் (5 செ.கு.வி.) குரல்குன்றி மாறுபடுதல்

591. கம– த்தல் (3 செ.கு.வி.) நிறைதல்

592. கமழ்– தல் (2 செ.கு.வி.) நறுமணம் வீசுதல்

593. கமறு– தல் (5 செ.கு.வி.) மிகவொலித்ல்

594. கமனி– த்தல் (4 செ.கு.வி.) செல்லுதல்

595. கமி– த்தல் (4 செ.கு.வி.) நடத்தல்

596. கமை– த்தல் (4 செ.குன்றாவி) கமி[3] பார்க்க மலை

597. கயத்– தல் (3 செ.கு.வி.) கசத்தல்

598. கயங்கு– தல் (5 செ.கு.வி.) கசங்குதல்

599. கயக்கு– தல் ( செ.குன்றாவி) கலக்குதல்

600. கர– த்தல் (செ.குன்றாவி) மறைத்தல்

601. கரி– தல் (செ.கு.வி) கரியாதல்

602. கரி– த்தல் (செ.கு.வி) உப்புச்சுவை மிகுதல்

603. கருக்கு– தல் (செ.குன்றாவி) கருதச்செய்தல், வெட்டுதல்

604. கருது– தல் (செ.குன்றாவி) எண்ணுதல்

605. கரை– தல் (செ.கு.வி) கரைந்துபோதல்

606. கரை– த்தல் (செ.குன்றாவி) கரையச் செய்தல்

607. கல்– தல் (செ.குன்றாவி) தோண்டுதல்

608. கல்லு– தல் (செ.குன்றாவி) தோண்டி எடுத்தல்

609. கல்– த்தல் (செ.குன்றாவி) தோண்டி வெளிக் கொணர்தல்

610.கலங்கு– தல் (செ.கு.வி) குழம்புதல்

611. கலக்கு– தல் (செ.குன்றாவி) கலங்கச் செய்தல்

612. கலகி– த்தல் (செ.கு.வி) கலகம் செய்தல்

613. கலசு– தல் (செ.கு.வி) கலத்தல்

614. கலவு– தல் (செ.கு.வி) கலத்தல்

615. கலழ்–தல் ––

616. கலாவு–தல்

617. கலாய்– த்தல் (செ.கு.வி) கலகித்தல்

618. கலாவு– தல் (செ.கு.வி) கலக்கமடைதல்

619. கலி– த்தல் (செ.கு.வி) ஒலித்தல்

620. கலுழ்– தல் (செ.கு.வி) கலங்குதல்

621. கலை– தல் (செ.கு.வி) கூட்டம் பிரிந்து போதல்

622. கலை– த்தல் (செ.குன்றாவி) குலைத்தல்

623. கவ்வு– தல் (செ.கு.வி) வவ்வுதல்

624. கவர்– தல் (செ.கு.வி) பிளவுபடுதல்

625. கவர்– த்தல் (செ.கு.வி) பிரிவுபடுத்தல்

626. கவல்(லு)– தல் (செ.கு.வி) மனம் வருந்துதல்

627. கவவு– தல் (செ.குன்றாவி) அகத்திடுதல்

628. கவற்று– தல் (செ.குன்ன்றாவி) கவலையுறுத்துதல்

629. கவனி– த்தல் (செ.கு.வி) நுட்பமாகப் பார்த்தல்

630. கவி– தல் (செ.கு.வி) கருத்தூன்றல்

631. கவி– த்தல் (செ.குன்றா.வி) கவிழ்த்து மூடுதல்

632. கவிழ்– தல் (செ.கு.வி) தலைக்கீழாதல்

633. கவிழ்– த்தல் (செ.குன்றாவி) தலைகீழாகக் கவிழச்செய்தல்

634. கவின்(னு)– தல் (செ.கு.வி) அழகுபெறுதல்

635. கவை– த்தல் (செ.குன்றாவி) அனைத்து அகத்திடுதல்

636. கழல்– தல் (செ.கு.வி) நெகிழ்ந்து போதல்

637. கழற்று– தல் (செ.குன்றாவி) நெகிழச்செய்தல்

638. கழறு– தல் (செ.கு.வி) சூளுரைத்த

639. கழாலு– தல் (செ.கு.வி) நெகிழ்த்தல்

640. கிட்டு– தல் (செ.கு.வி) நெருங்குதல்

641. கிட– த்தல் (செ.கு.வி) நீட்டுப் டுத்தல்

642. கிட்டியடி– தல் (செ.கு.வி) கிட்டிப் புள் விளையாடுதல்

643. கிடாசு– தல் (செ.கு.வி) விட்டெறிதல்

644. கிடுகிடு– த்தல் (செ.கு.வி) நடுங்குதல்

645. கிடை– த்தல் (செ.கு.வி) அருகாதல்

646. கிந்து– தல் (செ.கு.வி) நொண்டிநடத்தல்

647. கித்து– தல் (செ.கு.வி) ஒற்றைக்காலால் தாவி நடத்தல்

648. கிலாய்– த்தல் (செ.கு.வி) சினத்தல்

649. கிழி– தல் (செ.கு.வி) பீறுண்டு போதல்

650. கிழி– த்தல் (செ.குன்றாவி) பீறச்செய்தல்

651. கிள்(ளு)– தல் (செ.குன்றாவி) நகத்தால் எடுத்தல்

652. கிள– த்தல் (செ.கு.வி) ஒன்றைச் சிறப்பாக குறிப்பிடல்

653. கிளத்து– தல் (செ.குன்றாவி) புலப்படக்கூறுதல்

654. கிளம்பு– தல் (செ.கு.வி) மேலெழுதல்

655. கிளப்பு– தல் (செ.குன்றாவி) எழுப்புதல்

656. கிளர்– தல் (செ.கு.வி) மேலெழுதல்

657. கிளர்த்து– தல் (செ.குன்றாவி) எழுப்புதல்

658. கிளறு– தல் (செ.குன்றாவி) கிண்டுதல்

659. கிளுகிளு– த்தல் (செ.கு.வி) மகிழ்ச்சி ஒலி

660. கிளை– தல் (செ.கு.வி) மரம் கப்புவிடல்

661. கிளை– த்தல் (செ.குன்றாவி) கப்புவிடுதல்

662. கிறி– த்தல் (செ.குன்றாவி) மாயம்செய்தல்

663. கிறுக்கு– தல் (செ.கு.வி) உருத்தெரியமல் எழுதுதல்

664. கீய்–தல் (செ.கு.வி) கிழிதல்

665. கீல்(லு)– தல் (செ.குன்றாவி) இழுத்தல்

666. கீழ்(ழு)– தல் (செ.கு.வி) இழுத்தல்

667. கீள்(ளு)– தல் (செ.குன்றாவி) கிழித்தல்

668. கீறு– தல் (செ.குன்றாவி) கிழித்தல்

669. குக்கு– தல் (செ.கு.வி) ஒழுங்குதல் (செ.குன்றாவி) துணிகளைத் துவைத்தல்

670. குச்சரி– த்தல் (செ.குன்றாவி) அருவருத்தல்

671. குச்சி– த்தல் (செ.கு.வி) அருவருப்புக் கொள்ளுதல்

672. குஞ்சி– த்தல் (செ.குன்றாவி) கால் தூக்கி நிற்றல்

673. குட்டு– தல் (செ.குன்றாவி) கைமுட்டியால் தாக்குதல்

674. குடங்கு– தல் (செ.கு.வி) வளைதல்

675. குடவு– தல் (செ.கு.வி) வளைவாதல்

676. குடி– த்தல் (செ.குன்றாவி) பருகுதல்

677. குடை– தல் (செ.குன்றாவி) கிண்டுதல்

678. குத்து– தல் (செ.குன்றாவி) துளையிடுதல்

679. குதம்பு– தல் (செ.குன்றாவி) அலசுதல்

680. குதப்பு– தல் (செ.குன்றாவி) மெல்லுதல்

681. குதறு– தல் (செ.குன்றாவி) சிதறுதல்

682. கழி– தல் (செ.கு.வி) கடந்து போதல்

683. கழி– த்தல் (செ.குன்றாவி) நீக்குதல்

684. கழுமு– தல் (செ.கு.வி) சேர்தல்

685. கள்– தல் (செ.கு.வி) களைபிடுங்குதல்

686. களகளத்– தல் (செ.கு.வி) ஒலியெழுதல்

687. களித்– தல் (செ.கு.வி) மகிழ்ச்சியில் திளைத்தல்

688. களை– தல் (செ.குன்றாவி) பிடுங்கியெறிதல்

689. களை– த்தல் (செ.கு.வி) இளைப்புறுதல்

690.கற்பி– த்தல் (செ.கு.வி) பயிற்றுவித்தல்

691. கற– த்தல் (செ.குன்றாவி) பால் கறத்தல்

692. கறகற– த்தல் (செ.கு.வி) ஒலித்தல்

693. கறங்கு– தல் (செ.கு.வி) ஒலித்தல்

694. கறக்கு– தல் (செ.கு.வி) நூல் முறுக்கேற்றுதல்

695. கறி– த்தல் (செ.குன்றாவி) மெல்லக் கடித்தல்

696. கறு– த்தல் (செ.கு.வி) கருமையாதல்

697. கறும்பு– தல் (செ.குன்றாவி) துன்புறுத்தல்

698. கறுமு– தல் (செ.கு.வி) சினத்தல்

699. கறுவு– தல் (செ.கு.வி) சினக்குறிப்பு காட்டுதல்

700. கன்று– தல் (செ.கு.வி) முதிர்தல்

701. கனல்(லு)– த்தல் (செ.கு.வி) எரிதல்

702. கனற்ற– தல் (செ.குன்றாவி) எரிவித்தல்

703. கனி– தல் (செ.குன்றாவி) பழுத்தல்

704. கனி– த்தல் (செ.குன்றாவி) இளகச் செய்தல்

705. கனை– த்தல் (செ.கு.வி) தொண்டையைச் சீர்படுத்துதல்

706. கா– த்தல் (செ.குன்றாவி) காவல் செய்தல்

707. காட்டு– தல் (செ.குன்றாவி) காண்பித்தல்

708. காண்(ணு)– தல் (செ.கு.வி) உண்டாதல்

709. காது– தல் (செ.கு.வி) கொல்லுதல்

710. காந்து– தல் (செ.கு.வி) எரிவெடுத்தல்

711. காமி– த்தல் (செ.குன்றாவி) விரும்புதல்

712. காய்– தல் (செ.கு.வி) வெப்புமுறுதல்

713. காய்– த்தல் (செ.கு.வி) காய்களைக் கொள்ளுதல்

714. காய்ச்சு– தல் (செ.குன்றாவி) காயச்செய்தல்

715. காய்த்து– தல் (செ.குன்றாவி) எரியச் செய்தல்

716. கார்– த்தல் (செ.கு.வி) கறுப்புதல்

717. கால்(லு)– தல் (செ.கு.வி) வெளியிப்படுதல்

718. காவு– தல் (செ.குன்றாவி) தோளாற் காத்தண்டு சுமத்தல்

719. காழ்–த்தல் (செ.கு.வி) முற்றுதல்

720. காற்று– தல் (செ.கு.வி) வெளிப்படுத்துதல்

721. குதி– த்தல் (செ.கு.வி) பாய்தல்

722. குதிர்– தல் (செ.கு.வி) தீர்மானப்படுத

723. குதை– தல் (செ.கு.வி) செலுத்துதல்

724. குதை– த்தல் (செ.கு.வி) விற்குதையில் நாணைப்பூட்டுதல்

725. குந்து– தல் (செ.கு.வி) இரு காலையும் ஊன்றி வைத்து உட்காருதல்

726. கும்பிடு– தல் (செ.கு.வி) கைவித்து வணங்குதல்

727. கும்மு– தல் (செ.கு.வி) கைகூடுதல்

728. கும்மலி– த்தல் (செ.கு.வி) விளையாடுதல்

729. கும்மியடி–த்தல் (செ.கு.வி) பாடிக் கொண்டு கைகொட்டியாடுதல்

730. குமட்டு– தல் (செ.கு.வி) வாயால் எடுத்தல்

731. குமி– தல் (செ.கு.வி) திரளுதல்

732. கும்பி– த்தல் (செ.கு.வி) ஒக முறையில் மூச் சடக்குதல்

733. குமிழ்– த்தல் (செ.கு.வி) குமிழியிடுதல்

734. குமிழ்– தல் (செ.கு.வி) சித்திரவேலை செதுக்கப்படுதல்

735. குமுங்கு– தல் (செ.கு.வி) மசிதல்

736. குமுக்கு– தல் (செ.குன்றாவி) ஊமைக்காயம் படக் கையாற்குத்தல்

737. குமுகுமு– த்தல் (செ.கு.வி) மணம் வீசுதல்

738. குமுறு– தல் (செ.கு.வி) அதிரொலி செய்தல்

739. குமிறு– தல் (செ.கு.வி) ஒலித்தல்

740. குமை– தல் (செ.கு.வி) குழைய வேதல்

741. குமை– த்தல் (செ.கு.வி) துவைத்தல்

742. குயில்லு– தல் (செ.கு.வி) நடைபெறுதல்

743. குயிற்று– தல் (செ.குன்றாவி) சொல்லுதல்

744. குரு– த்தல் (செ.கு.வி) தோன்றுதல்

745. குருமி– த்தல் (செ.கு.வி) பேரொலிசெய்தல்

746. குறுகக்காய் ச்சு– தல் (செ.குன்றாவி) சுண்டக்காய்ச்சுதல்

747. குரை– த்தல் (செ.கு.வி) ஆராவாரித்தல்

748. குலவு– தல் (செ.கு.வி) விளங்குதல்

749.குலாவு– தல் (செ.கு.வி) அங்குமிங்கும் நடத்தல்

750. குலுங்கு– தல் (செ.கு.வி) அசைதல்

751. குலுக்கு– தல் (செ.குன்றாவி) அசைத்தல்

752. குலை– தல் (செ.குன்றாவி) அவிழ்தல்

753. குலை– த்தல் (செ.குன்றாவி) அவிழ்த்தல்

754. குவவு– தல் (செ.கு.வி) குவிதல்

755. குவி– தல் (செ.கு.வி) கூம்புதல்

756. குவி– த்தல் (செ.குன்றாவி) கும்பலாக்குதல்

757. குழம்பு– தல் (செ.கு.வி) கலங்குதல்

758. குழப்பு– தல் (செ.குன்றாவி) கலக்குதல்

759. குழறு– தல் (செ.கு.வி) பேச்சுத் தெளிவின்றித் தடுமாறுதல்

760. குழற்று– தல் (செ.கு.வி) குழறியொலித்தல்

761. குழி– தல் (செ.கு.வி) உங்குட்குழிவாதல்

762. குழி– த்தல் (செ.கு.வி) குழியபாக்குதல்

763. குழுமு– தல் (செ.குன்றாவி) குழியை நிரப்பிப்பரப்பாக்குதல்

764. குழுவு– தல் (செ.கு.வி) கூடுதல்

765. குழை– தல் (செ.கு.வி) இளகு பதமாதல்

766. குழை – த்தல் (செ.குன்றாவி) குழையச் செய்தல்

767. குளறு– தல் (செ.கு.வி) அச்சம் முதலியவற்றால் மொழி தடுமாறுதல்

768. குளி– த்தல் (செ.கு.வி) நீராடுதல்

769. குளிர்– தல் (செ.கு.வி) பனிக்காற்று உறைதல்

770. குளிறு– தல் (செ.கு.வி) ஒலித்தல்

771. குற்று– தல் (செ.குன்றாவி) இடித்தல்

772. குறி– த்தல் (செ.கு.வி) கருதுதல்

773. குறு– தல் (செ.குன்றாவி) பறித்தல்

774. குறு– த்தல் (செ.கு.வி) அளவிற் குறுகுதல்

775. குறுகு– தல் (செ.கு.வி) குள்ளமாதல்

776. குறுக்கு– தல் (செ.குன்றாவி) குறையச் செய்தல்

777.குறுகுறு– த்தல் (செ.கு.வி) வெறுப்புத்தோன்ற முணுமுணுத்தல்

778. குறை– தல் (செ.கு.வி) சிறுகுதல்

779. குறை– த்தல் (செ.குன்றாவி) சுருக்குதல்

780. குன்று– தல் (செ.கு.வி) குறைத

781. குனகு– தல் (செ.கு.வி) கொஞ்சிப்பேசுதல்

782. குனுகு– தல் குனகுதல் பார்க்க

783. குனி– தல் (செ.கு.வி) வளைதல்

784. குனி– த்தல் (செ.குன்றாவி) வளைத்தல்

785. கூசு– தல் (செ.கு.வி) நாணுதல்

786. கூட்டு– தல் (செ.கு.வி) இணைத்தல்

787. கூடலி– த்தல் (செ.கு.வி) கிளர்ந்து வளைதல்

788. கூடு– தல் (செ.கு.வி) ஒன்று சேர்தல்

789. கூம்பு– தல் (செ.கு.வி) குவிதல்

790. கூப்பு– தல் (செ.கு.வி) கைகுவித்தல்

791. கூர்– தல் (செ.கு.வி) மிகுதல்

792. கூவு– தல் (செ.கு.வி) பறவை கூவுதல்

793. கூழ்– தல் (செ.குன்றாவி) ஐயுறுதல்

794. கூழ்– த்தல் (செ.கு.வி) கலக்கமுண்டாதல்

795. கூள்(ளு)– தல் (செ.கு.வி) திரளுதல்

796. கூறு– தல் (செ.குன்றாவி) சொல்லுதல்

797. கூனு– தல் (செ.கு.வி) வளைதல்

798. கெக்கரி– த்தல் (செ.கு.வி) கொக்கரித்தல்

799. கெக்கலி– த்தல் (செ.கு.வி) குஞ்சுகளைப் பருந்தின் பார்வையினின்றும் காப்பதற்காகத் தாய்க்கோழி ஒலி எழுப்புதல்

800. கெக்களி– த்தல் (செ.கு.வி) நெளிதல்

801. கெஞ்சு– தல் (செ.குன்றாவி) இரைந்துகுறையுறுதல்

802. கெட்டி– த்தல் (செ.குன்றாவி) நிலம் முதலிவற்றைக் இறுக்கப்படுத்துதல்

803. கெடு– தல் (செ.கு.வி) அழிதல்

804. கெடு– தல் (செ.குன்றாவி) அழித்தல்

805. கெண்டு– தல் (செ.குன்றாவி) தோண்டுதல்

806. கெண்டி– த்தல் (செ.குன்றாவி) கடிந்து கூறுதல்

807. கெந்து– தல் (செ.கு.வி) தத்துதல்

808. கெத்து– தல் (செ.கு.வி) முட்டையிட்ட கோழி அடைகாக்கத் கத்துதல்

809. கெம்பளி– த்தல் (செ.கு.வி) மகிழ்வுறுதல்

810. கெம்பீரி– த்தல் (செ.குன்றாவி) வீரங்காட்டுதல்

811. கெம்பு– தல் (செ.கு.வி) கொந்தளித்தல்

812. கெமரி– த்தல் (செ.கு.வி) போதல்

813. கெமிளி– த்தல் (செ.கு.வி) மகிழ்தல்

814. சக்களி– தல் (செ.கு.வி) தட்டையாதல்

815. சங்காடு– தல் (செ.கு.வி) சங்கினால் புடவை முதலியவற்றை மினுங்கச்செய்தல்

816. சங்கி– த்தல்(செ.குன்றாவி) பெருமைப்படுத்துதல்

817. சங்கு– தல் (செ.கு.வி) பல்லாங்குழி ஆவனுக்கு ஊதியமின்றி முடிந்து விடுதல்

818.சச்சாயிரு– த்தல் (செ.கு.வி) புகையிலை முதலியன தாழ்ந்ததாயிருத்தல்

819. சட்டி– த்தல் (செ.குன்றாவி) சட்டி போலாக்குதல், அகன்றாகுதல்

820. சடாய்– த்தல் (செ.கு.வி) செழித்தல்

821. சடை– தல் (செ.கு.வி) சோர்வடைதல்

822. சடை– த்தல் (செ.கு.வி) அடந்து கிளைத்தல்

823. சண்டு– தல் (செ.குன்றாவி) அளவுக்க அதிகமாக உண்ணுதல்

824. சண்ணி– த்தல் (செ.குன்றாவி) பூசுதல்

825. சண்ணு– தல் (செ.குன்றாவி) தாக்குதல்

826. சதி– த்தல் (செ.குன்றாவி) அழித்தல்

827. சதிர்– த்தல் (செ.கு.வி) வலிமை பெறுதல்

828. சதை– தல் (செ.கு.வி) நெரிதல்

829. சதை– த்தல் (செ.கு.வி) சதைப்பற்றுதல்

830. சந்தி– த்தல் (செ.குன்றாவி) இணைத்தல்

831. சப்பளி– தல் (செ.கு.வி) சப்பையாதல், தட்டையாதல்

832. சப்பளி– த்தல் (செ.கு.வி) அடியிற் சப்பையாக உட்கார்தல்

833. சப்பு– தல் (செ.கு.வி) உண்ணும் போது நாக்கினால் அல்லது உதடுகளால் சப் என்று ஒலி உண்டாக்குதல்

834. சபதரி– த்தல் (செ.கு.வி) ஆதரித்தல்

835. சமழ்– தல் (செ.கு.வி) வருந்துதல்

836. சமழ்– த்தல் (செ.குன்றாவி) வருத்துதல்

837. சமை– தல் (செ.கு.வி) அமைதல்

838. சமை– த்தல் (செ.குன்றாவி) படைத்தல்

839. சரி– தல் (செ.கு.வி) நழுவுதல்

840. சரி– த்தல் (செ.கு.வி) சரிந்து விழ்ச்செய்தல்

841. சருக்கு– தல் (செ.கு.வி) சறுக்குதல்

842. சருவு– தல் (செ.கு.வி) பழகுதல்

843. சல்லு– தல் (செ.கு.வி) நீர் தெளித்தல்

844. சலசல– த்தல் (செ.கு.வி) சலசலவென ஒலித்தல்

845. சலாத்து– தல் (செ.குன்றாவி) குலுக்குதல்

846. சலி– த்தல் (செ.கு.வி) அசைதல்

847. சவ்வாயிரு– த்தல் (செ.கு.வி) பிசின் போலாதல்

848. சவுக்களி– த்தல் (செ.கு.வி) சுவையற்றுப் போதல்

849. சவட்டு– தல் (செ.குன்றாவி) வளைவாக்குதல்

850. சவர்களி– த்தல் (செ.கு.வி) உப்புச் சுவையேற்படுதல்

851. சவள்(ளு)– தல் (செ.கு.வி) வளைதல்

852. சவி– த்தல் (செ.குன்றாவி) வசைமொழிதல்

853. சவு– த்தல் (செ.கு.வி) விலை நயத்தல்

854. சவை– த்தல் (செ.குன்றாவி) மெல்லுதல்

855. சழங்கு– தல் (செ.கு.வி) சோர்தல்

856. சழுங்கு– தல் (செ.கு.வி) மழுங்குதல்

857. சழி– தல் (செ.கு.வி) சப்பளிதல்

858. சள்ளு– தல் (செ.கு.வி) இளகுதல்

859. சளசள– த்தல் (செ.கு.வி) சேறாயிருத்தல்

860. சளப்பு– தல் (செ.கு.வி) அலம்புதல்

861. சளபுள– த்தல் (செ.கு.வி) ஒலித்தல்

1963. மழுக்கு – தல் (செ.குன்றாவி) கூர் மழுங்கச் செய்தல்

1964. மழுப்பு – தல் (செ.குன்றாவி) நெகிழவிடுதல்

1965.மழை – த்தல் (செ.கு.வி) மழைநிறைந்திருத்தல்

1966. மறங்கு – தல் (செ.கு.வி) கலங்குதல்

1967. மறி – தல் (செ.கு.வி) கீழ்மேலாதல்

1968. மறி –த்தல் (செ.குன்றாவி) தடுத்தல்

1969. மறு – த்தல் (செ.குன்றாவி) இல்லையெனல்

1970. மறுகு – தல் (செ.கு.வி) சுழலுதல்

1971. மறுக்கு – தல் (செ.குன்றாவி) சுழற்சி

1972. மறுகலி – த்தல் (செ.கு.வி) நோய் முதலியன திரும்புதல்

1973. மறுதா – தல் (செ.குன்றாவி) மீட்டல்

1974. மறை – தல் (செ.கு.வி) ஒளிந்து கொள்ளுதல்

1975. மறை – த்தல் (செ.குன்றாவி) ஒளித்துவைதல்

1976. மன்று – தல் (செ.குன்றாவி) தண்டஞ் செய்தல்

1977. மன்னி – த்தல் (செ.குன்றாவி) குற்றத்தைப் பொறுத்தல்

1978. மன்னு – தல் (செ.குன்றாவி) அடுத்தல்

1979. மனுவா – தல் (செ.குன்றாவி) நிலைப் பெறச் செய்தல்

1980. மாட்டு – தல் (செ.குன்றாவி) இணைத்தல்

1981. மாண்(ணு) – தல் (செ.கு.வி) மாட்சிமைப்படுதல்

1982. மாந்து – தல் (செ.குன்றவி) அண்ணுதல்

1983. மாய் – தல் (செ.கு.வி) மறைத

1984. மாய் – த்தல் (செ.குன்றாவி) மறைதல்

1985. மார்தட்டு – தல் (செ.கு.வி) போட்டிப் போடுதல்

1986. மால்(லு) – தல் (செ.கு.வி) எழுதகம் அமைத்தல்

1987. மாற்று – தல் (செ.குன்றாவி) வேறுபடுத்துதல்

1988. மாறு – தல் (செ.கு.வி) மாறுபடுதல்

1989. மான் – தல் (செ.கு.வி) ஒத்தல்

1990. மானி – த்தல் (செ.கு.வி) நாணுதல்

1991. மிகு – தல் (செ.கு.வி) அதிகமாதல்

1992. மிகு – த்தல் (செ.குன்றாவி) அதிகப்படுத்தல்

1993. மிகை – த்தல் (செ.கு.வி) அதிகமாதல்

1994. மிசை – தல் (செ.குன்றாவி) சண்ணுதல்

1995. மிஞ்சு – தல் (செ.குன்றாவி) மீதமாதல்

1996. மிடை – தல் (செ.கு.வி) செறிதல்

1997. மிண்டு – தல் (செ.கு.வி) நெருங்குதல்

1998. முணவு – தல்(செ.குன்றாவி) வெளுத்தல்

1999. முணை – தல் (செ.குன்றாவி) வெறுத்தல்

2000. முத்திரி – த்தல் (செ.குன்றாவி) முத்திரையிடுதல்

2001. முத்து – தல் (செ.குன்றாவி) சேரல்

2002. முதலு – தல் (செ.கு.வி) முதலாதல்

2003. முதிர் – தல் (செ.கு.வி) முற்றுதல்

2004. முந்து – தல் (செ.கு.வி) முற்படுதல்

2005. மும்முரி – த்தல் (செ.கு.வி) கடுமைகொள்ளல்

2006. முயங்கு – தல் (செ.குன்றாவி) பொருந்துதல்

2007. முயல்(லு) – தல் (செ.குன்றாவி) விடாது செய்தல்

2008. முரஞ்சு – தல் (செ.கு.வி) முதிர்தல்

2009. முரண் – தல் (செ.கு.வி) பகைத்தல்

2010. முரண்டு – தல் (செ.கு.வி) விடாப்பிடியாதல்

2011. முரணு – தல் (செ.கு.வி) மாறுபடுதல்

2012. முரல்(லு) – தல் (செ.குன்றாவி) பாடுதல்

2013. முரற்று – தல் (செ.கு.வி) ஒலித்தல்

2014. முரி – தல் (செ.கு.வி) வளைதல்

2015. முரி – த்தல் (செ.குன்றாவி) வளைந்து ஒடித்தல்

2016. முரிமுரி – தல் (செ.கு.வி) வளைதலைச் செய்தல்

2017. முரு – தல் (செ.கு.வி) பொருந்தல்

2018. முரங்கு – தல் (செ.கு.வி) தாக்குதல்

2019. முருக்கு – தல் (செ.குன்றாவி) அழித்தல்

2020. முழங்கு – தல் (செ.குன்றாவி) பேரொலி எழுப்புதல்

2021. முழக்கு – தல் (செ.குன்றாவி) பேரொலி எழுப்புதல்

2022. முழவு – தல் (செ.கு.வி) நெருங்கிப் பழகுதல்

2023. முழாவு – தல் (செ.கு.வி) நெருங்கிப்பழகுதல்

2024. முழாசு – தல் (செ.கு.வி) கொழுந்துவிட்டேரிதல்

2025. முழி – தல் (செ.குன்றாவி) உமிழ்தல்

2026. முழி – த்தல் (செ.கு.வி) கண்திறத்தல்

2027. முழு – த்தல் (செ.கு.வி) முழுமையாதல்

2028. முழுகு – தல் (செ.கு.வி) குளித்தல்

2029. முழுங்கு – தல் (செ.கு.வி) விழுங்குதல்

2030. முழுக்கு – தல் (செ.குன்றாவி) அமிழ்த்துதல்

2031. முழுசு – தல் (செ.கு.வி) முட்டுதல்

2032. முழுவு – தல் (செ.குன்றாவி) முத்தமிடுதல்

2033. முழை – தல் (செ.கு.வி) நுழைதல்

2034. முழை – த்தல் (செ.குன்றாவி) நுளைத்தல்

2035. முள்கா – த்தல் (செ.கு.வி) குந்தியிருத்தல்

2036. முள்கு – தல் (செ.கு.வி) முயங்குதல்

2037. முளி – தல் (செ.கு.வி) உலர்தல்

2038. முளி – த்தல் (செ.கு.வி) உலர்தல்

2039. முளை – தல் (செ.கு.வி) முளைவிடல்

2040. முளை – த்தல் (செ.கு.வி) முளைவிடல்

2041. முற்றி – த்தல் (செ.குன்றாவி) முடித்தல்

2042. முற்று – தல் (செ.கு.வி) முதுமையடைதல்

2043. முறி – தல் (செ.கு.வி) வளைந்து ஒடிதல்

2044. முறி – த்தல் (செ.குன்றாவி) ஒடித்தல்

2045. முறுகு – தல் (செ.குன்றாவி) முதிர்தல்

2046. முறுக்கு – தல் (செ.குன்றாவி) நார் முதலிய வற்றைத் திரித்தல்

2047. முறை – த்தல் (செ.கு.வி) வரையறகூடியது

2048. முன்னு – தல் (செ.குன்றாவி) கருதுதல்

2049. முனகு – தல் (செ.கு.வி) முணுமுணுத்தல்

2050. முனங்கு – தல் (செ.கு.வி) அடக்கிப்பேசுதல்

2051. முனி – தல் (செ.குன்றாவி) வெறுத்தல்

2052. முனை – தல் (செ.கு.வி) பொருதல்

2053. முனை – த்தல் (செ.குன்றாவி) எதிர்த்தல்

2054. மூசு – தல் (செ.குன்றாவி) மொய்த்தல்

2055. மூஞ்சு – தல் (செ.குன்றாவி) நக்கியுள்ளல்

2056. மூட்கு – தல் (செ.குன்றாவி) அகப்பையால் எடுத்தல்

2057. மூட்டு – தல் (செ.குன்றாவி) தீ உண்டாக்குதல்

2058. மூடு – தல் (செ.குன்றாவி) அடைத்தல்

2059. மூதிரி – த்தல் (செ.குன்றாவி) முதலித்தல்

2060. மூய் – தல் (செ.குன்றாவி) மூடுதல்

2061. மூர்ச்சி – த்தல் (செ.கு.வி) மயக்கமடைதல்

2062. மூவு – தல் (செ.கு.வி) விளகுதல்

2063. மூழ் – தல் (செ.கு.வி) பற்றிக்கொள்ளல்

2064. மூழ் – த்தல் (செ.கு.வி) முதிர்தல்

2065. மூழ்கு – தல் (செ.கு.வி) முழுகுதல்
2066. மூழ்த்து – தல் (செ.குன்றாவி) ஆழ்த்துதல்

2067. மூள்(ளு) – தல் (செ.கு.வி) நெருப்புப் பற்றுதல்

2068. மெச்சு – தல் (செ.குன்றாவி) புகழ்தல்

2069. மெட்டு – தல் (செ.குன்றாவி) காலால் தாக்குதல்

2070. மெத்து – தல் (செ.கு.வி) மிகுதல்

2071. மெய் – த்தல் (செ.கு.வி) உண்மையாதல்

2072. மெய்ச்சு – தல் (செ.குன்றாவி) மெச்சுதல்

2073. மெய்ப்பி – த்தல் (செ.குன்றாவி) எண்பித்தல்

2074. மெருள்(ளு) – தல் (செ.கு.வி) அச்சமடைதல்

2075. மெல்(லு) – தல் (செ.குன்றாவி) பல்லால் அறைத்து மென்மையாக்கல்

2076. மெல்கு – தல் (செ.கு.வி) மெதுவாதல்

2077. மெலி – தல் (செ.கு.வி) வலி குறைதல்

2078. மெலி – த்தல் (செ.குன்றாவி) வலி குறைதல்

2079. மெழுகு – தல் (செ.குன்றாவி) கழுவுதல்

2080. மென்னு – தல் (செ.குன்றாவி) நெம்புதல்

2081. மேய் – தல் (செ.குன்றாவி) விலங்கு முதலியன உணவு கொள்ளல்

2082. மேய் – த்தல் (செ.குன்றாவி) புல் முதலியவற்றை விலங்குகள் உண்ணச் செய்தல்

2083. மேலு – தல்

2084. மை – த்தல் (செ.கு.வி) கறுத்தல்

2085. மொக்கு – தல் (செ.குன்றாவி) ஒருசேர விழுங்குதல்

2086. மொசி – தல் (செ.குன்றாவி) மொய்த்தல்

2087. மொசி – த்தல் (செ.குன்றாவி) தின்னுதல்

2088. மொசுக்கு – தல் (செ.குன்றாவி) ஒருசேர விழுங்குதல்

2088. மொட்டி – த்தல் (செ.கு.வி) குவிதல்

2089. மொத்து – தல் (செ.குன்றாவி) வலுக்க அடித்தல்

2090. மொய் – த்தல் (செ.கு.வி) சுற்றிச் சூழ்தல்

2091. மொழிச்சு – தல் (பி.வி.) சொல்லச் செய்தல்

2092. மொழி – தல் (செ.குன்றாவி) சொல்லுதல்

2093. மொழிப்பு – தல் (பி.வி) சொல்லுதல்

2094. மொழுப்பு – தல் (செ.குன்றாவி) மழுப்புதல்

2095. மொள்(ளு) – தல் (செ.குன்றாவி) நீர் முகத்தல்

2096. மோ – த்தல் (செ.குன்றாவி) மூக்கால் நுகர்தல்

2097. மோசி –த்தல் (செ.கு.வி) பிசகுதல்

2998. மோது – தல் (செ.குன்றாவி) வேகமாக இடித்தல்

2099. மோறா – த்தல் (செ.கு.வி) அங்காத்தல்

2100. யா – த்தல் (செ.கு.வி) பிணித்தல்

2101. யாசி – த்தல் (செ.குன்றாவி) கட்டுதல்

2102. யாப்புறு – தல் (செ.கு.வி) பொருள் நிரம்பியிருத்தல்

2103. யாப்புறு – த்தல் (செ.குன்றாவி) வலியுறுத்துதல்

2104. யாப்பிறு– த்தல்

2105.வக்கணி–த்தல் (செ.குன்றாவி) விளக்கமாயுரைத்தல்

2106. வக்கரி – த்தல் (செ.கு.வி) கோணியிருத்தல்

2107. வக்காணி – த்தல் (செ.குன்றாவி) விளக்கமா யுரைத்தல்

2108. வக்காளி – த்தல் (செ.கு.வி) வானம் வெளிவாங்கல்

2109. வக்கிணி – த்தல் (செ.கு.வி) மனங்கோணியிருத்தல்

2110. வக்காளி –த்தல் (செ.குன்றாவி)

2111. வக்கு – தல் (செ.குன்றாவி) வதக்குதல்

2112. வகிர் – தல் (செ.குன்றாவி) துண்டாக அறுத்தல்

2113. வரு – தல் (தொ.பெ.) வரல்

2114. வகு – த்தல் (செ.குன்றாவி) கூறுபடுத்துதல்

2115. வகை – தல் (செ.கு.வி) பிரிவுபடுதல்

2116. வசக்கு – தல் (செ.குன்றாவி) பழக்குதல்

2117. வசி – தல் (செ.குன்றாவி) பிளத்தல்

2118. வசி – த்தல் (செ.கு.வி) பிளத்தல்

2119. வசை – தல் (செ.கு.வி) வளைதல்

2120. வசை – த்தல் (செ.குன்றாவி) வளைத்தல்

2121. வஞ்சி – த்தல் (செ.குன்றாவி) ஏமாற்றுதல்

2122. வட்கு – தல் (செ.கு.வி) வெட்டுதல்

2123. வட்டி – த்தல் (செ.கு.வி) வட்டமாதல்

2124. வடி – தல் (செ.கு.வி) ஒழுகுதல்

2125. வடி – த்தல் (செ.குன்றாவி) வடியச் செய்தல்

2126. வடு – த்தல் (செ.கு.வி) பிஞ்சு விடுதல்

2127. வண்ணி – த்தல் (செ.குன்றாவி) புனைந் துரைத்தல்

2128. வணங்கு – தல் (செ.குன்றாவி) நுடங்குதல்

2129. வணக்கு – தல் (செ.குன்றாவி) வளைவிழல்

2130. வணர் – தல் (செ.கு.வி) வளைதல்

2131. வணை – தல் (செ.கு.வி) வளைதல்

2132. வணை – தல் (செ.கு.வி) வளைதல்

2133. வணை – த்தல் (செ.கு.வி) வளைதல்

2134. வத்தி – த்தல் (செ.கு.வி) உளதாதல்

2135. வதங்கு – தல் (செ.கு.வி) வாடுதல்

2136. வதக்கு – தல் (செ.குன்றாவி) வாட்டுதல்

2137. வதறு – தல் (செ.கு.வி) வாயாடுதல்

2138. வதி – தல் (செ.கு.வி) தங்குதல்

2139. வதி – த்தல் (செ.குன்றாவி) தங்கச் செய்துச் சேறாக்குதல்

2140. வதை – தல் (செ.கு.வி) துன்புறல்

2141. வதை – த்தல் (செ.குன்றாவி) நலிந்து அலைத்துத் துன்புறுத்தல்

2142. வந்தனி – த்தல் (செ.கு.வி) வணங்கி செலுத்தல்

2143. வந்தி – த்தல் (செ.கு.வி) வணங்குதல்

2144. வயங்கு – தல் (செ.கு.வி) ஒளி செய்தல்

2145. வயக்கு – தல் (செ.குன்றாவி) விளங்கச் செய்தல்

2146. வயாவு – தல் (செ.குன்றாவி) விரும்புதல்

2147. வளர் – த்தல் (செ.குன்றாவி) பெருக்குதல்
2148. வரன்று – தல் (செ.குன்றாவி) வாடுதல்

2149. வரி – தல் (செ.குன்றாவி) எழுதுதல்

2150. வரி – த்தல் (செ.குன்றாவி) எழுதுதல்

2151. வருடு – தல் (செ.குன்றாவி) தடவுல்

2152. வருந்து – தல் (செ.கு.வி) துன்புறுதல்

2153. வருத்து – தல் (செ.குன்றாவி) வருவித்தல்

2154. வருவி– த்தல் (செ.குன்றாவி) வரச் செய்தல்

2155. வரை – தல் (செ.குன்றாவி) எழுதுதல்

2156. வல்லு – தல் (செ.குன்றாவி) செய்யமாட்டுதல்

2157. வல – த்தல் (செ. குன்றாவி) பின்னுதல்

2158. வலி – தல் (செ.குன்றாவி) இழுத்தல்

2159. வலி – த்தல் (செ.குன்றாவி) கட்டாயப்படுத்துதல்

2160. வலு – த்தல் (செ.கு.வி) வன்மையாதல்

2161. வவ்வு – தல் (செ.குன்றாவி) கவர்தல்

2162. வழங்கு – தல் (செ.கு.வி) இயங்குதல்

2163. வழக்கு – தல் (செ.குன்றாவி) போக்குதல்

2164. வழல்(லு) – தல் (செ.கு.வி) தோல் கழலுதல்

2165. வழற்று – தல் (செ.குன்றாவி) தோல் கழுலச் செய்தல்
2166. வழி – தல் (செ.கு.வி) நிரம்பி வடிதல்

2167. வழி – த்தல் (செ.குன்றாவி) வடித்தல்

2168. வழுக்கு – தல் (செ.கு.வி) சறுக்குதல்

2222. வளவு – தல் (செ.குன்றாவி) வளர்தல்

2223. வளாவு – தல் (செ.குன்றாவி) சதுத்தல்
2224. வளை – தல் (செ.கு.வி) கோணுதல்

2225. வளை– த்தல் (செ.குன்றாவி) வளையச் செய்தல்

2226. வற்று – தல் (செ.கு.வி) சுவறுதல்

2227. வற – த்தல் (செ.கு.வி) காய்தல்

2228. வறண்டு – தல் (செ.குன்றாவி) தெள்ளுதல்

2229. வறட்டு – தல் (செ.குன்றாவி) வற்றச் செய்தல்

2230. வறள்(ளு) – தல் (செ.கு.வி) வற்றுதல்

2231. வறு – தல் (செ.கு.வி) வறுபடுதல்

2232. வறு – த்தல் (செ.குன்றாவி) பொரியச் செய்தல்

2233. வறுகு – தல் (செ.குன்றாவி) இறுகப் பிடித்தல்

2234. வன்மி – த்தல் (செ.கு.வி) கண்னெஞ்சு படைத்தல்

2335. வன்னி – த்தல் (செ.குன்றாவி) வண்ணம் வைத்தல்

2236. வா – தல் (செ.கு.வி) வருதல்

2237. வாக்கு – தல் (செ.குன்றாவி) வார்த்தல்

2238. வாங்கு – தல் (செ.குன்றாவி) வளைத்தல்

2239. வாசி – த்தல் (செ.குன்றாவி) படித்தல்

2240. வாட்டு – த்தல் (செ.குன்றாவி) உலர்த்துதல்

2241. வாட்டு – தல் (செ.கு.வி) உலர்தல்

2242. வாடு – தல் (செ.குன்றாவி) உலர்தல்

2243. வாதி – த்தல் (செ.குன்றாவி) அடித்தல்

2243 வாது–தல் (செ.குன்றாவி) அடித்தல், கிழித்தல்
2244. வாய் – தல் (செ.குன்றாவி) பெறுதல்

2245. வாய் – த்தல் (செ.கு.வி) செழித்தல்

2246. வார் – தல் (செ.கு.வி) ஒழுகுதல்

2247. வார் – த்தல் (செ.கு.வி) அம்மைநோயில்

2248. வாரி – த்தல் (செ.கு.வி) முத்துவெளிப்படல்

2249. வாரு – தல் (செ.குன்றாவி) அள்ளுதல்

2250. வாலுவு – தல் (செ.கு.வி) தாண்டுதல்

2251. வாழ் – தல் (செ.குன்றாவி) இருத்தல்

2252. வாழ்த்து – தல் (செ.குன்றாவி) பாராட்டுதல்

2253. விக்கு – தல் (செ.கு.வி) விக்கலெடுத்தல்

2254. விங்கு – தல் (செ.கு.வி) மிகுதல்

2255. விசி – தல் (செ.குன்றாவி) கட்டுதல்

2256. விசி – த்தல் (செ.கு.வி) விம்முதல்

2257. விசிறு – தல் (செ.கு.வி) காற்றெழுப்புதல்

2258. விசுக்கு – தல் (செ.குன்றாவி) விரைவாக கை வீசுதல்

2259. விசும்பு – தல் (செ.குன்றாவி) (செ.கு.வி) வெறுப்புடன் விலகுதல்

2260. விசை – த்தல் (செ.குன்றாவி) விரைவு பண்ணல்

2261. விஞ்சு – தல் (செ.குன்றாவி) மேலாதல்

2262. விடி – த்தல் (செ.கு.வி) மலங்கழித்தல்

2263. விடு – தல் (செ.குன்றாவி) நீங்குதல்

2264. விடு – த்தல் (செ.குன்றாவி) அனுப்புதல்

2265. விடை – தல் (செ.கு.வி) பிரிதல்

2266. விடை – த்தல் (செ.குன்றாவி) வேறுபடுத்துதல்

2267. வித்து – தல் (செ.குன்றாவி) விதைத்தல்

2268. விதறு – தல் (செ.கு.வி) நடுங்குதல்

2269. விதி – த்தல் (செ.கு.வி) நடுங்குதல்

2270. விதிர் – தல் (செ.கு.வி) நடுங்குதல்

2271. விதிர் – த்தல் (செ.குன்றாவி) சிதறுதல்

2272. விதை – த்தல் (செ.குன்றாவி) விதை தெளித்தல்

2273. விம்மு – தல் (செ.கு.வி) விம்மியழல்

2274. விய – த்தல் (செ.கு.வி) வியப்படைதல்

2275.வியர்–த்தல்(செ.கு.வி)உடலில்நீர்த்துளி உண்டாதல்

2276. விரசு – தல் (செ.கு.வி) செறிதல்

2277. விரவு – தல் (செ.குன்றாவி) கலத்தல்

2278. விரள்(ளு) – தல் (செ.கு.வி) அச்சப் படுதல்

2279. விராவு – தல் (செ.கு.வி) பொந்துதல்

2280. விரி – தல் (செ.கு.வி) பரத்தல்

2281. விரி – த்தல் (செ.குன்றாவி) விரியச் செய்தல்

2282. விரும்பு – தல் (செ.குன்றாவி) விருப்பப்படுதல்

2283. விரை – தல் (செ.கு.வி) வேகமாதல்

2284. விரை – த்தல் (செ.கு.வி) மரத்துப் போதல்

2285. விலகு – தல் (செ.கு.வி) நீங்குதல்

2286. விலக்கு – தல் (செ.குன்றாவி) விலகச் செய்தல்

2287. விலங்கு – தல் (செ.கு.வி) குறுக்கிடுதல்

2288. விலவு – தல் (செ.கு.வி) அழுதல்

2289. விலாசு – தல் (செ.குன்றாவி) தோல்வியுறச் செய்தல்

2290. விலாவி – தல் (செ.கு.வி) அழுதல்

2291. விழி – த்தல் (செ.கு.வி) கண் திறத்தல்

2292. விழு – தல் (செ.கு.வி) கீழ்நோக்கியிழித்தல்

2293. விழு – த்தல் (செ.குன்றாவி) விழச் செய்தல்

2294. விழுங்கு – தல் (செ.குன்றாவி) ஒருசேர

2295. விழுத்து – தல் (செ.குன்றாவி) விரும்புதல்

2296. விழை – தல் (செ.குன்றாவி) விரும்புதல்

2297. விள்(ளு) – தல் (செ.கு.வி) மலர்தல்

2298. விளங்கு – தல் (செ.கு.வி) ஒளிர்தல்

2299. விளக்கு – தல் (செ.குன்றாவி) தெளிவாக்குதல்

2300. விளத்து – தல் (செ.குன்றாவி) விலக்குதல்

2301. விளம்பி – த்தல் (செ.கு.வி) சுணங்குதல்

2302. விளம்பு – தல் (செ.குன்றாவி) சொல்லுதல்

2303. விளர் – தல் (செ.குன்றாவி) வெளுத்தல்

2304. விளர் – த்தல் (செ.கு.வி) வெறுத்தல்

2305. விளவு – தல் (செ.குன்றாவி) கமராதல்

2306. விளாவு – தல் (செ.குன்றாவி) கலத்தல்

2307. வளிாசு – தல் (செ.கு.வி) கடுமையாக பிரம்பால் அடித்தல்

2308. விளி – தல் (செ.கு.வி) இறத்தல்

2309. விளி – த்தல் (செ.குன்றாவி) அழைத்தல்

2310. விளை – தல் (செ.கு.வி) தவசம் முதலியன விளைதல்

2311. விளை – த்தல் (செ.குன்றாவி) தவசம் முதலியன விளைவித்தல்

2312. விளைவி – த்தல் (செ.கு.வி) விளைவித்தல்

2313. விற – த்தல் (செ.கு.வி) செறிதல்

2314. விறல்(லு) – தல் (செ.கு.வி) சினத்தொடு எதிர்த்துச் செல்லுதல்

2315. விறாண்டு – தல் (செ.குன்றாவி) பிராண்டுதல்

2316. விறுமி – த்தல் (செ.கு.வி) செருக்குதல்

2317. விறை – தல் (செ.கு.வி) சினத்தல்

2318. விறை – த்தல் (செ.கு.வி) பெருமை கொள்ளல்

2319. வினவு – தல் (செ.குன்றாவி) உசாவுதல்

2320. வினா – தல் (செ.குன்றாவி) வினவுதல்

2321. வீ – தல் (செ.கு.வி) அழிதல்

2322. வீ – த்தல் (செ.குன்றாவி) அழித்தல்

2323. வீங்கு – தல் (செ.கு.வி) பருத்தல்

2324. வீக்கு – தல் (செ.குன்றாவி) கட்டுதல்

2325. வீசு – தல் (செ.குன்றாவி) எறிதல்

2326. வீட்டு – தல் (செ.குன்றாவி) கொல்லுதல்

2327. வீடு – தல் (செ.கு.வி) கெடுதல்

2328. வீத்து – தல் (செ.குன்றாவி) அடித்தல்

2329. வீதி – த்தல் (செ.குன்றாவி) அகலப்படுத்தல்

2330. வீழ் – தல் (செ.கு.வி) விழுதல்

2331. வீழ் – த்தல் (செ.குன்றாவி) வீழச்செய்தல்

2332. வீழ்த்து – தல் (செ.கு.வி) விழச்செய்தல்

2333. வீறு – தல் (செ.கு.வி) மேம்படுதல்

2334. வெஃகு – தல் (செ.குன்றாவி) மிகவிரும்பல்

2335.வெக்களி – த்தல் (செ.கு.வி) வானம்தெளிவாதல்

2336. வெகு – த்தல் (செ.குன்றாவி) மிகுந்தல்

2337. வெட்டி – த்தல் (செ.கு.வி) கடுகடுப்பாதல்

2338. வெட்டு – தல் (செ.குன்றாவி) வளால் எரிதல்

2339. வெடி – தல் (செ.கு.வி) விடிதல

2340. வெடி – த்தல் (செ.கு.வி) பிளவடைதல்

2341. வெண்டு – தல் (செ.கு.வி) வற்றிப்போதல்

2342. வெதிர் – த்தல் (செ.கு.வி) நடுங்குதல்

2343. வெதும்பு – தல் (செ.கு.வி) வாடுதல்

2344. வெதுப்பு – தல் (செ.குன்றாவி) வாட்டுதல்

2345 வெந்தி – த்தல் (செ.கு.வி) சினங்கொள்ளல்

2346. வெம்பு – தல் (செ.கு.வி) மிகச்சூடாதல்

2347. வெருட்டு – தல் (செ.குன்றாவி) அச்சமுறுத்தல்

2348. வெருவா – தல் (செ.கு.வி) அச்சந்தருதல்

2349. வெருள்(ளு) – தல் (செ.கு.வி) மருளுதல்

2350. வெல்(லு) – தல் (செ.குன்றாவி) வெற்றிகொள்ளல்

2351. வெள்கு – தல் (செ.கு.வி) வெட்குதல்

2352. வெளி – த்தல் (செ.கு.வி) வெளிப்படையாதல்

2353. வெளிறு – தல் (செ.கு.வி) வெளுத்துப்போதல்

2354. வெறி – தல் (செ.கு.வி) செறிதல்

2355. வெறி – த்தல் (செ.கு.வி) குடியால் மயங்குதல்

2356. வெறு – த்தல் (செ.குன்றாவி) அருவருத்தல்

2358. வேண்டு – தல் (செ.குன்றாவி) விரும்புதல்

2359. வேதி – த்தல் (செ.குன்றாவி) வேறாக்கல்

2360. வேய் – தல் (செ.குன்றாவி) மூடுதல்

2361. வேய் – த்தல் (செ.குன்றாவி) ஒற்றரால் செய்தி அறிதல்

2362. வேர் – த்தல் (செ.கு.வி) உடலில் மேற்புறத்தில் நீர்த்துளி உண்டாதல்

2363. வேறா – தல் (செ.கு.வி)

2364. வை – தல் (செ.குன்றாவி) பதித்தல்

2365. வை – த்தல் (செ.குன்றாவி) இடுதல்

2366. வைகு – தல் (செ.கு.வி) தங்குதல்

**3.305 வினையடிகளின் எழுத்துப் புணர்ப்பு வாய்பாடு மொழியிலார் நோக்கில் 13 வகைப்படும்.**

எ.டு.

1. ஈ, ஆ – உ (V)
2. அள, ஆகு – உமெஉ (VCV)
3. அடர், படர் – உமெஉமெ (VCVC)
4. அடங்கு, இலங்கு – உமெஉமெமெஉ (VCVCCV)
5. ஆர்த்து, அழ்த்து – உமெமெமெஉ (VCCCV)
6. இடறு, அலசு – உமெஉமெஉ (VCVCV)
7. நொ, து – மெஉ (CV)
8. நில், பார் – மெஉமெ (CVC)
9. கட, நட – மெஉமெஉ (CVCV)
10. முழுகு, வருடு –மெஉமெஉமெஉ (CVCVCV)
11. தங்கு, தாங்கு – மெஉமெமெஉ (CVCCV)
12. வீழ்த்து, சேர்த்து – மெஉமெமெமெஉ (CVCCCV)
13. பிறாண்டு, இறாட்டு – மெஉமெஉமெமெஉ (CVCVCCV)

# 4. பொருட்பாடு

# (Semantics)

> *"Language involves making of inferences from behaviour to Psychological function meaning is the relationship of Pshychological system"*
>
> *- Chomsky*

<u>நெ.மு.</u>

**4.1 வேர்ச்சொல்லுக்கு மூலம் காண்பது போன்று பொருட்பாட்டுக்கு மூலம் காண்பது, பண்பாட்டுச் சூழல்களில் பொருட்பாட்டுப் புடைபெயர்ச்சி ஏற்கும் சொற்பாங்குகளைக் காட்டும். ஒலிக்குறிப்பு இடைச்சொல் பெயர்ச் சொல்லாகப் பொருளால் புடைபெயரும்.**

***(எ.டு)*** மா–விலங்கு. 'மா' எனக் கத்துதலால் பெற்ற பெயர். வடிவால் பெரியது எனும் கருத்து பொருந்துவ தாயின் யானை ஒன்றே இச்சொல்லால் குறிக்கத் தக்கதாகிவிடும். விலங்குகளின் பொதுவான முழங்கல்களில் குறிப்பாக வளர்ப்பு விலங்குகளான ஆடு மாடுகளின் குரலோசையை குழந்தைகள் கேட்பது அன்றாடு இயல்பாதலின் அக்குறிப் பொலி பொருட்பாட்டு விரிவால் விலங்குகளின் பொதுப் பெயராயிற்று.

**4.2 பண்புத் தொகையில் மெல்லினம் மிகலும் வினைத் தொகையில் ஒற்று மிகாமையும் நுண் பொருள் வேறுபாட்டைக் காட்டும்.**

***(எ.டு)*** கொடு கொட்டி – .இசைக் கருவியின் பெயர்; கொடுங்கொட்டி – அனைத்தையும் அழித்த களிப்பில் ஆடுவது.

கொடுகொட்டி என்பதனைக் கொடுங் கொட்டி எனும் கடத்தின் வகையாகக் காட்டிப்பண்புத் தொகையாகப் புணர்த்த நச்சினார்க்கினியாரின் பொருட்பாட்டு இயைபு ஏற்கத்தக்கதன்று.

**4.3 உயிர்த்தொடர் குற்றுகரப் புணர்ச்சி இடம்பெறும் பொருட்பாட்டுப் புடை பெயர்ச்சிக்கு ஏற்ப நான்கன் உருபும் பயனும் உடன்தொக்க தொகையில் வல்லெழுத்து மிகாது.**

***(எ.டு)*** பரிசு திட்டம் – பரிசுக்கு உரிய திட்டம்.

முரசு கட்டில் – முரசுக்கு உரிய கட்டில்.

அரசு பேருந்து – அரசுக்கு உரிய பேருந்து.

**4.4 உயிர்த்தொடர் குற்றுகரப் புணர்ச்சி இடம்பெறும் உருபும் பயனும் உடன் தொக்க தொகைகளில் பொருட்பாட்டுப் புடை பெயர்ச்சிக்கு ஏற்ப இரண்டன் உருபும் பயனும் உடன்தொக்க தொகையில் வல்லெழுத்து மிகும்.**

***(எ.டு)*** மரபுப்பாடல் – மரபைத் தன்னகத்துக் கொண்ட பாடல்

பரிசுத்திட்டம், – பரிசை நல்கும் திட்டம்.

**4.5 நெடிற்றொடர் உயிர்த்தொடர் குற்றுகரப் புணர்ச்சி இடம் பெறும் உருபும் பயனும் உடன் தொக்க தொகைகளில் பொருட்பாட்டுப் புடைபெயர்ச்சிக்கு ஏற்ப ஏழன் உருபும் பயனும் உடன் தொக்க தொகையில் நிலைமொழி ஒற்று இரட்டித்து வல்லினம் மிகும்.**

***(எ.டு)*** வயிறு+பசி–வயிற்றுப்பசி (வயிற்றுக்குள் தோன்றும் பசி)

வயிறு+போக்கு – வயிற்றுப்போக்கு

நாடு+படகு – நாட்டுப் படகு (உள் நாட்டில் செய்யப்படும் படகு)

கூடு+பறவை – கூட்டுப்பறவை (கூட்டில் வாழும் பறவை)

காடு+ஆட்சி – காட்டாட்சி

**4.6 (அ) நெடிற்றொடர் உயிர்த்தொடர் குற்றுகரப்புணர்ச்சி இடம்பெறும் இரண்டன் தொகைகளில் பொருட்பாட்டுப் புடை பெயர்ச்சிக்கு ஏற்ப வல்லெழுத்து மிகாது. நிலைமொழியில் ஒற்று இரட்டிக்காது.**

*(எ.டு)* வீடுகட்டினான்.

கயிறு திரித்தான்.

**(ஆ) இரண்டாம் வேற்றுமை விரியில் வலி மிகும். நிலை மொழியில் ஒற்று இரட்டிக்கும்.**

*(எ.டு)* வீட்டைக் கட்டினான்.

கயிறைத் திரித்தான்.

**4.7 தனிக்குறில் சார்ந்த முற்றியலுகரம் ஏழன் உருபும் பயனும் உடன்தொக்க தொகைகளில் மிகும்.**

*(எ.டு)* நடு+கோடு – நடுக்கோடு (நடுவில் உள்ள கோடு)

தெரு+தூசு – தெருத்தூசு

கொலு+பொம்மை – கொலுப்பொம்மை

**4.8 தனிக்குறில் சார்ந்த முற்றியலுகரம் பண்புத் தொகைகளில் மிகும்.**

*(எ.டு)* நடு+பகுதி – நடுப்பகுதி (நடு ஆகிய பகுதி)

கரு+குழி – கருக்குழி

**4.9 தனிக்குறில் சார்ந்த முற்றியலுகரம் வினைத்தொகையில் மிகாது.**

*(எ.டு)* இடு+காடு – இடுகாடு

சுடு + சோறு – சுடுசோறு

அறு+தாலி – அறுதாலி

**4.10 தனிக்குறில் சார்ந்த முற்றியலுகரம் குறிப்புப் பெயரெச்சப் பொருளில் வந்த பண்புப் பெயரடியாயின் மெல்லினம் மிகும்.**

*(எ.டு)* பெரு+கோயில் – பெருங்கோயில்

குறு+கோழி – குறுங்கோழி

அரு+செல்வம் – அருஞ்செல்வம்

இவற்றைப் பெரும், அரும் குறும் எனவும், அருமை, பெருமை, குறுமை எனவும் நிலைமொழியாக்கி முறையே பெயரெச்சத் தொடராகவும் பண்புத் தொகையாகவும் இலக்கண ஆசிரியர் சில்லோர் புணர்த்திக் காட்டுவது தவறாகும்.

வரும்+காலம் தரும்+பொருள் என்றாற் போன்ற தெரிநிலைப் பெயரெச்சம் போன்று பெரும் கோயில் எனக் குறிப்புப் பெயரெச்சம் ஆக்கும் மரபு இல்லை. பெருநலன், பெரு வரவு, என நிற்றலும் அருமைப் புதல்வன் அருமைப்பாடு எனப் பண்புப் பெயர் நிலை மொழியாகலும் காண்க. பண்புப் பெயர்கள்; செய்யும் என்னும் வாய்ப்பாட்டு ஈறாவதில்லை.

**4.11 தொகை மொழிபோல் காணப்படும் கூட்டுச் சொற்கள் பெயரெச்சப் பொருளில் விட்டிசைக்க நேர்ந்தால் புணர்ச்சித் திரிபுகள் பெறுவதில்லை.**

*(எ.டு)* நன்கொடை – விட்டிசைக்கும் பெயரெச்சப் பொருள் பொதிந்த கூட்டுச்சொல்

கொல்களிறு – வினைத்தொகை (விட்டிசைக் கூட்டுச்சொல்)

இவை பொற்பேழை (பொன் + பேழை) நெற்குன்றம் (நெல் + குன்றம்) என்றாற்போல் வலித்தல் திரிபு பெறவில்லை. நல்ல கொடை எனும் பாங்கில் நன்கொடை விட்டிசைக்கிறது. கொல்களிறு எனும் வினைத்தொகையும் விட்டிசைக்கிறது.

நற்சோணை, பொற்கழல் என்பவற்றில் உள்ள (நல், பொன்) நிலைமொழிகள் பண்புப்பெயராகவும் நன்கொடை புன்புலம், மென்சாயல் என்பவற்றிலுள்ள (நன் புன், மெல்) நிலைமெழிகள் குறிப்புப் பெயரெச்சமாகவும் கொள்ளத்தக்கன. பெயரெச்சம் விட்டிசைக்கும் பாங்குடையது. இவற்றை நற்கொடை, கொற்களிறு என எவரும் வழங்குவதில்லை. மரபார்ந்த இலக்கணக் கட்டமைப்பு தாய்மொழியாளரின் மூளை மண்டல மரபணுவிலேயே பதிவுபெற்றது என்பதால் தாய்மொழியாளர் தம்மையறியாமலேயே பிழைபட்ட வடிவங்களைத் தம் ஒலிப்பில் நீக்கிவிடுகின்றனர் எனும் கருத்தை அறிஞர் சோம்சுகியின் கட்டுரை களாலும் உய்த்துணரமுடிகின்றது.

**4.12 பொருள் தாவல் (Semantic Shift) முறையில் ஒரு சொல்லின் பொருள் நேரடித் தொடர்பற்ற விரிவுப் பொருளில் புடை பெயர்ச்சி பெறுவது உண்டு**

*(எ.டு)* பறு – பாறு – பாறை அகன்று விரிதல், பறு – பறை (வாயகன்ற தோற்பறை)

பறு – பறை (விரிந்த சிறகு – சிறகுடைய பறவை)

பறு – பறைதல் (பறைகொட்டுதல்)

பறு – பறைதல் (பேசுதல், சொல்லுதல்)

இவற்றில் பறைதல் – (சொல்லுதல்) என்பது பொருட்பாட்டுத் தாவலாகும்.

மலைமுகடுகளில் வாழும் மக்கள் நெடுகத் தாழ்ந்த மலைச் சாரல்களில் இறங்கி அடுத்த மலைக்கு ஏறிச்சென்று உடனடிச் செய்திகளைத் தெரிவிக்க இடர்ப்பட்டனர். இந்த இடர்ப்பாட்டைத் தவிர்க்க பறை கொட்டித் தெரிவித்தனர். கொட்டொலி எண்ணிக்கை அல்லது நீட்சிக்கேற்ப செய்தியின் தன்மை அறிவிக்கப்படும். இதனைக் குறிப்பு மொழி எனலாம். பறை வாயிலாக அறிவிப்பதற்கு பறைதல் என்னும் வினைச்சொல் வழக்கூன்றியது. மலை நாடாகிய மலையாளத்தில் பறைதல் என்னும் சொல் பேசுதல், சொல்லுதல் எனும் பொருளில் தாவல் பெற்றது. பொருள் தாவல், பொருள் விரிவு ஆகியவை காரணம் கருதியே மொழியில் ஆளப்படுகின்றன.

**4.13 எண்ணம் என்பது எப்பொழுதும் முன்னிலைப் படர்க்கைப் பொருள்களின் நிகழ்வுகளில் நிலைகொண்டு வெளிப் பாட்டுக் கருவியாக வினையடிகளை உருவாக்குகிறது. வினையடிகளின் துணைகொண்டு ஏராளமான பெயர்ச் சொற்களைப் படைத்துக் கொள்கிறது.**

***(எ.டு)*** காண், பார், சூழ் எனும் வினைச் சொற்கள் கள் (சேர்), பால் (பற்று), சூழ் (சுற்றி வளைத்துக் கொள், என்னும் வினையடிகளில் தான் கண்ட காட்சியைத் தன் மனத்தில் பொருத்திக் கொள்ளும் கருத்தை உள்ளடக்கியுள்ளது. ஆத்திரேலியப் பழங்குடி மொழிகளில் கண்ணைக் குறிக்கும் பெயர்ச் சொல்லான புலம் என்பது பொருத்துதல் கருத்துடைய புல் எனும் வேரிலிருந்தே தோன்றியிருப்பதைக் காணலாம்.

ஒரு நிகழ்வுக்குரிய காரணச் சொல்லைச் தெரிந்தெடுத்து வரையறுத்த பின் அதனை ஒரு முறை, வினைச் சொல்லாகவோ பெயர்ச் சொல்லாகவோ மனத்தில் பதிவு செய்து கொண்ட பின் அதனை அம்மொழியினர் மாற்றிக் கொள்ளாமல் நிலைப்படுத்திக் கொள்கின்றனர். இதனால் பொருள் புலப்பாட்டில் இடர்ப்பாடு ஏற்படுவதில்லை.

**4.14 மற்றவர் செயற்பாடுகளை ஒலிப்பு வடிவான மொழி வாயிலாகச் சொல்லத் தெரிந்த பின் அவ்வகைச் சொற்களே தன்னைக் குறித்த செயற்பாடுகளுக்கும் பயன்படுத்தப்பட்டிருக்கின்றன. இல்லை யெனின் தன்னைக்குறித்த வினைகளும் பிறரைக் குறித்த வினைகளும் வெவ் வேறாக இருந்திருக்கும்.**

***(எ.டு)*** நில், செல், சொல் என்பவை முன்னிலை ஏவல் வினைகள். வினையளவில் தன்மையிடத்து வினை நிகழ்வைக் குறிக்கவில்லை. செல்வேன், செல்வோம் என ஈறுபெற்றே தன்மையாதல் காண்க.

**4.15 அஃறிணைப் பெண்பாற் பெயர்கள் உயர்திணைப் பெண்பாற் பெயர்களாகும்.**

***(எ.டு)*** துரு – Skt. sheep

புரு (புருவை) G. freu

குட்டி – E. kid

மறி – பஞ். mari.

பள்ளை – வங். bahan.

கோழி (பெண் குதிரை) இந். gōḍa.

**4.16 அஃறிணை ஆண்பாற் பெயர்கள் உயர்திணை ஆண்பாற் பெயர்களாகும்**

***(எ.டு)*** சேவல் (ஆண் குதிரை) F. cavalier

மழவு – மகவு – மகன் – மான் E. man

**4.17 இரு சொற்புணர்வில் பொருட் புலப்பாடு தெளிவுறா நிலையில் நிலை மொழியிறுதியில் அத்துச் சாரியை இடம் பெறும்**

***(எ.டு)*** மரம் + அடி – மரவடி. பொருட்பாடு தெளிவில்லை

மரம் + அத்து + அடி – மரத்தடி

**4.18 உகர ஈற்று நிலை மொழியொடு வருமொழி புணரும்போது உகர ஈறு ஆகார ஈறாக நீளும்.**

***(எ.டு)*** கனவு + காலம் – கனாக்காலம்

நிலவு + ஒளி – நிலாவொளி

**4.19 பிறப்பிட ஒற்றுமையால் எழுத் தொலிப்பு திரிபடைந்தாலும் சொல்லின் பொருள் வேறுபடுவதில்லை. சில இடங் களில் தொடர்புடைய பொருள்களில் திரிபடையும்**

*(எ.டு)* தப்பட்டை, தம்பட்டம், தம்மட்டு, தமுட்டு

**4.20 சொல்லின் வேர்ப்பொருள் அதனோடு தொடர்புடைய பொருள்களில் பன்மடித் திரிபுகளைப் பெறும்.**

*(எ.டு)* உல் – சுல் – சுள் (சுடுதல், வேதல், எரிதல்)

சுள்ளி – காய்ந்து உள்ளீரம் வற்றிப்போன விறகுக்குச்சி.

க. சுண்டி (சுக்கு). சூளை – பானை சுடுமிடம்

சுள் – (உள்ளீடு இல்லாதது) பொய்

இந்தி. Jūṭ

உல் – ஊல் – ஊழ் – சூழ் (முன் நோக்குதல்) பார்த்தல்.

தெ. சூடு. – சூள் (பலர் பார்க்கும் நிலையில் ஏற்ற உறுதிமொழி).

**4.21 இருபொருள் தரும் சொற்றொடர் சூழலாலும் சொல்லுவோன் குறிப்பினாலும் அடுத்துவரும் தொடராட்சியாலும் பொருள் பிரிந்து இசைக்கும்.**

*(எ.டு)* புலிகொல் யானை அரசனுடையது (புலியைக் கொன்ற யானை)

புலிகொல் யானை அடக்கம் செய்யப்பட்டது (புலியால் கொல்லப்பட்ட யானை)

**4.22 அருகிய சொல்லாட்சிகளில் வேர் மூலப் பொருளும் ஒளிந்திருக்கும்.**

*(எ.டு)* ஏட்டிக்குப்போட்டி

ஏ – ஏண் = உயர்வு, மேன்மை;

ஏ–ஏண் – ஏண்தி – ஏண்டி – ஏட்டி

**4.23 சொல்லிடைத் திரிபுகள் மூலப் பொருளை மறைத்துவிடும்**

*(எ.டு)* அதிரசம் – அரிசி – அரி + (தீம்) தீயம் – அரிதியம் – அதிரியம் – அதிரயம் – அதிரசம்

**4.24 வினையடி தொழிற்பெயராகி மீண்டும் தொழிற்பெயர் வினையடியாகும். வினையடி பல்வேறு பெயர்ச் சொற்களை உருவாக்கும்**

*(எ.டு)* நுவ் – நுவ்வு – நுவல் = சொல்லுதல்

நுவல் – நுல் – நுள் – நொள் – நொடி = பேசுதல்

நுவ்வு – நுப்பு – நெப்பு (அடையாள மொழி) க., தெ. நெப்பு

நுவல் – நுல் – நுர் – நோர் = தெ. (வாய்) நோரு.

நோர் – நேர்ப்பு = கற்பித்தல்

நேர்ச்சுகோ = கற்றுக்கொள்

**4.25 பொருட்பாட்டு விரிவு ஒரே வினை யடியில் பற்பல பெயர்ச் சொற்களை உருவாக்கும்.**

*(எ.டு)* துல் = முன்னுறல் கருத்து வேர்

துல் – துலக்கு – துக்கு – தூக்கு – தூக்கம் (மலை)

Skt. துர்கம்

துல் – தல் – தலை (உடம்பின் மேலுறுப்பு)

தலை – தலைத்தல் (தலையின் செயலாகிய நினைத்தல்)

தலை – தெலி

தெலி = தெரி, தெரிந்துகொள்

தெலி – தெர் – தேர் – தேர்வு (ஆராய்ந்து முடிவெடுத்தல்)

**4.26 பொருளால் வேறுபட்ட சொற்கள் ஒரு உறவு கொண்டால் தொடராட்சியில் பொருள் புலப்படும்; வேர் வகையால் சொல்லமைப்பும் பிரித்தறியப்படும்**

*(எ.டு)* **(1)** மக்கள், மாக்கள்

மன் – மனுக்கள் – மாக்கள் – மக்கள் (கூட்டம்)

மகவு (கள்) – மக்கள் – (ஒருவரின் பிள்ளைகள்)

மாவு – மாவுகள் – மாக்கள் (விலங்குகள்) – மாக்கள் வந்தன

**(2)** முன்னு – முன்னம் – மோனம் – மோனி, மௌனி

முன்னு – முன்னி – முனி – முனிவன்.

முன்னு – (முன்னை) முனைவு – முனைவன்

**4. 27 பலபொருள் ஒரு சொல்லின் வேரடிப் பொருட் புலப்பாடு தொடராட்சியில் புலனாகும்.**

*(எ.டு)* **(1)** ஈடு = அடி. அவனுக்கு ஈடுகொடுத்தான்

2. ஈடு = (சாபம்), சாவம், சாவிப்பு அவன் மேல் ஈடு வைத்திருக்கிறான்

3. .ஈடு = சமம். அவனுக்கு யாரும் ஈடாக முடியாது

4. ஈடு = தடவை, அடைசல்

(நான்கு ஈடு இட்டலி எடுத்து வைத்திருக்கிறாள்).

**4.28 மொழி வளரும்போது மக்கள் தாம் நினைக்கும் பொருளுக்கெல்லாம் சொற் படைக்கின்றனர். மொழி வளர்ந்தபின் காரணம் மறந்து சொல்லுக்குப் பொருள் அறிகின்றனர். எனவே, கருத்து வெளிப் பாடு (பொருள்) முந்தியது; சொல் வடிவம் பிந்தியது)**

*(எ.டு)* ஞாட்பு = தலைநாட்போர். ஞாட்பினுள் நண்ணாரும் உட்கும் என்பீடு (குறள்)

இச்சொல்லுக்குச் சொற்பிறப்பு காண, சொல்லை அகழ்வதாயின் ஞாண் + பு என்றோ, சாடு – ஞாடு – ஞாட்பு என்றோ வடிவமீட்டமைத்து இடர்ப்பட நேரும். சொல்லின் பொருள்வழி மூலங்காண முற்படுவதே சாலச் சிறந்ததாதலின் போர்க்களத்தில் தொடங்கும் முதல் நாள் போரைக் குறித்த இச்சொல், போரின் முதல்நாளைக் குறிக்கும். (நாள் = புதிய, முதன்முதல். நாண்மலர் – அன்றலர்ந்த புதுமலர்) நாள் என்னும் சொல்லிலிருந்தே தோன்றியிருக்க வேண்டும். நாள் + பு – நாள்பு. ஞாள்பு – ஞாட்பு என இதன் முந்துவடிவத்தைப் பொருள் வழிநாடி மீட்டமைப்பதே சரியான சொற்பிறப்பாகும். பொருளுக்கு முதன்மை தந்து சொல்வடிவத்தை ஆராய்வதே பாவாணர் கண்ட சொல்லாய்வு நெறிமுறை. சொல்லுக்கு முதன்மை தராமல் சொல்வடிவத்தை மட்டும் ஆராய்வது மேனாட்டார் ஆய்வுமுறை.

**4. 29 மரூஉச் சொற்கள் மூல வடிவத்தை இழந்துவிடுவதால் மூலப்பொருளைத் தன்னுள் மறைத்துக் கொண்டு சுட்டப்படும் பொதுப்பொருளை மட்டும் காட்டும்**

*(எ.டு)* கோவை = ஓர் ஊரின் பெயர் என்று மட்டும் பொதுப்பொருள் சுட்டுகிறது. கோவன்புத்தூர் =கோவன் என்பவனின் பெயரிலமைந்த புத்தூர் என்னும் மூலவடிவம் மறக்கப்படுகிறது.

**4. 30 ஒரு கருத்திலிருந்து மற்றொரு கருத்து தோன்றும்போது அக்கருத்துக் குரிய சொல்லிலிருந்து மற்றொரு சொல் தோன்றும்**

*(எ.டு)* குல் – குலம் – குழு (ஒன்று கூடுதல்) – குடும்பம் (சேர்ந்து வாழும் அமைப்பு)

**4.31 சொல் திரியாமல் பொருள் வளர்ச்சி யால் இருமடி, மும்மடிப் பொருட்பாட்டு விரிவு பெறும்.**

*(எ.டு)* இருமடி பொருட்பாட்டு விரிவு (symantic expansion)

அ) இரு (தங்குதல்) – இர– இரவல் (தங்குதல்)

இரவல் – இரவலன் (வேற்றூரிலிருந்து வந்து யார் வீட்டுத் திண்ணையிலாவது தங்குபவன்)

(ஒ.நோ. வரு – வரவு, இரு – இரவு, நடு – நடவு)

அருள் நோக்கி உண்டியும் உறையுளும் அவன் பெறுதலால் புதிய விருந்தாளியை இரவலன் என்றனர். தங்குபவன் எனும் பொருள் உதவி எதிர் நோக்கி வருபவன் எனும் பொருளில் விரிவு பெற்றதால் இதனை இருமடிப் பொருட்பாட்டு விரிவு எனலாம்.

ஆ) புல் – புரு – புரவி

உல் (உயர்தல்) – புல் – (உயர்ந்து வளர்வது)

புரு = உயரம், உயர்ச்சி, புரம் = உயர்ந்த கோட்டை. புரு – புரவு =உயர்தல், மேம்படுத்துதல், வளர்த்தல், காத்தல், பேணுதல்.

உயரக் கருத்து, வளர்தல், வளர்த்தல் கருத்தினையும் வளர்த்தல் கருத்து பாதுகாத்தல் கருத்தினையும் பொருட்பாட்டு விரிவால் பெற்றதால் இது மும்மடிப் பொருட்பாட்டு விரிவு எனப்படும்.

**4.32 ஒரே சொல் நேர்ப் பொருளும் எதிர் மறையாக முரண்பொருளும் தருவதாயின் வேறொரு பொருளுக்குரிய வேர்ச் சொல்லை வகைப்படுத்திப் பொருட்பாட்டு முரணுக்குரிய காரணத்தைக் கண்டறி யலாம்.**

*(எ–டு)* 1. விழை – விழுமம் = உயர்வு, சிறப்பு.

வீழ் – விழுமம் = குற்றம், தாழ்வு

2. பல் – பரு – புரை = உயர்வு, மேன்மை

புல் – புரு – புரை = குறைபாடு, குற்றம்

**4.33 நிறைவினை குறைவினையானாலும் வேர்ச்சொல் சுமந்த பொருளின் மூலக் கருத்து குன்றுவதில்லை. பொருட்பாட்டுத் திரிபின் படிநிலைகளை மீட்டமைப்பதன் வாயிலாகப் பொருள் வளர் பாங்குகள் புலப்படும்.**

*(எ.டு)* பள் – படு = வைத்தல், இருத்தல், தோன்றுதல்

படு – பெடு. தெ. பெட்டு, E. put

நுள் –நுங்கு (விழுங்கு). தெ. மிங்கு > மாங்கு – மாந்து

துள் – துழை = தொளாவு (தேடு). துழை = துடைத்தல்

**4.34 ஏவல் வினையில் குறிலடுத்த ளகர ஈறு டகர ஈறாகத் திரிந்தால் முரண் பொருட்சொற்களாக மாறும்.**

*(எ.டு)* கொள் – கொடு

தள் – தடு

**4.35 தனி நெடிலடுத்த குற்றுகர ஏவல் வினை, ஒற்றிரட்டித்த வன்றொடர் குற்றுகர ஏவல்வினையாகும் போது பிற வினையாகும். பொருட்பாட்டு விரிவால் பெயர்ச் சொல்லுமாகும்.**

*(எ.டு)* ஊறு – ஊற்று (ஊற்றுதல், நீரூற்று)

ஆடு – ஆட்டு (ஆடச்சொல், ஆட்டம்)

ஓடு –ஓட்டு (ஓடச்செய், தோல்வி)

கூடு – கூட்டு (கூடச்செய், கூட்டுப்பொருள், கூட்டம்)

**4.36 சொற்களின் பொருட் புலப்பாடு குறிப்பு, வெளிப்படை என இரு திறப்படும்**

*(எ.டு)* ஆடு, மாடு = விலங்கின வகைகள் (வெளிப்படைப் பொருள்)

அவன் ஒரு மாடு (குறிப்புணராதவனும் அறிவுத் தெளிவில்லாதவனும் ஆகிய உதவாதவன் எனும் குறிப்புப் பொருள் அடங்கிய தொடராட்சி).

**4.37 புறத்திணை சார்ந்த குறிப்பு அகத்திணை சார்ந்த குறிப்பு எனக் குறிப்பு இரு வகைப்படும். புறத்திணைக் குறிப்பு குறிப்பறிதல். அகத்திணை சார்ந்த குறிப்பு, குறிப்பு உணர்தல் எனப்படும்.**

*(எ.டு)* 1) 'கரும்பு கட்டோடு இருந்தால்

எறும்பு ஒன்றும் செய்யாது'

ஒற்றுமையே வலிமை எனும் குறிப்புப் பொருள் தந்த புறத்திணைக் குறிப்புப் பழமொழி. இதனைக் குறிப்பறிதல் என்பர்.

2) அன்றில் பிரியின் உயிர் வாழாது

நீ பிரிந்தால் உன் துணைவி உயிர் வாழ மாட்டாள் என்பது அகத்திணைக் குறிப்பு. இதனைக் குறிப் புணர்தல் என்பர். இறைச்சி, உள்ளுறை என்பன அகத்திணைக்கே உரிய குறிப்புணர்தலாகும்.

**4.45 தொகை மொழிகளில் வினைத் தொகையில் வல்லினம் மிகாமையால் நிலைமொழி தன் வினைப்பொருள் ஏற்கும். நிலை மொழி பிறவினைப் பொருளதாயின் வல்லெழுத்து மிகுதலான் வரு மொழி உருபும் பயனும் உடன் தொக்க தொகைப் பொருள் ஏற்கும்**

*(எ.டு)* மடி + கோல் – மடிகோல் (வளைகின்ற கோல்) – வினைத் தொகை

மடி + கோல் – மடிக்கோல் (மடித்தலுக்கு) உதவும் கோல் (நெசவு) – நான்கன் உருபும் பயனும் உடன் தொக்கத் தொகை.

**4.46. ஒரு பொருள் தன் வினைப் பொருளிலும் பிற வினைப் பொருளிலும் பெயரிடப்படும். நெடிற்றொடர் குற்று கரங்கள் இரட்டிக்கும்; ஏனையவை 'து' ஈறு பெற்றுத் திரியும்**

*(எ.டு)* நாறு – நாறுதல் = முளைத்தல்

நாறு = முளைப்பது (தன்வினை)

நாற்று – (நாறு – நாற்று) =

முளைக்கச்செய்வது (பிற வினை)

ஊறு – ஊற்று. (ஊறச் செய்வது)

காண் – காட்டு. (காண் + து) –

உண் – ஊட்டு

**4.47 இலக்கியச் சொல்லாட்சிகள் புதிதாகப் புலவன் படைத்திட்டுக் கொண்ட பொருள் திரியா சொல்திரிபாகவும் இருக்கலாம்.**

*(எ.டு)* வெற்றி – வேறல் – வேறு ( வெற்றி)

கள்ளராற் புலியை வேறு காணிய உரைத்தனர். ... (சீவக. 421) (உ.வே.சா.உரை.)

**4.48 பிறவினைச் சொற்கள் முதனிலைத் தொழிற்பெயராகிப் பெயர்ச்சொல் வடிவம் கொள்ளும்**

*(எ.டு)* 1. நீள் (தன்வினை). நீள் + து – நீட்டு (நீளச்செய்)

நீட்டு (பிறவினை). நீட்டு – நீட்டம் (நீளம்)

நீட்டுதலாகிய தொழில்

நீட்டுதல் எனும் முதனிலைத் தொழிற் பெயராகிப் பின்னர் நீட்சி எனும் பெயர்ச்சொல்லாயிற்று.

*(எ.டு)* 2. மொழி சிந்திக்கத் தெரிந்த மாந்தனின் படைப்பு. மாந்தன் காரணத்தோடு ஏரணமுறையில் சிந்திப்பதால் எல்லாச் சொற்களும் பொருட் காரணம் பொதிந்தவை. இடுகுறிப்பெயர் என்பது மொழியின் தொடக்க காலத்திலே இல்லாத ஒன்று; இது தமிழுக்குப் பொருந்தாது. சொற்களின் மூலம் தெரியாத போதெல்லாம் இடுகுறிப்பெயர் எனும் சொல்லை ஆள்கின்றனர்.

*(எ.டு)* 3. வினைச்சொல் > பெயர்

மொழி அதன் தொடக்க நிலையிலிருந்து மெல்ல மெல்லத் திரிந்து வளர்ந்து நீண்ட காலத்திற்குப் பின் நிறைவடைந்தாலும் பேச்சியல்பு/ சூழல் மாற்றங்களால் பன்மடித் திரிபு பெறுவதாலும் பொருட்பாடு பற்றுக் கோடாக சொற்றிரிபு பெறுதலாலும் மொழியின் திரிந்தமைவு (Evolution) கோட்பாட்டை சொல்லின் பொருள்வழி வந்த வினையடிப் பெயரடிகளில் இருந்தே தொடங்க வேண்டும்.

**4.50 கருத்துப் பொருட் சொற்களிலிருந்து காட்சி பொருட் சொற்கள் தோன்றும்.**

*(எ.டு)* பரு – பருந்து. பரு = அகற்சி, சிறகின் அகலம். மரு – மரம். மரு = பெரிய.

**4.51 சுட்டுச் சொல் கருத்தே பல்வேறு வினையடிகளும் பெயரடிகளும் தோன்றுவதற்கு அடிப்படைக் காரணமாயிற்று.**

*(எ.டு)* உ–உல் (முன்வரல் கருத்து ஒன்பது தொடர் கருத்துகளுக்கு வித்தாகும்).

**4.52 சேய்மை அண்மை முன்மை எனும் மூவகைச் சுட்டுகளே பொருள் வளர்ச்சிக்கு அடிப்படைகளாக அமையும்**

*(எ.டு)* உல்–அல்–இல்.

**4.53 முச்சுட்டுகளில் முன்மைச் சுட்டடியிலிருந்தே மூலத்தாய்மொழி தோன்றியது.**

*(எ.டு)* ஊ–உ–உல்.

**4.54. முன்மைக் கருத்தினின்று முன்வருதலாகிய தோன்றற் கருத்து பிறக்கும். புதிதாய் ஒன்றினின்று ஒன்று தோன்றுவதெல்லாம் முன்வருதலேயாகும்**

*(எ.டு)* உல் – உல்லரி (தளிர்).

**4.55 தோன்றற் கருத்தினின்று முற்படற் கருத்து பிறக்கும்**

*(எ.டு)* முல் – முகு – முகை

**4.56. முற்படற் கருத்தினின்று முற்செலவுக் கருத்து பிறக்கும். முற்செலவு, எழுதல், உயர்தல், நீளம் எனப் பொருட்பாட்டால் விரியும்.**

*(எ.டு)* முசு – மூசு – மூச்சு
உ– உப்பு – உம்பர்

**4.57. முற்செலவுக் கருத்தினின்று நெருங்கல் கருத்து பிறக்கும்**

*(எ.டு)* குல் – கல் – கல

**4. 58 நெருங்கற் கருத்தினின்று தொடுதல் கருத்து பிறக்கும்**

*(எ.டு)* துல் – துள் – தொள் – தொடு

**4.59 தொடுதற் கருத்தினின்று கூடற் கருத்து பிறக்கும்**

*(எ.டு)* சேர் – சார் – சார்த்து – சாத்து (வணிகக்

கூட்டம்).

**4.60 கூடற் கருத்தினின்று வளைதற் கருத்து பிறக்கும். வளைதல் என்பது சாய்தல், கோணல், திருகல், வட்டம், சுற்றல், சூழ்தல், உருட்சி, சுழற்சி முதலிய பல கருத்துகளைத் தரும்**

*(எ.டு)* குல் – குலை – குழை

**4.61 கூடற் கருத்தினின்று பிறந்த வளைதற் கருத்து முட்டிய பின் வளையாத வன்பொருளைத் தாக்கி துளைத்துச் செல்லுமாதலின் வளைதல் கருத்து துளைத்தல் கருத்தாக மாறும். துளைத்தல் என்பது குழித்தல், தோன்றுதல், துளையில் புகுதல், துருவுதல் ஆகிய பொருள்களைத் தரும்.**

*(எ.டு)* உல் – உறு – உரு – உருவு.

**4.62 ஒன்றைத் துருவிய பொருள் இறுதியில் வெளிப்பட்டு தோன்றல் அல்லது முன்வருதல் பொருள் தரும். இவை ஒரு பொருளின் காலமெல்லாம் மீண்டும் மீண்டும் நிகழ்ந்துகொண்டே இருக்கு மாதலின் ஊகாரச் சுட்டுக் கருத்து முற்றுப்பெறும். எல்லை துருவல் கருத்தாக அமையும். இவ்வாறு தோன்றல் முதல் துருவல் வரையுள்ள கருத்துகள் ஒரே சீராகச் சுழன்று வரும் சுழல் சக்கரம் போன்றது.**

*(எ.டு)* உல்–நுள்–நுழை–நுந்து–நூங்கு–நுங்கு.

**4.63 ஈகாரச் சுட்டு அண்மைப் பொருள் தரும். அண்மை என்பது முன்மைக்குப் பின்மையாதலின் பின்மைக் கருத்து இதனோடு பிறக்கும்**

*(எ.டு)* ஈது–இது. இன்–இனி.

**4.64. பின்மைக் கருத்தினின்று பிற்படற் கருத்து பிறக்கும்**

*(எ.டு)* பின்–பிள்ளை–பிறக்கு–பிறக்கிடு.

**4.65. பின்மைக் கருத்தினின்று பிற்படுத்தற் கருத்தாகிய இழுத்தற் கருத்து பிறக்கும்**

*(எ.டு)* இல்–இழி–இழு.

**4.66 மேனோக்கிச் சென்ற பொருள் பிற்படுதல் இறங்கலாதலின் பிற்படற் கருத்தினின்று இறங்கல் இல்லது கீழுறல் கருத்து தோன்றும். ஊகாரச் சுட்டடிச் சொற்கள் அண்மை, பின்மை, கீழுறல் எனும் மூன்று கருத்துகளை மட்டும் பிறப்பிக்கும்.**

*(எ.டு)* இல்–இடி–இறங்கு–இறக்கு.

**4.67 ஆகாரச் சுட்டினின்று சேய்மைக் கருத்து பிறக்கும். சேய்மை என்பது கண்முன் தோன்றும் அண்மைக்கு அப்பாற்பட்டதாதலானும் சேய்மையின் தொடர்ச்சியெல்லாம் சேய்மையே ஆகுதலாலும் சேய்மைக் கருத்தினின்று வேறொரு கருத்து தோன்றுவதில்லை.**

*(எ.டு)* ஆ–அது.

**4.68 ஒரு சொல்லின் பொருள் திரியும் போது அச்சொல்லும் உடன் திரிய வேண்டும். இச்சொல்லியல் நெறிமுறைப் படி ஆ, ஈ, ஊ எனும் முச்சுட்டுச் சொற்களும், மூவகைப் புணர்ச்சித் திரிபு, அறு வகைச் செய்யுள் திரிபு, பலவகைப் பண்புத் திரிபு, முக்குறை, மும்மிகை, மூவகைப் போலி, இலக்கணப் போலி, முறைமாற்று, இனத்திரிபு, மோனைத் திரிபு, எதுகைத் திரிபு, மரூஉ முதலிய பல் வகைத் திரிபுகளால் பல்லாயிரக்கணக் கான சொற்களைப் பிறப்பிக்கும்.**

*(எ.டு)* முல் – முன்– முன்னு – மன் – மனம்

**4.69 மூவகைச் சுட்டுக் கருத்துகளினின்று**

**நூற்றுக்கணக்கான வழிமுறைக் கருத்துகள் பிறக்கும். இவ்வழிமுறைக் கருத்துகளினின்று ஒரு பொருட் பல சொல்லும் பல பொருள் ஒரு சொல்லுமாக பல்லாயிரச் சொற்பெருக்கம் உண்டாகும். இத்திரிபுகள் குறிப்பொலிகட்கும் செல்லுமேனும் சிறப்பாகச் சுட்டொலிகளுக்கும் பொருந்தும்.**

*(எ.டு)* உல்–குல்–கல் (ஒரு பொருட் பல சொல்).

கல்– பல பொருள் ஒரு சொல்.

**4. 70 வினையடியின் முன்மைக் கருத்திலிருந்து கிளைக் கருத்துகளை உருவாக்க வழியடிகள் தோன்றும். அவை முன்மை, முதன்மை, முதுமை, முன்னுறுப்பு, முற்பகுதி எனும் கருத்துகளாக வளரும்.**

*(எ.டு)* முல்–முன்–முது–முதல்– முகு – முகம்.

**4.71 ஒன்றினின்று இன்னொன்று முன் வருதலே தோன்றுதலாதலின் முன்மைக் கருத்தில் தோன்றுதல் கருத்து பிறக்கும்.**

*(எ.டு)* "உம்மை வினைவந் துருத்தலொழி யாதெனும்" (மணிமே. 26:82 உ. வே. சா உரை)

உருத்தல் = தோன்றுதல்

**4.72 முன்மை என்பது முன்னாகவுள்ள நிலைமையையும் முன்னுதல் என்பது முன்வரும் இயக்கத்தையும் குறிக்கும். முன்மைக் கருத்தும் முன்னுதல் கருத்தும் தம்முட் பொருள் வேறுபாடு உடையன.**

*(எ.டு)* "ஊழ்வினை யுருத்துவந் தூட்டும்" (சிலப். பதி. 52)

உருத்து = வெளிப்பட்டு (அரும்பதவுரை)

உருத்து = உருக்கொண்டு (அடியார்க்கு நல்லார்)

**4.73 பொருள் தோன்றிய நிலை அதன் இனம் பருவமாதலின் தோன்றல் கருத்தில் இளமைக் கருத்து தோன்றும்**

*(எ.டு)* உல்லரி = தளிர். (உலிர்) – இலிர் – இலிர்த்தல் = தளிர்த்தல்

உரு – (உரும்பு) – அரும்பு = மொட்டு. அரும்புதல் = தோன்றுதல்

குரு – குருத்து – குருந்து = தென்னை, பனை முதலியவற்றின் இளம் இலை

(குருந்து) – கருந்து = மரக்கன்று (கோடை மலை வழக்கு)

குரு – குரும்பு – குரும்பை = தென்னை பனை முதலியவற்றின் பிஞ்சு

உரு–குரு (கரு) – குள் – குழ – குழவு – குழவி = குழந்தை

**4.74 எவ்வகை உயிரினத்திலும் இளமையில் அறியாமை மிக்கிருப்பது இயற்கையாதலால் இளமைக் கருத்தில் மடமைக் கருத்து பிறக்கிறது. இளமைக் கருத்தில் அழகுக் கருத்தும் உடன் தோன்றும்**

*(எ.டு)* மழ – மத – மட – மடம் (இளமை, மடமை)

முல் – முல் – முருகு = அழகு. மதவு – மடம் = அழகு

**4. 75 எதுவும் தோன்றியவுடன் புதுமையாய் இருக்குமாதலின் தோன்றல் கருத்தில் புதுமைக் கருத்து பிறக்கும். புதுமைக் கருத்தில் பருமை (பெரியது)க் கருத்தும் தோன்றும்.**

*(எ.டு)* குல் – குது (குடு) – கடு – கடி = புதுமை

குது – கொத்த – = புதிய (தெலுங்கு)

குல் – கொல் (புதுமை) – கொல்லூர் (புதிய ஊர்)

குல் – கொல் –– கொன் – கொன்னூர் (பெரிய ஊர்)

குல் – குள் – குடு – கோடு (இளமை) – கோடி = புதிய ஆடை

**4. 76 புதுமையாகிய இளம் பருவத்தில் பயிர்ப் பச்சைகள் பசுமையாய்த் தோன்றுவதால் இளமை, புதுமைக் கருத்தில் பசுமைக் கருத்து பிறக்கும். பசுமைச் செழிப்பைக் குறிப்பதால் புதுமைச் சொல் செழிப்பையும் உணர்த்தும்.**

*(எ.டு)* புது – புசு – பசு – பசுமை (புதுமை, இளமை, மென்மை, பச்சை, செழிப்பு)

பசு – பச – பசள் – பசண்டை = பசுமை

பச – பசல் – பசலை = பசிய பொன்னிறத் தேமல்

பசு – பாசு – பாசி (பச்சையாய் இருப்பது)

பசு – பாசு – பாசவன் (பச்சைப்புலால் விற்பவன்)

**4. 77 இளமையில் எவ்வுயிரும் மென்மையாய் இருப்பதால் இளமைக் கருத்திலிருந்து மென்மைக் கருத்து தோன்றும்**

*(எ.டு)* குதலை = மென்மை, மென்மொழி

மழ – மத – மட – மடம் = மென்மை

பசுமை – பைமை – பைய – மெல்ல

பையாத்தல் = சிறுமைப்படுதல், துன்பத்தைத் தாங்க முடியாதவாறு மென்மையாதல், துன்புறுதல்.

**4.78 தோன்றிய பொருள் முன்னாக நீண்டு வருதலால் தோன்றல் கருத்தில் முன்தள்ளி வருதல் கருத்து பிறக்கும்**

*(எ.டு)* துந்து – துந்தி – தொந்தி = முன் தள்ளிய வயிறு

துருத்துதல் = முன் தள்ளுதல், வயிறு துருத்திக் கொண்டிருக்கிறது என்பது தென்னாட்டு வழக்கு.

முல் – முலை = முன் தள்ளிய மார்பகம்

முல் – மொஞ்சு – மொஞ்சி = முலை

**4.79 மரஞ்செடிகொடிகள், காய்கனியோடு இருக்கும்போது மக்கள் அவற்றைப் பறித்தல் அவை கொடுக்க அவர் கொள்வது போலிருந்ததால் அவை காய்த்துப் பயன் கொடுத்தலைக்கண்டு பயன் தருவதால் – பலன் தருதல் என்பர். இதன்வழி தள்ளுதல் கருத்தில் தருதல் கருத்து பிறக்கும்.**

*(எ.டு)* தள் – தரு – தார் – தா

தள் எனும் வினை எதிர்மறை வினையில் தார் அல்லது 'தர' என்றும் இறந்த கால வினையில் 'த' என்றும் (தந்தான்) திரிந்துள்ளது.

**4.80 முன்வருதல் கருத்திலிருந்து இடத்து நிகழ்வாகிய முன்னுறல் கருத்தும் இடப்பெயர்வு நிகழ்வாகி முற்செலவுக் கருத்தும் தோன்றும்.**

*(எ.டு)* உய் – உயிர் – உயிர்த்தல் = மூச்சுவிடுதல்

உய்த்தல் = முன்தள்ளல், செலுத்துதல்

மூச்சே உயிர் நாடியும் உயிர்நிலைக்கு அடையாளமும் ஆதலால் ஆவி உயிர் எனப்பட்டது

முன் – முல் – மூச்சு

காற்றை உள்ளிழுப்பதும் வெளிவிடுவதும் ஆகிய இரண்டும் சேர்ந்ததே மூச்சாயினும் மிக வெளிப்படையானதும், ஒலி விளைப்பதும் வெளியிடுவதே ஆதலின் மூச்சு உயிர்ப்பு எனப்பட்டது. மூச்சுவிடுதல் என்றும் வழங்கலாயிற்று.

தும்முதல் = மூக்கு வழியாய்க் காற்றை வெளித் தள்ளுதல்

மூச்சுதல் = மூச்சுவிடுதல்

மூச – மூச்சு – மூஞ்சி (மூக்கு) = மூக்குள்ள முகப்பகுதி (muzzle)

மூச்சுதல் = மூச்சுவிடுதல், மோப்பம் பிடித்தல்

ஊதுதல் – ஊதல் = காற்றை வாயால் அல்லது (கொல்லன் உலைத் துருத்தியை) கையால் தள்ளுதல்

உதைத்தல் = காலால் தள்ளுதல், உன்னுதல் – உந்துதல் – உஞ்சுதல் = முன் தள்ளுதல்

உந்து – உந்தி = தள்ளித் தள்ளிப் பறக்கும் தட்டான்பூச்சி.

**4.81 வேண்டாமென்று தள்ளப்பட்ட பொருள் நீக்கப்பட்டதாதலின் தள்ளுதல் கருத்திலிருந்து நீக்குதல் கருத்து தோன்றும்.**

*(எ.டு)* உத்துதல் = கழித்தல், நீக்குதல்

உத்து – ஒத்து. ஒத்துதல் = தள்ளிவைத்தல்

ஒதுங்கு = தானே தள்ளிப் போதல் (த.வி)

ஒதுக்கு = ஒன்றைத் தள்ளிவைத்தல் (பி.வி)

கொழி – கழி – கழித்தல், நீக்கிவிடல், முடித்தல்

துல் – துர – துற – துறத்தல்

நுல் – நுது – நூங்கு. நூக்கு – நீங்கு – நீக்கு

**4. 82 நீங்கல் – நீக்கல் கருத்திலிருந்து முன்னோக்கித் துள்ளுதல், குதித்தல் கருத்து தோன்றும்.**

*(எ.டு)* உகு – உகள் – உகளுதல் = தாவுதல்

உகளித்தல் = குதித்தல்

குதி – குதிரை = தாவிச்செல்லும் விலங்கு

குதி = கூத்து

துள் – துள்ளி – துளி = துள்ளிவிழும் நீர்த்திவலை

தூள் – தூளி – தூண்டு – தாண்டு –தாண்டவம்

துள் – தும் – துமி – துமுக்கு (தாண்டு)

துள் – தூவு – தாவு

**4.83 ஒன்றை அள்ளி முன்னாக எறிதல், அள்ளி இடுதல் தெளித்தல் எனப்படும். நீரைத் தெளிக்கும்போது அது துளித் துளியாகத் துள்ளிவிழுவதால் துள்ளுதல் கருத்திலிருந்து தெளித்தல் கருத்து பிறக்கும்.**

உருதல் = முன்துள்ளிவிடுதல், சிந்துதல்

உகுதல் – உகுத்தல் = சிந்தவைத்தல் – தூவுதல்

துளி – தெளி – தெளித்தல் – தெறித்தல்

தூவுதல் – தூவல் – துவல் – துவலை – திவலை

தூவல் – தூறு – தூற்றல் – தூறல் (மழைத்துளி)

துல் – துன்னல் = சிறுதிவலை.

**4.84 ஒருமுறை முன்னோக்கித் தாவுதலாகிய துள்ளுதலும் நெடுகச் செல்லுதலாகிய முற்செலவுமாகிய வெளியேறல் கருத்திலிருந்து தொடர்ந்து அல்லது விரைந்து மேற் செல்லும் கருத்து தோன்றும்**

*(எ.டு)* உய் – உய்தல் – உய்த்தல்

உய் – ஒய் – ஒய்தல் (செலுத்துதல்)

'உப்பொய் ஒழுகை' (புறம் 1.16)

ஒய் – எய் – எய்தல் = அம்பைச் செலுத்துதல்

எய் – எய்நன் – எயினன் = அம்பு எய்யும் வேடன்

எய் – எயில் (அம்பு எய்யும் உயர்ந்த மதில்)

துரத்தல் = செலுத்துதல், ஓட்டுதல், துரைத்தல்

துரு – துறு – துறை = செலுத்துமிடம்

முல் – முள் – முடு – விடு – விடுத்தல்

முள் – முய் – முயல் = விரைந்து செயற்படுவது

முள் – முயம் – வியம் – வியங்கோள்

வியங்கொள்ளுதல் = தூண்டிச் செலுத்துதல், தேரோட்டுதல், ஏவுதல்

**4.85 முற்செலவுக் கருத்திலிருந்து விரைவுக் (முடுக்கம்) கருத்து தோன்றும். விரைவு என்பது ஒரு வினையை முந்தித் தொடங்கி முந்திமுடிப்பதையும், வேகம் என்பது ஒரு வினை செய்வதற்கான ஒரு குறிப்பிட்ட காலத்திற்குரிய வினை வீதத்தையும் குறிக்கும். குறிலடுத்த லகர, னகர, ளகர, ணகர, டுகர, துகர, ருகர, றுகர, ஈறுகள் விரைவுக் குறிப்பன. வினையடியாகவும் வினைக்குறியாகவும் ஆளப்படுவன.**

*(எ.டு)* ஒல் –ஒல்லென, ஒய் – ஒய்யென, பொள் – பொள்ளென

துள் – துள்ளென, துண் – துண்ணென .

**4.86 விரைவுக்கருத்திலிருந்து ஓடுதல் கருத்து தோன்றும்.**

துண் – துண்டை – (துடுக்கானவன்)

சுரு – சுருக்கென, சரு – சரேல் என, புரு – புர – பரு – பரி – பரிதல் = ஓடுதல். விரு – விரைவு – விரட்டு

துறு – துறுதுறுத்தல் ( வேண்டாததைச் செய்ய விரைதல்)

துடு – துடுக்கு – இடுக்கு

குது – குதுகுதுப்பு. குது – கது = கதழ்வு.

கதி = வேகம்

புசு – புசுக்கு = பொசுக்கென

விசு –விசுக்கென

**4.87 விரைவுக் கருத்திலிருந்து வீசுதல் கருத்து தோன்றும்**

*(எ.டு)*

விசு – விசிறு. விசு – வீசு – வீச்சு. விசுக்குதல் = விரைந்து கை வீசுதல்

### 4.88 உடலும் நெஞ்சாங்குலையும் விரைந்து அசைவது அச்சத்தைக் குறிக்குமாதலால் விரைவுக் கருத்திலிருந்து அச்சக்கருத்து தோன்றும்

*(எ.டு)* துள் – துண் – துண்ணல் = திடுக்கிடல், அஞ்சுதல்

நுடு – நடு – நடுங்கு – நடுக்கம்

விது – விதிர் – விதிர்ப்பு

விதுக்கு – வெருக்கு – வெருவு – வெருளி = அச்சுறுத்தும், புல்லுருவம்

வெருள் – விரள் = மிரள்

விரள் – விரட்டுதல் = அச்சுறுத்தல், அச்சுறுத்தி ஓடச் செய்தல்.

### 4. 89 விரைவுக் கருத்திலிருந்து முயற்சிக்கு ஏதுவான ஊக்கக் கருத்து தோன்றும்

*(எ.டு)* உள் – உய் – உஞல் – உஞற்று

முன் – முனை – முனைப்பு

முள் – முய் – முயல் – முயற்சி

முய் – முசு – முசுமுசு –முசுவு = விரைந்த ஊக்கம்

முசுவு (கல்லாத மக்களின் சொல்லாட்சி)

உள் (முற்செலல்) – உள்ளம் = ஊக்கம்

உன்னுதல் = ஊக்குதல் 'உள்ளம் உடைமை' – (குறள் 592)

**குறிப்பு:** உள்ளம் என்பதைப் பரிமேலழகர் ஆகு பெயராகக்கொண்டது பொருந்தாது. மனத்தைக் குறிக்கும் உள்ளம் என்னும் சொல்லும் ஊக்கத்தைக் குறிக்கும் உள்ளம் என்னும் சொல்லும் வெவ்வேறாம். மனத்தைக் குறிப்பது உள்ளிருப்பது என்றும், ஊக்கத்தைக் குறிப்பது முற்செலுத்துவது என்றும் பொருள்படும். (பாவாணர். மு. தா.69)

### 4. 90 முற்செலவுக் கருத்திலிருந்து மேற்செலவாகிய எழுதல் கருத்து தோன்றும். எழுதலாவது கிளர்த்தலும் மேனோக்கித் துள்ளுதலுமாகும்.

*(எ.டு)* உள் – புள் = மேலெழுந்து பறக்கும் பறவை

உது – உதித்தல் = உயர எழும்புதல்

பொங்குதல் = எழுதல், கொதித்தல், மிகுதல்

முள் – முனிதல் –முனுத்தல் = உலையரிசி மெள்ளத் துள்ளுதல்

முள் – முளைத்தல் = மேலெழும்புதல்

முள் – முண்டு – முண்டுதல் – துள்ளுதல், விதையின் முளை நிலத்துள்ளிருந்து முட்டியெழுதல்.

### 4. 91 எழுதல் கருத்திலிருந்து சூட்டினால் பொங்குவது மட்டுமன்றி, புளிப்பினாலும் உவர்ப்பினாலும் பொங்கி மேலெழும்பும் கருத்து தோன்றும்

*(எ.டு)* உகு – உகின் – எகின் = புளி

நுர – நுரை = புளிப்பினால் எழும் சிறு குமிழி

நுது – நொதித்தல் = புளித்துப் பொங்குதல்

நுது – நுதம்பு = கள்.

உள் – புள் – புளி = புளித்துப் பொங்குதல்

புள் – (புர) – புரை – பிரை = புளித்த மோர்

புரு – பொரு – பொருணி = கள்

முர – முரை = நுரை. முரை = மோர்

உளம் – உழம் – உழமண் = உவர்மண்

உளம் – அளம் = உப்பு

உழமண் – உமண் (உப்பு மண்) – உமணன்

உப்புதல் = பொங்கியெழுதல்

உவர் – உவரி = பொங்கி எழும் கடல் நீர்

### 4. 92 மேலெழும் கருத்திலிருந்து உயர்ச்சிக் கருத்து தோன்றும்

உ – உத்து – உத்துங்கள் = உயர்த்துங்கள்

உ – உல்லி = உயர்ந்த மதில்

உ – உள் = மேன்மை

உ – உக – உகத்தல் = உயர்தல் 'உகப்பே உயர்வு' (தொல்: உரி.8)

உ – உகு – உகை = வெற்றி, உயர எழும்புதல்

உகு – உகை –உகே = வெற்றி உண்டாகுக என வாழ்த்துதல்

இது உகே – கே – கே –செய – சய என வடமொழியில்

திரிந்துள்ளது. கன்னட மொழியில் உகே (வெற்றி) ஆட்சிபெற்றுள்ளது.

உ – உச்சம் – உச்சி

உப்பு – உப்பல் – உம்பு – உம்பர், உ – உய் – உயரம்

**4. 93 தொங்குகிற பொருளெல்லாம் நிலமட்டத்திற்கு மேற்பட்ட உயரத்தில் கட்டப்பட்டவை அல்லது அமைந்தவையாத லின் உயர்ச்சிக் கருத்திலிருந்து தொங்கல் கருத்து தோன்றும்.**

***(எ.டு)*** உறுதல் = உயர்தல், உறி = உயரத்தில் கட்டப்பட்ட தூக்கு

உக்கம் = கட்டித்தூக்கும் கயிறு

தூங்குதல் = உயர்தல் (தூங்கெயில் எறிந்த தொடி தோட் செம்பியன்)

தூங்குதல் – தூக்குதல், உயர்த்தல், மேலே எடுத்தல்

தூக்கணம் குருவி = கூட்டைத் தொங்கவிடும் குருவி

**4. 94 உயர்ச்சி குறித்த உகர முதல் வேரடி இகர முதலாகத் திரிந்தாலும் உயர்ச்சிப் பொருளைப் பற்றிநிற்கும். சொற்றிரியினும் பொருட் திரியா நிலையைத் தக்கவைத்துக் கொள்ளும்**

***(எ.டு)*** உ – இ – ஈ

உ – உவர்தல் – இவர்தல் – ஏறுதல், உயர்தல். இவுள் – இவுளி = ஏறி ஊர்ந்து செல்லும் குதிரை

உ – உன் – குன் – கின் – கிளம்பு – கிளர்தல்

உவ – நுவ – நுவத்தல் – நிவத்தல்

உகு – முகு – மிகு – மிகுதி – மீ =உயரம், மேலிடம்

மிசை – மிலை – மலை

மிடை – மேடு – மேடை

மித – மிதப்பு – மிதவை.

**4. 95 உயர்ச்சி உகர முதல் வேரடி இகரமாகவும் பின்னர் எ, ஏ எனத் திரியினும் உயர்ச்சிப் பொருளே தரும்.**

***(எ.டு)*** உ– இ – இஃகு – எஃகுதல் = ஏறுதல் தெ. எக்கு

எஃகு – எக்கர் = மணல்மேடு

எட்டுதல் – எட்டம் (ஆட்டம்) – எட்டன் = உயர்ந்தோன்

எட்டி = உயர்ந்தவருக்குத் தரும் விருதுப் பெயர்

எட்டர் = அரசனுக்கு நாழிகைக் கணக்கு கூறும் ஏத்தாளர்

எடுத்தல் – எடை

எண்ணல் = மேன்மேற் கணக்கிடுதல்

எம்பு – எவ்வு – எழு – ஏழில் (உயர்ந்த மலை)

எண் – ஏணை – ஏணி

ஏறு – ஏற்றம்

சேண் – சேடு, சேட்டம் – சேட்டன் (தமையன்)

தேங்கு – தேக்கு (உயரமான மரம்). தேர் = உயரமானது

மேல் – மேனி (உடம்பின் மேற்புறம்)

மேல் – வேல் – வேலி = எல்லையிலிருக்கும் முள்வேலி

வேல் – வேலியாக இடப்படும் முள்மரம், முள்போற் குத்தும் கருவி

வேல் – வேலை = நில எல்லையான கடல்

வேலை – வேளை = எல்லை வரம்பிட்ட பொழுது

(இங்குக் காட்டப்பட்ட இகர எகர வடிவச் சொற்கள் பலவற்றுக்கு வரம்பிட்ட மூலமான உகர வடிவச் சொற்கள் இறந்துபட்டன).

**4. 96 உயர்ச்சி குறித்த உகர முதல் வேரடி அகரமுதலாகத் திரிந்தாலும் உயர்ச்சிப் பொருளே தரும்**

***(எ.டு)***

உ – அ – ஆ. உகை –அகை

உள் – அள். அண் = மேலிடம்

அண்ணல் – அண்ணன் (பெரியவன், மூத்தோன்)

அணத்தல் – அணர்தல்

அத்து – அத்தாசம் – அந்தரம் (வானம்)

உம்பர் – அம்பர் – அம்பரம்

**4. 97 உயர்ச்சி குறித்த உகர முதல் வேரடியாகத் தோன்றி எகர ஏகார முதலாகத் திரிந்தனவும் வினாச் சொல் எழுச்சி அல்லது உயர்ச்சி கருதியே**

**வினாச்சொல்லாகும். ஒன்றை உயர்த்திக் காட்டி இதுவா எனக் கேட்பது போன்ற கருத்தைத் தரும்.**

*(எ.டு)*

ஏ– ஏது – எது – எவை – எவன் – என்

ஏ – யா – யாது – யாவன், யாங்கு

ஏவூர் – எவ்வூர்

எ – எந்த – என்ன (பெயரெச்சம்)

என்று (காலங் குறித்த வினையெச்சம்)

எங்கு, எவண், யாங்கு, யாண்டு (இடம் குறித்த வினையெச்சம்)

ஏன் (காரணம் குறித்த வினையெச்சம்)

எ. ஏயின் குறுக்கம். யா அதன் திரிபு ஆதலால் மூல வினாவடி ஏ என்னும் ஒன்றேயாகும்.

**4. 98 பெற்றோரையும் உயர்ந்தோரையும் குறித்ததற்கு உயர்வு குறித்த உகரச் சுட்டின் திரிபான அகரத்தை அடியாகக் கொண்டு பல சொற்கள் கிளைத்துள்ளன.**

*(எ.டு)*

| தந்தை | | தாய் |
|---|---|---|
| 1. அத்தன் | – | அத்தி, ஆத்தி, ஆத்தாள் |
| 2. அப்பன் (அச்சன்) | – | அம்மை (அச்சி) |
| 3. அவ்வன் | – | அவ்வை |
| 4. அன்னன் | – | அன்னை, அன்னி |
| 5. ஐயன் (ஆயன்) | – | ஆய், ஆயாள் |
| 6. அக்கன் | – | அக்கை |

இவற்றுள் 3,4,5,6 எண்ணிட்ட தந்தை பெயர்கள் வழக்கிழந்தன. புலிமான் கோம்பை நடுகல்லிலும் சிந்துவெளி முத்திரையிலும் தந்தையைக் குறிக்கும் அவ்வன் எனும் சொல் காணப்படுகிறது.

**4. 99 குறுக்காக வளரும் விலங்கு பறவைகட்கு உடம்பின் உச்சமான இடம் அல்லது மேற்புறம் முதுகாதலின், உகரச் சுட்டிற்கும் பின்மைக் கருத்தும் தோன்றும். மேலும், காலமுன் இடமுன் என முன்மை இருவகைப்பட்டு முன்மைக் கருத்தில் பின்மைக் கருத்தும் பின்மைக் கருத்தில் முன்மைக் கருத்தும் மயங்கும்.**

*(எ.டு)*

மேல் = உச்சத்தில், மேனாள் = முன்னை நாள்

மேல் = பின்பு, அதன்மேல் = அதன் பின்பு

உப்பக்கம் – பின்பக்கம்

உத்தரம் = பின்சொல்லும் மறுமொழி

உத்தரவு = வேண்டுகோளின்பின் தரும் ஆணை அல்லது விடை

**4.100 நெருங்கலியல் முன்மைக் கருத்திலிருந்து நெருங்கல் கருத்து தோன்றும். முன்னோக்கிச் செல்லும் உயிரினங்கள் தாம் அடையக் கருதிய இடத்தை முதலில் நெருங்கும். நெருங்கல் கருத்து தொட்டு நெருங்கலும் தொடாது நெருங்கலும் என இரு வகைப்படும்.**

*(எ.டு)*

உள் – அள் – அண் – அணுகு – அணுக்கம்

அள் – அண்mு – அண்டு – அடு

அன் – அரு – அருகு – உறு – துறு – நெருங்குதல்.

**4. 101 இருபொருள் ஒன்றையொன்று அணுகுதலால் நெருங்கல் கருத்து தோன்றுவது போன்று பல பொருள்கள் தன்முள் ஒன்றையொன்று நெருங்கும் போது செறிதல் கருத்து தோன்றும். நெருங்கலினும் செறிவு மிக அணுக்கமாகும்.**

*(எ.டு)*

உள் – அள் (செறிவு) அள்ளல் = செறிந்த சேறு

உறு – உற – உறப்பு = செறிவு

நுள் – நள் – நளி = செறிவு. நள்ளி = மிக நெருங்கிய அன்பினன்

முறு – விறு – வெறு – வெறுத்தல் = செறிதல். வெறுக்கை = பெருஞ்செல்வம்

**4. 102 நெருங்குதலில் ஒடுங்கற் கருத்து தோன்றும். ஒடுக்கம் இடைவெளி ஒடுக்கமும் பொருளொடுக்கமும் ஒழுக்க ஒடுக்கமும் என மூவகைப்படும்.**

***(எ.டு)***

உல் – உல்லி – உல்லாடி – உல்லட்டை = ஒடுங்கிய ஆள்

உல்லி – ஒல்லி

உல் – ஒல்கு = சுருங்குதல்

உல் – அல் – அல்குல் = சுருங்கிய இடை

உள் – உடுக்கு – இடுக்கு = சிறு சந்து

இடு – இடுப்பு – இடை. இட்டிது = சிறியது

உடு – இடு –ஒடு – ஒடுக்கம். இட்டிகை = சிறு செங்கல்

இட்டேறி = சிறிய வண்டிப் பாதை

**4. 103 முற்செலவால் அடையக் கருதிய பொருள்களை அடுத்த பின் இவற்றைத் தொடுதலால் நெருங்கல் கருத்திலிருந்து தொடுதல் கருத்து தோன்றும். கையால் தொடுதல், மெய்யால் தொடுதல், அன்பால் தொடுதல் என இது முத்திறத்ததாகும்.**

***(எ.டு)*** மெலிதாய்த் தொடுதல்

உள் – அள் – அளவு –அளாவுதல்

உல் – ஒல் – ஒத்து –ஒத்தடம்

தூண்டு – தீண்டு = தீண்டல்

முல் – முத்து – முத்துதல் – (முகத்தால் தொடுதல்)

துள் – துடு – தொடு – தொடர்பு

**4. 104 ஒரு கருவியைத் தொடுதல் கருத்திலிருந்து அதனால் செய்யத் தொடங்கும் செயற்கருத்து தோன்றும்.**

***(எ.டு)***

உல் – உறு – சொல்லல் உற்றான் = சொல்லத் தொடங்கினான்.

துடு – தொடு – தொடக்கம்

அன்று தொட்டு = அன்று தொடங்கி

தொட்டகுறை = தொடங்கிவிட்ட வினைக்குறை.

**4. 105 ஒன்றையொன்று தொடுதலும் தொடுதலால் ஒரு பணியைச் செய்யத் தொடங்குதலுமாகிய வினைக் கருத்தி லிருந்து அப்பணி நிலைப்பாடு பெறும் தொகுப்புக் கருத்து தோன்றும்**

***(எ.டு)***

துள் – துடு – தொடு – தொடை.

தொடு – தொடுத்தல் = இணைத்தல். தொத்து = உறவு

தொடு – தொடுப்பு = இணைப்பு, தகாத புணர்ச்சி, உறவு

தொடுசு = வைப்பு. தொடுவு – அடுத்திருப்பது

தொடுவை = தொடுத்திருப்பது, தொடர்புபடுத்தி வைத்திருப்பது; புதிய யானையைப் பயிற்றும்படி தொடுத்துவிட்ட யானை, உற்ற தோழன். வைப்பு (வைப்பாட்டி)

**4. 106 பல பொருள்கள் முறையே ஒன்றோடொன்று தொடுக்கப்படுவதால் தொடுதல் கருத்திலிருந்து தொடர்ச்சிக் கருத்து தோன்றும்**

***(எ.டு)***

தொடு – தொடர் – தொடரி (சங்கிலி)

தொடு – தொடலை – தொடவல் – தொடையல். தொடை = பூமாலை

அள் – அடு – அடுக்கம் – அடுக்கல் = மலைத்தொடர்

**4. 107 மெலிதாய்த் தொடுதலிலிருந்து வலிய பொருள்கள் ஒன்றையொன்று (வேகமாகத் தாக்கும்) வலிதாய்த் தொடுதல் கருத்து தோன்றும். இதனை முட்டல், மோதுதல் என்று கூறலாம்.**

***(எ.டு)***

உது – உதை – உதைத்தல் = தாக்குதல், எற்றுதல்

குடு = குட்டுதல் – கொட்டுதல்.

துடு – துட்டு – தட்டு – தட்டுதல்

நொடு – நொட்டையிடுதல் = சுவை மிகுதியால் அண்ணத்தில் நாவைச் சேர்த்து 'ட்ட' எனும் ஓசை யெழுமாறு மேல்சப்பு கொட்டுதல்

படு – பட்டு – பட்டடை – பட்டறை = சம்மட்டியால் அடிக்கும் அடிக்கல்

**4. 108 சொல்லில் மெல்லின இடையின ஈறுகள் மென் செயலையும் தகர சகர இரட்டிப்பு ஈறுகள் இடை நிகர்த்த செயலையும் வல்லோசை மிகும் டகர ஈறுகள் வன்மையான செயற்பாட்டுக் கருத்தையும் தோற்றுவிக்கும்.**

*(எ.டு)*

குல் – குள் – குட்டு = வன்மையான மோதல்

முல் – முள் – முட்டு

குல் – குத்து = அளவான மோதுதல்.

குறு – குற்று

குல் – கும்மு – கும்முதல் = மெதுவாகக் குற்றுதல்

முள் – முண்டுதல் = மெல்ல முட்டுதல்

பொத்துதல் = மோதுதல்– முட்டுவதினும் சற்று மெலிதாய்த் தாக்குதல்

**4. 109 தொடுதல் அடிப்படையான மோதுதல் கருத்திலிருந்து ஒலித்தல் – ஓசையுண்டாக்குதல் கருத்து தோன்றும். உயிரிகளின் வாயொலிகள் அல்லாத மற்ற ஒலிகள் எல்லாம் பொருள்கள் ஒன்றை யொன்று தொடுவதனால் அல்லது மோது வதால் தோன்றுபவை. பேச்சொலி எனும் வாயுறுப்புகளின் தொடுதல் செயலால் தோன்றும்**

*(எ.டு)*

உல் – உலம்பு – அலம்பு – அலம்புதல் = ஒலித்தல்.

உல் – ஒல் – ஒலி – ஒலம் – ஒலாட்டு = தாலாட்டு.

குல் – குலை – குரை – குரவை = ஒலி, ஆரவாரம்

குல் – கல் – கலி – கலித்தல் = ஒலித்தல். கலி – கலிப்பா.

சுல் – சில் – சிலம்பு – சிலம்புதல் = சிலைத்தல்

சுல் – சொல் = ஒலி, மொழி, சொல்லுதல், உரைத்தல்

துழனி – தொனி – தொனித்தல் = ஒலித்தல், உரைத்தல்

தொனுப்புதல் = அலப்புதல்

**4. 110 ஒலிக்குறிப்புச் சொற்கள் நுண்ணிய பொருள் வேறுபாடு உடையன.**

*(எ.டு)* 1. ஒலிக்குறிப்பு: பறவை படபடவென்று சிறகடித்தது; திடீரென்று விழுந்தது

2. விரைவுக் குறிப்பு: படபடத்துப் பேசினான்; திடீரென்று வந்துவிட்டான்

3. ஒருமை: குப்பென்று புகை வந்தது

4. பன்மை:குப்பு குப்பென்று புகைவந்தது

5. வேகம்: குபு குபுவென்று புகைவந்தது

6. ஒலி நெடுமை: ஆல், ஆர் – தடால்,

தடார், ஈல், ஈர் = குபீல், குபீர்

ஓர், ஆர் – மெலோர், சளார்

**4. 111 ஒரு பொருள் மற்றொரு பொருளை முட்டினவுடன் முன்னதன் முற்செலவு தடுக்கப்படுவதால் முட்டற் கருத்திலிருந்து தடைக் கருத்து தோன்றும்.**

*(எ.டு)*

ஒட்டு – அட்டு – அட்டி = தடை

அட்டு – அட்டம் = குறுக்கு

அட்டங்கால் – அட்டணைக்கால் = குறுக்காக மடக்கி வைக்கும் கால்

அட்டப்பல்லக்கு = குறுக்காகக்காவும் பல்லக்கு

அட்டம் பாரித்தல் = குறுக்காக – பக்கவாட்டில் வளர்தல்

தடு – தட்டு – தட்டி = தடுப்பு, தடுக்கு

தடு – தடக்கு – தடங்கல்

தள் – தழு – தளு – தகை – தகைத்தல் = தடுத்தல்

முள் – முடு – முடை (தட்டுப்பாடு, நெருக்கடி)

வில் – வில்லடை (தடை). வில் – விலங்கல் = குறுக்கே தடையாக உள்ள மலை.

**4. 112 ஒன்றை மற்றொன்று முட்டும் முனை அதன் கடைப்பகுதி ஆதலின் முட்டற் கருத்திலிருந்து கடைசிக் (இறுதி) கருத்து தோன்றும். பக்கம் நோக்கியதும் மேனோக்கியதும் எனக் கடைப்பகுதி இருவகைப்படும். பக்கம் நோக்கியது கடை**

**அல்லது முனை. மேனோக்கியது உச்சி. இவ்விரண்டுக்கும் பொதுவானது தலை. படுக்கையாய்க் கிடக்கும் ஒரு தூணின் முனை அது நட்டுக்கு நிற்கும்போது உச்சியாய் மாறும்**

*(எ.டு)*

குடு – குடுமி = முடி , முடிபு

குடு – கடு – கடை – கடைசி – கடையன் = உழவன்.

கடைச்சி = உழத்தி (நெய்தல் நிலம் பெரும்பாலும் கடலாதலின் குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம் என நிலவகையால் நானிலம் என்பர். இதில் மருதம் கடைசி நிலமாதலின் மருத நில உழவனைக் கடையன் என்றனர். இது நால் வருணப் பாகுபாடு கருதியது அன்று.

குடு – கொடு – கோடு – கோடி (கடைசி)

துல் – தல் – தலை = கடை, உச்சி, மேலுறுப்பு

மூண்டு – முடு – முடி (தலை)

முள் – முழு – முகு – முகுடம் – மகுடம்

முச்சி = தலையுச்சி. மோசிகை = உச்சிமுடி

முஞ்சம் = உச்சியணி

**4: 113 முட்டும் இடம் ஒரு பொருளின் முடிவிடமாய் அல்லது எல்லையாய் இருத்தலால் முட்டுதல் கருத்திலிருந்து எல்லைக் கருத்து தோன்றும்**

*(எ.டு)*

உல் – உறு – இறு – ஈறு – இறப்பு (முடிவு)

உல் – உல – உலப்பு = முடிவு, அளவு, எல்லை

உல் – ஒல் – எல் – எல்லை – எல்கை

எல் – ஏல் – ஏல்வை = கால எல்லை

துல் – துக (திகு) – திகை – திசை = முடிவு, எல்லை

திகைதல் = முடிதல், தீர்தல், தீர்மானம் ஆதல்

முளி – முடி – மடி – மடிதல்

திகை – திசை – தேசம் – தேயம் = எல்லையுடைய நிலப்பகுதி

தேயம் – தோம் (நாடு).

**4. 114 ஒன்றோடொன்று முட்டுதல் கருத்திலிருந்து மெலியது ஒருமுறையிலும் வலியது பலமுறையிலும் முனை மழுங்கி மொட்டையாகச் செய்யும் முட்டுதல் கருத்திலிருந்து மழுங்கல் கருத்தும் மொட்டைக் கருத்தும் தோன்றும்.**

*(எ.டு)*

முள் – மள் – மழு – மழுகு – மழுங்கு – மழுக்கம் – மழுக்கை

முள் – முட்டு – மொட்டை

முள் – (மொள்) – மொழுக்கு – மொழுக்கட்டை – மொக்கட்டை = மழுக்கமானது

மொழுக்கு – மொக்கு – மொக்கை = கூரின்மை

(மொள்) – மொண்ணை = மழுக்கம்

மொண்ணை – மண்ணை – மணை

முள் – முட்டு – முட்டன் – மூடன் – முட்டாள். முட்டு – மொட்டை – மட்டை – மடைமை – மடையன்

குள் –கூழை = மொட்டைவால்

சொட்டு – சொட்டை = வழுக்கை

பொட்டு – பொட்டல் – போடு =பாழ்நிலம், வெறுநிலம்

முண்டு – முண்டம் = தலையில்லாதது

முண்டன் = மொட்டைத் தலையன், சமணன்

முண்டை = மொட்டைத் தலையுடைய கைம்பெண்

முண்டித்தல் = தலை மழித்தல்

முள் – (மள்) – மண – மண்ணுதல் = மழித்தல்

இந்தக் கத்தி மண்ணாது என்பது தென்னாட்டு வழக்கு

முண்டு – முண்டம் – முண்டித்தல் = தலைமழிப்பு

மொழு – மோழை = கொம்பில்லாத மாடு

மழுங்கல் – மங்கல் – மஞ்சள் (வெள்ளையும் இன்றி பச்சையுமின்றி இடை நிகர்த்த மங்கிய நிறமுடையது.

மஞ்சள் – மஞ்சளம் – மங்கலம் (இச் சொல் உயர் பொருட்பேறு பெற்றது).

**4. 115 மழித்தல் எனும் குறைதல் கருத்திலிருந்து வழிதல் வடிதல் கருத்து**

**தோன்றும். அது வாரிக் கூட்டிச் சேர்த்து ஒழுங்குபடுத்தும் கருத்திலும் வளரும்.**

***(எ.டு)*** வழி – வழித்தல் – வழல் – வழலுதல் = நெருப்பினால் வெந்து தோலுரிதல்

வழல் – வழற்று – வழட்டு. வறற்றுதல் = நெருப்பில் வாட்டித் தோலுரித்தல் அல்லது மயிர்நீக்கல்.

வழி – வடி – வடித்தல் = நாவழித்தல், நாவைத் திருத்துதல். "வடியா நாவின் வல்லாங்கு பாடி" (புறநா. 47)

வாழி – வார்தல் – உரிதல், வார் – வாரி = (சீப்பு)

வார் – வாரியன் = களத்தில் நெல்லைக் கூட்டிக் குவிப்பவன், அங்ஙனம் கூட்டிக் குவித்தலை மேற்பார்க்கும் பணியாளன். பள்ளரின் ஊராண்மையில் ஆள்களைக் கூட்டுபவன். வாரியம் = தொழில் மேற்பார்வைக் குழு.

**4. 116 வழிதல் வடிதல் கருத்திலிருந்து நீட்சிக் கருத்து தோன்றும்**

***(எ.டு)***

வடி – வரி – வரிசை. வரி – வரிச்சல் = நீண்ட குச்சு.

வடி – வார் – வாரி = நீண்ட கடல், நீண்ட பெருங் கம்பு

வார் – வாரை = நீண்ட பெருமூங்கில்

வாரைவதி (வாராவதி) = நீண்ட வாரைப் பெரு மூங்கிலால் அமைக்கப்பட்ட வழி, பாலம்

வார் – வள்பு = நீண்ட தோல் துண்டு.

வார் = வால்

வாள் = நீண்ட கத்தி. வாளம் = நீண்ட வார், கம்பி.

வார் – வாரம் = சொல்லொழுக்கமும் இசையொழுக்கமும் உள்ள பாடல், வாரப்பாடல் (தேவாரம்)

**4. 117 மழுக்கல் கருத்திலிருந்து வழுக்கல் நழுவல், வழுவல், வழவழப்புக் கருத்துகள் தோன்றும். வழுக்கையான இடமும் பொருளும் வழுக்கும். வழுவழுப்பானது கையை விட்டு நழுவும்.**

***(எ.டு)***

மழு – மழ – மழமழ – மழமழப்பு = வழவழப்பு

வழு – வழுக்கு – வழுக்கல் – வழுக்கை = தேங்காய் வழுக்கை

வழுதலை = வழவழப்பான கத்தரிக்காய்

வழி – வாழை – வழுவழுப்பான வாழை மரம். வழுக்கு மரம் – சறுக்கு மரம்

(உழு) – இழு – இழுக்கல் = வழுக்கல்

வழு – வழவு – வழுவல் = நழுவல்

வழுவாடி = காரியத்தை நழுவவிடுபவன்

நழுவு – நழுவி = பிடிகொடாதவன்

நழு – நழுப்பு – நழுப்புதல் = மழுப்புதல்

நழுப்பு – நப்பு – நப்பி = பேச்சை மாற்றி மழுப்புபவன்

**4. 118 நெறியினின்று வழுக்கலும் வழுவலும் தவறுதலாதலின் வழுக்கல் கருத்திலிருந்து தவறு, பிழை செய்தல் கருத்து தோன்றும்.**

***(எ.டு)***

(உழு) – இழு – இழுக்கம் = தவறு, தீயொழுக்கம்

முழு – மழு – வழு = தவறு, வழுக்குதல் = தவறுதல்

வழு – வழும்பு = குற்றம். வழு – வழவல் – வழாவல் = தவறு

**4. 119 வழுக்கும் பொருள்களில் சில ஒட்டுந் தன்மையவாய் இருத்தலின் வழுக்கல் கருத்திலிருந்து வழவழப்பான ஒட்டும் பசைப்பொருள் கருத்து தோன்றும்**

***(எ.டு)***

உழ – உழுந்து = வழவழப்பான பயறு

(நுழு) – (நிழும்) – நிணம் = கொழுப்பு

மழு– வழு – வழும்பு = நிணம்

முள் – (மள்) – வள் – வண்டை – வெண்டை = வழவழப்பான வெண்டைக்காய்

**4. 120 முனை மழுங்கும் கருத்திலிருந்து தேய்ந்து குட்டையாதல், தட்டையாதல், தாழ்வுக் கருத்துகள் தோன்றும். குட்டையான பொருள் தட்டையாதல் இயல்பு.**

***(எ.டு)***

குள் – குட்டை – கட்டை

குள் – கூள் – கூனி = குள்ளமானது

குள் – கூள் – கூழை – கூழையன் (குள்ளமானவன்)

குள் – குண் – குணில் = குறுந்தடி

(சுத்துதல்) = தட்டுதல். சுத்து – சுத்தி – சுத்தியல்

(சுட்டு) – சட்டு – சடை – சடைதல் = அடிக்கப்படும் ஆணி முனை மழுங்கித் தட்டையாதல்

சட்டு – சட்டுவம் – சட்டுகம் – சட்டகப்பை = தட்டையான பானை

சட்டுவம் – சடுவம் – சருவம்

சட்டு – சட்டம் = தட்டையான பனையோலை

சட்டம் வாருதல் = பனை ஓலையின் அருகுகளை அரிந்து எழுதுவதற்கு ஏற்றதாக்குதல்.

சட்டம் – சட்டன் = ஓலைச்சுவடி பயிலும் மாணவன்

சட்டன் நம்பி = சட்டம்பி = மாணவர் தலைவன், ஆசிரியன்

சட்டம் = மரச்சட்டம், கோடிமுக்கும் சட்டப் பலகை, நேர்மை, செப்பம், முறைமை, வரம்பு, விதி

சட்டம் – சடங்கு. ஒழுக்க நெறிப்படி நடைபெறும் கரணம்.

சட்டம் – சட்டை = உடம்பு, உடம்பில் அணியும் தைத்த ஆடை

சட்டை – சடம் சடலம் = உடம்பு

பட்டம் – படம் (அகன்ற துணி)

சுப்பு – சப்பு – சப்பை – சப்பட்டை = தட்டையானது

சப்பல் – சம்பல் = விலைத் தாழ்வு

சப்பு – சப்பரை = மூடன், சம்பங்கி = மடையன்

சப்பு – சப்பரம் = மொட்டையான எடுப்புத்தேர்

சப்பளி – சப்பளம் – சம்மணம்

சம்மணம் கூட்டுதல் = தட்டையாகக் கால், மடக்கி உட்காரும் நிலையில் கூட்டம் கூடுதல்

சப்பளக் கட்டை = தட்டையான கட்டை

தட்டு – தட்டை – தட்டம் = அகன்ற தட்டையான கிண்ணம்

தட்டு – தடை. வாழைத் தடை = வாழைப் பட்டை

சப்பு – சப்பாத்து = தட்டையான செருப்பு

சப்பாணி = உட்கார்ந்த நிலை, உட்கார்ந்த நிலையில் கைதட்டும் குழந்தைத் தன்மை

சப்பாத்தி = தட்டையான கோதுமை அப்பம்.

சப்பை நிலம் = பயனற்ற நிலம்.

சப்பைத் துணி = மட்டமான துணி.

சப்பை வாக்கு = பயனற்ற சொல்

சொட்டுச் சொட்டென்று சொட்டுகிறது. சொத்து சொத்தென்று விழுந்தது என்னும் சொல்லாட்சி களாலும் தட்டும் கருவி சுத்தி எனப்படுதலாலும் சட்டு, சப்பு முதலிய சொற்களும் தொடக்கத்தில் உகர முதலாகவே இருந்திருக்க வேண்டும்.

## 4. 121 தட்டையாகும் கருத்திலிருந்து படர்தல் கருத்து தோன்றும்

*(எ.டு)*

படம் – படங்கு – படங்கான் = அகன்ற பூரான்.

படல் – படலை – பதலை = வாயகன்ற பறை.

பட்டை – படை = பரப்பு, கூட்டம், சேனைப்பரப்பு, மேக நோய் பரவல்.

படாகை =அகன்ற கொடி, நாட்டின் உட்பிரிவு

படாகை – பதாகை = பெருங்கொடி, ஐந்து விரலும் நெருங்கிய நிலையில் விரிந்த கை.

பாடவரை = வாளவரை

பர – பரத்தல். பார் – பாறை (அகன்று நீண்ட கல்)

பர – பார் = பரப்பு, தேர்த்தட்டு, பாறை நிலப்பகுதி.

பாரி – பாரித்தல் = பரவுதல்

## 4. 122 முட்டல் கருத்திலிருந்து குத்தல் கருத்து தோன்றும்

*(எ.டு)*

குள் – குன்றுதல் = நகத்தாற் கிள்ளுதல்

குள் – கிள் – கிள்ளு

குத்து – கொத்து – கொட்டு

சுள் – சுர் – சுருக்கு – சுறுக்கு (குத்தற் குறிப்பு)

துள் – தெள் – தெறு – தெறுதல் = கொட்டுதல்

துள் – தள் – (தய்) – தை – தைத்தல்

## 4.123 குத்தல் கருத்திலிருந்து நிலத்தில்

**இருத்தும் கருத்து தோன்றும்**

*(எ.டு)*

குள் – குத்து – குந்து – குந்துதல் = உட்கார்தல்

குத்து – குத்தி – குதி – குதிங்கால் = நிலத்தில், குத்தும் அடிப்பாதம்

குதை = நிலத்திற்குத்தும் விற்கோலின் அடிப்பகுதி

குதி – குதித்தல் =காரியம் (நிலைப்படல்) குந்துதல் போல் ஏற்பாடாதல் (ஒ. நோ. sit - settle)

குந்து – குந்தனம் = மணிக்கல்லைக் குந்த வைத்தாற்போல் பதிக்கும் தகடு.

முள் – (முள்கு) – முள்காத்தல் = குந்தியிருத்தல். முசுப்போல முள்கார்ந்திருப்பர் (நன் விருத்தி. 96)

முள்கா – (உள்கா) – உள்கார் – உட்கார்.

உளுக்கார்தல் (கல்லாத மக்களின் பேச்சுவழக்கு)

**4.124 குத்தல் கருத்திலிருந்து வளையாத சாயாத நேர்புக் கருத்து தோன்றும். நேரான வடிவுடைய பொருள்களைக் குறிக்கும் சொற்களை உருவாக்கும்**

*(எ.டு)*

குத்தி – (கத்தி) – கதி – கதித்தல் = நேராதல்

நேர்கிழக்காகச் செல்லுதலை 'கிழக்கே கதிக்கச் செல்லுங்கள்' என்பது நெல்லை வழக்கு.

கதி – கதிர் = வளையாமற் செல்லும் ஒளிக்கதிர்

கதிர் – கதிரவன் (ஒளிக் கதிர் உடைய கோள்)

உல் – உள் – உளி – உசி – ஊசி

உளியம் = உளிபோன்ற கூரிய நகமுள்ள கரடி

உள் – உகு – உகிர் = கூரிய நகம்

கள் – கழு = கழுமரம்

குள் – கெள் – கெளிறு = முள்ளாற் கொட்டும் மீன்

சுள் – சுள்ளெறும்பு = முள்குத்துவது போல் கடிக்கும் எறும்பு

சுரியூசி = பனையேட்டில் துளையிடும் கருவி

சுரி – சுரிகை – சூரி = குத்தும் கருவி, சூரை = முட்செடி

துல் – துலம் = நீர்முள்ளி. துள் (தெள்) தேள் = கொட்டும் தேள்

தேளி = தேள்போல் கொட்டும் மீன்

துண்டில் – மீனைக் குத்தும் முள்

நுள் – நுள்ளான் = கடிக்கும் சிற்றெறும்பு. நுள்ளி – நளி = நண்டு

**4. 125 கூரிய முனைநுட்பமாயிருத்தலால் கூர்மைக் கருத்திலேயே நுண்மைக் கருத்து தோன்றும்.**

*(எ.டு)*

உள் – அள் – அரு – அரி = நுண்மை

அள் – (அய்) – ஐ = நுண்மை. "அரியே ஐம்மை" (தொல்: உரி. 58)

துள் – தூய் = பக்கின்நுனி

நுள் – நொய் – நொய்மை – நுண்மை

**4. 126 நுண்மைக்கு இனமானது குறுமை யாதலின் நுண்மைக் கருத்திலிருந்து சிறுமைக் கருத்து தோன்றும்.**

*(எ.டு)*

உள் (அள்) – அரு – அரி = நுண்மை, சிறுமை

அரிநெல்லி – சிறுநெல்லி

குண் – குன் – குன்னி = மிகச்சிறியது

கண் = சிறிது. கண் விறகு = சிறு விறகு.

கண்ணாறு, கண் வாய்க்கால்

**4.127 குத்தல் கருத்திலிருந்து கூர்ங்கருவி யால் குத்துவது போன்ற வெம்மைத் தாக்குதல் (துருத்தித் தாக்குதல்) ஆகிய உறைத்தல் கருத்தும் எரித்தல் கருத்தும் தோன்றும்.**

*(எ.டு)*

உறைத்தல் – வெயில் உடம்பைத் தாக்குதல்

சுள் –சுள்ளாப்பு = கடும் வெயில்

சுள் – சுள்ளை – சூளை = செங்கல் சுடுமிடம்

சுள் – (சுட்கு) – சுக்கான் = அளவிறந்து சுடப்பட்ட செங்கல்

சுள் – சுடு – சுடல் – சுடலை = ஈமக்காடு

உல் – உரு – உருத்தல் = அழலுதல். உருப்பம் = வெப்பம்

உருமம் = வெப்பம்

உல் – உரிதல் (எரிதல்) க. உரி. உல். எல். எரி

உல் – உள் – உண் – உண்ணம் = வெப்பம்

சுள் – (சுளுந்து) சுண்டு – சுண்டான் = தீப்பந்தம்

## 4. 128 எரிதல் கருத்திலிருந்து ஒளிர்தல், விளங்குதல் கருத்து தோன்றும்

*(எ.டு)*

உல் (இல்) – இலகு – இலங்கு – இலக்கம் = விளக்கில் ஒளி

இல் – எல் = ஒளி. 'எல்லே விளக்கம்' (தொல். உரி.21.)

உள் – ஒள் – ஒளிர் – ஒளிறு

உள் – உடு (விண்மீன்)

உல் – நில் – நிலா – நிலவு. நில் – நெல் = பொன்போல் விளங்கும் தவசம்.

## 4. 129 எரிதல் கருத்திலிருந்து நீறாகும் சாம்பல் கருத்து தோன்றும்.

*(எ.டு)*

குல் – கும்பி = சுடு சாம்பல்

உல் – உள். உண் – உடு – அடு – அடல் – அடலை = சாம்பல்

சும் – சும்பு – (சம்பு) – சாம்பல்

சாம்பு – சாம்பான் = பிணத்தைச் சுடுபவன்

## 4. 130 எரிதல் கருத்திலிருந்து நெருப்பில் சுடப்படும் பொருள் காயும் பொருள், வெப்பத்தால் உலரும் பொருள் ஆகிய கருத்துவாதத்தைச் சுட்டும் கருத்து தோன்றும்.

*(எ.டு)*

உல் – உலை = சமையலுக்காகக் காய்ச்சும் நீர். கொல்லன் மூட்டிய நெருப்பு

உவி – அவி – அவியல் (வேகவைத்தது)

உல் – உலர் = வெயிலில் அல்லது நெருப்போரத்தில் காயும் பொருள்

உல் – உல – உலவை = காய்ந்த மரம்

உல் – உரி – எரி – எரு = காய்ந்த சாணம்

சுள் – சுள்ளி = காய்ந்த குச்சி

சுன் – சுண்டு – சண்டு = காய்ந்த புல் தாள்

சுள் – சுர் – சர் – சரக்கு = காய்ந்த பொருள். சருகு = காய்ந்த இலை

சும் – தும் – தும்பு – தோம்பு = தாம்பரம் = சிவப்பு செம்பு

தாம்பரம் – தாம்பரை – தாமரை

தும் – துவள் – துவர் – துவரை – தோரை = செங்காய்ப் பனை

துவர் – தோர். நெய் + தோர் – நெய்த்தோர் – செங்குருதி

துவள் – துவண்டை = காவியுடை

து;வர் – துவரி = காவி – இலவம் பூ.

துள் – (தள்) – தளவு – தளவம் = செம்முல்லை

## 4. 131 ஒளிரும் பொருள்கள் தெளிவாகத் தெரிவதால் ஒளிர்தல் கருத்திலிருந்து தெளிவாகத் தெரிதல் கருத்து தோன்றும்.

*(எ.டு)*

துல் – தெல் – தென் – தென்படுதல் – = தெளிவாகத் தெரிதல். க. தெலி, தெ. தெலுசுனு.

துள் – தெள் – தெளினுதல் = விளங்குதல்

தெள்ளியோர் = விளங்கிய அறிவுடையோர்.

தென், தெளி – தெரிதல் = விளக்கமாதல், முன்னால் தோன்றுதல்

முள் – விள் – விளங்குதல் = தெரிதல், ஒளிர்தல்

தெளிதல் = அறிதல். தெள் – தெரி – தேர்தல் = அறிதல்

## 4. 132 தெளிதல் கருத்திலிருந்து உறுதியாக நம்புதல் கருத்து தோன்றும்

*(எ.டு)*

துல் – தெல் – தென் – தென்பு – தெம்பு

தெள் – தேர் – தேறுதல் – தெளிதல் – நம்புதல்

துள் – துண் – துணி துணிதல் – துணிவு

## 4. 133 ஒளி வெண்மையாய் இருத்தலால் ஒளிர்தல் விளங்குதல் கருத்திலிருந்து வெண்மைக் கருத்து தோன்றும்.

*(எ.டு)*

குல் – குரு –குருகு = வெண்மை

துல் – துல்லியம் = வெண்மை

புல் – பல் – பால் – வால் = வெண்மை

புல் – புலர்தல் = ஒளி தோன்றுதல், பொழுது விடிதல்.

விள் – விளர் = விளர்த்தல் = வெண்மையாதல்

விள் – வெள் – வெள்குதல் = நாணத்தால் முகம் வெளுத்தல்

விள் – வெள் – வெளிறு – வெளுத்து = சிறிது வெண்ணிறமாதல்

**4. 134 வெண்மைக் கருத்திலிருந்து தூய்மைக் கருத்து தோன்றும்**

*(எ.டு)*

துள் – துப் –துய்ய = தூய

துப் – துப்பு – துப்புரவு = தூய்மை

புல் – பல் – பால் – வால் (வெண்மை) – வான்மை = தூய்மை

வாலாமை = தூய்மையின்மை

வாலறிவு – தூய அறிவு

வெள் – வெளி – வெண்பா = எக்காரணத்தைக் கொண்டும் வேற்றுத் தளை விரவாது தன்தளை கொண்டே இயலும் தூய்மையுடைய பா வகையான வெண்பா.

வெள் – வெள்ளந்தி = கள்ளங்கவடற்றவன்

**4. 135 வேற்றுப் பொருளும் வேற்றுப் பொருளியல்பும் கலவாத தூய்மைக் கருத்திலிருந்து தனிமைக் கருத்தும் வெறுமைக்கருத்தும் தோன்றும்.**

*(எ.டு)*

வெண்மை = தூய்மை, தனிமை, வெறுமை

வெள்ளிலை = இலை தவிர பூ காய் கனி ஒன்று மில்லாத வெற்றிலை

வெள்ளிலைக் கடன் = ஈடில்லாது வெறுமையாகக் கொடுக்கப்படும் கடன்

வெள் – (வெண்டு) – வெங்கு. வெங்கன் = ஒன்றுமில்லாதவன்

வெறுநாள் = சிறந்த நிகழ்ச்சியில்லாத நாள்

விள் – வீண் = வெறுமை, பயனின்மை

வெள் – வெற்று – வெட்டி+வேலை = பயனில்லாத வேலை

**4. 136 வெறுமைக் கருத்திலிருந்து ஒன்றுமில்லாத வெட்டவெளிக் கருத்து தோன்றும்.**

*(எ.டு)*

விள் – விண் – விண்டு = வானம், ஆகாயம்

விள் – விசு –விசும்பு = வானம்

விள் – வெள் – வெளி – வெள்ளிடை = வெட்ட வெளி

**4. 137 வெப்பக் கருத்திலிருந்து சோம்பல் கருத்து தோன்றும்..**

*(எ.டு)*

சுள் – சுணங்கு – சுணக்கம் = வேலைத் தளர்ச்சி, தாழ்ப்பு, தடை , சோர்வு.

சுணங்கி – சோணங்கி = சோம்பேறி

சோடன் – சோடை = தளர்வு

சும் – சும்மல் – சோம்பல் – சும்பன்

**4. 138 எரிதல் கருத்திலிருந்து சினத்தல் கருத்து தோன்றும்..**

*(எ.டு)*

உல் – உரு – உருத்தல் = சினத்தல்

உல் – உலறு – உலறுதல் = சினத்தல்

குள் – கள் – கடு – கடுத்தல் = சினத்தல், வெறுத்தல், கடுவம், கோவம் = சினம்

சுளித்தல் = சினத்தல்

சுண்டுசொல் = சுடுசொல், கடுஞ்சொல்

சுல் –சில் – சினம்

சுல் – சுறு – சீறு, சீற்றம் = சினம்.

**4. 139 நெருங்கல் கருத்திலிருந்து கூடுதல் கருத்து தோன்றும்.**

*(எ.டு)*

குல் – குழு – குழுமு – கும்மு – கும்புதல் = கூடுதல்

கும் – குமி – குவி – குவிதல் = கூடுதல்

குள் – கூள் – கூண்டு – கூடு – கூடுதல்

துள் – தொள் – தொழு – தொகு – தொகுதல் = கூடுதல்

**4. 140 கூடுதல் கருத்திலிருந்து கூடி வாழ்தல், தங்கி வாழ்தல் கருத்து தோன்றும். அது வாழிடத்தைக் குறிக்கும்**

***(எ.டு)***

உறு – உறை – உறையுள்

குல் – குலம் = வீடு

கும்பு – கும்பை = சேரி, கும்பு – குப்பம் = சிற்றூர்

முன் – மன் –மனை = வீடு

சால் – சாலை = நிறைந்து கூடுமிடம்

மண்டு – மண்டகம். மண்டபம் – மண்டு – மடம்

மண்டு – மண்டி

மன் –மன்று – மன்றம்

**4. 141 கூடுதல் கருத்திலிருந்து மிகுதி யாய்ப் பெருகுதல் என்னும் குவிதல் கருத்து தோன்றும்.**

***(எ.டு)***

உல் – உரவு – உறு – உறவு = மிகுதி, நெருக்கம்

குல் – கல் – கன் – கனம் = மிகுதி

குல் – குன் – கள் – கடு – காடு = மிகுதி

வெள்ளக்காடு = வெள்ளத்தின் மிகுதி

குள் – கொள் – கொள்ளை = மிகுதி

குள் – கூர் – கூர்தல் – மிகுதி

**4. 142 மாந்த வாழ்க்கையின் தொடக்க நிலையில் தனக்கு வேண்டியவற்றைச் சேர்த்தல், திரட்டல் என்னும் கருத்தி லிருந்து பொதுவாகச் செய்தல் எனப் பொருள்படும் கருத்துடைய வினைச் சொற்கள் தோன்றின.**

***(எ.டு)***

குள் – கள் – திரட்டுதல், சேர்த்தல், தொகுத்தல்

குள் – கள் – கய் – கரு – கருத்தல் = செய்தல். கருவாளி = உழைப்பாளி

கரு – கருமம் – கம்மம் = தொழில். வேளாண்மை, உழவர் வாழும் சிற்றூர்.

கம்மியர் = தொழிலாளர். கமக்காரர் = உழவர். <u>தெ</u>. கம்மவாரு.

கரு – கரணம் = செய்யும் கருவி

கள் – செள் – செய் – செய்தல். செய் = பயிர்த் தொழில்

செள் – கூட்டமான கறையான்.

புல் (சேர்தல், நெருக்கம்) – புள் – பள் – பண் – பண்ணு = செய்தல். பண்ணை = உழவுத் தொழில்.

பண்டாரம் = களஞ்சியம், பொருள்கள் தொகுக்கப்பட்ட இடம்

**4. 143 மிகுதல் கருத்திலிருந்து வளப் பத்தைக் குறிக்கும் செழிப்புக் கருத்து தோன்றும்**

***(எ.டு)***

முல் – மல் – மல்லல் = வளம்

முள் – மள் – வள் – வள்ளண்மை, வண்மை = வளத்தாலாகும் ஈகைப்பண்பு

சள் – செள் – செழு – செழுமை = செழிப்பு. செழு – செழியன்

குள் – கொழு – கொழுமை – கெழுமை = செழிப்பு

**4. 144 கூடுதல் கருத்திலிருந்து குவிதல், குவித்தல் கருத்து தோன்றும்**

***(எ.டு)***

கும் – குமிழ் – குமிழி

கும் – குமு – குமுதம் = பகலிற் குவியும் ஆம்பல் மலர்

கும்பு – கூம்பு – கூம்புதல் = குவித்தல்

கும் – குமி – குவி – குவித்தல் – குவியல்

குவியல் – குவால் – குவை

கும் – கும்மி = கைகுவித்து அடித்தாடும் கும்மி விளையாட்டு

கும் – கும்பு – குப்பு –குப்பி – கொப்பி = கும்மி

கும் – கும்மை – கொம்மை – கொம்மை கொட்டுதல் = கும்மியாட்டம்

கும் – கும்பு – கும்பிடுதல் = கைகூப்பி வணங்குதல்

துள் – தொழு – தொழுதல் = கை சேர்த்தல், வணங்குதல்.

**4. 145 மலர்தல் குவிதல் வினைக் கருத்திலிருந்து முறையே மேனோக்கல், மேலாதல் கருத்தையும், கீழ் நோக்கல், கீழாதல் கருத்தையும் தோற்றுவிக்கும்.**

*(எ.டு)*

மலர்தல் = முகம் மேலாதல்

மலர்த்தல் = முகத்தை மேலாக்குதல்

மலர் – மல்லார் – மல்லார்த்தல் – மல்லாத்தல் = முகத்தை மேலாக்குதல்

கும்பு – குப்பு – குப்புறு – குப்புறுதல் = முகம் கவிழ்தல்

குவி – கவி– கவிழ் – கவிதல் – கும்புறுதல் = தலைகீழாதல்

கவி – கவிகை = குடை

**4. 146 நெருங்குதல் கருத்திலிருந்து விரும்புதல் கருத்து தோன்றும்**

*(எ.டு)*

உவ – உவவு = கூடுதல், நிறைதல்

உவ – உவத்தல் = பொருந்துதல் – விரும்புதல் மகிழ்தல்

குல் – குலவு – குலாவு = இனிக்கப் பேசி மகிழ்தல்

(நுள்) – நள் – (நய்) – நய – நயத்தல் = விரும்புதல்

புன் – பிள் – விள் – விள்ளுதல் = கலத்தல், விரும்புதல்

விள் – விளரி = வேட்கை, விருப்பம்

விள் – விளை = விருப்பம்

விளை – விளையாடுதல் = விரும்பியாடுதல்

விள் – விளை – விழைதல் = விரும்புதல்

விள் – விளு = விருப்பம்

விள்– விளாய் – விடாய் = விருப்பம்.

விள் – வெள் = வேட்கை. வேள் – வேண்டு = (விரும்பு)

வேள் – வட்டம் (விருப்பம்). வேளாண்மை = பிறரை விரும்பி உணவளித்தல்

புள் – (பிள் – பிண்) – பிணா – பிணவு – பிணவல் = விரும்பப்படும் பெண்

புள் – (பிள்) – பெள் – பெண் – பெட்பு (அன்பு)

**4. 147 விரும்புதல் கருத்திலிருந்து காத்தல் கருத்து தோன்றும்**

*(எ.டு)*

நம்பு (விருப்பம்) – நம்பன் – நம்பி = காக்கும் தலைவன்

நயத்தல் = விரும்புதல். நயம் – நாயம் – நாயன் – நாயகம். நாயகன் = விரும்பிக் காக்கும் தலைவன், கணவன்

நாயன் = தலைவன், அரசன், கடவுள், தந்தை

நாயன் – நாயந்தை = தலைவன்

நாயன் – நாயர் – நாயக்கன் = படைத் தலைவன்

**4. 148 கலத்தல் கருத்திலிருந்து போர் புரியும் பொருதல் கருத்து தோன்றும்**

*(எ.டு)*

கல் – (கலத்தல்) – கலகம் – கலாம் = கைகலக்கும் சண்டை

புல் – பொல் – பொரு – போர் = சண்டை

உல் – உத்தல் (பொருந்துதல்) – உத்தம் = போர்

ம. உத்தாங்களம் = போர்க்களம்

உம் – அம் (சேர்தல்) – அமர்தல் = பொருந்துதல்

அமர் = போர். அமரம் = போர் மறவர்க்கு விடப்பட்ட மானியம்

சுள் – செள் – செரு = போர்

**4. 149 சேர்தல் கருத்திலிருந்து தழுவுதல் கருத்து தோன்றும்**

*(எ.டு)*

(உள்) – அள் – அளை – அணை – அணைத்தல் = தழுவுதல்

அள் – அளை – அணை = நீரை அணைத்தாற் போல் கட்டும் கரை.

(துள்) – தள் – தழு – தழுவு

முள் –முள்குதல் = தழுவுதல்

முள் – முய் – முயங்குதல் = தழுவுதல்.

முள் – (மள்). மரு – மருவுதல் = தழுவுதல்

மரு – மருமம் = தழுவும் மார்பு. மரு – மார் – மார்பு

### 4. 150 தழுவுதல் கருத்திலிருந்து புணர்தல் கருத்து தோன்றும்

*(எ.டு)*

குல் – குல – கல – கலவி (புணர்தல்)

(உள்) – இள் – இழை – இணைதல் = கூடுதல்

கள் – (கடு) – கடி = கூடுதல், திருமணம்

நுள் – நொள் – நொட்டுதல் = புணர்தல்

புல் – பொல் – பொலிதல் = புணர்தல், பொலிகாளை = புணரும் காளை

புல் – புள் – (புணர் – புணர்ச்சி)

முள் – (மள்) – மண் – மணத்தல் = கலத்தல், கூடுதல்

### 4. 151 இணைதல் கருத்திலிருந்து கலத்தல் கருத்து தோன்றும்

*(எ.டு)*

உல் – உல – உலக்குதல் = நீரையும் சேற்றையும் மிதித்துக் கலக்குதல்.

(உள்) – அள் – ஆள் – ஆண் – ஆணம் = கூட்டு

குள் – குழ – குழம்பு = பல சரக்குகள் சேர்ந்த கூட்டு

### 4. 152 பொருட் கலக்கக் கருத்திலிருந்து மனக்கலக்கக் கருத்து தோன்றும்

*(எ.டு)*

கல – கலங்கல் = நீரும் மண்ணும் கலந்த கலவை

கலங்கல் – கலக்கம் = மனக் கலக்கம்

கல் – கல – கலுழ் – கலுழி = கலங்கல் நீர்

கலுழ்தல் =கண்கலங்கி மனங்கலங்கி அழுதல்

குழு – கழு – கழுமம் = மயக்கம்

குழு – கூழ் = கலக்கம், கூழ்த்தல் = ஐயுறுதல்

'அவனிவ னென்று கூழேன்மின்' (திவ். திருவாய். 3: 6:9)

கூழ் – கூழ்படுதல் = கலக்கம் உண்டாதல்

மல் – மலங்கு – விலங்கு – விலாங்கு = பாம்பு உடம்பும் மீன்வாலும் கலந்த நீருயிரி.

மல் – மால் – மாலை = பலபூக்கள் அல்லது மணிகள் கோத்த மாலை, மயக்கம்

மால் – மார் – மாரம் = மயக்கம் = மாறாட்டம்

மார் – மாரம் – மாரன் = காதல் மயக்கம் செய்பவன்.

### 4. 153 மனமயக்கக் கருத்திலிருந்து அறிவு மயக்கக் கருத்து தோன்றும்

*(எ.டு)*

மல் – மது = கள், தேன். மது – மத்து. மட்டு = கள், தேன்

மல் – மதர் – மதி – = மயக்கம் தரும் நிலவு

மதி – மதம் = யானையின் அறிவு மயக்கம்

மதம் – மத்தம் = பித்து. உன் மத்தம் = கடும் பித்து

உன் மத்தம் – ஊமத்தை = பித்த நோய் மருந்து

### 4. 145 மயக்கக் கருத்திலிருந்து கருமைக் கருத்து தோன்றும்

*(எ.டு)*

உல் – அல் = கருமை, இருள், இரவு

உல் – இல் – இர் – இரா – இரவு, இருள், இருட்டு.

குல் – கல் – கால் = கருமை

மால் – மார் – மாரி = காளி, முகில்

### 4. 155 கருமைக் கருத்திலிருந்து அழுக்குக் கருத்தும் குற்றக் கருத்தும் தோன்றும்

*(எ.டு)*

கரு – கரி – கரில் = குற்றம். கரிசு = குற்றம்

கள் – களங்கு – களங்கம் = குற்றம்

மல் – மலம் = அழுக்கு, குற்றம்

மால் – மாழ் – மாசு = மை. குற்றம்

காள் – காழ் – காசு = குற்றம்

### 4. 156 கருமையிற் பட்ட பிற நிறமும் இருண்ட இடத்திலுள்ள பொருள்களும் கண்ணுக்குத் தெரியாது மறைந்திருப்பதால் கருமைக் கருத்திலிருந்து மறைவுக் கருத்து தோன்றும்.

*(எ.டு)*

கள் – கள்ளம் = மறைவு, திருட்டு, வஞ்சனை.

கள் – (கர்) – கரவு – கரவடம் = களவு

காரத்தல் = மறைதல், மறைத்தல்

மறு = கருமை, குற்றம். மறு – மறை – மறைத்தல்

மறு – மற – மறத்தல் = மனத்தில் மறையப் பெறுதல்

மால் = கருமை. மால் – மாலம் – மாயம் = மறைவு

மாயம் – மாயை = அறிவை மறைத்திருப்பது

**4. 157 ஐம்புலன்களும் பொருள்களோடு பொருந்தும் கருத்திலிருந்து வினைப் பாங்கு குறிக்கும் வினைச் சொற்கள் தோன்றும்.**

*(எ.டு)*

உள் – அள் – அறி = அறிவு

குள் – கள் – கண் – கண்ணுதல் = பார்த்தல்

கண் – காண் – காட்சி = பார்வை அறிவு

புல் – புலம் – புலன் =பொருந்திய நிறம், அறிவு

உத்தல் = பொருத்துதல்

உத்தல் – உத்தி = பொருத்தம், பொருத்தமாகக் கொள்ளும் உன்னிப்பு, ஊகம்

குள் – கள் – (கரு – கருது) – கருதுதல்

செத்தல் = கருதுதல். செத்து – சித்து = அறிவு

சித்து – சித்தர் = அறிவர்

சித்து = கருத்து, அறிவு, கருதியதை அடையும் திறம்

**4. 158 பொருத்தல் கருத்திலிருந்தும் நிறக் கருத்திலிருந்தும் பல உறுப்புகளைக் குறிக்கும் பெயர்ச் சொற்கள் தோன்றும்.**

*(எ.டு)*

குள் – கள் – = சேர்த்தல், கள் – கணு, கணுக்கால்

கள் – கழு – கழுத்து = உடம்பையும் தலையையும் பொருத்தும் கழுத்து

கல் – கள் = கருமை. கள் – கண் = கருநிறமுடைய கண்

புள் – பொள் – பொட்டு = நெற்றியின் பொருத்து

முள் – முளி – முழி = முட்டு, கணு

முள் – முட்டு – முட்டி = கை, கால், பொருத்து

**4. 159 சேர்த்தல் கருத்திலிருந்து முடைதல் பின்னுதல் கருத்து தோன்றும்**

*(எ.டு)*

உல் – அல் – அல்லுதல் = கூண்டுமுடைதல்

குள் – (குய்) – குயில் – குயிலுதல் = நெய்தல், பின்னுதல்

நுள் – நெள் – நெய் – நெயவு – நெசவு = துணி நெய்தல்

புல் – (புன்) – பின் – பின்னுதல் = முடைதல்

முள் – முடு – முடை – முடைதல் = பின்னுதல்

துல் – துள் – துய் – தய் – தை – தைத்தல் = பின்னுதல், தச்சு வேலை செய்தல்

துல் – துனி – துன்னுதல் = தைத்தல்

முள் – மூள் – மூட்டு – மூட்டுதல் = துணி தைத்தல்

மூட்டு – மூட்டை – மூடை = மூட்டப்பட்ட கோணிப்பை

**4. 160 பொருத்தல் கருத்திலிருந்து மூடுதல் கருத்து தோன்றும்**

*(எ.டு)* சுள் – (சூர்) – சார் – சார்ந்து – சாத்துதல் = மூடுதல்

துல் – தூர் – தூர்த்தல் = குழியையும் துளையையும் மூடுதல்

பொல் – பொது – பொத்து – பொத்துதல் = மூடுதல், மறைதல்

முள் – மூழ் – மூழ்தல் = மூடுதல். மூழல் = மூடி

மூழல் – மூடல் – மூடு – மோடு – மோடம் = வானம் மூடிய மந்தாரம், மந்தாரம் போன்ற மடமை

**4. 161 மூடுதல் கருத்திலிருந்து மூடப் பட்டவற்றைக் குறிக்கும் கருத்து தோன்றும்**

*(எ.டு)*

உம் – உமி = நெல்லை மூடியுள்ள தொலி

உம் – ஊம் = வாய் பேசாத ஊமை

கும் – கொம் – கொம்மை = கம்பு, தினை, கேழ்வரகு

சும் – சுங்கு = சோளத்தின் உமி

மூழ் – மூகு – மூகன் – மூக்கன் = ஊமை

மூகு – மூகாத்தல் = ஊமையாய் இருத்தல்.

**4. 162 மூடுதல் கருத்திலிருந்து போர்த்தல் கருத்து தோன்றும்**

*(எ.டு)*

உறு – உறை. குள் – குட்டு (தைத்தல்) குடி – குடித்தை = சட்டை

கும்பு – குப்பு – குப்பா = தூரிப்பை. குப்பாயம் = குப்பாசம்

சுல் – (சோல்) – சால் – சால்வை = போர்வை

**4. 163 பொருத்துதல் கருத்திலிருந்து பற்றிக்கொள்ளுதல் – பெற்றுக் கொள் ளுதல் கருத்து தோன்றும்**

*(எ.டு)*

குள் – கொள் – கொள்ளுதல் = பற்றுதல், பிடித்தல்

கல் – குது – கது – கதுவுதல் = பற்றுதல்

கது – காது = ஒலியைப் பற்றும் கருவி

புல் – (புற்று) – பற்று – பற்றுதல் = பிடித்தல்

புள் – (பிள்) – பிண்டி – பிடி. பிண்டம் = கைப்பிடியான சோறு, கைக்குள் திரட்டியது

பிடி = பிடிக்கப்படும் காம்பு அல்லது அடிப்பகுதி, கைக்குள் பிடிக்கும் அளவு

பொல் – (பொற்று) – பொற்றி – பொறி = பிடிக்கும் கருவி

புல் – புறு – பெறு – பெறுதல் = வாங்கிக்கொள்ளுதல்

குள் –கொள் – கொள்ளுதல் = பெறுதல்

குள் – கொள் (கொள்நன் – கொழுநன்) – கொண – கொணகன் = ஒருத்தியை மனைவியாகக் கொண்டவன்

**4. 164 பற்றிக்கொள்ளுதல் கருத்திலிருந்து பற்ற வைத்தல் கருத்து தோன்றும்**

*(எ.டு)*

கொள் – கொறு – கொளுத்துதல் = பற்றவைத்தல்

கொள் – கொட்கு – கொக்கி – கொறுவி

கொள் – கொள்ளி = நெருப்புப் பற்றிய கட்டை, கலகம் மூட்டுபவன்

முள் – முட்டு – மூட்டுதல் = பற்றவைத்தல்

**4. 165 பற்றுதல் கருத்திலிருந்து கொல்லு தல் கருத்து தோன்றும்.**

*(எ.டு)*

கொள் – கோள் = கொலை, கோளரி = கொல்லும் அரிமா.

கொல் – கொல்லன் = மரத்தைக் கொல்பவன், தச்சன். ஐவகைக் கொல் தொழில்களுள் முதலில் தோன்றியது தச்சுத் தொழில்.

ஆங்கிலத்திலும் பற்றுதலைக் குறிக்கும் seize என்னும் சொல் கொல்லுதலைக் குறிக்கும்.

**4. 166 பல்பொருள் ஒன்றாகப் பொருந் துதல் கருத்திலிருந்து ஒட்டிச்செல்லும் கருத்து தோன்றும்.**

*(எ.டு)*

ஊர்தல் = நிலத்தையொட்டிச்செல்லுதல், உடம்பை ஒட்டி நகர்தல்

உடு – உடும்பு = நிலத்தையும் சுவரையும் ஒட்டி நகரும் உயிரி

உண் – ஊணான் – ஓணான் = நிலத்தையும் மரத்தையும் ஒட்டிச்செல்லும் உயிரி

ஓணான், ஓந்தான் – ஓந்தி – ஓதி

ஒட்டு – அட்டு – அட்டை = ஒட்டிப் பற்றிச் செல்லும் உயிரி.

புல் – புல்லி – பல்லி = மரத்தோடும் சுவரோடும் பற்றியிருப்பது

**4. 167 ஒட்டிச் செல்லும் கருத்திலிருந்து உடனிருத்தல் கருத்து தோன்றும்.**

*(எ.டு)*

உள் – உடு – உடல் – உடம்பு = உயிரோடு உடனிருப்பது

உடு – உடங்கு – உடக்கு = போலியுடம்பு

உடு – உடங்கு – உடந்தை = கூட்டு

குள் – குடு –கூடு – கூட்டு = உடன் இயைந்தது

ஒன் –ஒன்று –ஒன்றியம் = ஒன்றாக இணைந்திருப்பது

**4. 168 உடன் இயைதல் கருத்திலிருந்து ஒப்புமைக் கருத்து தோன்றும்.**

*(எ.டு)*

உ – உவ் – உவ – உவமை = ஒப்பு

உ – ஒ – ஒக்கல் – ஒக்கலித்தல் = ஒப்பாதல்

ஒப்பு – ஒப்பனை – ஒப்பாரி – ஒப்புரவு

ஒவ்வு – ஒப்பு – ஒத்தல் – ஒட்டை = ஒப்பாதல். இவன் அவனொட்டை உள்ளான் என்பது தென்னாட்டார் வழக்கு

ஒடுதல் = ஒத்தல். ஒடு – ஒட்டம் – ஆட்டம் = ஒப்பு

குரங்காட்டம் ஒடுகிறான் (உ.வ)

கன் – கண் – கணக்க = போல

கள் – கடு–கடுப்ப=போல

சுள் – செள் – செய் – செத்தல் = ஒத்தல். செத்து = ஒத்து (தொல். பொருள், 286, உரை)

புல் – புரை – புரைதல் = ஒத்தல்

பொல் – பொரு – பொருவ = ஒப்ப. பொரு – பொது = ஒப்பு

முன் – மன் – மான் = ஒப்ப

**4: 169 ஒப்புமைக் கருத்திலிருந்து இரு புறமும் ஒத்திருக்கும் துலைப் பெயர் தோன்றும்.**

*(எ.டு)*

துல் – துலை, 'சமன் செய்து சீர்தூக்கும் கோல்' (குறள். 118)

ஒப்பு – ஒப்பராவு = துலைத் தட்டு, (தராசு)

ஒப்பராவி = துலாக்கோல் (தராசு) செய்வோன்

துலா – துலாம் = நிறைகோல், துலாமரம், கைத்துலா ஆளேறும் துலா, ஏற்றம்.

துலாக் கட்டை = வண்டியச்சுக் கட்டை

**4. 170 ஒப்புமைக் கருத்திலிருந்து ஒத்த வரைவு (ஓவியம்) ஒத்த வடிவுக் (சிற்பம்) கருத்து தோன்றும்.**

*(எ.டு)*

ஒ – ஒவ்வு – ஓவியம். ஒ– ஒடு – ஒடாள்வி = சித்திரக்காரன்

சுள் – செள் – செத்து = சித்திரம் (ஓவியம்)

புல் – புள் – பள் – படு – படி – படிமம் (சிற்பம்)

படி > படிவு – வடிவு – வடிவம்

**4. 171 ஒப்புமை, ஒத்தல் கருத்திலிருந்து நடித்தல் கருத்து தோன்றும்.**

*(எ.டு)*

நுள் – நள் – நளி – நடி = ஒருவன் செயலை ஒப்ப இன்னொருவன் செய்தல்

நளி – நடி – நடம் = கூத்து

நடம் – நடலம் – நடனம் = கூத்து, பாசாங்கு

நள் – நட்டு – நட்டணம் – நட்டணை = நடிப்பு, கூத்து

நள் – நடி – நடிகம் – நாடகம் = கூத்து

<u>**குறிப்பு**</u>

உலக வழக்கு செய்யுள் வழக்கு எனும் இயற்றமிழ் வழக்கம் அகப்பொருள் புறப்பொருள் வழக்கின் வழிவந்த புலனெறி புனைந்துரை வழக்காகிய நாடக வழக்கும் இல்லன, நல்லன இனியன என வகைப் படுத்தும் நோக்கம் கொண்டதாகலின் நாடகத்தமிழ் சிறப்பிடம் பெறத்தக்கதாயிற்று.

**4. 172 ஒப்புமைக் கருத்திலிருந்து அளவுக் கருத்து தோன்றும். ஒரு பொருளுக்கு ஒத்த அளவு இன்னொரு பொருளிற் கொள்வதே அளத்தல்.**

*(எ.டு)*

உல் – அல் – அல – அலகு = அளவு

உல் – (உள்) – அள் – அளவு – அளவை

புள்– (பள்) – படு – படி = தொடுதல், பொருந்துதல், முகத்தல் அளவுக் கருவி

படிமுறை – மேன்மேலான அளவு

படிக்கட்டு – மேன்மேல் அளவான கட்டுமானம்

மன் – மான் – மான – மானம் = ஒப்பு, அளவு, முகத்தல் அளவாகிய நாழியை மானம் என்பது வடார்க்காடு வழக்கு.

மன் – மான் – மா – மா – மாத்தல் = அளத்தல்

மா – மாத்திரம் = அளவு. மாத்திரை = நேர அளவு

படிமானம் = படியும் அளவு, ஒழுங்கு, ஒழுக்கம்

மானம் – மானி = அளவு கருவி

**4. 173 பொருந்தாமைக் கருத்திலிருந்து வளர்ந்த வெறுத்தலாகிய பண்பாலும்**

**உரசுதலாகிய தொழிலாலும் ஒன்றாது மாறுபடும் உறழ்தல் கருத்து தோன்றும். ஆக்கத்திற்கெதிரான அழிவுக் கருத்துகள் தரும்.**

*(எ.டு)*

உல் – உர் – உரை – உராய்தல் =தேய்த்தல்

உல் – அல் – அர் – அரம் – அரக்குதல் = தேய்த்தல்

துவை – தோய் – தேய் = தேய்த்தல்

துவை – துவையல் – அரைக்கப்பட்ட கூழ்

நூள் – நெள் – நெரு – நரல் – நரலுதல் = உரசி ஒலித்தல், கத்துதல்

நரல் – நரலை = ஒலி, கடல்

நரல் – நரன் = பேசும் திறனால் மற்ற உயிரிகளிடமிருந்து வேறுபட்டவர்

நரல் – நருள் = மக்கள் கூட்டம். நருள் பெருத்துவிட்டது என்பது தென்னாட்டு வழக்கு

### 4. 174 உரசும் கருத்திலிருந்து தீப்பற்றும் கருத்து தோன்றும்.

*(எ.டு)*

தோய் – தேய் – தே – தீ

நுள் – நெள் – நெரு, நெருப்பு

நெரிதல் = நெருங்குதல், உரசுதல்

### 4. 175 மாறுபடும் கருத்திலிருந்து சினத்தல் கருத்து தோன்றும்.

*(எ.டு)*

உடு – உடல் – உடற்று. உடலுதல் = சினத்தல்

உடு – ஊடு – ஊடல் = சினந்து உரையாடாமை

துல் – துன் – துனி – துனித்தல் = சினத்தல்

புல் – புல– புலவி – புலத்தல் = சினத்தல்

முல் – முறு – முறை – முறைத்தல் = சினந்து நோக்குதல்

முல் – முன் – முனித்தல் = சினத்தல்

முல் – முர – முரள் – முரண் – முரண்படுதல் = அடங்காமல் சினத்தல்

### 4. 176 ஒன்று சேர்தல் கருத்திலிருந்து திரட்சிக் கருத்து தோன்றும்.

*(எ.டு)*

குல – குழு – குழை = குண்டலம்

குள் – குண் – கண் – கணை = திரட்சி

கணையம் = எழுமரம்

குள் – குண்டு – கண்டு = கட்டி

குன் – குட்டி – கட்டி, கேழ்வரகுக் களி

கிண்டும் போது படும் மாக் கட்டியைக் குட்டி – குட்டிபடுதல் என்பது தென்னாட்டு வழக்கு

குள் – கொள் – கொம்மை. கொள் – கொட்டை = திரட்சி

சுள் – சுளை = திரட்சி, திரண்ட பழச் சதை

சுள் – செள் – செண்டு = மழு. செள் – செரு – சேர் = திரட்சி

துள் – தள் – தண்டு – தண்டி – தடி (திரட்சி)

தண்டு = படை. தண்டநாயகன் = படைத்தலைவன்

### 4. 177 திரட்சிக் கருத்திலிருந்து மரஞ்செடி கொடிகளின் அடிப்பகுதியைக் குறிக்கும் பருமைக் கருத்து தோன்றும்.

*(எ.டு)*

உள் – அள் – அண்டு – அண்டி – அடி = பருத்தது, அடிப்பகுதி

அண்டி = உடம்பின் அடித்துளை (anus)

குழு – கழு – கழி = கரும்புத் தண்டு

துள் – தள் – தாள் = நெல் புல் முதலிய பயிர்களின் அடிப்பகுதி

தள் – தட்டு = சோளம் கரும்பு போன்றவற்றின் அடி

துள்–துறு–தூறு = தென்னை பனை முதலியவற்றின் வேரொட்டிய அடிப்பகுதி.

புள் – பூண்டு – பூடு = வெங்காயம், பூண்டு முதலியவற்றின் அடிப்பகுதி.

முள் – மூள் – (மூண்டு) – மூடு = வாழை, கற்றாழை, தாழை முதலியவற்றின் வேரொட்டிய அடிப்பகுதி. மூட்டோடு சாய்த்துவிட்டான் என்பது தென்னாட்டு வழக்கு

முல் – மூல் – மூலம் = அடி, கிழங்கு

**4. 178 ஒலிக் குறிப்புக் கருத்திலிருந்து திரண்டொலிக்கும் பேரொலிக் கருத்து தோன்றும்.**

*(எ.டு)*

உலம் – உலம்பு – உலம்புதல் = பேரொலி செய்தல்

கும் – குமுகுமெனல் = பேரொலி செய்தல்

கும் – குமு – குமுதம் = பேரொலி

முள் – முழு –முழ – முழங்கு – முழக்கம் = பேரொலி

துள் – தள் – தழ. தழங்குதல் = பேரொலி செய்தல்

**4. 179 நெருங்கல், பருத்தல் கருத்திலிருந்து பெருமைக் கருத்து தோன்றும்**

*(எ.டு)*

புல் – பல் – பரு – பருமை – பெருமை

சுள் – (சூர்) – சீர் – சிற – சிறப்பு = பெருமை

குல் – குரு – குரவு = பெருமை

குல் – கல் – கன் – கனம் = பெருமை

முள் – மள் – மண் – மாண் – மாண்பு =பெருமை

அள் – (அய்) – ஐ = பெருமை. ஐயன் = பெரியோன்

ஐயள் = பெருமைக்குரியவள், உயர்ந்தோள், பெண் துறவி

அள் – (அய்) –ஆய் = பெருமைக்குரிய தாய்

ஐ = தந்தை, ஆய் – தாய்

**4. 180 பெற்றோரைக் குறிக்கும் சொற்களிலிருந்து இரக்கக் குறிப்பு, வியப்புக் குறிப்பு இடைச் சொற்கள் தோன்றும்.**

*(எ.டு)*

| **இரக்கக்குறிப்பு** | **வியப்புக் குறிப்பு** |
|---|---|
| அப்ப, அப்பப்பா | அப்ப, அப்பா, அப்பப்பா, |
| அத்தா,அச்சோ | அச்சோ, அச்சச்சோ |
| அம்மா, அம்மவோ அம்மகோ | அம்ம, அம்மம்மா, ஆத்தே |
| அன்னோ | அன்னோ |

**4. 181 தட்டையான பொருளின் பருமைக் கருத்தினின்று திண்மைக் கருத்து தோன்றும்**

*(எ.டு)*

ஒல் – ஒலை = திண்ணிய இலை

மெல்லிய தகட்டை ஒலையாய் இருக்கிறது என்பர்

உள்– ஒள் – ஒட்டு – ஒடு = திண்மையான காய்த் தோல்

துள் – தொள் –தோள் – தோடு = திண்மையான பழத் தோல், ஒலை

முள் – முரள் – முரளி = திண்ணமான சிப்பி

**4. 182 திண்மைக் கருத்தினின்று எடையளவு மிகுந்து கனக்கும் கருத்து தோன்றும்**

*(எ.டு)*

குல் – கல் – கன் –கனம்

(புள்) – (பர்) – பளு – பளுவு

பள் – பழு = கனமான மரம். இந்: பேட்

பழுவேள் =மதிப்புக்குரிய பெரிய வேளிர் குலத் தலைவர்

**4. 183 திண்மை மற்றும் கனக்கும் கருத்திலிருந்து வலிமைக் கருத்து தோன்றும்**

*(எ.டு)*

முல் – மல் = வலிமை, முல் – மல் – வல் –வன்மை – வலிமை

முள் – மொள் – மொள் – மொய்ம்பு = வலிமை

**4. 184 வன்மைக் கருத்திலிருந்து கடுமை, கடினக் கருத்து தோன்றும்**

*(எ.டு)*

குள் – கள் – கடு – கடுமை

வல் – வள் – வய் – வயிர். வயிரம் = வயிரம் கொள்ளுதல்

வயிர் – வயிரி – வயிரித்தல் = கடினமாதல்

வயிர் – கடுமையான ஒசை எழுப்பும் இசைக் கருவி

**4. 185 முட்டுதல் மோதுதல் கருத்திலிருந்து வளைதல் கருத்து தோன்றும்**

*(எ.டு)*

உல் – ஒல் – ஒல்குதல் = சாய்தல்

உறு – இறு – இற – இறப்பு

இறவாணம் – இறவாரம் = கூரைச் சாய்ப்பு

சுள் – சள் – சழி – சழிதல் = கலமும் பெட்டியும் அமுங்கிச் சரிதல்

சள் – சரு – சருவுதல் = சரிதல், சாய்தல்

சருவு – சரிவு – சாரல் =மலைச் சாரல், சாய்ந்து பெய்யும் மழை

துல் – தில் – திரு – திரும் – திரும்புதல் = வளைதல், சாய்தல்

மாள் – மாடு – மாடை = சாய்ப்பு

சாடைமாடை – நேராகப் பழிக்காமல் சாய்வுபோன்ற நேரல்லாத முறையில் பழித்தல், திட்டுதல்

**4. 186 வளைதல் கருத்திலிருந்து வளைந்த பொருள்களைக் குறிக்கும் சொற்கள் தோன்றும்**

*(எ.டு)*

இறு – இற – இறால்

குல் – கூல் – கூன் – கூனி (முதுகு வளைந்தவள்)

குள் – குழி – குழியம் = வளைதடி

குள் – குட – குடம் = வளைவான பானை

குரு – குர – குரங்கு = வளைந்த கொக்கி

குர – குறள் – குறண்டு – குறடு = வளைந்த கருவி

குள் – கொள் – கொடு – கொடி = வளைந்த கொடியின் தண்டு

துள் – துட – துடம் – தடம் = வளைந்த பாதை

புள் – புரு – புருவம் = வளைந்த கண்பட்டை

புரு – புறு – புறை – பிறை = வளைந்த நிலவு

முல் – வில் = வளைந்த வில்

முள் – (மள்)–வள் – வள்ளி = வளைந்த கொடி

**4. 187 வளைதல் கருத்திலிருந்து வணங்குதல் கருத்து தோன்றும்**

*(எ.டு)*

உறு – இறு – இற – இறை – இறைஞ்சுதல் = வளைதல், வணங்குதல்

குடம் – குடந்தம் – குடந்தம் படுதல் = வணங்குதல்

(மள்) – வள் – (வண்) – வணங்கு – வணக்கம்

**4. 188 வளைதல் என்பது திரும்பலைக் குறித்த ஒரு பொருள் வளையும்போது அதுதான் முன்பு புறப்பட்ட இடத்தை அல்லது திசையை நோக்குதலால் வளைதல் கருத்தி லிருந்து திரும்பல் கருத்து தோன்றும்**

*(எ.டு)*

துள் – (துரு) – திரு – திரும்பு

முள் – முறு – முறி – மறி – மறிதல் = திரும்பல்

**4. 189 திரும்பல் கருத்திலிருந்து மீள்தல் கருத்து தோன்றும்.**

*(எ.டு)*

முள் – (மூள்) – மீள் – மீட்சி – மீட்டல் = அடகு வைத்த பொருளைத் திரும்பப் பெறுதல்

நிரை மீட்சி = ஆநிரை மீட்கப்படுதல்

**4. 190 மீளல் கருத்திலிருந்து மடங்குதல், மடிப்பு விழுந்து திரைதல் கருத்து தோன்றும்**

*(எ.டு)*

சுள் – சுரி – சுரிதல் = மடிதல், மடிப்பு விழுதல்

முள் – முடு – முடி – மடி = மடிக்கப்பட்ட சேலை, அரையிற் கட்டின ஆடையின் மேல் விளிம்பைப் போல் மடித்த பகுதி

சுள் – சுரு – சுருக்கம், துள் – (துரு) – திரை – திரைதல் = சுருங்குதல்

திரை – திரையல் = மடித்துச் சுருங்கிய வெற்றிலைச் சுருள்

**4. 191 மடங்குதல் கருத்திலிருந்து தடுத்தல் கருத்து தோன்றும்**

*(எ.டு)*

முள் – முறு – மறி – மறித்தல் – மறியல் = தடை, தடுத்தல்

மடங்கு – மடக்குதல் = திரும்புதல், தடுத்தல்

இடை மடக்குதல் = இடை அமர்த்துதல் (எங்கும் சொல்லாமல் ஓரிடத்தில் இருத்தல்).

**4. 192 ஒன்றைத் திரும்பத்திரும்பச் செய்தல், அதைப் பன்முறை செய்தலால்**

**திரும்பல் கருத்திலிருந்து பன்முறை செயற்படும் கருத்து தோன்றும்**

*(எ.டு)* திரும்பத்திரும்ப, திருப்பி திருப்பி, மடக்கி மடக்கி, மீண்டும் மீண்டும், வளைய வளைய

**4. 193 திரும்பச் செய்த ஒன்றைத் திரும்பச் செய்வது வேறொரு முறை செய்வதும் ஒன்றினின்று திரிதல் அதனின்று வேறு படுதலால் திரும்பச் செய்தல் கருத்தி லிருந்து வேறாதல் கருத்து தோன்றும்**

*(எ.டு)* மறு = வேறு. மறுபிறவி – வேறுபிறவி

மறுபடி = வேறொரு முறை. மறுநாள் = அடுத்த நாள்

மறு – மற்று – மற்றொன்று = வேறொன்று

மற்றவன் = வேறொருவன்

**4. 194 வேறாதல் கருத்திலிருந்து மாறு படல், எதிராதல் கருத்து தோன்றும்**

*(எ.டு)*

சொல்லைத் திருப்புதல் = சொல்லை மாற்றுதல்

புள் – புரு – புரள் – புரள்தல் = சொல்மாறுதல், எதிராதல்

மறு – மாறு – மாற்றம்

மறுதலித்தல் = பழைய கொள்கைக்கு மாறுதல்

**4. 195 ஒன்றைத் திரும்பத்திரும்பச் செய்வது அதைப் பன்மடங்கு பெருக்குவ தாயிருத்தலால் திரும்பல் கருத்திலிருந்து மடங்கலை அல்லது அடுத்தடுத்த முறையைக் குறிக்கும் கருத்து தோன்றும்**

*(எ.டு)*

துள் – (துடம்) – தடம் = வளைவு. தடம் – தரம் = முறை

தடம் – தடவை = முறை

முடங்கு – மடங்கு. இருமடங்கு = இருமுறை

வள் – (வாள்) – வாட்டி = தடவை

**4. 196 ஓரிடத்திற்குச் சென்றவன் திரும்பு தலே வருதலாம். எனவே, திரும்பல் கருத்தி லிருந்து வருதல் கருத்து தோன்றும்**

*(எ.டு)*

வள் – வளைவு. வள் – வரு – வா

ஒ. நோ. தள் – தரு – தார் – தா

வா – (ஏவல் ஒருமை)

வம்மின் (ஏவற் பன்மை)

கோர் என்னும் சொல் கோ எனக் குறைந்தது போல் வார் என்னும் சொல் வா எனக் குறுகியது. நோ என்னும் வினை இறந்த காலத்தில் நொ எனக் குறுகியது போல வா, தா என்பன இறந்த காலத்தில் வ, த எனக் குறுகின.

**4. 197 வளைதல் கருத்திலிருந்து வரைதல் கருத்து தோன்றும்**

*(எ.டு)*

வள் – வளை – வரை – வரைதல் = கோடுகளை வளைத்து ஓவியம் வரைதல், வளைவான எழுத்துகளை எழுதுதல்

எழுத்து – ஓவியம். ஓவியம் வாயிலாக வளர்ந்து மொழியின் வரிவடிவங்களாகிய எழுத்துகள்.

**4. 198 கோடிடும் வரைதல் கருத்திலிருந்து வரம்புக் கோடிடும் வரம்புக் கருத்து தோன்றும்**

*(எ.டு)*

வரைதல் = கோடிடல், எல்லை குறித்தல், வரையறுத்தல்.

வரை – வரம்பு = கோடு, எல்லை, அளவு, தாண்டக்கூடாத எல்லை.

வரம்பு – வரப்பு = வயல் எல்லையாகிய சுற்றுத் திடர்

**4. 199 அசைதல் என்பது ஏதேனுமொரு பொருள் இடவலமாகவேனும் முன்பின் னாகவேனும் சாய்தல் அல்லது வளைதல் ஆதலின் வளைதல் கருத்திலிருந்து அசைதல் கருத்து தோன்றும்**

*(எ.டு)*

உல் – உல – உலவு – உலாவு – உலாவுதல் = அசைதல்

உல் – அல் – அலை – அலைதல் = அசைதல்

அல் – ஆல் – ஆடு – ஆடுதல் = அசைதல்

உல் – உலு – உலுங்கு – உலுங்குதல் = அசைதல்

உலுக்குதல் = அசைத்தல்

உல் – ஒல் – ஒல்கு – ஒல்குதல் = அசைதல்

துள் – துள – துளங்குதல் = அசைதல்

குல் – குலு – குலுங்குதல் = அசைதல்

**4. 120 அசைதல் கருத்திலிருந்து இயங்கல் கருத்து தோன்றும். அசைவதனால் இடம் பெயர நேர்கிறது. ஆங்கிலத்திலும் move என்ற சொல் அசைதலையும், இடம்பெயர் தலையும் குறிக்கும்.**

*(எ.டு)*

உல் – ஒல் – ஒல்கு – ஒல்குதல் = நடத்தல்

உல் – உல – உலவு – உலாவுதல் = நடத்தல், இயங்குதல்

உள் (உய்) – உய – இய – இயங்குதல் = நடத்தல், செல்லுதல்

ஒழுகுதல் = நடத்தல், முக்கரணங்களால் நடத்தல்

**4. 201 அசைவினாலும் இயங்குதலாலும் உடம்புக்குத் தளர்ச்சியும் வருத்தமும் தோன்றுமாதலால் இயங்கற் கருத்தி லிருந்து தளர்ச்சி, வருத்தக் கருத்து தோன்றும்.**

*(எ.டு)*

உல் – அல் – அல்லல் = துன்பம், வருத்தம்

அல் – அல்லாத்தல் = துன்புறுத்தல்

அலைதல் – அலைச்சல் = வருத்தம்

சுல் – சல் – சலிப்பு – சலித்தல் = தளர்தல், வருத்தம்

சுல் – சில் – செல் – செல்லல் = துன்பம்

**4. 202 வளைதல் கருத்திலிருந்து முறிதல், ஒடிதல் கருத்து தோன்றும்.**

*(எ.டு)*

உறு – இறு – இறுதல் = வளைதல், முறிதல்

நுள் – நொள் – நெரு – நெரித்தல் = உடைதல்,

நுள்– நொள் – நொடி – நொடித்தல்= வளைத்தல், ஒடித்தல்

முள் – முறு – முறி – முறிதல் = ஒடிதல்

முறி = முறிந்த துண்டுச்சீட்டு

**4. 203 வளைதல் கருத்திலிருந்து மேலும் பல நெளிவுகள் வளைவுகளாகத் தொடரும் திருகல் கருத்து தோன்றும்.**

*(எ.டு)*

சுல் – சுரு – சுரி – சுரியாணி = முறுக்காணி

திரு – திருகு – திருகாணி = அணிகலன்களின் பின் முறுக்காணி

'திருகுகள்ளி – திருகுகொண்டை, திரிசடை, திரிதாடி, திரிமருப்பு = முறுக்காலானவை

புரு – புரி = முறுக்குண்ட நூல்,

முள் – வள் – வளை = சங்கு (திருகலாயிருப்பது)

புரு – புரள் – புரண்டை – பிரண்டை = புரண்டிருக்கும் அல்லது முறுக்குண்டிருக்கும் கொடி

**4.204 வளைந்த பொருளின் இரு முனையும் தொடும்போது வட்டமாவதால் வளைதல் கருத்திலிருந்து வட்டக் கருத்து தோன்றும்.**

*(எ.டு)*

உறு – இறு – இறால் = வட்டமான தேன்கூடு.

இறத்தல் – வளைதல்

உள் – (அள்) – (ஆள்) – ஆழி = வட்டம், மோதிரம், சக்கரம்

குடு – குடுகு – கிடுகு = வட்டமான கேடயம்

கிடுகம் – கேடகம் – கேடயம்

குள் – கொள் – கோள் – கோடு – கோட்டம் = வட்டம்

சுல் – சுன் – சுன்னை – சுன்னம் = சுழி, வட்டம்

சுள் – சுளி – சுழி = வட்டம்

சுள் – சுரு – சரி = வளையல்

புள் – புரு – புரி – பரி – பரிதி = சூரியன், பரிசை = வட்டமான கேடயம்

பரிசல் – வட்டமான கூடைத்தோணி

**4. 205 வட்டக் கருத்திலிருந்து சூழ்தல் கருத்து தோன்றும். சூழ்தலாவது ஒன்று இன்னொன்றைச் சுற்றி வளைத்தல்**

*(எ.டு)*

உள் – உடு – உடுத்தல் = சுற்றிக் கட்டுதல், சூழ்தல்

உடு – உடுப்பு. உடு – உடை

சுல் – சுற்று – சுற்றல். சுற்றுதல் = சூழ்தல்

சுள் – சூழி – சூழ்தல் = நாற்புறமும் வளைதல்

சுள் – (சூள்) – சூட்டு = சக்கரத்தின் சுற்றுச்சட்டம்

புள் – புரி – புரிசை = நகரைச்சுற்றியுள்ள மதில்

முள் – (மள்) – வள் – வளவு = வீட்டின் சுற்றுப்புறம்

வல – வலை = சூழ்ந்து ஒன்றைப் பிடிக்கும் கயிற்றுக் கருவி

வள் – வாள் – வார் – வாரி = நிலத்தைச் சூழ்ந்த கடல்

வாரணம் = கடல்

**4. 206 சூழ்தல் கருத்திலிருந்து சுருள்தல் கருத்து தோன்றும். சுருள்தலாவது ஒரு நீண்ட பொருள் ஒரு வளையமாகவோ பல வளையங்களாகவோ அமைதல்**

***(எ.டு)***

குள் – குழல் = சுருள் கூந்தல்

குள் – குருளி = சுருள்

சுருள் – சுருளை – சுருணை

சுருள் – சுருட்டை, சுருட்டைமுடி

சுரி – சுரியல் – சுரிந்து = நீர்ச்சுழி

வள் – வாள் – வார் – வாரணம் = சங்கு

**4. 207 சூழ்தல் கருத்திலிருந்து சுற்றி வருதல் அல்லது வட்டமிடுதல் கருத்து தோன்றும்.**

***(எ.டு)***

உல் – அல் – ஆல் – ஆலுதல் = சுற்றி ஆடுதல்

ஆல் – ஆலா = வானத்தில் வட்டமிட்டுப் பறக்கும் பறவை

ஆல் – ஆலு – ஆலத்தி = கண்ணெச்சில் கழித்தற்கு விளக்கையாவது மஞ்சள் நீரையாவது ஒருவர் தலையைச் சுற்றி எடுத்தல்

ஆலத்தி – ஆளத்தி = வலிவு, மெலிவு, சமன் என்னும் முந்நிலையிலும் சுற்றிப் பண்ணிசைத்தல்

உல் – உலா = சுற்றிவருதல்

குள் – கொள் – கோள் = அண்டத்தைச் சுற்றி வரும் விண்மீன்

சுள் – சுளை – சொளை – சொளையம்

சொளையமாடுதல் = திருடும் நோக்கத்துடன் வீட்டைச் சுற்றிவருதல்

வள் – வட்டு – வட்டணை – வட்டமாகச் சுற்றிவருதல் – "சுற்றிவரும் வட்டணையில்" (பெரியபு. ஏனாதி, 29)

**4. 208 சுற்றுதல் கருத்திலிருந்து ஒரு பொருள் தன்னைத்தானே சுழற்றும் சுழலுதல் கருத்து தோன்றும்.**

***(எ.டு)***

உல் – உலம் = சுழற்சி. உலகம் =சுழல்வது

உலமா – உலமரல் = சுழற்சி

குள் – குறு – (கறு) – கற – கறங்கு = காற்றாடி

இறு – இறுக்கு = தலைச்சுற்று – மூளைக் கோளாறு

துள் – (தின்) – திரி – திரிதல் = சுழலல்

திரி – திரிகை – திரிகல்

முள் – வள் – வளி = வளைந்து வீசும் காற்று

**4. 209 சுழலல் கருத்திலிருந்து உருட்சிக் கருத்தும் உருளல் கருத்தும் தோன்றும். உருளலாவது உருட்சிப் பொருள்கள் உருண்டுபுரண்டு ஓடுதல்.**

***(எ.டு)*** உருள் –உருளி = உருளும் சக்கரம்

சுள்– சுழி – சுழியம் = உருண்டைப் பலகாரம்

உல் – அல் – அலை – அலைதல் = உருளல்

அலைத்தல் = உருட்டுதல்

'தேறல் கல்லலைத் தொழுகும்' (புறம். 115)

**4. 210 குத்தல் கருத்திலிருந்து துளைத்தல் கருத்து தோன்றும். ஒன்றை வலிதாய்க் குத்தும் பொருள் வளையாவிடத்து அதனால் முட்டப்பட்ட பொருளைத் துளைக்கும்.**

***(எ.டு)***

உல் – அல் – அரி – அரித்தல் = துளைத்தல். ஏட்டைப் பூச்சி அரித்துவிட்டது. துல் – துள் – துளை – துளைத்தல் = உட்புகுதல்

'வண்டு துளைத்த மாம்பழம்'

**4. 211 குத்தல் கருத்திலிருந்து குத்திக் கிழிக்கும் கீறல் கருத்து தோன்றும்.**

**கீறலாவது கூர்க்கருவியால் குத்தி நீள இழுத்தல்.**

*(எ.டு)*

குள் – கிள் – கீள்தல் = கிழித்தல், பிளத்தல்

கீள் – கீழ்தல் = பிளத்தல்

புள் – (புறு) பூறு – பீறு – பீறுதல் = நகத்தால் கீறுதல்

**4. 212 கீறல் கருத்திலிருந்து பொறித்தல் கருத்து தோன்றும். பொறித்தலாவது கடினமான பொருளிற் குழித்து எழுதுதல்.**

*(எ.டு)*

குள் – குழி – குழித்தல் = குழித்து எழுதுதல், கண்ணெழுத்து வரைதல்

பொள் – பொளி – பொளிதல் = எழுத்தினை உளியால்வெட்டுதல்

பொளி – பொறி – பொறித்தல் = குழித்து எழுதுதல். எழுதும் பரப்பில் ஏழுத்துகளின் பள்ளம் தோன்றுமாறு செய்தல்

புள் – பிள் – விள் – வெள் – வெட்டு (கல்வெட்டு)

**4. 213 குழித்தல் கருத்திலிருந்து கிண்டுதல் கருத்து தோன்றும். கிண்டு தலாவது பொருள்களைக் கிளைத்தல் அல்லது குடைதல்.**

*(எ.டு)*

உள் – உளர் – உளர்தல் = தலைமயிரைக் கோதிக் கிளர்தல்

குடைதல் = கிண்டுதல். "நெய்குடை தயிரின்" (பரிபா. 16:3)

குள் – கொழு – (கொழுது) – கோழி = நிலத்தையும் குப்பையையும் கிளைக்கும் பறவை

குள் – கொள் – கொழு = நிலத்தை உழும் காறு

குள் – கிள் – கிளர் – கிளறு – கிளாறுதல் = கிண்டுதல்

குள் – கிள் – கேள் – கேழல் = நிலத்தைக் கிளறும் பன்றி

நெள் – நெண்டு – நண்டு = நிலத்தைக் கீறிச் செல்லும் நீருயிரி

**4. 214 கீறல், கிண்டல் கருத்திலிருந்து அறுத்தல் கருத்து தோன்றும். அறுத்த லாவது வாளால் நீட்டு வாக்கில் பலமுறை துளைத்துக் கீறல் அல்லது துளைத்து வெட்டுதல்**

*(எ.டு)*

உல் – (உர்) – அர் – அரங்குதல் = அம்பு முதலியன தைத்து துளைத்து அறுத்தல்

அரக்குதல் = கிளைகளைத் தறித்தல், வெட்டுதல்

அரங்கு – அறுக்கப்பட்ட அறை, வட்டாட்டம், நாடகம், நடத்திற்கு வகுத்த நிலம்

அல் – அர் – அறு – அறுப்பு – அறுவடை

அறு – அறுவை = தறியிலிருந்து அறுக்கப்பட்ட துணி

**4. 215 அறுத்தல் அல்லது வெட்டுதல் கருத்திலிருந்து பிளத்தல் கருத்து தோன்றும். பிளத்தலாவது ஒரு பொருளை ஒரே முறையில் வெட்டித் திறத்தல் அல்லது துணித்தல். தானாய்த் திறத்தலும் பிளவே.**

*(எ.டு)*

உடை – உடைப்பு. குள் – கள் – கணி – கணிச்சி = பிளக்கும் கோடாரி

திற – தெறி – தெறித்தல் = பிளத்தல்

புள் – பொள் – போழ் – போழ்தல் = பிளத்தல். போழ் = துண்டு

புள் >பிள் >பிடு – பிடுதல் = கையாற் பிளத்தல்,

பிள் – விள் – விள்ளுதல் = பிளத்தல் = விள்ளல் = துண்டு

**4. 216 பிளத்தல் கருத்திலிருந்து வெடித்தல் கருத்து தோன்றும்**

*(எ.டு)*

புள் – பிள் – பிடு – பிடுங்கு – பிடாங்கு

பிள் – விள் – விடு – வெடு – வெடி = வேட்டு

விள் – (வெள்) – வெட்டு – வேட்டு

**4. 217 பிளத்தல் கருத்திலிருந்து வெடிப்பு அல்லது விரிசல் கருத்து தோன்றும்**

*(எ.டு)*

நொள் – நொகு – நொக்கு = வெடிப்பு

கும் – கம் – கமர் = வெடிப்பு

விள் – விள்ளுதல் = பிளத்தல், விரிதல்

விள் – விரி – விரல் = கையிலிருந்து விரிந்தது

விள் – விய் – வியல் = விரிவு

**4. 218 விரிதல் கருத்திலிருந்து பிரிதல் கருத்து தோன்றும். பிளந்த பொருள் வேறாகப் பிரியும்**

***(எ.டு)***

புள் – பிள் – பிரி – பிரிவு – பிரிவினை

பிள் – பிடு – (பிது) – பிதுங்கு – பிதுக்கம்

(பிது) – பிதிர் – பிதிர்தல் = பிண்டு உதிர்தல்

விள் – விடு – விடுதல் – விடுதலை

புள் – பிள் – பிய் – பியி – பிசி = விடுவிக்கும் விடுகதை

பிள் –பீள் – பீளை – பூளை = கண் அழுக்கு

புள் – புழுக்கை – பிழுக்கை

புள் – (விள்) – விட்டு – விட்டை

புல் – பில் – பிலிற்றுதல் = சிந்துதல், பீச்சுதல்

பிள் –பிய் – பெய் – பெயல்

**4. 219 தோண்டுதல் கருத்திலிருந்து தேடுதல் கருத்து பிறக்கும்**

***(எ.டு)***

துள் –துழ – துழவு – துழாவுதல் = தேடுதல்

நுள் – நொள் – நோள் – நோண்டு – நேண்டு – நேடு – நேடுதல் = தேடுதல்

நோண்டு – நோடு – நாடு – நாடுதல் = தேடுதல்

துள் – துர – துரவு = கிணறு. துரப்புதல் = துளைத்தல், தேடுதல்

**4. 220 பள்ளத்தைக் குறிக்கும் கருத்திலிருந்து நீர்நிலையைக் குறிக்கும் சொற்கள் தோன்றும்.**

***(எ.டு)***

குள் – குளம். குள் – குண்டு – குட்டை

குள் – (கள்) – (கய்) – கயம் = குளம், காயல் = நீர்நிலை

துள் – தொள் – தொழுவை = மடு

தொழுநை = ஆழமான நீர்நிலை, யமுனை ஆறு

தொள் – தோள் – தோய் – தோயம் = கடல்

புள் – பள் – பாழி = சிறுகுளம்

புள் – பொள் – பொய் – பொய்கை = குளம்

பள் – படு – படுகை – படுகர் = நீர்நிலை

பள் – பயம் – பயம்பு = நீர்நிலை

பள் – பண் = நீர். பண் – பாணி =நீர்

குள் – கிள் – கிணறு. கிள் – கெள் – கேள் – கேணி

**4. 221 பள்ளக் கருத்திலிருந்து கீழ்மை, தாழ்மை குறித்த சொற்கள் தோன்றும்**

***(எ.டு)***

குள் – கிள் – கீழ் – கீழ்மை

குள் – (கள்) – (கய்) – கயம் – கயமை = கீழ்மை

குள் – குண் – குணம். குணக்கு = தாழ் நிலத் திசை, கிழக்கு

குள் – கிள் – கீழ் – கிழக்கு

துள் – (தள்) – தழு –தாழ் – தாழ்வு – தாழ்மை

**4.222 ஒரு தொடரில் சொல்ல வேண்டியதை, அடிப்படைக் கருத்தைத் தெரிவிக்கும் ஒரு சொல் தொடக்கப் பொருளைக் குறிப்பால் உணர்த்தும்**

**தனிச் சொல் தொடர்ப் பொருள் தருதல்**

***(எ.டு)***

'தண்ணீர்'

1. எனக்குத் தண்ணீர் வேண்டும்
2. இதோ பார் தண்ணீர்.
3. வெள்ளம் வீட்டிற்குள் வந்துவிட்டது.
4. தண்ணீர் கொண்டு வா.
5. இந்தப் பால் தண்ணீர் கலந்தது
6. இந்தச் சொல் 'தண்ணீர்'
7. இதன் பொருள் தண்ணீர்
8. இந்த விடுகதையின் விடை தண்ணீர்
9. இப்படத்திலுள்ளது தண்ணீர்

10. குளிர்ந்த நீர்

**4. 223 மொழித்துணையின்றியும் மாந்தர்க்குக் கருத்து புலப்பாடு நிகழும். இசையொலி வேறுபாடுகள் மனவுணர்வுகளில் எண்வகை மெய்ப்பாட்டு உணர்வுகளைத் தோற்றுவித்தலாலும் அவிநயக் கூத்தின் வாயிலாக உள்ளுணர்வுகளை எண் வகை மெய்ப்பாடுகள் வெளிப்படுத்தலானும் இசைத் தமிழும் நாடகத் தமிழும் மொழியின் கூறுகளாகும். மெய்ப்பாடு வாயிலாகக் கருத்து புலப்படுத்தலை உடல் மொழி (body language) எனல் காண்க.**

*(எ.டு)*

முத்தமிழ் (இயல், இசை, நாடகம்).

**4. 224 சொல்லீறுகள் வேறுபடத் திரிந்தாலும் சொல்லின் முதனிலைப் பொருள் வேறுபடுவதில்லை.**

*(எ.டு)*

முள் (உருண்டைக் கருத்து) – முண்டு – முண்டை – முட்டை, முத்து, முட்டான் (சாண உருண்டை)

**4. 225 சொல்லாக்க ஈறுகள் சொற்பொருளைவேறுபடுத்துகின்றன.**

*(எ.டு)*

பல் + து -- பல்து – பன்று (பல்லை உடையது)

பன்று+ இ – பன்றி = பல்லுடையதாகிய ஓர் உயிரி. இகரம், ஒருமையீறு.

**4. 226 பல பொருள் ஒரு சொல் எளிதில் தான் கருதியபொருளை வெளிப்படுத்தாமையின் சொல்லாக்கத் திரிபுகளைப் பெறுகிறது.**

*(எ.டு)*

சொல் = நெல், சருகு போன்ற தோகை கொண்ட பயிர்

சொல் – சோல் – சோள் = சோளம்

சொல் = நெல், சொல் – சோழம் (நெல்)

**4. 227 தனிக் குறிலடுத்த ளகர மெய்யீற்று வினை செயப்படுபொருள் குன்றிய வினையாகவும், ளகர மெய் ணகர மெய்யாகத் திரிந்த வினை செயப்படுபொருள் குன்றா வினையாகவும் இருக்கும்.**

*(எ.டு)*

உள் = இரு. உள் – உண் = உள்ளே இருத்து, செலுத்து

**4. 228 சொற்றிரிபால் இருமடிப் பொருள் திரியும். நீளுதல் கருத்தில் நடத்தல் கருத்து தோன்றும்**

*(எ.டு)*

நீள் – நீடு – நெடு – நட

**4. 229 காலத்தால் முந்தைய சொல் வடிவத்தை அதன் பொருட்பாட்டு முன் வடிவத்தால் கண்டறியலாம். தமக்கு முன்னால் வருகின்ற ஒன்று எதிரில் வருதலால் எதிர்தல் எதிர்ப்பு (பகைமை) என எதிரில் தென்படல் கருத்திலிருந்து எதிர்த்தல் கருத்து தோன்றும்**

*(எ.டு)*

எதிர்தல் = எதிரில் வருதல், முன்னால் தம்மை நோக்கி வருதல். இது தானே எதிர்தலும் தன்னை மற்றவர் எதிர்தலும் ஆகும்.

எதிர் – எதிர்கை. எதிர்ப்பு – எதிர்த்தல் – எதிரி. சித்தியின பின்னிசு மொழியில் எது என்பது முன்னால் (முன்பிருந்த) எனப் பொருள்படுவதால் முன்னால் வருதல் பொருள் எதிர்த்தல் பொருளுக்கு முந்தையது என்பது உறுதிப்படுகிறது.

**4. 230 முச்சுட்டுகளுள் முன்மைச் சுட்டாகிய உகரச் சுட்டே பெரும்பான்மையான கருத்துகளும் சொற்களும் வளர ஊற்றுக் கண்ணாகிறது. முன்மை என்பது இடைமை ஆகாது**

*(எ.டு)*

உ – உல். தமிழ் சொற் தொகுதியுள் முக்காற்பங்குச் சொற்கள் உகரச் சுட்டடியாகத் தோன்றியவை

ஆங்கிலத்தில் move என்பது இதழ்முன் நோக்கிக் குவிந்து ஒலித்தலால் தோன்றிய சொல் என்பதை Chambers Etymological Dictionary குறித்துள்ளதும் முதன்மைக் கருத்துக்குச் சான்றாகும்.

**4. 231 தனிக்குறில் சார்ந்த மெய்யீற்று வினையடிச் சொற்களில் அ, இ, உ, ஐ ஈறுகள் சேர்ந்து வினைச் சொல்லில் பொருள் வேறுபாடு காட்டுகின்றன.**

*(எ.டு)*

கல் – கல – கலி – கலு (ழ்) – கலை

அள் – அள = அளி. அளு – அளை

கிள் –கிள – கிளி – கிளு – கிளை

**4. 232 சேய்மைக்கும் அண்மைக்கும் இடைப்பட்ட முன்மை (எதிரில் உள்ளது). சுட்டு இடவகையால் முதன்மைப் பொருள் சுட்டும். இது வினைவகையாகிய முன் னுறல் முற்செலவு போன்றவை அன்று.**

*(எ.டு)*

உவன், உவள் – உவர், உது, உவை

உதோள் – உதோளி

**4. 233 உயிர் முதலாகிய வினைமுதல் வேர்ச்சொல்லில் மெய் சேர்ந்து உயிர் மெய் முதல் வழியடிச் சொல்லாவது சொல்லாக் கத்தில் பொருள் மயக்கம் தவிர்த்தற்காக அமைந்த பொருட்பாட்டு முறைமையாகும்.**

*(எ.டு)*

உல் – உரு, குரு – சுரு – துரு, நுரு, புடு, முரு

**4. 234 சொல்லின் வேர்ப் பொருள் நினைப்பும் சூழலும் காட்சிப் பொருள் களின் மனப்பிடிப்பு அல்லது உருவலிப் பாகவே (imagination) தோன்றுதலால் அவை ஒலிப்பு வடிவம் கொள்ளும்போது ஒவ்வொரு ஒலிப்புக்கும் பொருட்பாடு நிலைபேறடைகிறது. இதுவே சொல்லின் வேர்ப் பொருள் எனப்படும்.**

*(எ.டு)*

உல் – உலை = நெருப்பு, அடுப்பு, கொதிக்கும் நீர்

உலை எனும் வழக்காற்றுச் சொல் உல் என்று வழக்கிழந்த வேர்ப்பொருள் எரிதல் என உறுதிப்படுத்துகிறது.

**4. 235 சொற்றொடரிலுள்ள எல்லா இலக்கணக் கூறுகளுக்கும் ஒத்த பகுதிகள் உள்ளக் கருத்தில் இருப்ப தில்லை. அவை உய்த்துணரப்படும்.**

*(எ.டு)*

பாற்குடம் – பாலைக் கொண்ட குடம் என இலக்கண ஆசிரியர் விரித்துரைப்பர். 'ஐ' எனும் இரண்டாம் வேற்றுமை உருபும் உடைய எனும் பெயரெச்சமும் உள்ளக் கருத்தாகும். புறத்தே புலப்படவில்லை.

வினைச் சொற்களே இல்லாமல் பேசப்படும் தொடர் மொழிகளும் தொகை மொழிகளும் உய்த்துணர்வால் பொருளைப் புலப்படுத்துகின்றன.

உருபும் பயனும் உடன் தொக்கத் தொகை போன்றே வேற்றுமைத் தொகைகளும் உய்த்துணர் பொருள் கொண்டவை.

**4.236 சொற்களில் பொருட்பாட்டுப் புடை பெயர்ச்சி உவமை அடிப்படையில் அமையும் பொழுது ஆகுபெயரெனும் இலக்கண வகைமைப் பெறும்**

*(எ.டு)* 1. மாங்காய் – மாங்காய் போன்ற நெஞ்சாங் குலை, எருமை நாக்கு.

2. எருமை நாக்கு – எருமை நாக்கு போன்ற மீன்.

3. கிளிமூக்கு – கிளிமூக்கு வடிவிலமைந்த பழம்

**4. 237 உவமைத் தொகையாக வரும் கூட்டுச் சொற்கள் முதற்சொல்லில் பண்பை விளக்கும் குறிப்புச் சொல்லாக அமையும்.**

*(எ.டு)*

1. சாம்பல் வாழை – சாம்பல் நிறமான வாழைப் பழம்

2. காக்கைப் பிசின் – காக்கை போன்ற கருப்பு நிறமுள்ள பிசின்

3. பவளச்சோளம் – பவளம் போல் சிவந்த சோளம்

4. ஆரல் மீன் அவரை – ஆரால் மீன் போன்ற அவரைக் காய்

5. மயில் கழுத்துச் சேலை, கோழிக்கால் தையல், பாம்புக் கற்றாழை, வெளவால் மீன் போன்றனவும் இத்தகையனவாம்

**4.238 சில சொற்கள் உவமைச் சொல்லீறு பெற்றனவாய் இருக்கும்**

*(எ.டு)*

1. ஆனைக் கொம்பன் – ஒரு வகைச் சம்பா நெல் (ஈறு

பெற்ற உவமை)

2. காடைக்கண்ணி – காடைக் கண் போன்ற ஒரு சிறு தவசம்

3. குதிரைவாலி – குதிரை வால் போல் கதிர் தள்ளும் ஒருவகை சிறு தவசம். தோராளி என்பது கொச்சை வழக்கு

4. நுணா – நுணல் (மணல் தவளை) மணல் தவளை போன்று காய்காய்க்கும் மர வகை

**4.239 ஒரு கருத்தை இச்சொல்லால் சொல்லாது தகுதி அன்று என்று கருதி வேறோர் சொல்லால் வழங்குவது தகுதி வழக்கு எனப்படும். இதனைப் பொருட் பாட்டு நோக்கில் ஆய்ந்தோர் பொருட் பாட்டுத் தாவல் (Semantic shift) என்பர். இது 3 வகைப்படும்.**

1. இடக்கரடக்கல்
2. மங்கலம்
3. குழூஉக்குறி

**4. 240 வெளிப்பட கூற வேண்டிய சொல் அருவருப்பிற்கு உரியதானால் அதனை மறைக்க வேறு எவ்வகையாயிலேனும் தொலைத்தொடர்புள்ள சொல்லைத் தெரிந்தெடுத்துப் பேசுவது இடக்கரடக்கல் எனப்படும். இதனை நாகரிக நிலையின் மேம்பாடு எனலாம்.**

***(எ.டு)*** 1. ஒன்றுக்குப் போதல் (சிறுநீர் கழித்தல்)

2. மனம் விரும்பாத ஒரு நிகழ்ச்சியை வெளிப்படக் குறிப்பிடாமல், வேறு ஒரு வகையில் தொடர்புடைய சொல்லால் மனத்தடுமாற்றம் ஏற்படாமல் சொல்வதும் மங்கலம் எனப்படும்.

***(எ.டு)*** பெரும் பிறிதுற்றான் – இறந்துவிட்டான்

கொடிதட்டுதல் – பாம்பு கடித்தல்

3. குறிப்பிட்ட சிறு பிரிவினர் ஏதேனும் ஒரு பொருளுக்குத் தாம் விரும்பும் பொருள் தொடர்பு கருதி, அக்குழுவினர்க்கு மட்டும் புரியும்படி தெரிந்தெடுத்து ஆளும் சொல்லாட்சி குழூஉக்குறி எனப்படும்.

***(எ.டு)*** சொல் விளம்பி – கட்குடியர் கள்ளுக்கு இட்ட பெயர்

அரும்பு – அரிசி

செந்தலை – அரைக்கால்படி

கருந்தலை – காற்படி

தங்கான் – அரைப்பகுதி

(மேற் சொல்லப்பட்டவை வணிகர் வழக்கு)

**4.241 குறிப்பிட்ட வகைப் பொருள்களை அல்லது உயிரிகளைப் பயன்பாட்டு எளிமை நோக்கி ஓரினப்படுத்துவது ஓரினப் படுத்தல் (common generalization) ஆகும்.**

***(எ.டு)***

விலங்கு, பறவை, மீன் – விரிவான ஓரினப்படுத்தல் சொற்கள்.

மாடு – பெற்றமும், எருமையும்

மான் – உழை, புள்வாய், நவ்வி, புகர், மரை, வருடை, கடமை, மிளா, காசறை, கவரி, குதிரை

**4. 242 ஒரே இனமான, ஒத்த தோற்ற முள்ள பொருள்களை நுண்ணிய வேறு பாடு பற்றி வெவ்வேறு சொல்லால் குறித்தல் வேறினப்படுத்தல் (discrimination) எனப்படும்.**

***(எ.டு)*** இலை – தாள், தோகை, ஓலை, மடல்.

தவச உணவு – சோறு, கஞ்சி, கூழ், களி

இனி சிறப்புச் சொற்களின்றிப் பொதுச் சொற்களே வெவ்வேறு அடைபெற்றுப் பொருள்களை வேறினப் படுத்தலுமுண்டு.

***(எ.டு)*** சிற்றெறும்பு, பொடியெறும்பு, ஆய் எறும்பு,

செவ்வெறும்பு, மழை எறும்பு, மண்டை எறும்பு, கட்டெறும்பு

**4.243 சொற்கள் வேறுபடல் இழிபு, தொல் லியல்பு, விரிவு, வரையறை, சிறப்பிக்கை, பொதுப்பிக்கை எனும் ஐவகைப் பொருள் திரிபு (variation) அடையும். இப்பொருள் திரிபு, பல பொருள் ஒரு சொல் வகை மைக்கு அடிப்படையாகும். இதனைச் சொற்றிரி பொருள் திரியா மரபு எனலாம்.**

*(எ.டு)* கல் – கருங்கல், குன்று, மலை

**4.244 பொருள் திரி மரபில் சில சொற்கள் உயர்பொருட்பேறு பெறும் (elevation).**

*(எ.டு)*

| சொல் | இயற்பொருள் | உயர்வுப்பொருள் |
|---|---|---|
| களிப்பு | – கட்குடிப்பு, குடிவெறி | – மகிழ்ச்சி |
| குட்டி | – அஃறிணையிளமை | – இருதிணையிளமை |

**4. 245 ஒரு சொல் தன்னுடைய பொருட் பாட்டில் தாழுறுவது இழிபொருட்பேறு (degradition) எனப்படும்.**

*(எ.டு)*

| சொல் | இயற்பொருள் | இழிவுபொருள் |
|---|---|---|
| 1. சூழ்ச்சி | = நற்சூழ்ச்சி | – தீயசூழ்ச்சி |
| 2.சேரி | = முல்லை நிலத்தூர் | – தாழ்த்தப் பட்டோர் ஊர் |
| 3.சிறுக்கி | = சிறுமி | – கீழ்மகள் |
| 4.காமம் | = திருமணக் காதல் | – இணை விழைச்சு ஆசை |
| 5.அந்தணன் | = அருளாளும் துறவி | – பிராமணன் |

**4.246 முற்காலத்தில் வழங்கிய சொல் லாட்சி பிற்காலத்தில் வேறு பொருள் தருவ துண்டு. இது முற்காலச் சொல் பிற்படுத்தம் எனப்படும்.**

*(எ.டு)*

| சொல் | முதற்பொருள் | பிற்பொருள் |
|---|---|---|
| 1. கோயில் | – அரண்மனை | – தெய்வப்படிமை இருக்கும் இடம் |
| 2.பண்டாரம் | – களஞ்சியம் | – சிவமடத்தம்பிரான், ஆண்டி, கருவூலச்சாலை |
| 3.தோள் | – மேற்கை(arm) | – கவல்(தோட்பட்டை) |

**4. 247 ஒரு சொல் தனக்கு இனமான வற்றையும் குறிக்குமாறு ஆளப்பெறுவது பொருள் விரிவாக்கம் (extension) எனப்படும்.**

*(எ.டு)*

| சொல் | இயற்பொருள் | புதிதாய் விரிவடைந்தபொருள் |
|---|---|---|
| 1. கொல்லன் | = தச்சன் | – ஐங் கொல்லருள் ஒருவன் |
| 2. தோடு | = காதோலை | – காதிலணியும் பொன்னோலை, பொற்கம்மல், கற்கம்மல் |
| 3. பொன் | = தங்கம் | – கனியம் (metal), மாழை |
| 4. ஊறுகாய் | = ஊறும்காய் | – ஊறும்காய், கனி, கிழங்கு, பிஞ்சு |

**4. 248 ஒரு சொல் தான் குறிக்கக்கூடிய பலபொருள்களுள் ஒன்றற்கோ, அல்லது அதன் ஒரு கூற்றிற்கோ சிறப்பாக ஆளப்படுவது பொருட்பாட்டு வரையறை (restriction) எனப்படும்.**

*(எ.டு)*

| சொல் | குறிக்கும்பொருள்கள் | வரையறைப்பொருள் |
|---|---|---|
| 1. மனை | : வீடு, மனைவி | – வீட்டு நிலம் |
| 2. யாம் | : இருவகைத் தன்மைப் பன்மை | – தனித்தன்மைப் பன்மை |
| 3. நாம் | : இருவகைத் தன்மைப் பன்மை | – உளப்பாட்டுத் தன்மை பன்மை |

4. பிள்ளை = ஆண், பெண் – ஆண் (கொங்கு நாடு) பெண் (பாண்டி நாடு)

**4. 249 பல பொருள்களுக்குப் பொதுவான சொல்லை அவற்றுள் தலைசிறந்த ஒன்றற்கு ஆள்வது பெருட்பாட்டுச் சிறப்பித்தல் (specialisation) எனப்படும்.**

*(எ.டு)*

| சொல் | பொதுப் பொருள் | சிறப்புப் பொருள் |
|---|---|---|
| 1. அடியார் | = பல்வேறு அடியார் | – இறைவனடியார் |
| 2. பேறு (காலம்) | = பல்வகைப்பேறு | – மக்கட்பேறு |
| 3. நெய் | = பல்வகை நெய் | – ஆவின் நெய் |
| 4. மலர் | = பல்வேறு மலர் | – தாமரை மலர் |

**4. 250 சிறப்புப் பொருட் சொல்லைப் பொதுப் பொருளில் ஆள்வது பொருட்பாட்டுப் பொதுப்பித்தல் (special generalisation) எனப்படும்.**

*(எ.டு)*

| சொல் | சிறப்புப்பொருள் | பொதுப்பொருள் |
|---|---|---|
| 1. எலி | வெள்ளெலி | எலி |
| 2. தாமரை | செந்தாமரை | தாமரை |
| 3. தூங்குதல் | தொங்குகட்டிலில் அல்லது தொட்டிலில் உறங்குதல் | உறங்குதல் |

**4. 251 சிறப்புப் பொருள் குறித்த அடைபெற்ற சொல்லைப் பொதுப் பொருளில் வழங்கினால் அச்சிறப்புப் பொருள் அடைமொழிதன்பொருளை இழந்துவிடும் (loss of meaning). மூலச்சொல்லின் பொருட்காரணத்தை மக்கள் மறந்துவிடும் பொழுது இத்தகைய சொற்பொருள் இழப்பு ஏற்படும்.**

*(எ.டு)*

1. எண்ணெய் = எள்ளின்நெய் – நெய்ப்பொருள்

2. தமப்பன் = தம் அப்பன் – அப்பன்

3. தண்ணீர் = குளிர்ந்த நீர் – நீர்

**4. 252 சொற்களிலும் சொற்றொடர்களிலும் அசையழுத்தம், சொல்லழுத்தம் காரணமாக நுண்ணிய பொருள் வேறுபாடுகள் நிகழும். எவ்வகை ஒலிப்பழுத்தமும் (accent) நேராவிடில் அது இயல்பு ஒலிப்பு எனப்படும். எனினும் இயல்பான தொடரிலும் ஒலியின் உறைப்பு வர வரக் குறையுமாதலால் சொல்முதலில் எடுத்தலோசையும் (acute) இடையில் நலிதலோசையும் (circumflex) இறுதியில் படுத்தலோசையும் (grave) நிகழும்.**

*(எ.டு)*

கொற்றன் நேற்று வந்தான்

**4. 253 கவர்படுபொருள் மொழியில் அதாவது பலபொருட் சொற்றொடரில் சொல்பவனின் கருத்திற்கேற்ப ஒலிப்பழுத்தம் குறிப்பிட்ட சொல்லில் நிகழும்.**

*(எ.டு)* செம்பொதின் பலம் என்னும் தொடரில்

(அ) செம்பொன் பதின்பலம்

(ஆ) செம்பு ஒன்பதின் பலம்

ஒலிப்பழுத்தம் தரும் இடங்களில் இடைவெளிவிட்டு எழுதுகிறோம். பேசும்போதும் இடைவெளி விட்டுப் பேசுதல் வேண்டும்.

*(எ.டு)* 2.

குன்றேறாமா என்னும் தொடரில்

(அ) குன்றேறு ஆமா = குன்றிலேறும் ஆன் , காட்டு மாடு

(ஆ) குன்று ஏறா+மா = குன்றில் ஏறாத விலங்கு

ஒலிப்பழுத்தத்திற்கு ஏற்ப எழுத்திலும் பேச்சிலும் விட்டிசை அமையும்.

**4. 254 ஒரே சொல்லிலும் முன்னெழுத்து**

**அல்லது பின்னெழுத்தில் அமையும் ஒலிப்பழுத்தத்திற்கு ஏற்ப நுண்பொருள் வேறுபாடு நிகழும்.**

*(எ.டு)* 1.

கட்டு – ஏவலொருமை வினைச் சொல்

(ஏதேனும் ஒரு பொருளைக் கட்டிவை) இவ்வினைச் சொல்லில் முன்னுறுப்பாகிய 'க' என்பது ஒலிப்பழுத்தம் பெறும்.

*(எ.டு)* 2.

கட்டு – கட்டப்பட்ட கட்டு (பெயர்ச் சொல்) இது முதனிலைத் தொழிற் பெயராகவும் முதனிலைத் தொழிலாகு பெயராகவும் வரும். இச்சொல்லில் 'ட்டு'என்னும் சொல்லீறு குற்றியலுகரம் ஆயினும் குற்றியலுகர நிலையிலேயே ஒலிப்பழுத்தம் பெறும்.

*(எ.டு)* 3.

தபு = நீசா (தன்வினை)

இதில் முன்னெழுத்துத் தகரம் ஒலிப்பழுத்தம் பெறும்.

*(எ.டு)* 4.

தபு = சாகச் செய் (கொல்) (பிறவினை)

இதில் பின்னெழுத்தாகிய 'பு' ஒலிப்பழுத்தம் பெறும். இத்தகு ஒலிப்பழுத்த வேறுபாடு தன்வினை, பிறவினை பொருள் வேறுபாடுகளை நுண்ணிதின் புலப்படுத்தும்.

**4. 255 ஒரு பொருளை வற்புறுத்திக் கூறும் பொருட்பாடு ஒரு சொல்லை அல்லது சொல்லுறுப்பை அழுத்தி ஒலிப்பது பொருளழுத்தம் (stress or emphasis) எனப்படும்.**

*(எ.டு)* 1

மறைமலையடிகள் தமிழில் மாபெரும் <u>மலை.</u> இதில் மலை என்னும் பெயர்ச் சொல் பொருளழுத்தம் பெறகிறது.

*(எ.டு)* 2

இவர் ஆங்கிலத்திலும் வடமொழியிலும் வல்லுநர். இதில் <u>வல்லுநர்</u> என்னும் குறிப்பு வினைச் சொல் பொருளழுத்தம் பெறுகிறது.

*(எ.டு)* 3

மறைமலையடிகள் <u>இந்தியும்</u> கற்றார். இதில் 'உம்' என்னும் இடைச் சொல் பொருளழுத்தம் பெறுகிறது.

**4. 256 உவம ஆகுபெயர் மேலும் சில குறிப்புப்பொருள்களை உள்ளடக்கி யிருக்கும்.**

*(எ.டு)*

1. கொடி வந்தாள் (கொடி போன்ற பெண்)

'கொடியாளைமற்சேர் தோளான்' (சீவக. 107)

2. பெண்கொடி (உருவகம்)

3. கொடிச்சி – ஈறு பெற்ற உவமம்

**குறிப்புப் பொருள்:**

1. ஆடவரினும் மெல்லியள்

2. ஆடவரினும் விரைந்து வளர்பவள்

3. கொழுநனைத் துணைக்கொண்டே வாழ்பவள்

**4. 257 ஒரு பொருளின் அல்லது வினையின் தன்மை பண்பு எனப்படும்.**

*(எ.டு)*

தளி = மழை. தளி – தள் – தண் – தண்மை

எரி = எரிதல், எரிச்சல், எவு

தீ – தீமை. நீர் – நீர்மை (ஒரு சீரான நீரின் தன்மை)

புல் – புள்மை

**4. 253 ஒரு பொருளின் தொடர் பண்புகள் நீடிக்குமாயின் மரபு எனப்படும். தொடர்ந்து வரும் பழக்க வழக்கங்களும் சொல் வழக்காறுகளும் மரபாகும். இவை ஒரு மக்களினத்தை அடையாளம் காட்டுபவை.**

*(எ.டு)*

<u>மரபு</u>

– வித்தும் வேரும் அடியும் கிளையும் குச்சும் கொழுந்துமாகத் தொடர்ந்தோங்கும் மரம்போல் மேன்மேலும் தொடர்ந்து செல்லும் குலத்தொடர்ச்சி

<u>கொடிவழி</u>
– பல தலைமுறைகளாக ஒருமொழியினத்தாரிடை அல்லது தொல்குடியினிரிடை கொடியும் மரமும் போல் இணைந்தும் பிணைந்தும் தொடர்பு அறாமல் வழங்கிவரும் பழக்கவழக்கமும் உறவுத் தொடர்ச்சியும். கொடி வழியாகும்.

<u>கால்வழி</u>
குறிப்பிட்ட குடியினரிடை தலைமுறை பலவாகத் தொடர்ந்து வரும் திருமண உறவு கால்வழியாகும்.

**4. 259 பண்புத்தொகையிலுள்ள வரு மொழிச்சொல் எனும் ஈற்றுச்சொல் ஆகுபெயராவதும் உண்டு.**

***(எ.டு)***

செங்கோல் = சிவப்புக் கோலைக் குறிக்காமல் செம்மையான ஆட்சியைக் குறிப்பதால் கோல் ஆகுபெயராயிற்று

**4. 260 சொற்களின் காலத்தொன்மையை சொற்களின் பொருட்பாட்டுப் படிமுறை களாலும் பன்மடித் திரிபுகளுக்குரிய காலவரையறைகளாலும் கண்டறியலாம்.**

***(எ.டு)***

1. பொருட்பாட்டுப் படிமுறை

(அ) ஊ – ஒ – கோ – கோல் = நீட்சி, நீண்ட கோல்.

(ஆ) கோல் = வேட்டைக் கோல். வேட்டைக் காலத்து மாந்தனின் கைக்கோல்.

(இ) கோல் = கால்நடை மேய்ப்பவன் கையிலுள்ள கோல்.

(ஈ) (செங்) கோல் = நாடாளும் அரசன் கையிலுள்ள கோல்.

(உ) கோல் – கோன் – கோ = அரசன்

2. காலம் வரையறுக்கும் பன்மடித்திரிபு

(அ) மூலத்தாய் மொழிச்சொல். மொழி தோன்றிய கி.மு 50,000 – 100,000 கால வரம்பைக் காட்டல்

(ஆ) வேட்டைக் காலத்துச் சொல் கி.மு. 10,000 – 50, 000

(இ) கால்நடை வளர்ப்புக் காலம் கி.மு. 10,000 – 5, 000

(ஈ) வேளாண்மைக் காலம் கி.மு. 5,000 – 3,000

(உ) உலகில் அரசாட்சிகள் தோன்றிய நாடாளும் நகரமைப்புக் காலம் கி.மு. 3,000
க்குப் பிறகு.

**4. 261 காட்சிப் பொருள்களின் அடியாக இக் கருத்தைச் சுமந்த பெயரும் வினையும் கூடிய கூட்டுச் சொல் புதிய தொழிற்பெயர், பண்புப்பெயர்களை உருவாக்கும்.**

***(எ.டு)***

1. அரவு + அணைத்தல் = பாம்புகளின் தழுவல்,
உள்ளத்தால் தழுவும் அன்பையும் பேணிக்
காத்தலையும் குறிப்பதாயிற்று.

2. நடுவு + நிற்றல் – நிறை கோலின் நாவு
இரு புறமும் சமனாய் நிற்குமாறு
நடுநிற்றல். இதைப்போல் பகை நட்பு
அயல் (நொதுமல்) என்னும் முத்திறத்தும்
முறைகோடாத ஒத்த நிலை நடுவு நிலை அல்லது
நடுநிலைய ஆயிற்று.

**4. 262 சில சொற்கள் அவற்றுக்குரிய கால வரம்புப் பொருளை வரையறுத்துக் காட்டும்.**

***(எ.டு)*** நூலுதல் – இழுத்தல்.

நூல் = 1. பஞ்சின் இழைகளில் இருந்து இழுத்துத் திரிக்கப்பட்ட நூலிழை

2. பஞ்சின் நூலிழை போன்று சொல்லிலிருந்து பொருள்தொடர்பறாத வகையில் ஒரு மொழியில் எழுதப்பட்ட ஏடு அல்லது ஏட்டுச்சுவடி. அச்சிடப்பட்ட புத்தகம். இதிலிருந்து நெசவுத் தொழில் தோன்றிய பிறகே இலக்கிய இலக்கண நூல் எழுதும் வழக்கம் தோன்றியிருக்கிறது எனும் காலவரம்பு புலனாகிறது.

**4. 263 தனிச் சொல்லன்றி சிறு தொடரும் ஆகுபெயர் பொருள் தரின் தொடராகு பெயர் எனப்படும்.**

*(எ.டு)*

இடுதேள் இடுதல் = பொய்த்தேள் இட்டு அச் சுறுத்தல். பொய்க் காரணங்காட்டி ஒருவனைக் கலங்கச் செய்வதைக் குறிப்பின் தொடராகு பெயராகும்.

**4. 264 ஒரு தொகைமொழி பல தொகைப் பொருள்கள் தரக்கூடுமாயினும் ஒன்றே பொருத்தமும் உண்மையும் பொதிந்ததாய் இருக்கும்.**

*(எ.டு)* உயிர்மெய்

இதனை உயிரும் மெய்யும் கூடியது என உம்மைத்தொகையாக்கலாம். உயிரை உடைய மெய் (உடம்பு) என இரண்டன் உருபும் பயனும் உடன் தொக்க தொகையாக்கலாம். இவற்றுள் இரண் டாவதே உண்மையும் பொருத்தமும் பொருந்திய தாகும். ஏனெனில் முன்னதாகிய உம்மைத் தொகையில் உயிர் தனியாகவும் உயிரின்றி இயங்காத உடம்பு, தனியாகவும் அவை ஒன்று சேர்வதற்குமுன் தனித்திருந்தன எனும் பொருட் குற்றம் ஏற்படும்.

**4. 260 அஃறிணைப் பாகுபாட்டில் இடம் பெற்ற பறவை விலங்கினங்களில் ஆண் பால் பெண்பால் இருப்பதை அவற்றிற்குரிய கடுவன் மந்தி போன்ற பெயர்ச் சொற் களே காட்டுகின்றன. எனினும் அவற் றுக்கு உயர்திணைக்குரிய ஆறாம் அறிவாகிய பகுத்தறிவின் செயற்பாடு காணப்படாமையின் உடல் தோற்றம் கருதிய பால் பாகுபாடு நோக்காது அஃறிணைக்குரிய வினைமுற்றுகளில் பாலீறு தராமல் எண்ணீறு மட்டும் தரப் படும். உயர்திணைப் பகுப்பில் பகுத்தறிவு வளரப் பெறாத குழந்தையும் அஃறிணைக் குரிய ஒன்றன்பால் ஈறே பெறும். வளர்ந்த மாந்தரும் ஆறறிவு பெறாவிடின் மாக்கள் எனப்படுவர்.**

*(எ.டு)*

மக்கள் – உயர்திணைக்குரிய ஆறறிவு பெற்றோர்

மாக்கள் – உயர்திணைக்குரிய ஆறறிவு பெறாதோர்

காளை – வந்தது

கற்றா – வந்தது

சேவல் – கூவியது

**4. 266 உடன் கொண்ட சொல்வளம் கடன் கொண்ட சொல்வளம் என்பவை அடிப்படையானவை.**

1. இயற்சொல், திரிசொல் என்பவை பொருட் பாட்டுத்திரிபு நெறிகளுக்கு அடித்தளமானவை.

*(எ.டு)*

அ) இயற்சொல் – மலை, கடல், நீர்

ஆ) திரிசொல் – மா, கனி

இயற்சொல்லும் திரிசொல்லும் ஒரு மொழிக்கு உடன் கொண்ட சொல் வளம் எனப்படும். எனவே இவை மொழிக்கு நிலைக்களமானவை. இவற்றின் பொருட்பாடுகள் வரையறுக்கப்பட்டவை.

2. திசைச் சொல் வட சொல் என்பவை இனமொழி அயன்மொழிக் கலவு நிலை காட்டுவன. கொடுந் தமிழ்ச் சொற்கள் வட்டார வழக்குகளாதலின் அவற்றைத் திசைச்சொல் மரபிலக்கணத்தால் வகைப்படுத்தியது ஏற்புடைத்தானது.

அ) எச்சரிக்கை (தெலுங்கு) – இனமொழி

சிக்குதல் (கன்னடம்) – இனமொழி

ஆ) கலைச்சாலை – (சமற்கிருதம்) கலாசாலை

இவை கடன்கொண்ட சொல்வளத்தைக் காட்டுவன. இவற்றின் பொருட்பாடுகள் உள்ளடங்கியவை

**4. 267 சொல் வடிவத் திரிபுகளை பொருட் பாட்டுக்கு ஏற்பக் கடன் தருமொழியில் வடிவமீட்டமைத்தால் எத்தகைய இயற் சொல் அல்லது திரிபுச்சொல்லிலிருந்து**

**இவை திரிந்தன என்பதைக் கண்டறிதல் கூடும்.**

*(எ.டு)*

அ) எழுதருகை > க. எழுதருகை > த. எச்சரிக்கை

த. செருகு> க. சிக்கு

ஆ) த. கலை > சமற். கலா

**4. 268 கெழுதகைப் பொதுச் சொல்லாகும் அண்மை விளிகள் ஒவ்வொரு கிளை மொழியிலும் வடிவ வேறுபாடு அடையும். அவை உடன் கொண்ட சொல்வளத் தொன்மையுடையவை.**

*(எ.டு)* வட கொங்கு வட்டார வழக்கு

அ) வா தாயி (ஆண்பால், பெண்பால் இருமைக்குப் பொதுவானவை அண்மைவிளி வாதாயப்பா, வா தாயம்மா.

**4. 269 அன்றாடு வழக்கில் இடம்பெறும் சொற்கள் உடன்கொண்ட சொல் வளத்தில் இடம்பெறும். இத்தகு சொற்கள் காலவோட்டத்தில் மொழிகள் தோறும் புலம்பெயர்ந்த வழித்தடங்களைக் காட்டும்**

*(எ.டு)*

இடம் எனப் பொருள்படும் 'தலை' எனும் தமிழ்ச் சொல் தலம் (Pkt.)/ > Skt.stal

அ) குழித்தலை. தலை > தனம் 2- தானம் (pali) >Skt. stana> Mhr. tana. Europ.>stand

Aryan/ Stam, Pakistan/ Afganistan, Uzbekistan (Russia)

அ) எழுத்துப் புணரியல்

தொகை மொழி போல காணப்படும் கூட்டுச் சொற்கள் பெயரெச்சப் பொருளில் விட்டிசைக்க நேர்ந்தால் புணர்ச்சித் திரிபுகள் பெறுவதில்லை. வினைத் தொகைகளிலும் புணர்ச்சித் திரிபு பெறுவதில்லை.

*(எ.டு)* நன்கொடை – விட்டிசைக்கும் பெயரெச்சப் பொருள் பொதிந்த கூட்டுச் சொல்

கொல்களிறு – வினைத்தொகை (விட்டிசைக்கும் கூட்டுச் சொல்)

இவை பொற்பேழை (பொன்+பேழை), நெற்குன்றம் (நெல் +குன்றம்) என்றாற்போல் வலித்தல் திரிபு பெறவில்லை. நல்ல கொடை எனும் பாங்கில் நன்கொடை விட்டிசைக்கின்றது. கொல்களிறு எனும் வினைத்தொகையும் விட்டிசைக்கின்றது. நற்கொடை, புன்புலம், மென்சாயல் என்பவற்றிலுள்ள (நன், புன், மெல்) நிலைமொழிகள் குறிப்புப் பெயரெச்சமாகவும் கொள்ளத்தக்கன. பெயரெச்சத் தொடர் விட்டிசைக்கும் பாங்குடையது. இவற்றை நற்கொடை, கொற்களிறு என எவரும் வழங்குவதில்லை.

'மரபார்ந்த இலக்கணக் கட்டமைப்பு. தாய்மொழியாளர்களின் மூளைமண்டல மரபணுவிலேயே பதிவுபெற்றுள்ளது என்பதால் தாய்மொழியாளர்கள் தம்மை அறியாமலேயே பிழைபட்ட வடிவங்களைத் தம் ஒலிப்பில் நீக்கிவிடுகின்றனர்,' என்னும் கருத்தை அறிஞர் சோம்சுகியின் கட்டுரைகளாலும் உய்த்துணர முடிகின்றது.

**4. 270 ஒரு வினையடிக் கருத்தின் பொருள் தாவலால் மற்றொரு கருத்துக்குரிய வினையடி தோன்றும்.**

*(எ.டு)*

தாள் = பயிர் வகைகளின் அடிப்பகுதி (தா = பருமை)

தாள் = அடியிலுள்ளது, பாதம்

தாள்கு – தாங்கு (அடிப்பகுதி மேற்பகுதியை தாங்கி நிற்கும் செயல் – எதிர் ஊன்றல், சுமை பொறுத்தல்)

சிந் – தாங்கு (கால்)

**4. 271 செய்வினை, தொழிற்பெயர் நெடு முதலாகி செயப்பாட்டு வினை தொழிற் பெயராகும். உயர்திணை ஆகுபெயராகவும் திரியும்.**

*(எ.டு)*

த. கொளல் – (செய்வினை தொழிற்பெயர்)

த. கோடலு = (செயப்பாட்டு வினை தொழிற்பெயர் >

தெ. கோடலு (மருமகள்)

**4. 272 ஒரு வினைச்சொல் இருவேறு பொருள்படுமாயின், அவ்வினையின் வினையடிக் கூட்டு ஈற்றின் சேர்ப்பால் பொருட்பாட்டு விரிவு பெற்றதாய் இருக்கும். வினையடிக்குத் தன்வினை யிலிருந்து பிறவினைப் பொருளுக்கும் விரியும் தன்மை உண்டு**

*(எ.டு)*

1. கொள் + து – கொட்டு (பற்றுதல் கடித்தல்) தேள் கொட்டும்

2. கொள் + து – கொட்டு (பெறச் செய்தல், சொரிதல்).

மழை கொட்டும், குப்பை கொட்டினான்.

தேள் கொட்டும் என்பதில் கொட்டுதல் வினை பற்றுதல் (தன்பாற் கொள்ளுதல்) பொருளில் தன் வினையாயிற்று. மழை கொட்டும் என்பதில் கொட்டுதல் வினை பற்றச் செய்தல் (தன்பாற் கொள்ளச் செய்தல்) பொருளில் பிறவினையாகப் பொருட்பாட்டு விரிவு பெற்றது.

**4. 273 வினையடிக் கூட்டு ஈறாக உகரம் வரும்போது ஏவலாகவும் துகரம் வரும் போது இறந்த கால எச்சமாகவும் மாறும்.**

*(எ.டு)*

கொள் + உ – கொளு – கொளுவு – கொள்ளு (ஏவல் வினையடி)

கொள் + து – கொண்டு (வினையெச்சம்) – ளகரம் ணகரமாகத் திரிந்ததால் துகரம் டுகரமாயிற்று.

**4. 274 ஏவல் வினையடியின் மெய்யீறு தன்வினைப் பொருள் தரினும் அது வல்லின மெய்யீறாகத் திரிந்து பிற வினைப் பொருள் தருவதோடு எதிர்ச் சொல்லும் ஆகிவிடும்.**

*(எ.டு)*

பிள் (பிளத்தல்) – பிடு (பிளக்கச்செய்தல்)

கொள் (பெறுதல்) – கொடு (பெறச் செய்தல், ஈதல்)

**4. 275 ஏவல் வினையடியொடு துகர ஈறு சேரும்போது வினையீறாகிய லகர மெய் 'ந்' ஆகத் திரிந்தால் வினையின் மென் மையும் 'த்' ஆகத் திரிந்தால் வினையின் வன்மை அல்லது கடுமையும் காட்டும்.**

*(எ.டு)*

1. கொல் + து – கொந்து, (மென்மையாக கொத்துதல்) புலால் துண்டுகளைக் கொந்தினான்)

2. கொல் + து – கொத்து (வன்மையாகக் கொத்துதல்) பாத்தி கொத்தினான்.

**4. 276 லகர மெய்யீற்று வேர்ச்சொல் வேர்ப்பொருள் வேறுபாட்டால் பொருட் பாட்டுத் திரிபுறும். திரிபுற்ற பொருட் பாட்டை நிலைபேறாக்க குறிப்பிட்ட ள, ழ எழுத்துத் திரிபுகளைத் தக்க வைத்துக் கொள்ளும்.**

*(எ.டு)*

அ) உல் (குத்தல் கருதுவேர்)

உல் – உள் – உளி (பிளப்பது, வெட்டுவது)

உள் – உளு (உட்குடைவால் கெட்டுப்போதல்)

உள் – உளை (உள்ளே ஆழ்த்தும் சேறு)

உள் – உழு (ஏர் உழுதல்)

உழை (பிளந்த கொம்புடைய மான்)

ஆ) உல் – (சுற்றுதல், உருளுதல், உருண்டையாதல் கருத்து வேர்)

உல் – உல – உலகு

உல – உலக்கை

உல் – உழு – உழுவை (திரண்டு வளர்ந்த புலி)

உழு – உழுந்து (திரண்டு உருண்ட வித்து)

**4. 277 செய்யும் என்னும் வாய்பாட்டு வினைமுற்று நிகழ்காலம் எதிர்காலம்**

**இரண்டிலும் பயின்று வரும்.**

*(எ.டு)* இன்று மழை பெய்யும்

நாளை மழை பெய்யும்

**4. 278 ஐம்பால் ஈறுகள் பெறாமல் இறந்தகால வினையெச்சம் போன்ற அமைப்பில் இறந்தகால வினைமுற்றாக வரும்சொல்லாட்சிகள் பழங்காலப் பயனிலை வடிவங்களுக்குச் சான்றாகும். இவை செய்து எனும் வாய்பாட்டு வினைமுற்று எனப்படும்.**

*(எ.டு)* அவன் செய்து (அவன் செய்தான்)

நான் கண்டு (நான் கண்டேன்)

**4. 279 குகர ஈறுபெற்ற ஏவல் வினைகள் நிகழ்கால வினைமுற்றுகளாகும்.**

*(எ.டு)* காண் – காண்கு

உண் – உண்கு

**4. 280 குகர ஈறுபெற்ற ஏவல் வினை யடிகள் பாலீறுகள் பெறும்போது தகர இடை நிலை பெற்று நிகழ்காலம் சுட்டும். இவை கிறு, கின்று எனப் பேச்சியல்பு வேறுபாடுகளால் பெற்ற திரிபுகள் இலக் கண வகையில் நிகழ்கால இடைநிலை களாக ஏற்றுக் கொள்ளப்படுவது தவ றாகும்.**

*(எ.டு)*

உண் – உண்கு + த் + ஆன் – உண்குதான் (தென்பாண்டி தூய தமிழ் வழக்கு)

உண்குதான் – உண்கிறான் (கொச்சை வழக்கு) உண்குதான் – உண்கிறான் எனத் திரிந்தது என இலக்கண அமைதி காட்டாமல் கிறு – இடைநிலை என்பது வழுவாகும். மேலும் உண்கு + உந்து + ஆன் – உண்குந்தான் என்பது உண்கின்றான் எனத் திரியும். பவணந்தியார் இந்தச் சொல் வரலாறு உணராமல் நன்னூலில் கிறு கின்று இடைநிலை ஏற்றது சரியன்று.

**4. 278 துணையீறுபெறாத ஏவல் வினையடிகள் செய்து என்னும் வாய்பாட்டு வடிவம் பெற்றபின் ஐம்பால் ஈறுகளை ஏற்று இறந்தகாலம் சுட்டுவனவாகும்.**

*(எ.டு)*

அழு – அழுது + ஆன் – அழுதான்

எழு – எழுந்து + ஆன் – எழுந்தான்

சிரி – சிரித்து + ஆன் – சிரித்தான்

இவற்றில் 'த' இறந்த காலம் காட்டும் இடைநிலை என்பதிலும் துகரம் இறந்த காலம் காட்டியது என்பதே பொருந்தும். அழுது, எழுந்து, சிரித்து என்பன செய்து என்னும் வாய்பாட்டு வினைமுற்றாக இருந்து பேச்சியல்பு திரிபுகளால் முற்றெச்சமாயிற்று. வந்து + அவன் – வந்த அவன் (வினைமுற்றுத் தொடர்) – வந்தான் எனத் தமிழில் திரிந்ததும் அவன் வந்து என்பதே வந்து அவன் என யாழ்ப்பாணத்தார் வழக்கில் நிலைபேறு பெற்றுள்ளதும் காண்க.

**4. 282 செய்து என்பது இலக்கண வகையால் இறந்த கால வினையெச்ச வாய்பாடாகக் கூறப்படினும் இகர ஈற்று வினையெச்சமும் செய்து வாய்பாட்டில் அடங்கும். உகர ஈற்றில் முடிவு பெறாததால் 'இன்' இறந்தகால இடைநிலையாகி, இன் அல்லது இ என வடிவு கொள்ளும்.**

*(எ.டு)*

ஆடு – ஆடி – ஆடினான்

சொல் (சொல்லு) சொல்லி – சொல்லினான்

எள் (என்று) – எள்ளி – எள்ளினான்

எண் (எண்ணு) – எண்ணி – எண்ணினான்

(போ) போகு – போகி – போகினான் – போயினான் – போனான்.

**4. 283 குறிலடுத்த லகர மெய்யீற்று ஏவல் வினையடிகள் செய்து எனும் வாய்பாட்**

**டுக்கு மாறும்போது துகர ஈறு றுகர ஈறாகத் திரிந்து ஐம்பால் ஈறுகள் ஏற்கும்.**

*(எ.டு)*

கல் – கல்து – கற்று + ஆன் – கற்றான்

செல் – செல்து – சென்று + ஆன் – சென்றான்

நில் – நில்து – நின்று + ஆன் – நின்றான்

செல்து, நில்து – நின்று + ஆன் – நின்றான்

செல்து நில்து என்பன மறைந்துபோன தமிழ்ச் சொல்லாட்சிகள். இவற்றில் கல் – கல்து, நில் – நில்து (நின்று) எனக் கன்னடத்தில் வழங்கி வருகின்றன.

**4. 284 குறிலடுத்த ளகர மெய்யீற்று ஏவல் வினையடிகள் செய்து வாய்ப்பாட்டுக்கு மாறும்போது துகர ஈறு, டுகர ஈறாக முற்றெச்சப் பொருளில் இறந்தகாலம் சுட்டி ஐம்பால் ஈறுகளை ஏற்கும்.**

*(எ.டு)*

உண் – உண் + து – உண்டு + ஆன் – உண்டான்

கேள் – கேள் + து – கேட்டு + ஆன் – கேட்டான்

**4. 285 குறிலடுத்த லகர மெய்யீற்று ஏவல் வினையடி ஈற்று மெய் இரட்டித்து உகர ஈறு பெற்ற ஏவலாகிப் பின்னர் செய்து என்னும் வாய்பாட்டில் இகர ஈற்றுத் திரிபு எய்தி 'ன்' சாரியை பெற்று இறந்த காலம் சுட்டி ஐம்பால் ஈறு ஏற்கும். லகர மெய்யிரடிப்பு னகர மெய்யிரட்டிப்பாகத் திரியும். பொருட்பாட்டில் வேறுபடாது.**

*(எ.டு)* சொல் – சொல்லு – சொல்லி + ன் +ஆன் – சொல்லினான்

சொல் – சொன்னு – சொன்னி + ன் + ஆன் – சொன்னினான் – சொன்னான்.

இகரம் இறந்த காலம் சுட்டும் ஈறாவதன்றி 'ன்' காலம் சுட்டும் ஈறாகாது. ஆதலின் 'ன்' எழுத்துச் சாரியை எனப்படும்.

சொன்னு என்னும் பேச்சுத் திரிபு (பழைய உலக வழக்கு) வடிவம் தமிழில் மறைந்தது என்னும் சித்தியக் குடும்ப மொழிகள் பழந்தமிழ் (முந்துதிரவிடம்) மொழியிலிருந்து பிரிவதற்கு முன்புவரை சொன்னு எனும் வட்டார வழக்கு நிலைத்திருந்ததால் சித்தியக்குடும்பத்து பின்னிசு மொழியில் இன்றும் <u>சொன்னு</u> எனும் ஏவல் வினை <u>சனோ</u> என வழங்கி வருகிறது.

**4. 286 தனிக்குறிலடுத்த கு, டு, று ஈற்று ஏவல் வினையடிகள் க்கு, ட்டு, ற்று என ஈறு இரட்டித்து செய்து வாய்பாட்டு இறந்தகால எச்சமாக மாறி ஐம்பால் ஈறு ஏற்கும்.**

*(எ.டு)* புகு – புக்கு + ஆன் – புக்கான்

நடு – நட்டு + ஆன் – நட்டான்

பெறு – பெற்று + ஆன் – பெற்றான்

புக்கான் என்பதில் த், ட், ற், இன் எனும் இடை நிலைகள் எவையும் இல்லை. எனவே இறந்தகாலம் காட்டுவது செய்து எனும் வாய்பாட்டு உள்ளார்ந்த இலக்கணக் கட்டமைப்பே என்பது புலனாகும்.

**4. 287 தனிக் குறிலடுத்து வரும் உகரம் ஊர்ந்த வல்லெழுத்து ஈற்று ஏவல் வினை யடிகள் ஈற்றுமெய் இரட்டித்து செய்து எனும் வாய்பாட்டு வடிவம் எய்தும். வட்டார வழக்கில் ஏற்படும் பேச்சியல்பு மாற்றத்தால் ஈற்றுமெய் இரட்டிக்காமல் இறந்தகால ஈறாகச் சேரும் துகரம் இரட்டிக்கும். யகர மெய்யீற்று ஏவல் இவ்வடிவம் கொள்ளும்.**

*(எ.டு)* விடு – விட்டு + ஆன் – விட்டான்

விடு – விடுத்து – ஆன்– விடுத்தான்

மிகு – மிக்கு + ஆன் – மிக்கான்

மிகு – மிகுத்து + ஆன் – மிகுத்தான்

உய் – உய்த்து + ஆன் – உய்த்தான்

தொடு – தொட்டு + ஆன் – தொட்டான்

தொடு – தொடுத்து + ஆன் – தொடுத்தான்

(அம்பு தொடுத்தான்).

**4. 288 வேர்ச்சொல் பொருள் வேறுபடாத போது அதனடிப் பிறந்த பெயர்ச்சொல் ஈறு மென்றொடர் அல்லது வன்றொடர் குற்றுகரமாயினும் பொருள் திரியாது.**

*(எ.டு)* நள் + பு – நண்பு

நள் + பு – நட்பு

கொள் + கு – கொண்கு

கொள் + கு – கொட்கு

**4. 289 குறிலடுத்த லகர மெய்யீற்று வினையடியில் லகரமெய் றகர மெய்யாகத் திரிந்து பிறவினையடியாக மாறிச் செயப்படுபொருள் குன்றிய வினையைச் செயப்படுபொருள் குன்றா வினையாக மாற்றும்.**

*(எ.டு)* நில் – நிறு (நிறுவு, நிறுத்து)

குல் – குறு (குறுதல், இடித்தல், குற்றுதல்)

**4. 290 தனிக் குறிலடுத்த முற்றியலுகர செயப்படுபொருள் குன்றா வினையடிகள் இடையில் ஒற்று இரட்டிப்பினும் பொருள் வேறுபடுவதில்லை.**

*(எ.டு)* விடு – விட்டு

**4. 291 தனிக்குறில் சார்ந்த முற்றுகர வல்லின ஈறுகள் ஒற்று இரட்டித்து இறந்தகால வினையெச்சமாகும்.**

*(எ.டு)* கொடு – கொடுத்து

தடு – தடுத்து

அறு – அறுத்தான்

பகு – பகுத்தான்

**4.292 தனிக்குறிலடுத்த முற்றுகர வல்லின ஈறுகள் இறந்த காலத்தில் ஒற்று இரட்டாத போது இறந்தகாலத் தகர மெய் இடை நிலை பெற்றுச் செயப்படுபொருள் குன்றா வினையாக வரும்.**

*(எ.டு)* பெறு – பெற்று

உறு – உற்று

நடு – நட்டு

**4. 293 வேற்றுத் தொகை பொருட்பாடுகள் வகைப்படுத்தப்பட்ட வேற்றுமைகளுக்கு உரிய உருபுகளால் மட்டுமன்றி பொருட் பாட்டுப் பொருத்தத்தாலும் வகைப் படுத்தப்படும்.**

*(எ.டு)*

1. அரசு பேருந்து – நான்கன்தொகை (வலி மிகாதாயிற்று)

– அரசுக்கு (என அமைந்த) பேருந்து

2. அரசுப் பேருந்து – மூன்றன் உருபும் பயனும் உடன் தொக்கத் தொகை (வலி மிக்கது. அரசால் நடத்தப்படும் பேருந்து.

3. அரசுப் பேருந்து – ஆறன் தொகை (வலி மிக்கது) அரசினது பேருந்து. மேற்கண்டமூன்று தொகை மொழிகளில் நுண்ணிய பொருள் வேறுபடுகள் உள்ளன.

1. அரசு பேருந்து எனின் அரசுக்கே உரியது எனவும் (அதிகாரிகள் பயன்படுத்துவது) ஏனையோர் பயன்பாட்டுக்கு உரியதன்று எனவும் பொருள்படும்.

2. அரசுப் பேருந்து – அரசால் நடத்தப்படுவது எனும் பொருளில் ஆளப்படும் போது பொதுமக்கள் பயன்பாட்டுக்கு உரியது எனப் பொருள்படும்.

3. அரசுப் பேருந்து – அரசினுடைய பேருந்து எனும் பொருளில் ஆளப்படும்போது, அரசின் அறிவிப்புக்கு ஏற்ப அதிகாரிகளுக்கு அல்லது பொது மக்களுக்குப் பயன்படுத்துவது எனப்பொருள்படும்.

மூன்றாம் நான்காம் ஆறாம் வேற்றுமைத் தொகைகளில் பயன்படுத்தப்படும் இத்தொகை மொழி பயன்பாட்டுப் பாங்கில் குறிப்பிட்ட ஒரு தொகைப்

பொருளில் மட்டும் புடை பெயரும்.

**4. 294 தொடரில் உயர்திணைப் பெயர்கள் வரின் இரண்டாம் நான்காம் வேற்றுமை உருபுகள் தொகுவதில்லை. அஃறிணைப் பெயர்கள் வரின் தொகுகின்றன.**

*(எ.டு)* 1) முருகன் கந்தனை அழைத்தான் (உயர்திணை)

2) முருகன் மரம் வெட்டினான் (அஃறிணை)

பூனை எலி பிடித்தது

**4. 295 இரண்டன் தொகையிலும் நான்கன் தொகையிலும் வருமொழி முதலில் வல்லெழுத்துவரின் குற்றியலுகரம் இரட்டுவதில்லை. வல்லெழுத்தும் மிகுவதில்லை.**

<u>இரட்டாதன:</u>

நாடு கிழவோன்

காடுகிழாள்

முரசு கட்டில்

அரசுபேருந்து

தமிழ்நாடு அரசு

பரிசு சீட்டு

**4.296 பண்புத் தொகைகளிலும் அனைத்து உருபும் பயனும் உடன்தொக்க தொகைகளிலும் நெடில், உயிர்த்தொடர் குற்றுகரங்கள் இரட்டுவதோடு புணர் நிலையில் வல்லெழுத்து மிகும்.**

1. கூட்டுப்படையல், விறகுக் கட்டை – (பண்புத் தொகை)

2. மலர்த் தொடையல் (மலர்களைத் தொடுத்த மாலை)

3. ஏட்டுச்சுவடி (ஏடுகளால் ஆன தாள்)

4. அரசுப் பேருந்து (அரசால் நடத்தப்படும் பேருந்து)

5. ஏட்டுப்படிப்பு (ஏட்டின் வாயிலாகப் படிக்கும் படிப்பு)

6. மாட்டுக் கொம்பு (மாட்டினது கொம்பு)

7. காட்டுப் புளி – காட்டில் உள்ள புளியமரம்

8. வீட்டுச் சமையல் – வீட்டில் செய்த சமையல்

9. தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனம் – தமிழ் நாட்டில் உள்ள பாடநூல் நிறுவனம்.

**4. 297 மொழி தோன்றிய தொடக்க காலத்திலேயே சொல் தன்வடிவிலும் உணர்த்தும் பொருளிலும் நிலைபேறு பெற்று தொன்மை வாய்ந்த இயன்மொழித் தன்மையைத் தக்கவைத்துக் கொள்கிறது.**

*(எ.டு)*

குள் – குளம் (வளைதற் கருத்து)

குளியம் – குளிகை (உருண்டை மாத்திரை)

குழலுதல் – சுருளுதல்

குயம் – வளைந்த அரிவாள்

குரங்கு – வளைந்த முதுகுடைய விலங்கு

குரவை – வட்டமாய் நின்று பாடியாடும் கூத்து

குருகு – கழுத்து வளைந்த பறவை, வளையில்

**4. 298 திசைச் சொல், கிளைமொழி, இனமொழி ஆகியவற்றில் வடிவு திரியும் சொற்களும் பொருட்பாட்டு விரிவுப் படி நிலைகளில் ஒரு சீர்மை பெற்றிருக்கும்.**

*(எ.டு)*

**4. 299 பெற்றோர் பெயர், பல்வேறு உணர்ச்சிக் குறிப்பு இடைச் சொல்லாகும்.**

*(எ.டு)*

த. அக்கை – அக்கா, அக்கோ, அகோ

த. ஐயன் – ஐயோ

த. அத்தன் – அத்தோ, அந்தோ

அத்தன் – அச்சன் – அச்சோ

த. அம்மை – அம்மோ – அம்மயோ

த. அன்னை – அன்னோ, அன்னே

**4. 300 வினையடியின் வேர்ப்பொருள் பல்வேறு படி நிலைப்பொருள்களைத் தன்னுள் பொதிந்து வைத்திருப்பதால், படிநிலைப் பொருள்களில் குறிப்பிட்ட எப்பொருளில் ஆளப்படுகிறது என்பது தொடராட்சியில் புலப்படும்.**

*(எ.டு)*

இல் – குத்தல் கருத்து வேர். இது குத்தித் துளையிடும் கருத்து, குத்தி நெருக்கும் கருத்து, குத்தி ஒடிக்கும் கருத்து ஆகிய படிநிலைப் பொருள்களில் புடைபெயரும்.

இல் – இறு = இறுக்குதல், நெருங்குதல்

இல் – இறு – இறுகு. இறு – இறகு (நெருங்கி யிருப்பது)

இல் – இறு – இறை = உறுதிப்பட்டு நிற்றல் (கடவுள்)

இல் – இறு = ஒடிதல், முறிதல்

இறு – இற. தெ. இறுகு = ஒடிதல்

இல் – இரு. குத்தல் பொருள் ரகர இறுதி பெறும் போது வினையின்மென்மை சுட்டி குந்தல் (உட்கார்தல்) பொருள் தந்தது. இரு = இரை (வாயில் இருத்துவது)

ஏவல் ஈற்று ரகரம் மெல்வினையையும் றகரம் வல்வினையையும் உணர்த்தும் என்பது நெறிமுறை

**4. 301 ரகர ஈறு செயலின் மென்மையையும் றகர ஈறு செயலின் வன்மையையும் உணர்த்துவது போன்று, ளகர ஈறு செயலின் மென்மையையும் ழகர ஈறு செயலின் வன்மையையும் உணர்த்தும்**

*(எ.டு)*

இல் – இள் – இளை – இளைத்தல், இளைப்பு (மென்மையாய் தேய்தல்)

இல் – இள் – இழ் – இழை – இழைத்தல் (வன்மையாய் தேய்த்தல்)

அல் – அள் – அளை (மெல்ல இளகும் சேற்று மண் மென்மையாய் இருக்கும் அளித்தரை)

அல் – அள் – அழ் – அழை (விரைந்து வந்து சேரவிளிக்கும் விளி)

**4. 302 ளகர ழகர ஈற்று ஏவல் வினைகள் தம் மென்மை வன்மைப் பொருட்பாடு களின் அடிப்படையில் எதிர்மறைப் பொருளனவாகவும் மாறும். மென்மையாய் நெருங்குதல் அன்பையும் வன்மையாய் நெருங்குதல் அழிம்பையும் காட்டும்.**

*(எ.டு)*

அள் – அளி (தருதல், நலன் சேர்த்தல்)

அள் – அழி (கெடுதல். தீங்குசெய்தல்)

**4. 303 ளகர ஈற்று ஏவல் ணகர ஈற்று ஏவலாக மாறும் போது ளகர ஈற்று ஏவலின் செயற்பாடு குறிப்பிட்ட இடத்தில் செயற் படும் பாங்கை உணர்த்தும்.**

*(எ.டு)*

உள் – உண் (உள் = வைத்தல், இருத்தல். உண் = குறிப்பிட்ட இடத்தில் (வாயில்) வைத்தல்)

கள் – கண் (கள் – சேர்த்தல், கட்டுதல். கண் – குறிப்பிட்ட இடத்தில் (கண்ணில் ஒரு காட்சியைச் சேர்த்தல். கண் = சேர்ப்பிடம்)

கண் – கண்ணுதல் = மனதில் நினைத்தல், கருத்து களைச் சேர்த்தல்.

உண் – ஊண், கண் – காண் என்பன முதனிலை திரிந்த தொழிற் பெயர்கள். தொழிற் பெயர்கள் மீண்டும் ஏவல் வினையாதல் முன்பே இல் காட்டப் பட்டுள்ளது.

**4.304 முதனிலை நீண்ட தொழிற்பெயரான வினையடிகள் துகர ஈறு பெற்றுப் பிற வினையாகும்.**

*(எ.டு)*

உண் – ஊண் + து – ஊட்டு

கண் – காண் + து – காட்டு

**4. 305 பிற வினைகள் பல்வேறு ஈறுகள் பெற்றுப் பெயர்ச் சொற்களாகும்.**

*(எ.டு)*

காட்டு – காட்சி, காட்டி

ஊட்டு –ஊட்டம் (க. ஊட்ட = உணவு)

**4. 306 சொற்றிரிபுகள் பொருட்பாடு நோக்கி வடிவ மீட்டமைப்பு செய்யப்பட வேண்டும்.**

*(எ.டு)*

காண்பி > காமி (கொ.வ)

இரண்டும் ஈரசைச் சொற்களாயினும் பேச்சு வழக்கில் 3.5 மாத்திரைச் சொல் 3 மாத்திரைச் சொல்லாகக் குறுகியுள்ளது.

**4. 307 ளகர மெய்யீற்று வினையடிச் சொல் ணகர மெய்யீறாகத் திரியும்போதும் உகர சேர்ப்பின் போதும் நுண்பொருள் வேறு பாடு காட்டும்.**

*(எ.டு)*

ஆள் – ஆண்மை (ஆளும் திறன் – வன்மை)

ஆள் – ஆளுமை (ஆளும் திறன் – முதிர்ச்சி)

**4. 308 எதிர்மறைப் பெயரடிகள் பொருட் பாட்டு நோக்கில் வேரடி வேறுபாடு கொண்டவை.**

*(எ.டு)*

1. உல் (வெப்பம்) – அல் – எல் = பகல்

'எல்லையும் இரவும் காணாய்' (புறநா. 7. 7)

2. இல் (கருமை) – எல் = இரவு

'எல்லி வருநர் களவிற்கு' (குறுந். 47:3)

<u>பொருளணியல் நெறிமுறை</u>

**4. 309 தன்வினைப் பொருளிலும் பிற வினைப் பொருளிலும் விரிந்து பெயர் படிவம் பெறும் அடியின் ஒரு சீரான ஈறுறேற்கும்.**

விடு – விடை (விடுப்பது) 'ஐ' விடப்பட்ட ஒன்று எனச் செயப்படு பொருளுமாம்.

< வீடு (விடுவது) வீடினான் – வீட்டினான்

விடுத்தான் (எய்வது) – விடுப்பு – இடை வெளிக்குரியது. விடுவு – இடைவெளி

விடு – விடல் (பிளப்பு, பிளவு, அகல விரிதல், விடுத்தல்

விடலை – (விடலைப் பருவம்) விடைகோழி

< வீடு (அகன்ற இடமுடையது)

அறு – அறை (அறுப்பது) அறுக்கப்பட்டது

< ஆறு (அறுவது)

இறு – இறை (இறுப்பது)

< இறு (இறுவது, ஈறு)

பறு – பறை (பகுப்பது, பிரிப்பது,செய்திகள் பரப்புவது)

< பாறு (பறுவது, பிரிவது) பாறை (அகன்றது)

**4.310 உகரம், இகரம், அகரம், ஐகாரம் ஆகியவை வினையடி ஈறாகும்போது முறையே எதிரெதிர் திசை இயக்க நகர்வுப் பொருளில் வினையாகும் (நாற்றிசை மயக்கம் காட்டும்)**

*(எ.டு)* இழு – இழி – இழை – இழ.

இழு – பள்ளத்திலிருப்பது கீழிருந்து மேலேறல்

(மேட்டிலிருப்பவர்கள் இழுத்தல்)

இழி – மேலிருந்து கீழிறங்குதல்

இழை – மென்மெலப் பின்னுக்கிழுத்தல், முறுக்கி யிழுத்தல்,

முறுக்கல்பட்ட நூல்.

இழ – பின்னே கழிந்ததாக முன்நோக்கிச்செல்லல்.

**4.311 வினையடியின் வேர்ப்பொருள் வேறு படும் போதெல்லாம் பொருட்பாட்டு விரிவும் தனிக் கிளைகளாக விரியும்.**

படு 1 > படை (படுப்பது)

பாடு (படுவது) படல் (படவ)

படு 2 > படை (மோது, தாக்கு, தாக்கும் கருவி, (கத்தி)

பாடு (தாக்கும் துன்பம்) உழைப்பு

படு 3 > படை (திடுமெனத் தோன்றுவது) நோய்

பாடு (கெட்டது)

படு 4 > பட – படல் – படர் (விரிவது, பரவுவது)

பாடை (விரிந்தது, அகன்றது)

**4. 312 'அம்' என்னும் பெயரீறு எழுவாயையும் குறிக்கலாம், செயப்படுபொருளையும் குறிக்கலாம். (அது எனும் சுட்டுப் பொருள் அம் சொல்லீற்றுச் சுட்டாகும் என்பது ஆயத்தக்கது).**

*(எ.டு)*

உள்ளம் –உள்ளும் கருவி (எழுவாய்)

எண்ணம் – எண்ணப்படும் கருத்து (செயப்படு பொருள்)

**4.313 குறிலொற்று அடி வினையுடன் உகரம் சேரின் ஏவல் பொருள் தரும்**

*(எ.டு)*

உள் – உளு (உட்செல்) உட்புகுத்து

புள் – புளு – புழு

குள் – குளு – குழு (கூடுவது)

**4.314 செயலுறுதலாகிய தன்வினையிலிருந்து தோன்றும் செயற்படுதலாகிய பிற வினையும் தன்வினையாகி மீண்டும் ஈறு பெற்றுப் பிற வினையாகும்.**

*(எ.டு)*

உல் – உறு – உறுஞ் (உறிஞ)

பொல் – பொரு – பொருந் – பொருநு

(பிறவினைச்சொல் தன்வினைப் பொருள்படும்போது அது மற்றொரு பிறவினைச் சொல் தோன்ற இடமளித்திருக்கிறது என்று பொருள்)

**4.315 பெண்பால் பெயர்ச்சொற்களில் 'அள்' ஈறு பொருட்பாட்டுத் திரிபு விளைக்கும் சூழலில் 'தி' (அத்தி, இத்தி) ஈறு சேர்க்கப்படும். அது பேச்சு வழக்கில் 'சி' (அச்சி, இச்சி) எனத் திரியும்.**

*(எ.டு)*

ஆ. பா: ஒருவன், உழவன், வாணியன்

பெ. பா: ஒருத்தி, உழத்தி, வாணித்தி, வாணிச்சி.

ஒருவன் என்பதற்கு ஒருவள் என 'அள்' ஈறு சேர்த்தால் (ஒருவு – நீங்கு) விட்டுப் பிரிபவள் என வேறுபொருள் தரும். உழவள் என 'அள்' ஈறு சேர்த்தால் நிலம் உழுபவள் எனப் பொருள் தரும். நிலம் உழுதல் ஆண்பாற்கே உரிய வினையாதலின் பெண்பால் சுட்ட 'தி' ஈறு சேர்த்து உழத்தி என வழங்க நேர்ந்தது. மகளிர்க்குக் கடும் உழைப்பு தவிர்க்கப் பட்டது எனத் தெரிகிறது.

**4.316 'அள் ஈறு பெறாத பெண்பாற்சொல் இகர ஈறு அல்லது அத்து' சாரியை ஊர்ந்த இகர ஈறு பெறும். பேச்சு வழக்கில் 'அத்து' சாரியை அச்சு, இச்சு எனத் திரியும்.**

*(எ.டு)*

மனை+ இ – மனைவி

மறம் + அத்து + இ – மறத்தி

உழவு + அத்து + இ – உழத்தி

தமிழ் + அத்து + இ – தமிழத்தி, தமிழச்சி

அதிகாரம் + அத்து + இ – அதிகாரத்தி – அதிகாரிச்சி

**4.317 பால்பகா அஃறிணை போன்று பால் பகா உயர்திணைச் சொற்கள் ஆண்பால் பெண்பால் வேறுபாடு காட்டாமல் புதிய நாகரிகக் காலச் சொல்லாட்சிகளாக வழங்கும்.**

*(எ.டு)*

கல்லூரி முதல்வர், வட்டாட்சியர், கல்வி அதிகாரி. ஆங்கிலத்தில் chairman என்பதை chair person என மாற்றிக் கொள்வதை ஒப்பு நோக்குக.

**4.318 ஆகுபெயர்கள் தன்பொருள் அல்லாத ஒன்றுக்கு ஏதேனும் ஒரு சார் தொடர்பு கருதி தாவுவதால் பொருள் தாவலுக்கு (Semantic shift) எடுத்துக் காட்டாகும். எத்தகைய தொடர்பு கருதப் படுகிறதோ அத்தொடர்புக்கேற்ற வகை யில் ஆகுபெயரின் பெயர் அமையும்.**

*(எ.டு)*

1. தாமரை சூடினாள் – முதலாகு (பொருளாகு) பெயர். தாமரைக் கொடியின் பெயர் அதன் பூவைக் குறித்தது.

2. வெற்றிலை நட்டான் – சினையாகு பெயர். இலையின் பெயர் வெற்றிலையின் கொடியைக் குறித்தது.

3. கூறை உடுத்தாள் – இடவாகுபெயர். கூறை நாட்டில் நெய்த புடவை. ஊரின் பெயர் புடவையைக் குறித்தது.

4. கோடை விளைந்தது – காலவாகு பெயர். கோடை காலத்தின் பெயர் அக்காலத்தில் விளைந்த நெல்லைக் குறித்தது.

5. வீட்டிற்கு வெள்ளை அடித்தான் – குணவாகு பெயர். வெள்ளை அடித்தல் என்பது சுண்ணாம்பைக் குறித்தது.

6. பொங்கல் உண்டான் – தொழிலாகுபெயர்

பொங்குதலாகிய தொழிலைக் குறிக்காமல் பொங்கப்பட்ட சோற்றைக் குறித்தது.

**4. 319 எம்மொழியிலும் காலத்தால் பின்னோக்கிச் சொற்களை வடிவ மீட்ட மைக்கும் போது மொழியியலாரைப் போன்று குடும்பமொழிகளின் சொற்கட்டு களுக்குப் பொதுவான வடிவினை உன் னித்து மீட்டமைக்காமல் பொருளால் தெளிவு தரும் சொற்பாங்கு வரை சொன் மீட்டமைப்பு செய்தல் வேண்டும்.**

*(எ.டு)*

நேற்று – நெருநற்று – நெருநல் – நென்னல்

நேற்று எனும் சொல்லுக்கு நென்னல் எனும் சொல்லும் நெருநற்று எனும் சொல்லும் தமிழில் இலக்கிய ஆட்சி பெற்றுள்ளன. கன்னட தெலுங்கு மொழிகளில் நென்னெ, நென்ன எனும் சொற்கள் ஆட்சி பெற்றுள்ளன.

நென்னல் எனும் திருந்திய வடிவம் தமிழ் தவிர்த்த திரவிட மொழிகளில் இல்லை. மேற்கண்டவற்றுள் நெருநல் என்பதே பழஞ்சொல். இதனைப் பொருளால் மேலும் மீட்டமைக்கும்போது நெருநாள் – நெருங்கிய முதல் நாள் எனும் செவ்விய வடிவம் பெறப்படுகிறது. எனவே நெருநாள் என்பதை முந்துதமிழ் வடிவம் (Proto- Dravidian) என மீட்டமைக்க வேண்டும்.

பழந்தமிழில் இட வழக்காக வழக்கூன்றிய வினை முற்றுகளில் சென்றான் + து – சென்றான்று (சென்றான்) எனும் இறந்தகால வினைமுற்று காணப்படுகிறது. இது வழூஉ ஒப்புமையாக்கமாக (false analogy) பெயர்ச் சொல்லிலும் சேர்ந்தது. முருகன் + து – முருகன்று – முருகண்டு – முருகடு எனத் திரியலாயிற்று.

தெலுங்கில் திசைச்சொல்லாகத் திரிபுற்ற அவன் + து. அவன்று – வான்று – வாண்டு – வாடு எனும் முறையான திரிபை உள்ளபடி மீட்டமைக்காமல் பேராசிரியர் பத்திரிராசு கிருட்டிண மூர்த்தி Telugu verbal bases எனும் நூலில் அவன்த் (avant) என்பதை

முந்து திரவிடம் எனச் சுட்டியிருப்பது பொருட்பாடு தழுவிய மீட்டமைப்பு அன்மையின் ஏற்கத்தக்கதன்று.

**4. 320 குறிலிணையடுத்த லகர மெய்யீற்றுத் தன் வினைகள் வன்றொடர் குற்றுகர ஈற்றனவாய் மாறிப் பிறவினையாகும்.**

*(எ.டு)* சுழல் – சுழல் + து – சுழற்று

கழல் – கழல் + து – கழற்று

**4. 321 குறிலிணை வினையடிகள் சொல் லாக்க ஈறுகள் பெற்றுப் பொருட்பாட்டு விரிவடையும்போது வினையே பெயரடியா கியும் அதுவே பின்னர் வினையடியாகியும் பொருள் வேறுபட்ட சொல்வளம் பெருக்கும்.**

*(எ.டு)* இடு – இடல் – இடர் – இடறு

அடு – அடல் – அடர்

முரு – முர – முரள் – முரண்

அரு – அர – அரள் – அரண்

**4. 322 குகரத்துணையீறு பெற்ற குறி லிணை வினையடிகள் இடையில் உம் ஈறு மிகுந்தும் மிகாதும் தன்வினையாகவும் ஈற்றுக் குற்றுகரம் இரட்டித்துப் பிற வினை யாகவும் மாறும்.**

*(எ.டு)*

உரு – உருகு – உருக்கு

ஒரு – ஒரும் – ஒருங்கு – ஒருக்கு

நெரு – நெரும் – நெருங்கு – நெருக்கு

**4. 323 உலக வழக்கில் ளகர ழகர வேறு பாடின்றி ஒரே பொருளில் வழங்கும் சொல்லாட்சிகளும் நுண் பொருள் வேறு பாடு கொண்டவையாகும்.**

*(எ.டு)*

இளிவு – இழிவு

உளறு – உழறு

குளறு – குழறு

பவளம் – பவழம்

சுளி – சுழி

துளாய் – துழாய்

துளவம்– துழாய்

துளசி – துழாய்

**4. 324 ஒன்றுக்கு மேற்பட்ட பெயர்ச் சொற்கள் ஒரு தன்மைப்பட்டு எழுவாயாக வரின் தொகை எழுவாய் எனப்படும்.**

*(எ.டு)*

சேர சோழ பாண்டியர் வந்தனர்

**4. 325 திரிபுற்ற கொச்சை மொழிச் சொல் லாட்சிகளை வடிவமீட்டமைத்துச் செஞ் சொற்களாக மாற்றிக் கொண்டால் பொருட்புலப்பாடு செவ்விதாகும்.**

*(எ.டு)*

சாக்கடை – சாய்கடை

ஒண்டியாய் – ஒன்றியாய்

கண்ணாம்பூச்சி – கண்ணாம் பொத்தி

சாயங்காலம் – சாயுங்காலம்

**4. 326 மரூஉச் சொற்களைப் பொருட் பாட்டுக்காக மீட்டமைத்தாலும் பண்டு தொட்டே வழக்கூன்றியதால் வழுவமைதி யாகக் கொள்ளத் தகும்.**

*(எ.டு)*

அருமருந்தன்ன – அருமந்த

காமம் மருவு – காமர்

காடுகிழாள் – காடுகாள் (காளி)

செய்கு அப்துல் காதர் – சீதக்காதி

**4. 327 ளகர மெய்யீற்று வினையடிகள்**

**பேச்சுவழக்குத் திரியாமல் ழகர மெய்யாகத் திரிவது வழுவமைதியாகக் கொள்ளப் படும்.**

*(எ.டு)*

ஆள்வார் – ஆழ்வார்

கொள்நன் – கொழுநன்

**4.328 பழஞ்சொல்லின் உட்பொருள் பேச்சு வழக்கில் பொருள் புலப்படாததால் உருவாக்கப்படும் மிகைபடுசொற்களில் மிகைச் சொல் நீக்கப்பட்டு செஞ்சொல் வடிவே ஏற்கப் படும்.**

*(எ.டு)*

அரைஞாண் கயிறு – அரைஞாண்

பச்சைத் தண்ணீர் – தண்ணீர்

வெந்தண்ணீர் – வெந்நீர்

மாங்காய் பழம் – மாம்பழம்

மார் யாப்பு – மாராப்பு

**4. 329 வினையடியே தொழிற் பெயராகவும் பொருட்பெயராகவும் பண்புப் பெயராகவும் மாறும்.**

*(எ.டு)*

த. விதிர் – விதிர்த்தல் – விதிர்ப்பு

விதிர் – வெதிர் (காற்றில் அசையும் – நடுங்கும்) மூங்கில்

விதிர் – வெதிர் – வெதிர்ப்பு (அச்சம் – நடுக்கம்)

க. பெதரு (அஞ்சுதல்

விதிர் – வெதிர் – வெரு (அச்சம்)

தெ. வெரிச்சுட (அஞ்சுதல்)

**4.330 கடன் பெற்ற சொற்களில் பொருட் பாடுகள் உள்ளடங்கியிருக்கும். அவற்றைக் கடன் தந்த மொழியில் மீட்டமைத்தால் எத்தகைய இயற்சொல் அல்லது திரி சொல்லிலிருந்து அவை திரிந்தன எனக் கண்டறியக்கூடும்.**

*(எ.டு)*

த.எழுதருகை > க. எழ் தருகெ தெ. எச்சரிக்க > த. எச்சரிக்கை

த. செருகு > தெ. செக்கு > க. சிக்கு

த. கலை > சமற். – கலா

**4. 331 அன்றாடு வழக்கில் இடம்பெறும் அடிப்படைச் சொற்கள் உடன் கொண்ட சொல் வளத்தில் அடங்கும். இவை காலப் போக்கில் பல்வேறு மொழிகளில் புலம் பெயர்ந்த வழித் தடங்களைக் காட்டும்.**

*(எ.டு)*

த. தலை (இடம் எனப் பொருள்படும் சொல்)

த. குழித்தலை > தலம் > Pkt. tala > மிவ. வயடய தனம் > Pali.tana> Skt. stāna.

மரா. தானா

**4. 332 தனி மாந்தரின் பேச்சொலித் திரிபுகள் வட்டார வழக்குகளையும் கிளை மொழிகளையும் உருவாக்கினாலும் மரபு வழி சொற்பொருள் வந்த, வினைச் சொற் களிலும் அன்றாடு வழக்கு அடிப்படைச் சொற்களிலும் திரிவதில்லை.**

*(எ.டு)*

த. வா – வரு > தெ. ரா > இந்தி. ஆ

த. அரையன் > தெ. ராய > சமற். raja > பிரா. ராஞ்ஞ – ராணா

**4. 333 கடன் பெற்ற மொழியின் ஒலிப் பாங்குக்கு ஏற்ப கடன் சொல்லில் ஒலிப்புத் திரிபுகள் ஏற்படும். அச்சொல் மீண்டும் கடன் தந்த மொழிக்கே வருமாயின் இருமடித் திரிபு பெறும்.**

*(எ.டு)* த. நயன் – நயம். சமற். ந்யாய – த. நியாயம்

**4.334 பொருள் திரியாத சொற்றிரிபு எழுத்துத் திரிபு பன்மடித்திரிபுகளை மீட்டமைத்தால் மூலச்சொற் பொருளை கண்டறிய முடியும்.**

*(எ.டு)*

குவடு – கோடு (சொற்றிரிபு)

தட்டு – சட்டி (எழுத்துத் திரிபு)

நளி – நடி – நடம் – நட்டம் – நாட்டியம் – நாடகம் (பன்மடித் திரிபு.

**4. 335 சொல் வளர்ந்த நிலைகளை அதன் பொருள் வளர்ந்த நிலைகளால் வரை யறுக்க முடியும்.**

*(எ.டு)*

'ஆறு 1' – கல்லை அரித்துச் செல்வது அருவி

– மண்ணை அறுத்துச் செல்வது ஆறு

'ஆறு 2' – ஆற்றுவழி அல்லது ஆற்றங்கரை பாதை

– ஆறு = வழி

யாறு – வெள்ளம் பெருகி வரும் ஆறு. இச் சொல் முன் மிகையாக மொழிமுதல் உயிரொடு யகர மெய் பெற்றது. கவர் பொருள் தோன்றா வண்ணம் ஆற்றை மட்டும் குறிக்கும் சொல்லாக நிலைபேறு எய்தியது.

**4. 336 கூட்டாக ஒன்றுசேர்தல் குறித்த சொல், மகிழ்ச்சி ஆடல் பொருள்களில் புடைபெயரும்.**

*(எ.டு)* கள் – திரட்சி, கூடுதல்

கள் – களி = மகிழ்ச்சி, விளையாடுதல்

ஒ. நோ: செருமானிய மொழியில் கூட்டத்தைக் குறித்த சொல்லே மகிழ்ச்சியையும் குறித்தல் காண்க.

**4. 337 பொருள் சொல்லை வடிவமைக்கும்; சொல் பொருளை முழுமையாக வடிவ மைக்காது. ஆதலின், அனைத்துச் சொற்களுக்கும் பொருள் மூலம் கண்டபின் சொல் மூலம் காணவேண்டும்.**

*(எ.டு)* செத்தன் < சா < சாய் த. சாய்

*Every word has no doubt a traditional meaning, but traditional meanings like everything that is traditional are constantly changing. There is no more in a word than what we put into it, nor can we take more out than we have put into it.*

MaxMuller

*All that is new in it is old, and all that is old in it is new.*

Maxmuller

# 5. தொடரியல்

## (Syntax)

> *"Classification of languages help us to see how far back in time their lines keep converging"*
>
> *- Merrit Ruhlen*

நெ.மு.

**5.1 மக்களின் பேச்சியல்புக்கேற்ப தொடராட்சியில் எதிர்மறை இடைநிலைகள் சொல்லின் முன்னும் இடம் பெறலாம், பின்னும் இடம் பெறலாம்.**

*(எ.டு).* இல்பொருள் உவமை

அஃறிணை (அல்திணை) ஒருமை

நன்றியில் செல்வம்

வழுவல கூறினும்

**5.2 தொடராட்சியில் தொடங்கல் வினையாகிய தொழிற்பெயருடன் உறு என்னும் துணைவினை சேர்ந்து தொடங்கல் வினையாகும். இறந்த கால வினையெச்சத்துடன் விடு என்னும் துணைவினை சேர்ந்து அல்லது விடு – இடு எனத் திரிந்து முடித்தல் வினையாகும்.**

*(எ.டு).* சொல்லலுற்றான் – தொடங்கல்வினை (Inceptive or Inchoative verb).

எழுதிவிட்டான் – வந்திட்டான் – முடித்தல் வினை.

**5.3 தனிச்சொல்லின் பொருளை விளக்க முற்பட்டபோது கூட்டுச் சொல் உருக் கொண்டது.**

*(எ.டு).* பழுத்த பழம் வேண்டும்.

**5.4 செய்யுள் வழக்கில் ஈருருபு தொக்க தொகை பயின்று வருதலும் உண்டு.**

*(எ.டு).* என்புதோல் போர்த்த உடம்பு (குறள்)

எலும்பைத் தோலால் போர்த்தவுடம்பு

இரண்டன் உருபும், மூன்றன் உருபுமாகிய

ஐ, ஆல் என்பவை ஒருசேர

தொக்கு நிற்றலால் இதனை ஈருருபு

தொக்க தொகை எனலாம்.

**5.5 ஒவ்வொரு சொல்லாகவே மொழி தோன்றியிருப்பதாலும் கருத்தை ஒரு தனிச் சொல்லும் உணர்த்துவதாலும் சொல்லே மொழியாகும். மொழியலகு (unit of speech) என்பது சொற்றொடர் அல்லது முற்றுத் தொடராக (வாக்கியமாக) இருக்க வேண்டும் என்பதில்லை.**

*(எ.டு.)* ஆம்.

**5.6 புலவரும் உயர்ந்தோரும் பேசும் வழக்கே தமிழில் உலக வழக்கு எனப்படும்.**

*(எ.டு).* காடை, தவசம் (பெயர்)

செய், சொல் (வினை)

அன்னா, அந்தா (இடை)

கூடப்போதல், கொடித்தட்டல் – உலக வழக்கு.

**5.7 கொச்சைச் சொற்களும் வழூஉச் சொற்களும் புணர்த்துப் பேசும் தொடராட்சிகள் அல்வழக்கு எனப்படும்.**

*(எ.டு).* கீது (இருக்கிறது) – இ.வ.

**5.8 ஒரு சிறந்த இலக்கண நடை மொழியை (perfect-dialect) வரையறைப்படுத்தி, பேசும் வழக்கையும் பலுக்கும் (உச்சரிப்பு) முறையையும் கட்டுப்படுத்திய மொழியே இயன்மொழி என்பதால் அங்ஙனம் கட்டுப் படுத்தாத நடைமொழித் தொடராட்சிகள் வழூஉத் தொடராட்சிகள் எனப்படும்.**

*(எ.டு).* 1. வட்டார நடைமொழி (Regional dialect)

2. உள்ளூர் நடைமொழி (local dialect)

3. குறிப்பிட்ட வகுப்பினர் நடைமொழி (class dialect)

4. குமுகாய நடைமொழி (Communal dialect)

5. குடும்ப நடைமொழி (Family dialect)

6. தனிமாந்தர் நடைமொழி (personal dialect)

**5.9 பல பொருட்பெயர்கள் உவமை அடிப் படையாக அப்பொருள்களின் பண்பு குறித் துப் பெயரெச்சமாகித் தொடராட்சி பெறும்.**

***(எ.டு).***

| | | |
|---|---|---|
| சிறுமை | – | அரிசிப்பல், குருவெற்றிலை, நரிக்கெளிறு, நரிப்பயறு, எரியாமணக்கு. |
| பருமை | – | ஆனை நெருஞ்சில், கடாநாரத்தை |
| நெடுமை | – | ஒட்டகச் சிவிங்கி |
| நீண்மை | – | பாம்புக்கெண்மை, நாகப்பூச்சி |
| தாழ்வு | – | நாய்க்கடுகு, நாய்ச்சேம்பு |
| இழிவு | – | கழுதைவண்டு, கழுதைக் கூத்து |
| தீமை | – | பேய்க்கரும்பு, பேய்வெள்ளரி |
| வன்மை | – | கல்விருசு, கல்வாழை |

**5.10 சில முதற்சினைப் பெயர்கள், உவமை யாகு பெயராகவும், ஈறு பெற்றும் பெறாதும் வரும்; ஒப்புமைப் பெயராக ஆளப்படும்.**

***(எ.டு).*** ஆட்டுக்கொம்பு அவரை, கிளிமூக்கு மாங்காய், காடைக்கண்ணி, குதிரைவாலி.

**5.11 எழுவாயும் பயனிலையும் அமைந்து கருத்து முடிந்த இரு சொற்றொடரும் பல சொற்றொடரும் முற்றுத்தொடர் (வாக் கியம்) எனப்படும்.**

***(எ.டு).*** கந்தன் வந்தான்.

இதில் 'கந்தன்' என்பவனைப் பற்றி 'வந்தான்' என்னும் செய்தி கூறப்பட்டுள்ளது. எந்தப் பொருளைப் பற்றி ஒரு செய்தி சொல்லப்பட்டிருக்கிறதோ அது எழுவாய். அப்பொருளைப் பற்றி என்ன செய்தி சொல்லப்பட்டிருக்கிறதோ அது பயனிலை.

**5.12 செயப்படுபொருள் குன்றாவினைகள் பயனிலையாக வரும் வாக்கியங்களில், எழுவாய் பயனிலையோடு செயப்படு பொருள் என வேறோர் உறுப்புமுண்டு.**

***(எ.டு).*** சேரன் செங்குட்டுவன் கனகவிசயரை வென்றான்.

அதிகமான் ஔவையாருக்கு அருநெல்லிக்கனி யீந்தான்.

இவற்றுள், முதல் வாக்கியத்தில் 'கனகவிசயர்' என்பதும், இரண்டாம் வாக்கியத்தில் 'அருநெல்லிக் கனி' என்பதும், செயப்படுபொருளாம்.

செயப்படுபொருள் எப்போதும் இரண்டாம் வேற்று மையிலேயே இருக்கும். சில வேளைகளில் அவ் வேற்றுமையுருபு தொக்கு (மறைந்து) நிற்பதுமுண்டு. கனகவிசயரை என்பதில் ('ஐ' என்னும்) 2ஆம் வேற் றுமையுருபு விரிந்து (வெளிப்பட்டு) நிற்பதையும், அருநெல்லிக்கனி என்பதில் அவ்வுருபு தொக்கு நிற்பதையும் காண்க.

**5.13 செயப்படுபொருள் குன்றிய வினை கள் பயனிலையாக வரும் வாக்கியங்களில் செயப்படுபொருள் இராது.**

***(எ.டு).*** மருதன் வருகிறான், கராச்சியிலிருந்து இங்கிலாந்திற்கு வானவூர்தியிற் செல்ல இரண்டு நாள்கள் செல்லும்.

இவ்வாக்கியங்களில், 'வருகிறான்', 'செல்லும்' என்பன செயப்படுபொருள் குன்றிய வினைகள். ஆதலால், இவற்றில் செயப்படுபொருள் இல்லை.

மேற்கூறியவற்றால், எழுவாய், பயனிலை, செயப்படு பொருள் ஆகிய மூன்றும் வாக்கியவுறுப்புகள் என்பதும், அவற்றுள் எழுவாயும் பயனிலையும் வாக்கியத்திற்கு இன்றியமையாதவை என்பதும், செயப்படுபொருள் குன்றாவினை பயனிலையானால் செயப்படுபொருள் அமைந்தும், செயப்படுபொருள் குன்றிய வினை பயனிலையானால் செயப்படுபொருள் அமையாதும் இருக்கும் என்பதும் அறியப்படும்.

**5.14 எழுவாய் சில வாக்கியங்களில் தொக்கு நிற்பதுமுண்டு; அது தொகையெழுவாய் அல்லது தோன்றா எழுவாய் எனப்படும். (தொக்கு நிற்றல்= மறைந்து நிற்றல். தொகுதல்= மறைதல்).**

*(எ.டு).* நாளைக்கு வருவேன்.

இதில் 'நான்' என்னும் எழுவாய் தொக்குநின்றது.

**5.15 உரையாட்டிலும், பேச்சிலும் மூவிட மாற்றுப் பெயர்கள் (Personal Pronouns) தொகும்.**

*(எ.டு).* (நான்) ஒன்று சொல்கிறேன், (நீ) கேள்.

இனி (நாம்) நாளைக்கு என்ன செய்கிறது?

(நீ) என்ன சொன்னாய்?

(அவன்) நன்றாயிருக்கிறானா?

(அது) போனால் போகிறது.

**5.16 செய்தி வினவலில் செய்தி என்னும் சொல் தொகும்.**

*(எ.டு).* (செய்தி) என்ன?

**5.17 வினாவிற் குறித்த எழுவாய் விடைகளில் தொகும்.**

*(எ.டு).* வினா : முச்சங்கம் இருந்தனவா?

விடை : (முச்சங்கம்) இருந்தன.

**5.18 மரபுச் செய்திகளையும் கேள்விச் செய்திகளையும் அறிவிக்கும் வாக்கியங்களில், அச்செய்தி கூறுவாரைக் குறிக்கும் எழுவாய் தொகும்.**

*(எ.டு).* (அறிஞர்) இடைச்சங்க நூலகத்தில் எண்ணாயிரத் தெச்சம் நூல்களிருந்தன என்பர்.

(மூத்தோர்) கூட்டத்தில் ஒருவரைச் சுட்டக்கூடாது என்று சொல்லுவர்.

(மக்கள்) விளக்கேற்றா வீட்டில் வேதாளம் குடிபுகும் என்பர்.

**5.19 கணக்கு குறித்த வாக்கியங்களில் முடிப்புச் சொல்லின் எழுவாய் தொகும்.**

*(எ.டு).* பத்தில் நான்கு போனால் (மீதி) ஆறு.

**5.20 தீவினையும் மடச்செயலும் பற்றி ஒருவரைக் கடியும் வினாவில், பொதுவாய் எழுவாய் தொகும். அவ்வெழுவாய் இடத்திற்கேற்ப மூவிடப் பொருள் எதுவாகவுமிருக்கலாம். ஆனால், வினா முன்பின் தொடர்பின்றிப் பழமொழி போலத் தனித்து நிற்கும்போது, ஒருவன் என்னும் எழுவாயை வருவித்துக்கொள்வது நன்று. இத்தகைய எழுவாய்களைத் திட்டமற்ற எழுவாய் என்னலாம்.**

*(எ.டு).* (நீ) பச்சைப் பிள்ளைக்கு இப்படி நெடுநேரம் பால் கொடாமலிருக்கலாமா?

(அவன்) பெற்றவள் பட்டினியிருக்கப் பிறருக்கெல்லாம் விருந்து வைக்கிறது சரியா?

(ஒருவன்) உண்ட வீட்டிற்கு இரண்டகம் பண்ணலாமா?

(ஒருவன்) மடி நிறையப் பணத்தை வைத்துக் கொண்டு தனி வழியே போகலாமா?

**5.21 சில சில விலக்குகளில் முன்னிலையெழுவாயும் திட்டமற்ற எழுவாயும் தொகும்.**

*(எ.டு).* "(நீ) செய்வன திருந்தச் செய்".

(ஒருவன்) பலனை விரும்பினால்
பாடுபட வேண்டும். – விதி

"(நீ) கண்டொன்று சொல்லேல்." – விலக்கு

**5.22 தனிப்பட்ட மக்களியல்பையும் பொது உண்மையையும் கூறும் வாக்கியங்களில், மூவிட மாற்றுப் பெயரும் திட்டமற்ற எழுவாயும் தொகும்.**

*(எ.டு).* (அவன்) கெஞ்சினால் மிஞ்சுவான், மிஞ்சினால் கெஞ்சுவான்.

(ஒருவன்) ஆடிக்கறக்கிற மாட்டைப் ஆடிக் கறக்க வேண்டும்,

பாடிக் கறக்கிற மாட்டைப் பாடிக் கறக்க வேண்டும்.

(நான், நீ, அவன்) இருந்தால் பூனை, எழுந்தால் புலி.

**குறிப்பு:** பழமொழிகளிற் குறிக்கப்படும் மக்களியல்பு எல்லார்க்குமுரியதாகவுமிருக்கலாம்; பலர்க்கோ சிலர்க்கோவுரியதாகவுமிருக்கலாம்; ஒருவனுக்கேயுரியதாகவுமிருக்கலாம். பயனிலையின் பாலுக்கும் எண்ணுக்கும் ஏற்றபடி ஏதேனுமொரு பொது எழுவாய் வருவித்துக் கொள்ளலாம்.

### 5.23 பழமொழிகளிலும் பழமொழிபோல் வழக்கூன்றிய சொலவுகளிலும், உலகறி எழுவாய்கள் தொகும்.

***(எ.டு).*** (ஆண்டவன்) ஆட்டுக்கும் வால் அளந்து தான் வைத்திருக்கிறான்.

(திருவையாற்றான்) பாடென்றால் பாடமாட் டானாம், பாடாதே என்றால் பாடுவானாம்.

### 5.24 விடுகதைகளில் எழுவாய் தொகும்.

***(எ.டு).***

பச்சைப் பச்சென்றிருக்கும், பாகற்காயன்று;

பக்கமெல்லாம் முள்ளிருக்கும், பலாக்காயன்று;

உள்ளே வெளுத்திருக்கும், தேங்காயன்று;

உருக்கினால் நெய் வடியும், நெய்யுமன்று;

(இதன் எழுவாய் ஆமணக்கங்காய் என்பது).

### 5.25 உண்மை கூறும் வாக்கியங்களில், எதிர்கால வினையெச்சத்தின் பின் வினை யாலணையும் பெயர் அல்லது தொழிற் பெயர் தொகும். அவ்வினையாலணையும் பெயரும் தொழிற்பெயரும் அவ்வெதிர்கால வினையெச்ச வினையடிப் பிறந்திருக்கும்.

***(எ.டு).*** கொடுத்தால் (கொடுத்தவன்) நல்லவன்; கொடாவிட்டால் (கொடாதவன்) கெட்டவன்.

ஆகாத மாமியார்க்குக் கைபட்டால் (பட்டது) குற்றம்; கால்பட்டால் (பட்டது) குற்றம்.

### 5.26 நாலாம் வேற்றுமைக்குப் பின் காலப்பெயரும் பிறசொல்லும் தொகும்.

***(எ.டு).*** இன்றைக்குத் திங்கள் = இன்றைக்குக் கிழமை திங்கள். அதைப்பற்றி உனக்கென்ன? = அதைப்பற்றி உனக்குக் கவலை என்ன?

இன்று திங்கள் என்னும் தொடரில், இன்று என்பதே பெயர்ச்சொல்லாயும், அதனால் எழுவா யாயும் இருக்கலாம்.

### 5.27 உடல்நிலை, உளநிலை, சூழ்நிலை, வானிலை, காலநிலை, செல்வநிலை முதலிய பலவகை நிலைகளைக் குறிக்கும் வாக்கியங்களில், எழுவாய் தொகும்.

***(எ.டு).*** எனக்குச் சீயென்றிருக்கிறது = எனக்குச் சூழ்நிலை சீயென்றிருக்கிறது.

(இவ்விடம்) புழுக்கமாயிருக்கிறது.

(நேரம்) இருட்டிவிட்டது.

(நிலைமை) சாப்பாட்டிற்குத் திண்டாட்ட மாயிருக்கிறது.

### 5.28 காலக் கழிவினாலும் வினைத்துய்ப் பினாலும் உண்மையறியப்படுவதைக் குறிக் கும் வாக்கியங்களில், வினையெச்சத் திற்கும் 'தெரியும்' என்னும் பயனிலைக்கும் இடையில், 'உண்மை' என்னும் எழுவாய் தொகும்.

***(எ.டு).*** போகப்போகத் தெரியும்.

யாராத்தாள் செத்தாலும் பொழுதுவிடிந்தால் தெரியும்.

இவற்றில், தெரியும் என்னும் பயனிலைக்கு முன் உண்மை என்னும் எழுவாய், தொக்கு நிற்றல் காண்க.

நாளடைவில் தெரியும் என்னும் வாக்கியத்தில் நாளடைவில் என்பது வினையெச்சத் தொழில் செய்யும் தொடர் மொழியாகும்.

### 5.29 உடம்பிற்கும் உறுப்பிற்கும் நேரும் ஊற்றைக் கூறும் வாக்கியங்களில், ஊறு செய்யும் பொருள்களைக் குறிக்கும் எழுவாய் தொகும். (ஊறு = தீங்கு, சேதம்).

***(எ.டு).*** பட்ட காலிற் படும்.

இதில், படும் என்னும் பயனிலையைக் கொண்டு முடியும் எழுவாய் தொக்கது. அது கல், குச்சு, கால் முதலிய சொற்களில் எதுவாகவுமிருக்கலாம்.

**5.30 நிலைப்பாடு (condition) உணர்த்தும் ஏவலின் பின், விளைவு குறித்து வரும் பயனிலையின் எழுவாய் தொகும்.**

*(எ.டு).* கேளுங்கள், (கேட்பது) கொடுக்கப்படும்.

போங்கள், (அது) கிடைக்கும்.

**5.31 சில வாக்கியங்களில் பயனிலை தொகுவதுமுண்டு. இதனைத் தோன்றாப் பயனிலை எனலாம்.**

*(எ.டு).* விளைவு குறித்த வாக்கியங்களில், எதிர்கால வினையெச்சத்தின் பின்வரும் எழுவாயின் பயனிலை தொகும்.

*(எ.டு).* கிட்ட இருந்தால் முட்டப் பகை (நேரும்).

அகல இருந்தால் நிகள உறவு (உண்டாகும்).

ஆடி மாதம் அவரை போட்டால் கார்த்திகை மாதம் காய் (காய்க்கும்).

ஆகவே, இத்தகைய வாக்கியங்களில், வினையெச்சமும் இறுதிச் சொல்லும் ஒரே பொருளையுணர்த்தும் போது தோன்றாயெழுவாய் வருவித்தல் வேண்டுமென்றும், காரணகாரியமாக வெவ்வேறு பொருளையுணர்த்தும்போது தோன்றாப் பயனிலை வருவித்தல் வேண்டுமென்றும் அறிந்துகொள்க.

**5.32 உண்மையைக் கூறும் வாக்கியங்களில், நாலாம் வேற்றுமையேற்ற பெயர்க்குப் பின்வரும் எழுவாய்களின் பயனிலை தொகும்.**

*(எ.டு).* இன்றைக்கு விடுமுறை (உண்டு), நாளைக்குப் பள்ளிக் கூடம் (உண்டு).

அவனுக்குக் காய்ச்சல் (அடிக்கிறது).

**5.33 சிறந்த பொருள்களை எடுத்துக் கூறும் வாக்கியங்களில், நாலாம் வேற்றுமை அல்லது ஏழாம் வேற்றுமையேற்ற பெயர்க்குப் பின்வரும் எழுவாய்களின் பயனிலை தொகும்.**

*(எ.டு).* பட்டினத்திற்கு வீடும் பட்டிக்குக் காடும் (சிறந்தவை).

வில்லுக்கு ஓரி, சொல்லுக்கு மாவலி, கொடைக்குக் குமணன், நடைக்கு நக்கீரன் (சிறந்தவர்).

வில்லிற் சேரன், சொல்லிற் கீரன் (சிறந்தவர்).

**5.34 ஒரு தன்மைப்பட்ட பல பொருள்களைச் சேர்த்துக் கூறும் பழமொழிகளிற் பயனிலை தொகும்.**

*(எ.டு).* ஊர்வாரிக் கொல்லையும் உத்திரட்டாதிப் பிள்ளையும் (நல்லவை).

மாங்காயிற் பெரியதும் தேங்காயிற் சிறியதும் (நல்லவை).

பகைவன் வாளும் பகைபோற் கேளும் (கொடியவை).

**5.35 உண்மை நிகழ்ச்சியைக் குறித்த வாக்கியங்களில், நாலாம் வேற்றுமை அல்லது ஏழாம் வேற்றுமையேற்ற பெயர்க்குப் பின்வரும் எழுவாயின் பயனிலை தொகும்.**

*(எ.டு).* அவனுக்குக் காலிலே புண் (இருக்கிறது).

கந்தனுக்கு நாலுநாளாய்க் காய்ச்சல் (அடிக்கிறது).

ஊரிலே கலியாணம் (நடக்கிறது), மாரிலே சந்தனம் (பூசியிருக்கிறது).

**5.36 அளவு குறித்த வாக்கியங்களில், நிகழ்கால வினையெச்சத்தின் பின்னும் நாலாம் வேற்றுமையேற்ற பெயர்க்குப் பின்னும் வரும் எழுவாயின் பயனிலை தொகும்.**

*(எ.டு).* நல்ல மாட்டிற்கு ஒரு சூடு (போதும்), நல்ல பிள்ளைக்கு ஒரு சொல் (போதும்).

அவரைக்கு ஒரு கொடியும் அகம்படிக்கு ஒரு குடியும் (போதும்).

விருந்தும் மருந்தும் மூன்று வேளை (உண்ண வேண்டும்).

'கொம்புளதற்கு ஐந்துமுழம் (விலக வேண்டும்), குதிரைக்குப் பத்து முழம்' (விலக வேண்டும்).

**5.37 பொருள்களின் தகுதி குறிக்கும் வாக்கியங்களில், நாலாம் வேற்றுமையேற்ற பெயர்க்குப் பின்வரும் எழுவாயின் பயனிலை தொகும்.**

*(எ.டு).* மனைக்கு வேம்பு (ஏற்றது), மன்றுக்குப் புளி (ஏற்றது).

மண்ணாங்கட்டி மாப்பிள்ளைக்கு மண்ணாங் கட்டிப் பணியாரம் (தக்கது).

**5.38 ஒன்றுக்குள்ளது இன்னொன்றுக்கு என்னும் கருத்துப் பற்றிய வாக்கியங்களின் இறுதியில் வரும் பயனிலை தொகும்.**

*(எ.டு).* முன் ஏருக்கு வந்தது பின் ஏருக்கு (வரும்)

அவனுக்குச் சொன்னது உனக்கும் (சொன்னது).

**5.39 பல சிற்றளவுகள் சேர்ந்து ஒரு பேரளவாவதைக் குறிக்கும் வாக்கியங்களின் பயனிலை தொகும்.**

*(எ.டு).* துளிதுளியாய் வெள்ளம் (ஆகும்).

ஒவ்வொன்றாய் நூறா? ஒரு மிக்க நூறா? = ஒவ்வொன்றாய் நூறு ஆகுமா? ஒரு மிக்க நூறு ஆகுமா?

**5.40 இன்னதற்கு இன்னது வேண்டும் என்னும் கருத்துப்பற்றிய வாக்கியங்களின் பயனிலை தொகும்.**

*(எ.டு).* மாடத்திற்கு ஓவியம் (வேண்டும்), மாநகருக்குக் கோபுரம் (வேண்டும்).

ஆணுக்கு அறிவு (வேண்டும்), பெண்ணுக்கு அழகு (வேண்டும்).

இங்கு வேண்டுமென்றது தேவையை. தேவை வேறு, தகுதி வேறு. இவற்றின் வேறுபாடறிய, இரண்டாம் வாக்கியத்தில் வேண்டுமென்றது மிக வேண்டியதைக் குறிக்கும்.

**5.41 சில வாக்கியங்களில் ஈரெழுவாய்கள் தொகும்.**

*(எ.டு).* பெய்தும் கெட்டது, பெய்யாதும் கெட்டது.

(மழை) பெய்தும் (பயிர்) கேட்டது, (மழை) பெய்யாதும் (பயிர்) கெட்டது.

(ஒருவன்) சொன்னால், (இன்னொருவன்) கேட்க வேண்டும். அல்லது

(நான்) சொன்னால் (நீ) கேட்க வேண்டும்.

**5.42 சில வாக்கியங்களில் எழுவாய் பயனிலை இரண்டும் தொகும்.**

*(எ.டு).* (வாங்குவார்) இன்றைக்குக் கைக்காசு (கொடுக்க வேண்டும்), நாளைக்குக் கடன் (கேட்க வேண்டும்).

(அவன்) கண்டால் ஒரு பேச்சு(ப் பேசுகிறான்), காணாவிட்டால் ஒரு பேச்சு(ப் பேசுகிறான்).

(அவன்) போனால் போன இடம் (இருந்து கொள்கிறான்),

வந்தால் வந்த இடம் (இருந்துகொள்கிறான்).

**5.43 சில வாக்கியங்களில் பல எழுவாயுடன் பயனிலை தொகும்.**

*(எ.டு).* (அவன்) என் வீட்டிற்கு (நீ) வந்தால் என்ன கொண்டு வருகிறாய்? உன் வீட்டிற்கு (நான்) வந்தால் என்ன கொடுக்கிறாய்? (என்கிறான், என்று கேட் கிறான்).

**5.44 சில வாக்கியங்கள் வெற்றுவேறெழுவாய் விரித்தற்கிடந்தரும்.**

*(எ.டு).* (சோறு) இருந்தால் சாப்பாடு (உண்டு), இல்லாவிட்டால் பட்டினி (நேரும்).

(சோறு) இருந்தால் (நாங்கள்) சாப்பாடு (சாப்பிடு வோம்), இல்லாவிட்டால் பட்டினி (இருப்போம்).

**5.45 எழுவாயும் பயனிலையும்போலச் சில வாக்கியங்களில் செயப்படுபொருளும் தொகும். அது தோன்றா செயப்படு பொருள் எனப்படும்.**

*(எ.டு).*

**5.46 உரையாட்டில், முன் தொடர்பினால் பொருளுணர்த்தும் வாக்கியங்களில் இயற் பெயரும் சுட்டுப்பெயருமான செயப்படு பொருள் தொகும்.**

*(எ.டு).* அவர் ஒரு வாரத்திற்கு முன்னமே (பணத்தை) அனுப்பி விட்டாராம் – இயற்பெயர்.

அவர் ஒரு வாரத்திற்கு முன்னமே (அதை) அனுப்பிவிட்டாராம். – சுட்டுப்பெயர்.

**5.47 வினாவிற் குறித்த செயப்படுபொருள், விடையில் தொகும்.**

*(எ.டு).* வினா : அவர் வீடு வாங்கிவிட்டாரா?

விடை : அவர் போன மாதமே (வீடு) வாங்கிவிட்டார்.

**5.48 எதிர்கால வினையெச்சத்தின்பின், அவ்வினையடிப் பிறந்த வினையாலணை யும் பெயரும் தொழிற்பெயருமான செயப் படுபொருள் தொகும்.**

*(எ.டு).* சொன்னால் (சொன்னதைக்) கேட்க வேண்டும்.

வலியக் கொடுத்தால் (கொடுத்ததை) யார்தான் வாங்க மாட்டார்? – வினையாலணையும் பெயர்.

போனால் (போவதைத்) தடுப்பவர் இல்லை – தொழிற்பெயர்.

**5.49 எதிர்கால வினையெச்சத்தின் முன் திட்டமற்ற செயப்படு பொருள் விரிப்பின், அதன்பின் சுட்டுப்பெயர் தொகும்.**

*(எ.டு).* (ஒன்றைச்) சொன்னால் (அதைக்) கேட்க வேண்டும்.

**5.50 திட்டமற்ற செயப்படுபொருள் பொது வாய்த் தொகும்.**

*(எ.டு).* இரப்போருக்கு (ஒன்றை) இடு.

(ஒன்றை) எழுதுவதற்குத் தாளும் இறகியும் மையும் வேண்டும்.

**5.51 செயப்படுபொருள் இன்னதெனத் தெளிவாய் அறியக்கூடிய (அதாவது பயனி லையின் வினையடியாய்ப் பிறந்த பெயராக வுள்ள) இடங்களில், அது தொகும்.**

*(எ.டு).* புலவர் சிவக்கொழுந்து நன்றாய்ப் (பாட்டுப்) பாடுகிறார்.

மலையப்பன் ஒழுங்காய்ப் (பாடம்) படிக்கிறான்.

குறிப்பு: இத்தகைய செயப்படுபொருளை உறவுடைச் செயப்படுபொருள் (Cognate object) என்பர் ஆங்கில இலக்கணியர்.

**5.52 (பற்பல) தொழில் குறிக்கும் வினை கட்குரிய செயப்படுபொருள், சொல்லாமல் அறியக்கூடிய இடங்களில் தொகும்.**

*(எ.டு).* உழவன் (நிலத்தை) உழுகிறான்.

(நிலத்தை) அகல உழுவதினும் ஆழ உழுவது நல்லது.

குயவன் (கலங்களை) வனைகிறான்.

**5.53 சில வாக்கியங்களில் எழுவாய் செயப்படுபொருள் இரண்டும் ஒருங்கே தொகும்.**

*(எ.டு).* (ஒருவன் ஒன்றைச்) சொன்னால் (இன்னொருவன் அதைக்) கேட்க வேண்டும்.

குறிப்பு: பல எழுவாய்களும் பயனிலையும் தொக்கு நிற்பன, பழமொழிகளும் அவற்றைப் போற் சுருக்க மான வணிகக் கூற்றுகளும் உரையாட்டு வாக்கியங் களுக்கே பொருந்தும்.

**5.54 பெயர்த்தன்மையுடைய (அல்லது) பெயரின் தொழிலைச் செய்யும் தொடர் மொழி, பெயர்த் தொடர்மொழியாகும். (Noun phrase)**

எழுவாயும் செயப்படுபொருளுமாதலும் வேற்றுமை யேற்றலும், பெயர்த்தன்மையாம்.

ஒரு தொடர்புபட்டுப் பெயரில் முடிவனவும் பெயர் போற் பயன்படுவனவுமான சொற்றொடர்களெல்லாம் பெயர்த்தொடர் மொழிகள்.

*(எ.டு).* 1. காலையில் எழுந்திருத்தல் காக்கையின் சிறந்த குணங்களுள் ஒன்று.

2. (வானொலிப் பெட்டியை) எப்படிப் பயன் படுத்துவதென்பது பலர்க்குத் தெரியாது.

3. ஒருபாற் கோடாமை சான்றோர்க்கு அணி.

**5.55 பெயரெச்சம்போற் பெயரைத் தழுவும் தொடர்மொழி பெயரெச்சத் தொடர் மொழி யாம் (Adjective phrase).**

*(எ.டு).* 1. நல்ல பிள்ளைக்கு ஒரு சொல். (நல்ல குணமுள்ள பிள்ளைக்கு ஒரு சொல்).

2. பொன் நகை, வெள்ளி நகையைவிட விலையுயர்ந்தது. (பொன்னால் செய்யப்பட்ட நகை வெள்ளியால் செய்யப்பட்ட நகையைவிட விலை யுயர்ந்தது).

3. காட்டு விலங்கு மிகக் கொடியது. (காட்டில் வாழும் விலங்கு மிகக் கொடியது).

நல்ல என்னும் தனிச்சொல்லும் நல்ல குணமுள்ள என்னும் தொடர்ச் சொல்லும் பிள்ளை என்னும் ஒரே பெயரைத்தழுவி, அப்பெயராற் குறிக்கப் பட்ட பொருளை ஒரே வகையில் விளக்குகின்றன. நல்ல என்னும் பெயரெச்சம் போன்றே நல்ல குண முள்ள என்னும் தொடர்ச்சொல்லும் பெயரைத் தழுவுவதால், பெயர்த்தொடர்மொழி எனப்படும்.

பெயரெச்சத்தின் தொழிலைச் செய்யும் தொடர்மொழி பெயரெச்சத் தொடர்மொழி.

குறிப்பு: தொகைதொடர் இலக்கணப்படி, 'பொன்நகை', 'காட்டு விலங்கு', 'புள்ளிமான்' என்பவை வேற்றுமைத் தொகை என்றும், 'செந்தாமரை' என்பது பண்புத் தொகை என்றும், தமிழிலக்கண நூல்களிற் கூறப்படினும்; அங்ஙனம்கூறுவது புணரியலுக்குரிய தொடர்ச்சொல் இலக்கண மென்றும், மேற்காட்டிய தொடர்ச் சொற்களிலுள்ள 'பொன்', 'காட்டு', 'புள்ளி', 'செம்' என்ற நிலைச்சொல் நான்கும் தனிப்பட்ட முறையில் பெயரெச்சம்போல் ஒவ்வொரு பெயரைத் தழுவி நிற்பதால் உண்மையில் பெயரெச்சமேயென்றும், சொல்லிலக்கணம் கூறுவது தனிச் சொல்லுக்கே யன்றித் தொடர்ச்சொல்லுக் கன்று என்றும், சொல் வடிவு எதுவாயினும் ஆட்சிப் படியே சொல்வகை யறியப்படும்.

## 5.56 வினையெச்சம்போல் வினையையும் வினையடிச் சொல்லையும் தழுவும் தொடர் மொழி, வினையெச்சத் தொடர் மொழியாம் (Adverb phrase).

வினைமுற்று, பெயரெச்சம், வினையெச்சம் ஆகிய மூன்றும் வினைச்சொல் என்றும், தொழிற்பெயர் வினையாலணையும் பெயர் ஆகிய இரண்டும் வினையடிச்சொல் என்றும் அறிதல் வேண்டும்.

1. இக்கட்டுரை **நன்றாய்** இருக்கிறது:

– இக்கட்டுரை **நல்ல முறையில்** இருக்கிறது.

2. **அன்று** புகைவண்டியில்லை.

–**அக்காலத்தில்** புகைவண்டியில்லை.

3. புத்தகம் **கீழே** யிருக்கிறது.

– புத்தகம் **தரையின்மேல்** இருக்கிறது.

எடுத்துக்காட்டாக, **நன்றாய்** என்னும் தனிச் சொல்லும் **நல்ல முறையில்** என்னும் தொடர் மொழியும், **இருக்கிறது** என்னும் ஒரே வினையைத் தழுவி அதன் பொருளை ஒரே வகையில் வேறுபடுத்து கின்றன. **நன்றாய்** என்னும் வினையெச்சம் போன்றே **நல்ல முறையில்** என்னும் தொடர்ச்சொல்லும் வினையைத் தழுவுவதால், வினையெச்சத் தொடர் மொழி எனப்படும்.

வினையெச்சத்தின் தொழிலைச் செய்யும் தொடர்மொழி, வினையெச்சத் தொடர்மொழி.

## 5.57 பெயர்த்தன்மையுடைய கிளவியம் பெயர்க்கிளவியம் (Noun clause). அது எழுவாயாகவும் செயப்படுபொருளாகவும் வரும். 'என்பது' அல்லது 'என்று' என்னும் சொல் அதைப் பயனிலையுடன் இணைக் கும்.

*(எழுவாய்).*

குயில் காகத்தின் கூட்டில் முட்டையிடும் என்பது பலர்க்குத் தெரியாது.

குயில் காகத்தின் கூட்டில் முட்டையிடும் என்று பலர்க்குத் தெரியாது.

இவற்றில், 'குயில் காகத்தின் கூட்டில் முட்டை யிடும்' என்பது எழுவாய்; 'தெரியாது' என்பது பயனிலை; 'என்பது', 'என்று' என்பன இணைப்புச் சொற்கள்.

**(செயப்படுபொருள்):**

அணுக்குண்டாலும் நன்மையுண்டு என்பதைப் பலர் அறியவில்லை.

அணுக்குண்டாலும் நன்மையுண்டு என்று பலர் அறியவில்லை.

இவற்றில் 'பலர்' என்பது எழுவாய்; 'அறியவில்லை' என்பது பயனிலை; 'அணுக்குண்டாலும் நன்மையுண்டு' என்பது செயப்படுபொருள்; 'என்பது', 'என்று' என்பன இணைப்புச் சொற்கள்.

'என்ற செய்தி', 'என்னும் உண்மை' முதலிய தொடர்கள் அல்லது பெயரொட்டுகளும், 'என்பது', என்னும் சொல்லைப் போன்று பெயர்க்கிளவியங்களைப் பயனிலையுடன் இணைக்கும்.

**5.58 பெயரெச்சம்போல் பெயரைத் தழுவி நிற்கும் கிளவியம் பெயரெச்சக் கிளவியம். (Adjective clause).**

*(எ.டு).* தச்சன் செய்த பெட்டி.

வள்ளுவர் வகுத்த வழி.

**5.59 பெயரெச்சக் கிளவியங்களின் எழுவாய் பிற வேற்றுமைப் பெயராக மாற்றப்படினும், அக்கிளவியத்தன்மை கெடும். அவை பெயரெச்சத் தொடர்மொழியாகி விடும்.**

*(எ.டு).* (நீ விரும்பும்) – உனக்கு விருப்பமான (அதிகன் ஔவைக்குக் கொடுத்த) – அதிகனால் ஔவைக்குக் கொடுக்கப்பட்ட.

**5.60 இரு சொற்றொடரான பெயரெச்சக் கிளவியங்கள் பயனிலை தொக்குப் பெயரொடு கூடின், வேற்றுமைத் தொடராம்.**

*(எ.டு).* கபிலர் பாடிய பாட்டு – கபிலர் பாட்டு.

மழை பெய்யும் நாள் – மழை நாள்.

**5.61 'உள்ள', 'இல்லாத', 'தெரியாத' முதலிய சொற்களில் முடியும் சில தொடர்கள், கூறுவான் குறிப்பின்படி, பெயரெச்சமாகவும், பெயரெச்சக் கிளவியமாகவும் கொள்ளப்படலாம். ஆயினும், பெயரெச்சமாகக் கொள்வதே பொருத்தமாம்.**

*(எ.டு).* அறிவுள்ள பிள்ளை

அழகில்லாத மலர்

கண்தெரியாத கிழவன்.

'உள்ள', 'இல்லாத', 'தெரியாத' முதலிய சொற்கள் பெயரொடு சேர்ந்து பெயரெச்சமாகும். தெளிவான வினைகளைக் குறிப்பின், அவற்றில் முடியும் தொடர்கள் பெயரெச்சக் கிளவியமாம்.

*(எ.டு).* தண்ணீர் உள்ள (இடம்)

பணப்புழக்கம் இல்லாத (காலம்)

விடை தெரியாத (வினா)

**5.62 வினையெச்சம்போல், வினைமுற்றையும் பெயரெச்சத்தையும் வேறோர் வினையெச்சத்தையும் தொழிற்பெயரையும் வினையாலணையும் பெயரையும் தழுவும் கிளவியம் வினையெச்சக்கிளவியம். (Adverb clause).**

*(எ.டு).* மழை பெய்து பயிர் விளைகிறது

மழை பெய்து பயிர் விளைகின்ற காடு மானாமாரிக் காடு

மழை பெய்து பயிர் விளைந்தால் நாடு செழிக்கும்

மழை பெய்து பயிர் விளைதல் நல்லது

மழை பெய்து விளைவது மானாமாரிப் பயிர்

இவற்றுள், 'மழை பெய்து' என்னும் வினையெச்சக் கிளவியம், 'விளைகிறது' என்னும் வினைமுற்றையும் 'விளைகின்ற' என்னும் பெயரெச்சத்தையும் 'விளைந்தால்' என்னும் (வேறொரு) வினையெச்சத்தையும், 'விளைதல்' என்னும் தொழிற்பெயரையும், 'விளைவது' என்னும் வினையாலணையும் பெயரையும், முறையே தழுவிநிற்றல் காண்க.

இவற்றுள், 'பெய்து' என்னும் வினையெச்சம்தன் வினை கொண்டு முடியாது பிறிதின்வினைகொண்டு முடிந்தது. அதாவது, 'பெய்து' என்னும் மழையின் வினை 'விளைகிறது' முதலிய பயிரின் வினை கொண்டு முடிந்தது.

**5.63 வினையெச்சக் கிளவியம் பின்வருமாறு பல பொருள் பற்றி வரும்:**

<u>**1. காலம்:**</u>

*(எ.டு).* வடமொழியாளர் தென்னாட்டிற்கு வருமுன் வடசொற்கள் தமிழிற் கலக்கவில்லை.

**2. இடம்:**

*(எ.டு).* கலைமகள் இருக்குமிடத்தில் திருமகள் இருப்பது அரிது.

**3. நோக்கம்:**

*(எ.டு).* மக்கள் நலமடையும்பொருட்டு மருத்துவ சாலைகள் ஆங்காங்கு நிறுவப்பட்டுள்ளன.

**4. காரணம்:**

*(எ.டு).* தமிழர் தமிழைப் பேணாததினால் அளவிறந்த தமிழ்நூல்கள் அழிந்து போயின.

**5. விளைவு:**

*(எ.டு).* கணக்கற்ற மக்கள் கதறியழுமாறு காந்தியடிகள் சுட்டுக் கொல்லப்பட்டார்.

**6. நிலைப்பாடு (Condition):** *(எ.டு).* ஆண்டான் கூலியைக் குறைத்தால் அடிமை வேலையைக் குறைப்பான்.

மாணவர் குறித்த காலத்தில் பணங்கட்டினால் தான் அவர் தேர்வெழுத முடியும்.

**7. ஒப்பீடு (Comparison):**

*(எ.டு).* அருணகிரி நாதர் பாடியதைப்போல வண்ணம் பாடுகின்றவர் முன்னுமில்லை, பின்னு மில்லை.

**8. வைத்துக்கொள்வு (Supposition) அல்லது இணக்கம் (Concession):**

*(எ.டு).* உலகமெல்லாம் நிலை மாறினும் சான்றோர் ஒழுக்கநிலை மாறார்.

கம்பர் எத்துணையோ உருக்கமாய்த் தடுத்து மொழிந்தும் மூன்றாங் குலோத்துங்கச் சோழன் அம்பிகாபதியைக் கொன்றுவிட்டான்.

**9. மாறு (Contrast):**

*(எ.டு).* மனுதரும சாத்திரம் கூறுவதற்கு மாறாக எல்லார்க்கும் ஒப்பத் தண்டம் விதிப்பது திருக்குறள்.

**10. அளவு:**

*(எ.டு).* திருடன் உண்மையை ஒப்புக்கொள்ளும் வரையும் காவற்சேவகர் அவனைக் கடுக வதைத்தனர்.

விலாப்புடைக்க விருந்துண்டான்.

**5.64 மூவகைக் கிளவியங்களும் தனித்தனி வேறு பெயர்க் கிளவியத்தைத் தம்முள் ளிட்டும் வரும். அன்று அவை கிளவி யத்தை உள்ளிட்ட கிளவியங்களாம்.**

*(எ.டு).* 1. அறிவியலால் (விஞ்ஞானத்தினால்) என்றும் தீமையே விளையும் என்று பலர் கூறுவது அறியாமைப் பாற்பட்டதே.

2. தேர்வு வேண்டா என்று மாணவர் சொல்லுகிற காலம் இது.

இவை இரண்டும் முறையே, கிளவியத்தை உள் ளிட்ட பெயர்க் கிளவியமும் பெயரெச்சக் கிளவியமும் வினையெச்சக் கிளவியமுமாகும்.

1. ஆவதில், 'அறிவியலால் விளையும்' என்பது ஒரு பெயர்க்கிளவியம்; 'அறிவியலால்... கூறுவது' என்பது, அக்கிளவியத்தை உள்ளிட்ட பெயர்க் கிளவியம்.

2. ஆவதில், 'தேர்வு வேண்டா' என்பது ஒரு பெயர்க் கிளவியம்; 'தேர்வு... சொல்லுகிற' என்பது, அக்கிளவியத்தை உள்ளிட்ட பெயரெச்சக் கிளவியம்.

**5.65 கிளவியங்களை உள்ளிட்ட கிளவியமும் உண்டு.**

*(எ.டு).* 'அன்பே கடவுள்' என்று திருமூல நாய னார் கூறியது அனைவர்க்கும் உடன்பாடே என்று ஆசிரியர் மறைமலை அடிகள் சொல்வது ஒரு சிலர்க்கு வருத்தத்தை விளைப்பின், வேறு எதைத் தான் இந்நாட்டார்க்கு எடுத்துச் சொல்வது?

இதில், 'அன்பே கடவுள்' என்பது ஒரு பெயர்க் கிளவியம்; 'அன்பே.... கூறியது' என்பது, அக் கிளவியத்தை உள்ளிட்ட பெயர்க்கிளவியம்; 'அன்பே... உடன்பாடே' என்பது அவ்விரு கிளவியங்களையும் உள்ளிட்ட பெயர்க்கிளவியம்; 'அன்பே... சொல்வதும்' என்பது, அம் முக்கிளவியங்களையும் உள்ளிட்ட பெயர்க்கிளவியம். இங்ஙனம் இது மும்முடிக் கிளவியத்தை உள்ளிட்ட கிளவியமாகும்.

**5.66 வாக்கியங்கள் அமைப்பு முறை பற்றி, (1) தனி வாக்கியம் (Simple sentence), (2) கூட்டு வாக்கியம் (Compound sentence), (3) கலப்பு வாக்கியம் (Complex**

**sentence), (4) கதம்ப வாக்கியம் (Mixed sentence) என நால்வகைப்படும்.**

(அ) ஒரே எழுவாயும் ஒரே முற்றுப் பயனிலையும் உள்ள வாக்கியம் தனி வாக்கியம்.

*(எ.டு).*

1. மயில் ஆடுகிறது.

2. ஒரு மயில் சோலையில் ஆடுகிறது.

3. ஓர் அழகான மயில் சோலையில் ஆடுகிறது.

4. ஒரு மிக அழகான ஆண் மயில் மேலைமலைப் பூஞ்சோலையில் நாள்தொறும்காலை மாலை களிப்புடன் தோகை விரித்தாடுகிறது.

**5.67 ஓர் எழுவாயும் பல முற்றுப் பயனிலை களுங்கொண்ட வாக்கியமும், பல எழு வாயும் பல முற்றுப் பயனிலையும் கொண்ட வாக்கியமும் கூட்டு வாக்கியமாகும். (Compound sentence).**

*(எ.டு).* 1. மாணவரே! நீங்கள் உங்கள் பாடத்தை நன்றாய்ப் படிக்க வேண்டும்; தேர்வில் சிறப்பாகத் தேற வேண்டும்.

2. திருவாளர் கா. சுப்பிரமணியப் பிள்ளை இளமை யிலேயே ஆங்கிலம் தமிழ் சமற்கிருதம் மூன்றையுங் கற்றார்; அவற்றில் 'கலைத்தலைவன்' (M.A.) பட்டம் பெற்றார்; பின்பு சட்டக்கல்லூரியிற் பயின்று 'சட்டத் தலைவன்' (M.L.) பட்டமும் பெற்றார்; அதன்பின் சட்டக்கல்லூரியில் ஈராண்டு விரிவுரையாளரா யிருந்தார்; பின்னர் நூலாசிரியராகவும் உரையாசிரி யராகவும் சிலகாலம் தொண்டு செய்தார்; இறுதியில் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்திற் பேராசிரியராக அமர்ந்தார்; அங்கு நோய்வாய்ப்பட்டு நெல்லை சென்றார்; சில மாதங்கட்குப் பின் 50ஆம் அகவையில் தம் இல்லத்தில் இறையடி யெய்தினார்.

இவ்விரு வாக்கியங்களும் ஒரே எழுவாயும் பல முற்றுப் பயனிலைகளுங் கொண்டவை. இவை ஒரே எழுவாய் கொண்டனவாயினும், முதற்பயனிலைக்குப் பிற்பட்ட பயனிலைதொறும் எழுவாய்க்கேற்ற மாற்றுப் பெயரை வருவித்து அதை எழுவாயாக்க் கருதல் வேண்டும். அல்லாக்கால் கூட்டு வாக்கியம் என்னும் பெயர் பொருந்தாது.

கூட்டு வாக்கியங்களில், ஓர் எழுவாயும் அதன் முற்றுப் பயனிலையும் சேர்ந்த பகுதி ஒரு கிளவியம் ஆகும். மேற்கண்ட வாக்கியங்களுள், முன்னது இரு கிளவியங்களையும், பின்னது எண் (எட்டுக்) கிளவியங்களையும் கொண்டது.

முன்னதில் உள்ளவை:

1. மாணவரே! நீங்கள் உங்கள் பாடத்தை நன்றாய்ப் படிக்க வேண்டும்.

2. (மாணவரே!) நீங்கள் தேர்வில் சிறப்பாகத் தேற வேண்டும்.

பின்னதில் உள்ளவற்றைப் பின்வருமாறு விரித்துக் கண்டுகொள்க.

1. திருவாளர் கா. சுப்பிரமணியப்பிள்ளை இளமை யிலேயே ஆங்கிலம், தமிழ், சமற்கிருதம் மூன்றையுங் கற்றார்.

2. அவர் அவற்றில் 'கலைத்தலைவன்' (M.A.) பட்டம் பெற்றார்.

இங்ஙனமே எஞ்சியவும்.

**5.68 கூட்டு வாக்கியங்களின் பொருள் தொடர்பு, பின்வருமாறு பலவகையில் அமையலாம்:**

**1. காரண காரியம்:**

*(எ.டு).* மழை பெய்கிறது; பயிர் விளைகிறது.

தோட்டிபோல உழைக்க வேண்டும்; துரைபோலச் சாப்பிட வேண்டும்.

மடியிற் கனமில்லை; வழியிற் பயமில்லை.

**2. முன்பின்மை:**

*(எ.டு).* மணியடித்தது; கைகாட்டி சாய்ந்தது; வண்டி வந்துவிட்டது.

**3. உடனிகழ்ச்சி:**

*(எ.டு).* இங்கொருவர் வினவுகின்றனர்; அங் கொருவர் வினவுகின்றனர்.

நம்பி வருகின்றான்; நாயும் உடன்வருகின்றது.

ஒட்டக்கூத்தர் இரண்டாம் குலோத்துங்கச் சோழனுக்கு ஆசிரியராகவும் இருந்தார்; அமைச்ச ராகவும் இருந்தார்.

**4. மறுநிலை (Alternative):**

*(எ.டு).* அங்கதன் செல்ல வேண்டும்; இல்லா விட்டால் அனுமன் செல்ல வேண்டும்.

மாவைத் தின்றால் பணியாரமில்லை; பணியா ரத்தைத் தின்றால் மாவில்லை.

சில நேரம் படிப்பேன்; சில நேரம் எழுதுவேன்.

**5. முரணிலை:**

*(எ.டு).* ஊரெங்கும் பேர்; வீடு பட்டினி.

அவர் எத்துணையோ சொல்வார்; ஆனால், ஒன்றுகூடச் செய்யமாட்டார்.

கூட்டம் நிகழும்; ஆனால் மழை வந்துவிட்டது.

பொழுதடைந்து இருட்டிவிட்டது; வழி தெரிய வில்லை; போகவேண்டிய இடமோ மிகத் தொலைவு.

**6. பலநிலை:**

*(எ.டு).* உலகம் இப்படியும் சொல்லும்; அப்படியும் சொல்லும்.

காடாண்டவரும் பாண்டவர்; நாடாண்டவரும் பாண்டவர்.

ஒன்றா சொல்கிறான்? ஒரு வழியா போகிறான்?

**7. ஒப்பீடு (Comparison) அல்லது வேற்றுமை (Contrast):**

*(எ.டு).* இரப்பது எல்லாவற்றிலும் இழிவு; அதிலும் இழிவு இரப்போனுக்கு இல்லையென்றல்.

ஒன்றைச் சொல்லாது கொடுப்பவர் பூவாது காய்க்கும் மரம் போல்வர்; சொல்லிக் கொடுப்பவர் பூத்துக் காய்க்கும் மரம் போல்வர்; சொல்லியுங் கொடாதவர் பூத்துங் காயாத மரம் போல்வர்.

**8. ஒப்புமைக் கூட்டம்:**

*(எ.டு).* குட்டக் குட்டக் குனிகிறவனும் முட்டாள்; குனியக் குனியக் குட்டுகிறவனும் முட்டாள்.

போன மாட்டைத் தேடுவாருமில்லை; வந்த மாட்டைக் கட்டுவாருமில்லை.

**5.69 கூட்டு வாக்கியங்களிலுள்ள பல கிளவிய எழுவாய்களும் ஒரே சொல்லைத் தனித்தனி பயனிலையாகக்கொண்டு முடியின், அவற்றை ஒரே பயனிலை கொண்டு முடியுமாறு புணர்த்தெழுவது வழக்கம்.**

*(எ.டு).* அறிஞர் கல்வியைச் சிறப்பாக விரும்புவர்; அறிவிலிகள் செல்வத்தைச் சிறப்பாக விரும்புவர்.

இவ்வாக்கியம் சுருக்கம் பற்றி,

அறிஞர் கல்வியையும் அறிவிலிகள் செல்வத்தையும் சிறப்பாக விரும்புவர்.

என்றெழுதப் பெறும்.

**5.70 ஒரே சொல்லைப் பயனிலையாகக் கொண்டு முடியும் பல எழுவாய்கள் ஒரே செயப்படுபொருள் கொண்டிருப்பின், கூட்டு வாக்கியமாய் எழுதப்பெறாது தனி வாக்கியமாய் எழுதப் பெறுவதே பெரும் பான்மை.**

*(எ.டு).* அறிஞரும் அறிவிலிகளும் இன்னிசையை விரும்புவர்.

இங்ஙனமன்றி, அறிஞரும் இன்னிசையை விரும்புவர்; அறிவிலிகளும் இன்னிசையை விரும்புவர்.

என்றெழுதுவது ஒரு கருத்தை வற்புறுத்துமாயின் பொருத்தமுடையதாம். இவ்வடிவில் அது கூட்டு வாக்கியமாகும்.

**5.71 ஓர் எழுவாயின் பல வினைகள் தொடர்ந்துவரின் இறுதி வினை தவிர ஏனையவெல்லாம் எச்சவினையாகவும் இருக்கலாம். ஆதலால், ஆங்கிலத்தில் கூட்டு வாக்கியமாயிருப்பது தமிழிலும் கூட்டு வாக்கியமாயிருத்தல் வேண்டும் என்னும் யாப்புரவு (நியதி) இல்லை.**

*(எ.டு).* நம்பி பள்ளிக்கூடம் சென்று தன் பாடங்களைப் படித்தான்.

Nambi went to school and learnt his lessons.

இங்ஙனம், ஆங்கிலத்திற் கூட்டு வாக்கியமா யிருப்பது, தமிழில் தனி வாக்கியமாய் அமைதல் காண்க.

**5.72 ஒரு தலைமைக் கிளவியமும் (Principal of Main Clause) ஓர் அல்லது**

**பல சார்பு கிளவியமும் (Subordinate or Dependent Clause or Clauses) கொண்ட வாக்கியம், கலப்பு வாக்கியம் ஆகும்.**

*(எ.டு).* 1. கால்டுவெல் கண்காணியர், தமிழ் ஒரு தனிமொழி என விளக்கியுள்ளார்.

2. கூற்றுவன் வரும் வேளை யாருக்கும் தெரியாது.

3. ஆயிரம் பேர் வந்தாலும், யான் அணுவளவும் அஞ்சேன்.

இவற்றுள்:

முதல் வாக்கியத்தில், 'கால்டுவெல் கண்காணியார் விளக்கியுள்ளார்' என்பது தலைமைக் கிளவியம்; 'தமிழ் ஒரு தனிமொழி' என்பது சார்பு கிளவியம்.

2ஆம் வாக்கியத்தில், 'வேளை யாருக்கும் தெரியாது' என்பது தலைமைக் கிளவியம்; 'கூற்றுவன் வரும்' என்பது சார்பு கிளவியம்.

3ஆம் வாக்கியத்தில், 'யான் அணுவளவும் அஞ்சேன்' என்பது தலைமைக் கிளவியம்; 'ஆயிரம் பேர் வந்தாலும்' என்பது சார்பு கிளவியம்.

தலைமைக் கிளவியம் தன்னில் தானே கருத்து முடிந்ததாயிருக்கும்; சார்பு கிளவியம் தன்னளவில் கருத்து முடியாமல் தலைமைக் கிளவியத்தைச் சார்ந்தே கருத்து முடிவதாயிருக்கும்.

சார்பு கிளவியம், மூவகைக் கிளவியங்களுள், எதாகவும் இருக்கலாம்.

**5.73 கூட்டு வாக்கியமும் கலப்பு வாக்கியமும் கலந்து வருவது கதம்ப வாக்கியம் (Mixed Sentence).**

*(எ.டு).* ஆங்கிலேயர் பாஞ்சாலங்குறிச்சி வேளாகிய கட்டபொம்முவிடம் கப்பங் கேட்டபோது, அவர் 'வானம் பெய்கிறது; ஞாலம் (பூமி) விளைகிறது. நாங்கள் ஏன் உங்கட்குக் கப்பங் கட்ட வேண்டும்?' என்று செப்பினாராம்.

இதில் 'ஆங்கிலேயர்.......... கேட்டபோது' என்னும் வினையெச்சச் சார்பு கிளவியமும், 'அவர் செப்பினாராம்' என்னும் தலைமைக் கிளவியமும், சேர்ந்து ஒரு கலப்பு வாக்கியமாகும்.

இனி, 'அவர்.... செப்பினாராம்' என்னும் பகுதி, மீண்டும் ஒரு கலப்பு வாக்கியமாகும். இது கலப்பு வாக்கியத்துள் வந்த கலப்பு வாக்கியம். இதில், 'அவர் செப்பினாராம்' என்பது தலைமைக் கிளவியம்; 'வானம்..... கட்ட வேண்டும்' என்பது பெயர்ச் சார்பு கிளவியம்.

இப்பெயர்ச் சார்பு கிளவியம், தன்னளவில் ஒரு கூட்டு வாக்கியமாகும். இதிலுள்ள சமநிலைக் கிளவியங்கள் 'வானம் பெய்கிறது', 'ஞாலம் விளைகிறது', 'நாங்கள் ஏன் உங்கட்குக் கப்பங் கட்ட வேண்டும்?' என்னும் மூன்றுமாகும்.

இங்ஙனம் இரு வகை வாக்கியங்களும், ஒரே கதம்ப வாக்கியமாகக் கலந்துள்ளமை காண்க.

## வேற்றுமைத் தொகை தொடரியல் பாங்குடையது

**5.74 வேற்றுமைக் கருத்துகள் உலக முதன் மொழியில் தோன்றியதால் தொடர்மொழி வடிவம் பெற்றுள்ளது. வேற்றுமையெட்டும் இலக்கண நூலார் வகுத்த வரிசையொழுங்கில் தோன்றியிருக்க முடியாது. அவ்வவ்வேற்றுமைக் கருத்துத் தோன்றிய போது அவ்வவ் வேற்றுமையுருபு தோன்றி யிருத்தல் வேண்டும்.**

*(எ.டு).* அ. எழுவாய் கருத்து: ஒருவன் முதலில் தானே வினைமுதலாயிருந்து ஒன்று செய்வதே இயல்பாதலாலும் ஒருவன் வரலாற்றை 'ஓரூரில் ஒருவன் இருந்தான்' என்று தொடங்குவதே மரபாதலானும் முதலாவது எழுவாய்க் கருத்துத் தோன்றி யிருத்தல் வேண்டும். அதற்கு உருபு தேவையில்லை. இயல்பான பெயரேபோதும். பன்மடித் திரிபு மொழி களிலேயே எழுவாய் வேற்றுமைக்கும் உருபு அமைக் கப்பட்டுள்ளது. தமிழ் இயன்மொழி யென்பதற்கு அதில் எழுவாய் உருபின்மையும் ஒரு சான்றாம்.

ஆ. விளிக்கருத்து: ஒருவன் ஒருத்தியுடன் அல்லது இன்னொருவனுடன் பேசுமுன், அவரை விளிக்காது இருக்க முடியாது. இது மொழி தோன்றாத நிலையிலும் விளி நிகழும்.

இ.இடக்கருத்து: ஒருவன் ஒரு வினை செய்யினும், ஒன்றும் செய்யாது சும்மாவிருப்பினும், அவன் இருக்க ஓர் இடம் வேண்டும். ஆதலால் இடக்கருத்து அடுத்துத் தோன்றியிருக்கலாம்.

ஈ. உடைமைக்கருத்து: மலைக்குகையில் வசித்த அநாகரிக மாந்தனுக்கும் நிலையான தனியிடம் வேண்டியிருந்ததினால் உடைமைக் கருத்துத் தோன்றியிருக்கும்.

உ. செயப்பாட்டு வினைக்கருத்து: மாந்தன் வினைகளுள், சிலவற்றிற்கு ஒன்றும் தேவையில்லை. சிலவற்றிற்கு ஏதேனும் வேண்டும். எழுதலும் நடத்தலும் தாமாக நிகழும். ஆயின் பறித்தலும் உண்டலும் காய்கனி போன்றவையன்றி நிகழா. உண்ணுதல் உயிர் வாழ்க்கைக்கு இன்றியமையாத வினை. ஒன்றும் புதிதாய்ச் செய்யாத அநாகரிகக் காலத்திலும் மாந்தன் இயற்கையுணவை உண்டு வந்தான். அதனால் செயப்பாட்டு வினை சார்ந்த செய்பொருட் கருத்துத் தோன்றியிருக்கும்.

ஊ.கருவிக்கருத்து: கிழங்கைத் தோண்டுவதற்கும், விலங்கு பறவைகளைக் கொல்வதற்கும், கல்லும் கோலும் போன்ற கருவிகள் தேவைப்பட்டபோது, கருவிக் கருத்துத் தோன்றியிருக்கும்.

எ. கொடைக்கருத்து: பறித்தும் அகழ்ந்தும் வேட்டையாடியும் கொண்டு வந்த பொருள்களை, மனைவிகட்கும் உற்றார் உறவினர்க்கும் கொடுத்த போது, கொடைக் கருத்துத் தோன்றியிருக்கும்.

ஏ. நீக்கக்கருத்து: மரம் ஏறிக் கனி பறித்தவனும், மலையேறித் தேனெடுத்தவனும் கீழிறங்கியபோது அல்லது தவறி விழுந்தபோது அல்லது காய்கனி மரத்தினின்று கீழே விழுந்தபோது, நீக்கக் கருத்துத் தோன்றியிருக்கும்.

ஐ. உடனிகழ்ச்சிக் கருத்து: மாந்தன் கூடி வாழும் உயிரியாதலால், ஓரிடத்திலிருப்பினும், ஒன்றைச் செய்யினும் ஓரிடம் செல்லினும், பெற்றோருடன், மனைவியுடன், மக்களுடன் அல்லது நாயுடன் அல்லது கருவியுடன் இருக்கவும் செல்லவும் நேர்ந்த போது உடனிகழ்ச்சிக் கருத்து தோன்றியிருக்கும்.

இங்ஙனம் எண் அல்லது தொகை வேற்றுமை கருத்துகளும் குறிஞ்சி வாழ்க்கை நிலையிலேயே முந்து தமிழர் மொழியில் தோன்றியிருத்தல் வேண்டும்.

**5.75 தொடரில் நிற்கும் இடத்தால் சொற்கள் பொருள் வேறுபாட்டைப் புலப்படுத்துகின்றன.**

***(எ.டு).*** ஆடு வந்தது (எழுவாய் இடம்–வினைக்கு முதன்மை).

வந்தது ஆடு (பயனிலை இடம் – எழுவாய்க்கு முதன்மை).

அவன் ஆடு விற்றான் (செயப்படுபொருள்– இடம் – செயப்படுபொருளுக்கு முதன்மை).

**5.76 தோன்றா எழுவாய் நிலையிலும் தொடர் அமையும்.**

***(எ.டு).*** எழுந்து வா (நீ – தோன்றா எழுவாய்).

நடப்பேன், ஓடுவேன், ஆடுவேன் (நான்– தோன்றா எழுவாய்).

**5.77 தொடர்மொழியில் ஆளப்படும் சொல்லாட்சிகள் சொல்லுவோனின் ஒலிக்குறிப்பு உணர்ச்சிக் குறிப்பு வேறுபாடுகளால் உட்குறிப்பை உணரச் செய்யும்.**

***(எ.டு).*** அவன் பெரிய ஆள், எச்சரிக்கையாய் இரு.

உட்குறிப்பு:

1. உருவத்தால் பெரியவன்.

2. செல்வம், கல்வி, நிலை,பண்பு ஆகியவற்றால் மதிக்கத் தக்கவன்.

3. கொடியவன், தீமை செய்வதில் பெரியவன்.

சொல்லுவோனின் உணர்ச்சிக்குறிப்பு ஒலிக் குறிப்புகளால் மேற்கண்ட பொருள்களில் ஒன்றினை உய்த்துணரலாம்.

**5.78 உய்த்துணர் சொல்லாட்சிகள் பிறிது பொருள் நவிற்சியாகவும் அமையும்.**

***(எ.டு).*** ஒரு இலை கூட அசையவில்லை (காற்றடிக்கவில்லை என்பது உய்த்துணர் பொருள்).

**5.79 நெடிற்றொடர்க் குற்றுகரம் வினையாக ஆளப்படும்போது தன்வினையாகவும் ஒற்று இரட்டித்து வன்றொடர்க் குற்றுகரம்**

**வினையாக ஆளப்படும்போது பிறவினை யாகவும் தொடராட்சியில் மாறும்.**

*(எ.டு).* 1. ஆடு, ஓடு, ஏறு, ஆறு (தன்வினை).

2. ஆட்டு, ஒட்டு, ஏற்று, ஆற்று (பிறவினை).

**5.80 வினையாகவும் பெயராகவும் உள்ள நெடிற்றொடர் குற்றுகரச் சொற்கள் தொடராட்சியாலின்றி துணிந்த நிலையில் பொருள் வேறுபாடு காட்டாது.**

*(எ.டு).* கூடு (கூடுதல், பறவையின் கூண்டு)

1. நாம் அங்கு கூடுவோம் (வினை).

2. பறவையின் கூடு மேல் மரக்கிளையில் உள்ளது (பெயர்).

**5.81 நெடிலடுத்த மென்றொடர்க் குற்றுகரச் சொல் வினையாக இருப்பின் வன் றொடர்க் குற்றுகரச் சொல்லாகும்போது பெயராகும். பெயர்ச்சொல்லாயின் வன் றொடர்க் குற்றுகரச் சொல்லாகி வேற் றுமைப் பெயரடி (oblique)யாக மாறும். இப்பொருள் வேறுபாடு தொடராட்சியா லன்றிக் குறித்த பொருள் விளங்காது.**

*(எ.டு).* 1. தீண்டு (வினை) – தீட்டு (பெயரடி).

2. கூண்டு (பெயரடி) – கூட்டு = கூட்டினுடைய, கூட்டிலுள்ள (பெயரடி).

**5.82 நெடிற்றொடர் குற்றுகரம் ஏவல் தன் வினையாகவும், அதன் நெடிலடுத்த வன் றொடர்க் குற்றுகர வடிவம் பிறவினையாக வும் மாறும். இத்தகைய சொல்லாட்சிகள் தொடராட்சியாலன்றித் தனியாகவே குறித்த பொருள் உணர்த்தும்.**

*(எ.டு).* கூடு (தன்வினை)

கூட்டு (பிறவினை).

**5.83 பெயராகவும் வினையாகவும் பெய ரெச்சமாகவும் வன்றொடர் குற்றுகரச் சொற்கள் தொடராட்சியில் பொருட் பாட்டைத் தெளிவுறுத்தும்.**

*(எ.டு).* 1. <u>கூடு</u> – பறவையின் கூடு (பெயர்)

2. எல்லோரும் ஓரிடத்தில் <u>கூடுவது</u> நல்லது – கூடுதல் (வினை).

3. கூட்டு – கூட்டு உடைந்தது (பெயர்).

4. கூட்டுப்படையல் வைத்தார்கள் (பெயரெச்சம்).

**5.84 நெடிலடுத்த மென்றொடர்க் குற்று கரச் சொல் வினையாக இருப்பின் வன் றொடராகிப் பெயராகும். அதுவே மீண் டும் வினையாகின் வேறொரு சொல்லின் திரிவினையாகும். பெயராகின் வன்றொ டராகி வேற்றுமைப் பெயரடியாகும்.**

*(எ.டு).* <u>1. தீண்டு</u> (வினை) – <u>தீட்டு</u> – தீண்டா நிலை (பெயர்).

2. <u>தீட்டு</u> – கத்தியைத் தீட்டுதல் (வினை) – இது தீற்று – தீட்டு எனும் திரிவினை.

3. கூண்டு – மக்களால் அமைக்கப்பட்டது – செயற்கைக் கூண்டு (பெயர்).

4. கூண்டு > கூட்டு – கூட்டுக்கிளி = கூட்டிலுள்ள கிளி (வேற்றுமை பெயரடி).

மேற்கண்டவை திரிசொற்கள் அன்மையின் இலக்கண வகையாலான வேறுபாடு கொண்டிருத் தலின் தொடராட்சியாலன்றிப் பொருட்பாடு புலனா காதவை.

*Every word is an historical fact.*

MaxMuller

# 6. திராவிடவியல் – ஆரியவியல்

## (Dravidian and Aryan)

> *"Language is fossil poetry and history as well Language is the amber in which a thousand precious and subtl e thoughts have been safely embedded and preserved. Far beyond all written records in a language, the language itself stretches back and offers itself for more investigation"*
>
> *- R.C. Trench*

<u>நெ.மு.</u>

**6.1 பெயர்ச்சொல்லுக்குத் துணை யீறாக வந்த 'கு' ஈறு குல் எனத் திரிந்து கள் என வடிவம் பெறும்.**

*(எ.டு).* முயல்–முயல்கு–முயல்குல்–முயல்கள்.

யானை–<u>தெ.</u> யேனிகு–யேனிகுலு.

**6.2 ஏனைய மொழிகளில் ஊடாடித் தமிழில் மறைந்து போன முந்துதமிழ்ச் சொல்லாட்சி களையும் குறிப்பாக வினை வடிவங் களையும் மீட்டமைக்கலாம்.**

*(எ.டு).* வங்குதல் (வளைதல்) <u>தெ.</u> வங்கு.

இடு–பெடு–பெட்டு (வைத்தல்) <u>தெ.</u> பெட்டு

தாகு (பருகுதல்) <u>தெ.</u> தாகு.

தாழ்கு (தாழ்வு, குறைதல்) <u>தெ.</u> தக்கு *(taggu)*

தழங்கு–தக்கு (பேச்சு) குட. தக்கு (பேச்சு) <u>E.</u> *talk.*

துருவு–துரத்து. <u>E.</u> *drive.*

**6.3 அன்றாடு வழக்கில் முன்பே செந் தரப்பட்ட சொற்களும் கல்லாத மக்கள் சிறு கூட்டங்களாகப் பிரிந்து தனித்து வாழும் சூழலில் மேன்மேலும் குறுகுகின்றன.**

*(எ.டு).* <u>த.</u> அவ்வை><u>துட.</u> அவ்    எருது–எயித்

<u>த.</u> ஐயன்><u>துட.</u> இய், எயி    ஒடு–ஒட்

<u>த.</u> அண்ணெ><u>துட.</u> ஞண்    பேன்–போன்

<u>த.</u> அக்கன்><u>துட.</u> அக்ன்

<u>த.</u> எருமை><u>துட.</u> இர்

<u>த.</u> காய்><u>துட.</u> கோய்

**6.4 தொன்முது தமிழ் வடிவங்கள் ஓரசைச் சொல்லை தக்க வைத்துக் கொள்வதும் உண்டு.**

*(எ.டு).* <u>த.</u> பூ (மலர்) ><u>துட.</u> பூல் <u>இந்.</u> பூல்

**6.5 தமிழில் சிறப்புப் பொருள் தரும் சொற்கள் பிற மொழிகளில் பொதுப் பொருள் தரும்.**

*(எ.டு).* <u>த.</u> செப்புதல்><u>தெ.</u> செப்பு.

<u>த.</u> தா > <u>L.</u> தா.

**6.6 சொல் உணர்த்தும் பொருள் மாறி னாலோ, சொல்லின் வடிவம் திரிந்தாலோ அம்மொழி மற்றொரு மொழியாக மாறி விடுகிறது.**

*(எ.டு).*

| <u>தமிழ்</u> | – <u>தெலுங்கு</u> |
|---|---|
| கம் = இரும்புத்தொழில் | – கம் = உழவுத்தொழில் |
| கொல் = வியப்பு | – கொல் = புதுமை, புதியது |
| பருப்பு–வித்தின் பிளப்பு | – பப்பு = வித்தின் பிளப்பு |
| நெருப்பு | – நெப்பு (தீ) |

**6.7 பேச்சியல்பு (speech habit) வேறு பாடுகளால் வட்டார வழக்குகளில் புகும் புதிய தொடராட்சிகள் கிளைமொழி யாகவும் தனிமொழியாகவும் பிரியக்**

**காரணமாகும். கடுங் கொச்சை வழக்கு களும் தோன்றுகின்றன.**

*(எ.டு).* வரும்பொழுது > ம. வரும்போழ்

க. பரஒத்து

வரும் அத்து – வரத்து – வரச்சே (கொச்சை)

வரத்து – வரத்துலே (கொச்சை)

வரத்து வரச்சலெ – வரசொல்ல (கடுங்கொச்சை).

**6.8 முந்து திரவிடம் எனப்படும் முந்து தமிழ் இன்றைய தமிழின (திரவிட) மொழிகள் அனைத்திலும் உள்ள சொல் வளம் கொண்டது. முந்துதமிழ் மக்களின் இடப்பெயர்வினால் கொடுந்தமிழாகவும் செந்தமிழாகவும் வழங்கி தமிழில் வழக் கிழந்தவை உடன் கொண்ட சொல் எனவும் வட்டாரக் கொடுந்தமிழ்ச் சொல் எனவும் பிரிக்கப்படும்.**

*(எ.டு).* 1. உடன் கொண்ட சொல்வளம்:

சொல்–செல்–செல்பு > தெ. செப்பு (–தல்), (ஒ.நோ.ஒல்–ஒப்பு). இல் (வீடு) செருகு–செகு–சிகு > க. சிக்கு(தல்), (மனை–வீடு)

அத்தன் (தந்தை)–அச்சன்> ம. அச்சன், தம்பெருமாட்டி > ம. தம்புராட்டி, ம. வீடு.

2. வட்டார வழக்காகிய கொடுந்தமிழ்ச் சொல்வளம்

த. எனக்கு – னேக்கு

**6.9 உடன் கொண்ட சொல்வளமாய் திரவிட மொழிகளில் வழங்கும் சொற் களுக்குத் தமிழில்தான் வேர் மூலம் அல்லது வேரடி காணமுடியும்.**

*(எ.டு).* 1. தெ. துன்னுதல்:ஏர் உழுதல் ம. துன்னு:தைத்தல் – இவ்விரண்டுக்கும் துல்–துன் (உட் செலுத்து) எனும் வேர் தமிழில் உள்ளது.

க. தெகு:வாங்கு, தெ. தெச்சு:வாங்கு – இவ்விரண்டுக்கும் தெவ் எனும் வேரடி தமிழில் உள்ளது. "தெவ்வு கொளற் பொருட்டே" (தொல். 3,4,5).

**6.10 உடன்கொண்ட சொல் வளத்தில் அவ்வக் காலத்திய திசைச்சொல் திரி சொற்களும் அடங்கும்.**

*(எ.டு).* த. புலன் > ஆத். புலன் = கண்

**6.11 தமிழ் தவிர்ந்த ஏனைத் திரவிட மொழிகள் என்பவை கொடுந்தமிழ்ச் சொல் லாட்சிகளைப் பகுதியாகக் கொண்டவை.**

*(எ.டு).* த. எருது > கோத. எத்.

**6.12 திரவிட மொழிச் சொற்கள் அனைத் துக்கும் தமிழில் வேர்ப்பொருளும் வேரடி யும் காண முடியும்.**

*(எ.டு).* தெ. ராய் (கல் < த. அறை (கல்)

**6.13 பழங் கன்னடம், பழந்தெலுங்கு, பழ மலையாளம் உள்ளிட்ட திரவிட மொழி களின் முந்து நிலை வடிவங்கள் தமிழுக்கு மிகவும் நெருக்கமாய் இருத்தலின் தமிழே திரவிட மொழிகளுக்குத் தாய் என்பது புலனாகும்.**

*(எ.டு).* த. போழ்து > ம. போழ், தெ. பொத்து

**6.14 திரவிட மொழிகளின் சொல்வளம் செந்தமிழ், கொடுந்தமிழ்த் திரிபு, வடமொழி யுள்ளிட்ட கடன் சொல் சேர்ப்பு எனும் மூவகையில் அடங்கும்.**

*(எ.டு).* தெ. அக்கடஉன்னதி சைலம் = அக்கடை உள்ளது சாரல் குன்று.

## தமிழ் – மலையாளம்

**6.15 சிறப்புப் பொருள் தரும் சொற்கள் மலையாளத்தில் பொதுப்பொருள் (generali-sation) சுட்டும் சொற்களாகும்.**

*(எ.டு).* த. வெள்ளம் (புதுப்புனல்) > ம. நீர்.

த. மூரி (கிழ எருது) > ம. மூரி (எருது).

**6.16 வினையீறுகள் பால்காட்டும் ஈறு பெறாமல் வழங்கும்.**

*(எ.டு).* த. வந்தான் > ம. வந்நு.

**6.17 மென்றொடர்க்குகற்றுகர ஈறுகள் இன மெல்லினமாய் திரியும்.**

*(எ.டு).* எழுந்து – எழுந்நு.

வீழ்ந்து–வீழ்நு (வீணு)

அங்கு–அங்ஙு

**6.18 நிகழ்கால வினைமுற்று உந்து ஈற்றின் மெல்லினத் திரிபீறு ஆகும்.**

*(எ.டு).* செய்கு–செய்குந்து–செய்குந்து–செய்யுந்நு.

**6.19 இன் சாரியையொடு புணர்ந்த 'கு' உருபு கெட்டு 'னு' ஈறு பெறும்.**

*(எ.டு).* அது+இன்+கு–அதினுக்கு–அதின்கு–அதின்னு.

**6.20 இன் சாரியையொடு புணர்ந்து உருமாறிய 'அது' மரூஉ முடிபு பெற்று உடே, டே, ஆகும்.**

*(எ.டு).* மரம்+அத்து+இன்+அது–மரத்தினது–மரத்தின்து–மரத்தின்றே – மரத்திண்டே.

அவன்+அது–அவனது–அவன்து–(அவனுடைய)–அவன்றே–அவன்டே.

**6.21 ந–ஞ, ம–வ எனும் போலித் திரிபுகள், சொற்களில் கொடு மலையாள வழக்காய் அமையும்.**

*(எ.டு).* த. நரம்பு–ஞரம்பு.

செய்ம்மின்–செய்வின்.

**6.22 மலையாளத்தில் றகர ரகர வேறு பாடுகள் சிற்சில இடங்களில் வேரடி நோக்காது மறையும்.**

*(எ.டு).* உறவு–உரவு.

**6.23 கடுங்கொச்சை வழக்குகள் பேச்சியல்பால் அன்றாடு வழக்குச் சொற்களாகும்.**

*(எ.டு).* அகற்றுக–அகத்துக.

இரு–இரி.

புறா–ப்ராவு

கனா–கினாவு.

செய்ய வேண்டும்–செய்யேண்டு.

வேண்டும்–வேணம்.

**6.24 நிகழ்கால வினையெச்சம் வான், பான் ஈறு பெறும்.**

*(எ.டு).* நடக்க–நடப்பான், நடக்கான்.

உண்ண–உண்ணுவான்–உண்ணான்

குடிக்க–குடிப்பான்.

**6.25 சில சொற்கள் சிறப்புப் பொருள் தவிர்த்து ஒரு மருங்கு பொருளில் ஆளப்படும்.**

*(எ.டு).* அதே–ஆம்

வளரே–மிக

மதி–போதும்

வலிய–பெரிய

**6.26 பழந்தமிழ் நெடுஞ்சுட்டுகள் வழக்கு வீழாமல் நிலைப்புப் பெறும்.**

*(எ.டு).* ஆ+ஆள்–ஆயாள் (அந்த ஆள்)

ஈ+மூரி–ஈ மூரி (இந்த எருது).

**6.27 ஏவல் வினைகள் பெரும்பாலும் வியங்கோள் வடிவிலும் உகர ஈறு பெற்றும் வழங்கும்.**

*(எ.டு).* தா–தரிக, தரு.

வா–வரிக–வரு.

**6.28 அரிய திசைச் சொல்லாட்சிகள் அன்றாடு வழக்கில் நிலவும்.**

*(எ.டு).* பறை=சொல், பேசு.

விளி=கூப்பிடு.

**6.29 வேறுபட்ட துணை வினைகள் பொருட்பாட்டு விரிவு பெற்று வழங்கும்.**

*(எ.டு).* பறையுவான் கழியும் (சொல்ல முடியும்).

பறையுவான் கழியுன்னில்ல (சொல்ல முடியாது).

**6.30 செய்யும் என்னும் வாய்பாட்டு வினைமுற்று தன்மை முன்னிலை படர்க்கை என்னும் மூவிடத்தும் வழங்கும்.**

*(எ.டு).* ஞான் போகும்

நீ போகும்.

அவன் போகும்.

**6.31 வினைச் சொற்கள் பன்மடித் திரிபடையும்.**

*(எ.டு).* வாங்கு–வேங்கு–வேண்டு–வேடி–மேடி=வாங்கு.

வெளு (துணி வெளுத்தல்)–வெளுப்பு–வெடுப்பு–வெடிப்பு–வெடிப்பி=துப்புரவாக்கு.

**6.32 இடவழக்காகிய வினை மரபுகள் பொதுவழக்குச் சொன்மரபுகளாகும்.**

*(எ.டு).* முட்டபுழுங்nுக=அவிக்க.

விளக்குகெடுக்க=அணைக்க

முட்டுக்குத்துக=கொடுக்க.

காலுறமுறிக்க=வெட்டுக.

மடங்ஙி வருக = திரும்பி வருக.

**6.33 அன்றாடு வழக்கில் கொடுந்தமிழ் முறைப் பெயர்கள் புத்தாக்கமாக வழங்கும்.**

*(எ.டு).* மூத்தச்சன், மூத்தப்பன்

பேரப்பன்

மூத்தச்சி

வலியச்சன் = பெரியப்பன்

இளையப்பன், குஞ்ஞச்சன் = சிற்றப்பன்

பெண்ணப்பன் = மாமன்

பெண்ணம்ம = மாமி.

கெட்டியவன் = கணவன்.

கெட்டியவள் = மனைவி.

**6.34 'ன்ற' ஈற்றுப் பெயர்கள் 'ன்ன' ஈற்றுப் பெயர்களாகும்.**

*(எ.டு).* கன்று–கன்னு

பன்றி–பன்னி

**6.35 பெயர்ச்சொற்களில் இரண்டாம் எழுத்தாக வரும் ருகரம் ரிகரமாகத் திரியும்.**

*(எ.டு).* கரும்பு–கரிம்பு.

இரும்பு–இரிம்பு.

செருப்பு–செரிப்பு.

**6.36 மொழியிடை யகரம் தகரமாகும்.**

*(எ.டு).* வாயில்–வாதில்

**6.37 மென்றொடர்க்குற்றுகர ஈற்றுச் சுகரம் 'ஞு' எனத் திரியும்.**

*(எ.டு).* நெஞ்சு–நெஞ்ஞு

**6.38 ககரம் எதிர்மறைத் தொழிற்பெயர் ஈறாக வரும்.**

*(எ.டு).* செய்யாய்க (செய்யாமை)

அறியாய்க (அறியாமை).

**6.39 'அட்டும்' எனும் துணைவினைஈறு அட்டே எனத் திரியும்.**

*(எ.டு).* வரட்டும் – வரட்டே.

செய்யட்டும் – செய்யட்டே.

**6.40 ஏவலொடு சேர்ந்த இகர ஈறு பிறவினை ஆக்கும்.**

*(எ.டு).* காண்–காணி(காட்டு–காண்பி).

**6.41 சுட்டுச்சொல்லொடு சேர்ந்த பொழுது, இடை, கண் எனும் கூட்டுச் சொற்கள் கொச்சைத் திரிபடையும்.**

*(எ.டு).* ஆ – அ + பொழுது – அப்பொழுது – அப்போள்.

ஆ–அ+இடை–அவ்விடை–அவ்விடே.

ஆ–அ+கண்–அங்கன்–அங்ஙனே.

**6.42 லகர மெய்யீற்று வினை ககர ஈறு பெற்று றகர மெய்த் திரிபு பெறாமல் ககர ஒற்றுமிகுத்து வரும்.**

*(எ.டு).* கல்–கல்க்கு. நில்–நில்க்கு.

## தமிழ் – கன்னடம்

**கன்னட மொழி தனிமொழியாகத் திரிந்த தற்குக் காரணமான தமிழ்ச் சொற்றிரிபு நெறிமுறைகள்.**

**6.43 ரகர, லகர, ளகர மெய்யீற்றுச் சொற்கள் உகர உயிர்த்துணை பெற்று முற்றுகர ஈறுகளாகிவிடும்**

*(எ.டு).* ஊர்–ஊரு

யார்–யாரு

எதிர்–எதுரு

நீர்–நீரு

கோல்–கோலு

கேள்–கேளு

தமிழின் குற்றியலுகர ஒலிப்பைத் தெளிவாக ஒலிக்க இயலாத பாகத (பிராகிருத) அயன்மொழிச் சமண முனிவர் வருகை ரகர மெய்யீறு அனைத்தையும் முற்றுகர மாக்கிவிட்டது.

**6.44 மொழி முதல் பகரம் மேட்டுக்குடி யினரான மேலை வந்தேறிகளின் நாவில் வடமொழி அடியண்ண மூச்சொலி (ha) யாகத் திரியும். அது கல்லாத மக்களிடை மீண்டும் உயிரொலியாக மாறிவிடும்.**

*(எ.டு).* 1) பாலு – hālu

பொழுது–hottu

2) பாலு–hālu–ஆலு

பொழுது–hothu–ஒத்து.

**6.45 தெலுங்கு வாயிலாகக் கன்னடத் துக்கு வந்த சொற்களில் மகரம் வகரமாகத் திரியும்.**

*(எ.டு).* த. பாம்பு > தெ. பாமு > க. hāvu–ஆவு.

த. நாம் > தெ. நாமு (மேமு) > க. நாவு.

**6. 46 சொல்லின் இரண்டாம் எழுத்தாக வுள்ள ருகரம் கெடும்.**

*(எ.டு).* இருவர்–இப்பரு

இருத்தேனே–இத்தேனெ

**6.47 நிகழ்கால வினைமுற்றீறாகிய தன்மையொருமை ஏன் ஈறு குறுகி தேற்றேகார ஈற்றசைப் பொருளிழந்து குறுகி பொது ஈறாக நிலை பெறும்.**

*(எ.டு).* இருக்கிறேன் > க. இருத்தேனெ.

**6.48 இறந்த கால தன்மையொருமை வினைமுற்றில் ஏன் ஈற்றில் 'ன்' மெய் கெடும்.**

*(எ.டு).* த. இருந்தேன் > க. இத்தே.

**6.49 பெயர்ச்சொற்களில் மட்டுமன்றி வினைமுற்றுகளின் ஈற்றிலும் முற்றுகரம் ஆளப்பெறும்.**

*(எ.டு).* த. கேட்டேன் > க. கேளிதெனு

த. இருந்தேன்> க. இத்தெனு

த. நொடித்தான் (பேசினான்) > க. நுடிதனு

**6.50 புணரியல் வண்ணம் வல்லெழுத்து மிகுந்த சொற்கள் கன்னடத்தில் வழங்கும் போது வல்லெழுத்து மிகாத முடிபெய்தும்.**

*(எ.டு).* த. நினக்கு > க. நினகெ.

த. ஒலைக்காரன்> க. ஒலகார.

**6.51 'ன்ற' எனும் மெல்லினமெய் இன வல்லின வேற்று நிலை மெய்ம்மயக்கம் 'ந்த' என்றும் 'ன்து' என்றும் திரியும்.**

*(எ.டு).* த. ஒன்று–ஒந்து

த. நின்று–நின்து

**6.52 'ற்ற' எனும் உடனிலை மெய்ம் மயக்கம் 'த்த எனத் திரியும்.**

*(எ.டு).* த. மற்று > க. மத்து

த. மற்றொன்று > க. மத்தொந்து

**6.53 மொழி முதல் வகரம் எடுப்பொலி பகர (b)மாகத் திரியும்.**

*(எ.டு).* த. வேடர் > க. பேடகு (b)

த. வல்லாளன் > க. பல்லாள (b)

**6.54 மொழி முதல் சகரம் ககரமாகத் திரியுயம்.**

*(எ.டு).* த. சில > க. கெலவு

த. செவி > க. கிவி.

**6.55 எதிர்மறை இடைநிலையான ஆகார ஏகார நெட்டுயிர் குறுகும்.**

*(எ.டு).* த. இராதே > க. இரதே.

த. இரேன் > க. இரெனு.

**6.56 வினைச் சொல்லின் சிறப்புப் பொருள் பொதுப் பொருளுக்கு மாறும்.**

*(எ.டு).* த. சிக்குதல் = விலங்கு பறவை போன்றவை வேடன் வலையில் அகப்படுதல். க. சிக்கு = சிடைத்தல், பெறுதல்.

**6.57 பழந்தமிழ்ச் சொற்கள் தக்க வைத்துக் கொள்ளப்பட்டு உடன் கொண்ட சொல்வள மாகும்.**

*(எ.டு).* த. திங்கள் > க. திங்கள்/நிலவு.

த. ஆ (நெடுஞ்சாட்டு) > க. ஆமர (அந்த மரம்)

**6.58 பெயரீற்றுப் பாலிறுகள் கெடும்.**

*(எ.டு).* த. குருடன் > க. குருட

த. மகன் > க. மக

**6.59 பெயர்ச்சொற்களின் ஈற்று மகரம் கெடும்.**

*(எ.டு).* த. மரம் > க. மர

த. தெப்பம் > க. தெப்ப

**6.60 சகர உடனிலை மெய் மயக்கம் எடுப்பொலி (voiced) மெய் மயக்கமாகும்.**

*(எ.டு).* த. அத்தன் > அச்சன் > க. ajja

த. ஆத்தி > ஆச்சி > க. ajji.

**6.61 மூவிடப் பெயர்கள் வினாப்பெயர் அனைத்தும் உகர ஈறு பெறும்.**

*(எ.டு).*

| | தன்மை | முன்னிலை | படர்க்கை |
|---|---|---|---|
| 1 ஒருமை | நானு | நீனு | அவனு, இவனு, அவளு, இவளு |
| பன்மை | நாவு (நாம்) | நீவு | அவரு, இவரு |
| | நாவுகளு | நீவுகளு | அவு (அவை) இவு (இவை). |

2. வினாப்பெயர்

| ஆண் | பெண் | பொது | அஃறிணை |
|---|---|---|---|
| யாவனு யவனு | யாவளு | யாரு | யாவது |
| யாவரு யாரு | யாரு | ஆரு | யாவுது |

**6.62 ஐகார ஈற்றுப் பெயர்கள் இகர எகர ஈறுகளாகத் திரியும்.**

*(எ.டு).* த. தங்கை > க. தங்கி

த. தந்தை > க. தந்தெ

த. அத்தை > க. அத்தெ

த. அவ்வை > க. அவ்வெ

**6.63 யகர மெய்யீற்றுச் சொற்கள் இகர ஒலித்துணை ஈறு பெறும்**

*(எ.டு).* த. தாய் > க. தாயி

த. நான் > க. நாயி

**6.64 முன்னுயிர் இடம் பெயர்ந்து ஈற்று மெய்யில் இகரம் சேரும்.**

*(எ.டு).* த. அதர் (பாதை) > க. தாரி

**6.65 ப்ப உடனிலை மெய் மயக்கம் எடுப்பொலி பெற்று bba எனத் திரியும்.**

*(எ.டு).* த. கொழுப்பு > க. கொப்பு (kobbu)

**6.66 ம்ப வேற்று நிலை மெய் மயக்கம் எடுப்பொலி பெற்று bba எனத்திரியும்.**

*(எ.டு).* த. கரும்பு > க. கப்பு (kabbu)

**6.67 ண்ட எனும் வேற்று நிலை மெய் மயக்கத்தில் எடுப்பொலி டகரம் (ḍ) எடுப்பொலி இழந்து ஆரிய ஒலிப்பான (nṭ) வல்லொலி பெறும்.**

*(எ.டு).* த. (ஒன்றி) ஒண்டி > க. ஒண்ட்டி

**6.68 ழகரம் ளகரமாகத் திரியும்.**

***(எ.டு).*** த. கதழ் > க. கதள்

**6.69 ரகர லகர மெய்கள் ளகர மெய்யாகத் திரியும்.**

***(எ.டு).*** த. கலவரம் > க. களவள.

**6.70 பழங்கன்னடத்தில் ழகர மெய் நிலைபேறு பெறும்.**

***(எ.டு).*** த. உழுவல் > க. உழ்கெ.

த. பேசு > க. பேழ்

**6.71 மொழியிடை எடுப்பொலி தகரம்; சகரமாகத் திரியும்.**

***(எ.டு).*** த. நுதல் (நெற்றி) > க. நொசல்

**6.72 ஐகாரம் ஊர்ந்த வல்லெழுத்து இறுதி இகரஇறுதியாகத் திரியும்.**

***(எ.டு).*** த. சப்பட்டை > க. சப்படி (cappaṭi)

**6.73 ந்த மெய் மயக்கம் ன்த எனத் திரியும்.**

***(எ.டு).*** த. சொந்தம் > க. சொன்த.

**6.74 மொழி முதல் தகரம் (Ja) ஆகவும் சகரமாகவும் திரியும்.**

***(எ.டு).*** த. தேன் > க. jēnu.

த. தோலுதல் (தோற்றுப்போதல்) > க. சோலு

**6.75 மொழியிடை டகரம் ளகரமாகும்.**

***(எ.டு).*** த. நடவடிக்கை > க. நடவளிகெ.

**6.76 'வை' ஈற்றுச்சொற்கள் வெ,வு ஈறுகளாகத் திரியும்.**

***(எ.டு).*** த. அவை > க. அவெ, அவு

**6.77 செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம் தொடர் நிகழ்காலம் காட்டும்.**

***(எ.டு).*** த. கேளாநின்றான் > க. கேளுத்தா நின்தனு.

**6.78 ஒகர முதல் சொற்கள் உகர அல்லது இகர முதல் சொற்களாகத் திரியும்.**

***(எ.டு).*** த. பொடியன் > க. புடுகனு (பிடுகனு) huḍuganu-உடுகனு.

**6.79 ன்ப மெய் மயக்கம் ம்ப எனத் திரியும்.**

***(எ.டு).*** த. என்பது > க. எம்புது

**6.80 கூட்டுச்சொற்களில் வருமொழி முதலான பகரம் வகரமாகத் திரியும்.**

***(எ.டு).*** த. எழுபது > க. எளுவத்து.

த. முப்பது > க. மூவத்து

**6.81 மொழியிடை யகரம் ககரமாகும்.**

***(எ.டு).*** த. வாயில் > க. பாகில், பாகிலு (bāgilu).

## தமிழ் – தெலுங்கு

**6.82 ஆகார முதனிலைகள் ஏகார முதனிலைகளாகத் திரியும்.**

***(எ.டு).*** த. நான் > தெ. நேன், நேனு

த. யாண்டு, ஆண்டு > தெ. யேண்டு, ஏண்டு

**6.83 மொழி முதல் நகரம் மகரமாகத் திரியும்.**

***(எ.டு).*** த. நீர் > தெ. மீரு (நீங்கள்)

த. நாம் > தெ. மேமு (நாங்கள்)

**6.84 சுட்டுப் பெயர்களில் முதலுயிர் இடம் பெயர்ந்து அடுத்த மெய்யொடு சேர்ந்து நெடுமுதலாகும்.**

***(எ.டு).*** த. அவர் > தெ. வாரு

த. இவர் > தெ. வீரு

**6.85 பெயர்ச்சொற்கள் உகர ஒலித் துணை ஈறு பெறும்.**

***(எ.டு).*** த. புலம் > தெ. புலமு, பொலமு.

த. தாம் > தெ. தாமு.

**6.86 ஆண்பாலீற்றொடு துகரம் புணர்ந்து பன்மடித்திரிபால் டுகர ஈறாகத் திரியும்.**

*(எ.டு).* த. அவன் > தெ. அவன்து–வான்று–வான்று–வாடு

த. இவன் > தெ. இவன்+து–வீன்து–வீன்று–வீடு

த. பழம் > தெ. பழம்+து–பழ்து–பண்து–பண்டு

த. தம்பின் (தம்பி) > தெ. தம்முன்–தம்முன்து–தம்முன்று–தம்முடு

**6.87 அது இது எனும் சுட்டுச் சொற்களிலும் எது எனும் வினாச் சொல்லிலும் ஈற்றுகரம் இகரமாகத் திரியும்.**

*(எ.டு).* த. அது > தெ. அதி

த. இது > தெ. இதி

த. எது > தெ. எதி, ஏதி

**6.88 பெயர்ச்சொல்லீற்று னகர மெய் கெடும்.**

*(எ.டு).* த. அண்ணன் > தெ. அண்ண, அன்ன.

த. மாமன் > தெ. மாம

த. அப்பன் > தெ. அப்ப

**6.89 ஐகார ஈற்றுப் பெயர்கள் அகர ஈறாகவும், இகர ஈறாகவும் திரியும்.**

*(எ.டு).* த. அத்தை > தெ. அத்த

த. அவ்வை > தெ. அவ்வ

த. தள்ளை (தாய்) > தெ. தள்ளி, தல்லி

த. செள்ளை (தங்கை) > தெ. செள்ள, செல்லி

**6.90 சில பெயர்ச்சொற்களின் ஈற்றில் குகர ஈறு சேர்ந்து ககரமாகத் திரியும்.**

*(எ.டு).* த. யானை > தெ. யேனுகு – ஏனிக.

த. விளா (மரம்) > தெ. வெலகு/வெலக.

த. எலி > தெ. எலுகு–எலிக

த. ஈ > தெ. ஈகு–ஈக.

**6.91 ன்ற மெய் மயக்கம் ந்த எனத் திரியும்.**

*(எ.டு).* த. பன்றி > தெ. பந்தி

**6.92 ன்று மெய் மயக்கம் டுகரமாகத் திரியும்.**

*(எ.டு).* த. மூன்று > தெ. மூடு

**6.93 ழகரம் டகரமாகத் திரியும்**

*(எ.டு).* த. கோழி > தெ. கோடி

த. ஏழு > தெ. ஏடு.

**6.94 பெயர்ச்சொற்களில் லகர மெய்யீறு கெடும்.**

*(எ.டு).* த. குக்கல் > தெ. குக்க.

**6.95 பெயர் ஈற்றொடு மிகையாகச் சேரும் குகரம் இரட்டித்து ஈற்றுகரம் ககரமாகத் திரிவதொடு நிலைமொழியீற்று ரகரங்கள் கெடும்.**

*(எ.டு).* த. நரி > தெ. நரிகு–நரிக்கு–நரிக்க–நக்க (புலி)

**6.96 மகரமுதற்சொல் பன்மடித் திரிபுறும்.**

*(எ.டு).* த. மயில் (மஞில்–மஞ்ஞை) > தெ. மஞில்–ஞமில்–ஞெமிலி–நெமிலி–நெமலி.

**6.97 இதழொலி மென்றொடர்க் குற்றுகரம் ஈற்றுமெய் கெட ஈற்றயல் மகர மெய்யொடு சேரும்.**

*(எ.டு).* த. பாம்பு > தெ. பாமு

த. வேம்பு > தெ. வேமு.

**6.98 மொழியிடை எடுப்பொலி (voiced) தகரம் சகரமாகும்.**

*(எ.டு).* த. முதலை > தெ. முசலி, மொசலி.

**6.99 எகர முதனிலைச் சொல்லீற்று ரகர மெய் கெடாமல் உகர ஒலித்துணை பெறும்.**

*(எ.டு).* த. எதிர் > தெ. எதுரு

த. வெதிர் (மூங்கில்) > தெ. வெதுரு

**6.100 எகர இகரம் தவிர்ந்த முதனிலைச் சொல்லின் ஈற்று ரகர மெய் கெடும்.**

*(எ.டு).* த. புதர் > தெ. பொத

**6.101 குறிலிணையடுத்த குற்றுகரம் இரட்டித்து குறிலிணையில் முன்னுயிர் நீண்டு பின்னுயிர்மெய் கெடும்.**

*(எ.டு).* த. அடகு (இலை) > தெ. அடகு–ஆக்கு.

**6.102 நெடுமுதல் குறுகி இடையில்நின்ற டகரம் இரட்டிக்கும்.**

*(எ.டு).* த. கோடாரி–கோடாலி > தெ. கொட்டலி

த. படம் (துணி) > தெ. பட்ட (baṭṭa).

**6.103 வல்லின றுகர ஈறு இடையின ரகர ஈரொற்றாகும்.**

*(எ.டு).* த. காறு > தெ. கா்ரு

**6.104 ளகர ஈறு லகர ஈறாகத் திரியும்.**

*(எ.டு).* த. வாள் > தெ. வாலு

த. உளி > தெ. உலி.

**6.105 மொழியிடை றகரம் லகரமாகும்.**

*(எ.டு).* த. நிறுவை (துலாக்கோல்) > தெ. நிலுவ

**6.106 லகர மெய்யீற்றுச் சொல் அகர இகர ஒலித்துணை பெறும்.**

*(எ.டு).* த. கோல் > தெ. கோல

த. கால் (காற்று) > தெ. காலி (gāli)

**6.107 மொழியிடை ருகரம் தொகும்.**

*(எ.டு).* த. பருப்பு > தெ. பப்பு

த. நெருப்பு > தெ. நிப்பு

த. உருக்கு > தெ. உக்கு

**6.108 மொழியிடை ருகரம் னுகரமாகத் திரியும்.**

த. எருமை > தெ. எனுமு

த. இரும்பு > தெ. இனுமு.

**6.109 சொல்லீற்றுக் குற்றுயலகர ஈறு வகரமாகத் திரியும்.**

*(எ.டு).* த. படகு > தெ. படவு, படவ.

**6.110 பெயர்ச்சொல்லின் 'ஆய்" ஈறு கெடும்.**

*(எ.டு).* த. நாவாய் > தெ. நாவ

**6.111 பெயர்ச்சொல்லின் 'ள்ளி' ஈறு 'ண்டி' எனத் திரியும்.**

*(எ.டு).* த. வெள்+இ–வெள்ளி > தெ. வெள்+தி–வெண்டி

**6.112 வகர முதல் பெயர்ச்சொல் எடுப்பொலி (b) பகரமுதலாகத் திரியும்.**

*(எ.டு).* த. வண்டி > தெ. பண்டி

த. வங்காரம் > தெ. பங்காரம் (பொன்)

**6.113 ணகர ஈற்றுச் சொற்கள் னகர ஈறாகும்.**

*(எ.டு).* த. தோணி > தெ. தோனெ.

**6.114 மொழியிடை வகரம் பகரமாகும்.**

*(எ.டு).* த. சிவிகை > தெ. சிபுக்க.

**6.115 சொல்லீற்று 'ன்றி' – ண்டி எனத் திரியும்.**

*(எ.டு).* த. தின்றி > தெ. திண்டி

**6.116 ளகர ஈறு டகர ஈறாகத் திரியும்.**

*(எ.டு).* த. கம்பளி > தெ. கம்படி

**6.117 மொழியிடை வகரம் ககரமாகத் திரியும்.**

*(எ.டு).* த. பவழம் > தெ. பகடமு

**6.118 மொழி முதல் பா–பூ எனத் திரியும். ஈற்றுச் சிகரம் சகரமாகும்.**

*(எ.டு).* த. பாசி (மணி) > தெ. பூச.

**6.119 ஐகார ஈற்றுச்சொல் 'ஆய்' ஈற்றுச் சொல்லாகத் திரியும்.**

*(எ.டு).* த. அறை (நீண்டபாறை) > தெ. றாய்–றாயி.

**6.120 லகர மெய்யீற்றுச் சொற்கள் இகர ஒலித்துணை பெறும்.**

*(எ.டு).* த. பந்தல் > தெ. பந்தலி

த. கடல் > தெ. கடலி.

**6.121 தனிக்குறில் சார்ந்த யகர மெய் யீற்றுச்சொல் 'னு' ஒலித்துணை பெற்று மொழி முதல் குறில் நெடிலாகும்.**

*(எ.டு).* த. செய் (விளைநிலம்) > தெ. செய்+னு–செய்னு–சேனு.

**6.122 திரிசொல் வடிவம் மேன்மடித் திரிபு பெறும்.**

*(எ.டு).* த. அகழி–அகழ்த்தி > தெ. அகழ்த்த–அகட்த.

**6.123 மென்றொடர் குற்றுகர ஈற்று உகரம் கெட்டு டகரமெய் இரட்டிக்கும்.**

*(எ.டு).* த. குண்டு (குழி, குட்டை, நீர்நிலை) > தெ. குண்ட்ட

**6.124 மொழியிடை ளகரம் ணகரமாகத் திரிவதோடு ஞ்ச எனும் மென்றொடர் எடுப்பொலி சகரமாகத் (J) திரியும்.**

*(எ.டு).* த. களஞ்சியம் > தெ. kaṇajamu.

**6.125 இஞ்ஞான்று எனும் சொல் மும்மடி மரூஉ முடிபு பெறும்.**

*(எ.டு).* த. இஞ்ஞான்று– (இஞ்ஞன்று – இன்று) > தெ. இஞ்ஞான்று–ஞான்று–ஞேன்று–நேன்று–நேடு.

**6.126 நெருநல் (நேற்று) முந்தை நாள் (முன்னை நாள்) எனும் சொற்கள் இருமடி மரூஉ முடிபு பெறும்.**

*(எ.டு).* த. நெருநாள்–நெருநல் (நெருநற்று–நேற்று) > தெ. நெருநல்–நென்னல்–நென்ன.

த. முன்–முந்தை நாள் (முந்தா நாள் – முன்னை நாள்) > தெ. முன்னை=நாள்–முன்னாள்–மொன்ன.

**6.127 மொழி முதல் வல்லெழுத்து வட மொழி ஒப்புமையாக்க ஒலிப்புத் திணிப்பால் ரகரம் புணர்ந்த கூட்டுமெய் மயக்க மொழி முதல் ஆகும்.**

*(எ.டு).* த. பொழுது > தெ. ப்ரொத்து

த. விரல் > தெ. வ்ரேலு

த. கம்மம் (சிற்றூர்) > தெ. க்ராமமு

**6.128 மூலத்தாய் மொழியிலிருந்து பெற்ற உடன் கொண்ட சொல்லமைப்பைச் சில சொற்கள் தக்க வைத்துக்கொள்ளும்.**

*(எ.டு).* த. நால்கு (நான்கு) > தெ. நாலுகு

த. நால்கு–(நாக்கு) > தெ. நாலுக

த. எஞ்சில் – (எச்சில்) > தெ. எங்கிலி து. எஞ்சிலு

**6.129 குற்றுகரச் சொல்லீற்று றுகரம் கெடும்.**

*(எ.டு).* த. மிடறு > தெ. மெட

**6.130 ட்டி எனும் ஈற்றுச்சொல் வட மொழித் திரிபுற்று வல்லினமெய் உரசொலி சகர மெய்யாகும்.**

*(எ.டு).* த. முட்டி > தெ. mushṭi

**6.131 முழம் எனும் சொல்லின் ழகரமும் மெல்லின மெய்யீறும் கெடும். முகரம் மோகாரம் ஆகும்.**

*(எ.டு).* த. முழங்கால் > தெ. மோர்க்காலு

**6.132 குற்றுகரச் சொல்லீற்று இரட்டித்த பகரம் இரட்டித்த வகரமாகும்.**

*(எ.டு).* த. கொழுப்பு > தெ. கொவ்வு

**6.133 எண்ணுப் பெயர்களில் ஒன்று நான்கு எட்டு ஒன்பது ஆகியவற்றில் முந்து நிலை தாய்த்தமிழ் கூறு நிலை பெற்று பன்மடித்திரிபுறும்.**

*(எ.டு).* த. ஒல்–ஒக்கு–ஒக்கூர் (ஓர் ஊர், தனியூர்) ஒக்கு > தெ. ஒக்க, ஒக, ஒக்கட்டி (ஒன்று).

த. நால்–நால்கு (நான்கு) > தெ. நாலுகு

த. எண்+து–எட்டு > தெ. எண்–எண்மு+தி – எண்மிது, எணிமிதி.

த. தொண்+து–தொண்டு (ஒன்பது) > தெ. தொண்+ம்+து–தொண்மிதி–தொம்மிதி.

**6.134 எண்ணுப்பெயர்களில் மூன்று பத்து ஆகியவை இடைக்குறையாகி ஈறு திரியும்.**

*(எ.டு).* த. மூன்று > தெ. (மூன்று–மூறு)–மூடு.

த. பத்து > தெ. (பத்து–பது)–பதி.

**6.135 எண்ணுப் பெயர்களில் இரண்டு ஐந்து ஆகியவை முன்னுயிர் வேறாதல் இரண்டாம் எழுத்து திரிதல் எனும் இருமடித் திரிபுறும்.**

*(எ.டு).* த. இரண்டு > தெ. (இரண்டு–ரெண்டு)–ரொண்டு.

த. ஐந்து > தெ. (ஐந்து–அய்ந்து)– அயிது.

**6.136 ஈறாக வரும் பத்து –பதி எனும் சொல் 'பை' எனத் திரியும்.**

*(எ.டு).* த. இரண்டு+பத்து–இருபது > தெ. இருவை – இரவை.

த. மூன்று+பத்து–முப்பது > தெ. முப்பை.

**6.137 'ற்று' என முடியும் குற்றுகர ஈறு–ட்டி எனத் திரியும்.**

*(எ.டு).* த. நூறு–நூற்று > தெ. நூட்டி

த. ஆறு – ஆற்றுக்கு > தெ. ஏட்டிக்கு–யேட்டிகி.

**6.138 ழுகர ஈறு டுகர ஈறாகத் திரியும் போது தமிழைப்போல் குற்றுகர ஈற்றுப் புணர்ச்சித் திரிபுகளைப் பெறும்.**

*(எ.டு).* த. கூழ் (உணவு) > தெ. கூடு

த. கூழுக்கு > தெ. கூட்டிகி

**6.139 எழுபது எனும் எண்ணுப் பெயர் முன்னுயிர் அயலேறி ழகரம் டகரமாகி வருமொழி திரிந்து மும்மடித் திரிபுபெறும். வல்லெழுத்துகள் எடுப்பொலி (voiced) பெறும்.**

*(எ.டு).* த. ஏழு+பத்து–எழுபது > தெ. டெப்பை (ḍebbai)

**6.140 நெடிற்றொடர் குற்றுகர ஈறு வேற்றுமைத் தொகையில் இரட்டும். பண்புத் தொகையில் இரட்டாது.**

*(எ.டு).* த. நூறு+பத்து–நூற்றுப்பத்து > தெ. நூட்டபதி (வேற்றுமைத் தொகை)

த. ஆறு+பத்து–அறுபது > தெ. அறுவதி (பண்புத்தொகை)

**6.141 ரகர மெய்யீறு கொண்ட குறிலிணைச் சொல் முன்னிரு எழுத்துகள் இலக்கணப் போலியாகி மும்மடித் திரிபு எய்தும்.**

*(எ.டு).* த. துவர் (துவர்ப்பு) > தெ. துவர்–வதுர்–வகுரு.

**6.142 உகர ஈற்றுச் சொற்கள் புகர ஈறு பெற்று இரட்டிக்கும்.**

*(எ.டு).* த. நோவு > தெ. நொப்பு–நொப்பி.

த. குரு (கொப்புளம்) > தெ. குருப்பு.

த. தீம் > தெ. தீப்பு–(இனிப்பு).

**6.143 குறிலிணை வினையடியின் முன்னெழுத்து நீங்கிப் பின்னெழுத்து நெடிலாகி ஏவல் வினை வடிவு பெறும்.**

*(எ.டு).* த. வரு > தெ. ரா.

த. ஏழு > தெ. லேய், லெய்.

**6.144 செய்து எனும் வாய்பாட்டு செயப்படுபொருள் குன்றாவினையெச்சம் முற்றாகி ஏவல் வடிவம் பெற்று இரண்டாம் எழுத்து தொகும்.**

*(எ.டு).* த. எடு–எடுத்து > தெ. எத்து

த. திரு–திருத்து > தெ. தித்து (tiddu)

த. ஈ (ஈத்து) > தெ. (இத்து) இச்சு.

**6.145 ஏவல் வினையீற்று ளகரம் னகரமாகத் திரியும்.**

*(எ.டு).* த. கொள் > தெ. கொணு–கொனு.

**6.146 ஏவல் வினையீற்று ழகரம் யகரமாகத் திரியும்.**

*(எ.டு).* த. உமிழ் > தெ. உமியு.

**6.147 ஏவல் வினையீற்று மகரம் குகர ஈறாகத் திரியும்.**

*(எ.டு).* த. திரும் (திருமு) > தெ. திருகு

**6.148 ஏவல் வினையீற்று குகரம் வகர உடனிலை மெய்மயக்கமாகத் திரியும்.**

த. நகு > தெ. நவ்வு

**6.149 அகரமுதல் குறிலிணை ஏவல் ஏகாரமாகவும் ழகரம் டகரமாகவும் வினைவடிவில் எச்சம் முற்றாகவும் திரியும்.**

*(எ.டு).* த. அழு > தெ. ஏடுச்சு.

**6.150 ஈரசை ஏவல் வினையில் இரண்டாம் எழுத்தாக வரும் ணகரம் தொகும்.**

*(எ.டு).* த. வணங்கு > தெ. வங்கு (வளைதல், குனிதல்)

**6.151 வுகர ஈற்று ஏவல் யுகர ஈற்று ஏவலாகும்.**

*(எ.டு).* த. கூவு > தெ. கூயு.

**6.152 மொழி முதல் வகரம் பகரமாகும்.**

*(எ.டு).* த. விளி > தெ. பிளி, பிளிச்சு, பிலுசு.

**6.153 மொழி முதல் இகர ஏவல் நெடிலாகும்.**

*(எ.டு).* த. இழு > தெ. ஈடு, ஈடுச்சு.

**6.154 மொழியிடை றகரம் ரகரமாகும்.**

*(எ.டு).* த. நறுக்கு > தெ. நருக்கு.

**6.155 மொழியிடை ழகரம் ணகரமாகும்.**

*(எ.டு).* த. முழுகு > தெ. முணுகு

**6.156 வைகார ஈற்றுஏவல் யகர மெய்யீற்று ஏவலாகும்.**

*(எ.டு).* த. வை > தெ. வெய்.

**6.157 மொழியிடை ற்ற–ட்ட எனவும் ற்று – த்து எனவும் திரியும்.**

*(எ.டு).* த. மாற்றம் (பேச்சு) > தெ. மாட்ட

த. பற்று > தெ. பெட்டு

த. ஏற்று > தெ. எத்து.

**6.158 ஏவலிற்று டகரம் ககரமாகத் திரியும்.**

*(எ.டு).* த. முடி > தெ. முகி

**6.159 மொழியிடை னகரம் லகரமாகும்.**

*(எ.டு).* த. முனங்கு > தெ. மூலுகு.

த. கனவு > தெ. கல.

**6.160 மொழி முதல் அகரம் எகரமாகும். ஏவல் வினை குகர ஈறு பெறும்.**

*(எ.டு).* த. அறி > தெ. எருகு.

**6.161 ஏவல் வினையின் ஈற்றயல் ஙகர மெய் கெடும்.**

*(எ.டு).* த. ஒடுங்கு > தெ. ஒடுகு.

**6.162 ஏவல் வினையின் ஐகார ஈறு டகரமாகத் திரிந்து மிகையீறாக குகரம் சேரும்.**

*(எ.டு).* த. கரை (தல்) > தெ. கருகு.

**6.163 ஏவல் வினையில் இடையில் ஈரெழுத்து கெட்டு ஈற்றுக் குகரம் இரட்டிக்கும்.**

*(எ.டு).* த. பிடுங்கு > தெ. பீக்கு

**6.164 மொழி முதல் வகரம் மகரமாகத் திரிந்து வடமொழி ஒலிப்புத் தாக்கத்தால் ரகரம் ஒட்டிய ஈரொற்று மொழி முதல் ஆகும். இரண்டாம் எழுத்து கெடும்.**

*(எ.டு).* த. விழுங்கு > தெ. ம்ருங்கு.

**6.165 ழகர ஈற்று ஏவல் வினையில் ஈறு யகரமாவதொடு குறு முதல் நெடு முதலாகும் (Ja).**

*(எ.டு).* த. பொழி > தெ. போயு.

**6.166 ஏவல் வினையின் நீ எனும் முதலெழுத்து ஈ எனத் திரிந்து இடை நின்ற மெய்யெழுத்து கெடும்.**

*(எ.டு).* த. நீந்து > தெ. ஈது.

**6.167 ஏவல் வினையின் இடை நின்ற ஙகர மெய் கெடும்.**

*(எ.டு).* த. தூங்கு > தெ. தூகு

**6.168 ஏவலீற்று தகரம் டகரமாகி செய்து எனும் வாய்பாட்டுத் திரிபு எய்தும்.**

*(எ.டு).* த. புதை > தெ. பூடுச்சு.

**6.169 சுகர ஈற்று ஏவல் யுகர ஈற்று ஏவலாகும்.**

*(எ.டு).* த. பூசு > தெ. பூயு.

**6.170 பகர வன்றொடர் குற்றுகர இரட்டிப்பு ஏவல் வினையின் ககர வன்றொடர் குற்றுகர இரட்டிப்பாகத் திரியும்.**

*(எ.டு).* த. சிலுப்பு > தெ. சிலுக்கு.

**6.171 ழகர மெய்யீற்று ஏவல் டுகர ஈறாகத் திரியும்.**

*(எ.டு).* த. புகழ் > தெ. பொகடு.

**6.172 தனிக்குறில் சார்ந்த ளகர மெய்யீற்று வினையடி துகரத் துணையீறு பெற்று டகர இரட்டிப்பு வன்றொடர் குற்றுகரம் ஆகும்.**

*(எ.டு).* த. பிள் (பிற) > தெ. பிள்+து–பிள்து–புள்து–புட்டு (பிறத்தல்).

**6.173 ஏவல் வினைகளில் மொழி முதல் வல்லொலி எடுப்பொலி ஆதல் உண்டு.**

*(எ.டு).* த. கிள் (கிள்ளு) > தெ. gillu.

**6.174 டுகர ஈற்று ஈரசை ஏவல் வினையில் இடை நின்ற மெய்யெழுத்து கெடும்.**

*(எ.டு).* த. வேண்டு > தெ. வேடு.

**6.175 கூட்டு வினையாகிய வினையெச்சத் தொடர் நாலசையாயின் மூவசைச் சொல்லாக ஒரு சொல் தன்மைப்பட்டு நிற்கும். ஈற்றுப் பொதுவினை முற்று உயர்வுப் பன்மை ஈறாக மாறிவிடும்.**

*(எ.டு).* த. செய்ய வேண்டும் > ம. செய்யேண்டு. > தெ. செய்யண்டி–சேயண்டி (செய்யுங்கள்).

**6.176 இறந்த கால வினைமுற்று பழங்கால செய்தன்று வந்தன்று என்றாற் போன்ற வினை முடிபின் பன்மடித்திரிபு பெறும்.**

*(எ.டு).* த. செய்தான்–செய்தான்+து–செய்தன்று > தெ. செய்தான்று–செய்தாண்டு–சேசிதாண்டு–சேசினான்டு–சேசினாடு.

**6.177 எதிர்கால வினைமுற்றுகள் 'உந்து' துணையீறு பெற்றுப் பன்மடித் திரிபு பெறும்.**

*(எ.டு).* த. செய்யும் > தெ. செய்யும்+உந்து–செய்யுந்து–செய்யுனு–சேசுனு.

**6.178 செய்யூ எனும் வாய்பாட்டுத் தொடர் நிகழ்கால வினையச்சத்தின் ஈறு யூ–தூ எனத் திரியும்.**

*(எ.டு).* த. செய்யூ நின்றான் > தெ. சேசுதூ உண்ட்டாடு.

**6.179 செய்தென எனும் வாய்பாட்டுப் பெயரெச்சம் இறந்தகாலம் சுட்டும். மொழியிடை யகரம் சகரமாகத் திரியும்.**

*(எ.டு).* த. மழை பெய்தென (பெய்து) நெல் விளைந்தது > தெ. வான போசின வட்லு பண்டிந்தி.

**6.180 செய எனும் வாய்பாட்டு (நிகழ்கால) வினையெச்சம் முதனிலை நீண்டும் இடைக்குறைந்தும் ஈற்றுகரம் திரிபின்றியும் வரும்.**

*(எ.டு).* த. செய (செய்ய) வந்தான் > தெ. சேயவச்சினாடு.

த. தின்ன ஈத்தான் > தெ. தினஇச்சினாடு.

**6.181 செய்யும் என்னும் வாய்பாட்டு எதிர்கால வினையெச்சம் ஈறு கெட்டு ஈற்றயல் யகரம் சகரமாகத் திரியும்.**

*(எ.டு).* த. செய்யும் பணி > தெ. சேசே பணி.

**6.182 செய்யும் என்னும் வாய்பாட்டு எதிர் கால வினைமுற்றின் மகர மெய்யீறு உகர மூர்ந்த னகரமாகத் திரியும்.**

*(எ.டு).* த. மழை பெய்யும் > தெ. வானபோயுனு

**6.183 செய்து எனும் வாய்பாட்டு வினை யெச்சத்தின் உகர ஈறு இகர ஈறாகத் திரியும்.**

*(எ.டு).* த. செய்து முடித்தான் > தெ. சேசி முகின்சினாடு.

**6.184 கொண்டு எனும் துணைவினை யெச்சம் கொனி எனத் திரியும்.**

*(எ.டு).* த. செய்துகொண்டு > தெ. சேசிகொனி.

**6.185 செய்தால் எனும் எதிர்கால வினை யெச்சத்தின் ஈறு கெட்டு ஈற்றயல் தா–தே எனத் திரியும்.**

*(எ.டு).* த. செய்தால் > தெ. சேசிதே.

**6.186 அல், தல், கை எனும் தொழிற்பெயர் ஈறுகள் கெட்டு, 'அடம்' ஈறாகத் திரியும்.**

*(எ.டு).* த. செய்தல் > தெ. சேயுட்ட, சேசுட்ட

த. செய்கை > தெ. சேயடமு

த. செயல் > தெ. செய்யடமு.

**6.187 வி, பி எனும் பிறவினைப் பகுதி ஈறுகள் முறையே இகரமாகவும் ப்பி–பி எனவும் திரியும்.**

*(எ.டு).* த. செய்வி > தெ. சேயின்சு.

த. விளிப்பி > தெ. பிளிப்பின்சு.

**6.188 ஏவல் ஒருமையில் மொழி முதல் நெட்டுயிர் அயல் மெய்யொடு சேர்ந்து உயிர்மெய் முதலாகும்.**

*(எ.டு).* த. ஆகு > தெ. கா

த. ஆகஒல்லும் > தெ. காவால

த. ஆகல்+இ–ஆகலி (ஆகட்டும்) > தெ. காலி–கானி (ஆகட்டும்).

த. ஆக வேண்டும் > ம. ஆகேண்டி > தெ. கண்டி

த. ஆகாது > தெ. காது.

**6.189 நெடு முதல் ஏவல் வினை குறுமுதல் வினையாகும்.**

*(எ.டு).* த. ஆகு > தெ. அவு

த. காணுறுதல் > தெ. கனுட

**6.190 ஆயினும் எனும் விலக்கு இணைப் புச்சொல் ஈறு கெட்டு நெடு முதல் குறுகும்.**

*(எ.டு).* த. ஆயினும் > தெ. அயின

**6.191 'இல்' எனும் எதிர்மறை இடைநிலை முன் பின்னாக ஒட்டி லே எனத் திரிந்து இலக்கணப்போலி (metathesis) முடிபு பெறும்.**

*(எ.டு).* த. இலது > தெ. லேது

த. இல > தெ. லேவு

த. இல்லாகின் > தெ. லேகைன.

த. இளையது > தெ. லேத (நேத).

**6.192 'ஆ' எனும் எதிர்மறை இடைநிலை அகரமாகக் குறுகும்.**

*(எ.டு).* த. வரக்கூடாது > தெ. ராகூடது.

**6.193 'அரு' எனும் எதிர்மறை திரியாது நிலைக்கும்.**

*(எ.டு).* த. அரு > தெ. அருது.

**6.194 ளகர மெய்யிரட்டிய வினையெச்சம் னகர மெய்யீறாகத் திரியும்.**

*(எ.டு).* த. உள்–உள்ள > தெ. உன்ன.

**6.195 பழைய எனும் பெயரெச்சம் நெடு முதலாகி தகர ஈறு பெறுதலால் ழகரம் னகர மெய்யாகத் திரியும்.**

*(எ.டு).* த. பழைய > தெ. பான்த்த.

**6.196 ஆக எனும் வினையெச்ச ஈறு முன்பின்னாக மாறி இலக்கணப் போலி யாகும்.**

*(எ.டு).* த. சரியாக > தெ. சரிகா

த. கெட்டியாக > தெ. கட்டிகா

த. ╷ிகலாக > தெ. மிக்கிலிகா

**6.197 விளிச்சொல்லீற்று டகரம் ரகர மாகும்.**

*(எ.டு).* த. அடே > தெ. அரே

த. அடடா > தெ. அரரா.

**6.198 மகர முதற்சொல் பகர முதற் சொல்லாகத் திரியும்.**

*(எ.டு).* த. மேல்–மேல (மேன) > தெ. பைன, பயின.

**6.199 பகர முதற்சொல் வகர முதற் சொல்லாகும்.**

*(எ.டு).* த. பின்னுக்கு > வெனுக்க.

**6.200 சகர முதற்சொல் ககர முதலாகத் திரியும்.**

*(எ.டு).* த. சீர்–சீர்த்தி > தெ. கீர்த்தி.

**6.201 சகர முதற்சொற்கள் எடுப்பொலி யாகாமல் வல்லித்த வல்லொலியாகவே இருக்கும்.**

*(எ.டு).* த. செப்பு > தெ. செப்பு (ceppu)

த. செய் > தெ. சேயி (cēyi)

த. சாலும் (போதும்) > தெ. சாலு (cālu).

**6.202 இரவு எனும் சொல் இருமடித் திரிபு பெறும்.**

*(எ.டு).* த. இரவு > ம. ராவு (விடியல்) > தெ. ரேப்பு (நாளை).

**6.203 மூன்றன் உருபு 'ஒடு' வுக்கு மாற்றாகத் தோடு எனும் சொல்லுருபு ஈறு கெட்டு வழங்கும்.**

*(எ.டு).* த. அவனொடு > தெ. அதனிதோ.

**6.204 குறிலிணை இகர ஈற்று ஏவல் வினையின் இகர ஈறு உகர ஈறாகத் திரிந்து குகரத் துணையீறு சேரும்.**

*(எ.டு).* த. கலி–கலித்தல் = உண்டாதல், தோன்றுதல். ஒ.நோ. மழை பெய்தால் ஆற்றில் மீன் கலிக்கும்.

த. கலி > தெ. கலிகு–கலுகு. (கலுகு எனும் வினை கலது எனத் திரிந்து உள்ளது எனப் பொருளால் புடை பெயரும்).

**6.205 மொழியிடை வகரம் தகரமாகத் திரியும்.**

*(எ.டு).* த. அவன் > தெ. அதன், அதடு.

**6.206 ஆகார ஈற்றுப் பெயர்ச்சொல் அகர இறுதியாகவும் இகர இறுதியாகவும் திரியும்.**

*(எ.டு).* த. நிலா > தெ. நெல

த. மூங்கா (கீரி) > தெ. மூங்கி

**6.207 செய்தற் பொருள் வழி வந்த வளர்த்தல் கருத்து பொதிந்த 'பள்' வினை யடியின் அகரஉயிர்முதல் எகர உயிர் முதலாகி ஏவல் வடிவும் துகரத் துணை யீறும் பெற்று பன்மடித்திரிபு எய்தும்.**

*(எ.டு).* த. பள் (பண்ணு, செய்) – பெள் (பெண்–பேண்)

த. பெள்+து–பெள்து > தெ. பென்து, பெஞ்சு (pencu).

**6.208 வழக்கற்ற வினையடிகள் ஆளப் படினும் இலக்கணக் கட்டமைப்பு சிதைவ தில்லை.**

*(எ.டு).* த. இரு+த்+த்+இ–இருத்தி

த. உள்+தி–உண்+தி–உண்தி (இருக்கச் செய்து)

த. உண்தி > தெ. உஞ்சி (இருக்கச்செய்து)

**6.209 ழகர மெய்யீற்றுச் சொற்களில் ழகரமெய் கெட்டு ன்ற–ண்ட எனத் திரியும்.**

*(எ.டு).* த. என்றூழ் (வெயில்) > தெ. எண்ட

**6.210 பழந்தமிழ்த் திசைச்சொல் பேச்சு வழக்கால் அனைத்துச் சொற்களிலும் மகர ஈற்றுச்சொல் உகர ஒலித் துணை பெற்று மிகை ஈறாகும்.**

*(எ.டு).* த. உரும்–உருமு (இடி)

த. தெப்பம் > தெ. தெப்பமு

த. சமம் > தெ. சமமு

த. குடும்பம் > தெ. குடும்பமு.

**6.211 உயிரிசைவு மாற்றம் (Harmonious seqence of vowels) ஒலியனியல் மரபின் வண்ணம் இ,ஈ,ஏ,ஐ ஈறு கொண்ட சொல்லின் பின்வரும் குகரம் கிகரமாகத் திரியும். ஏனையவற்றின் முன் வரும் குகரம் திரியாது எனும் நெறி ஓரளவே நிலவும். பெருமளவு குகரம் நான்கன் உருபு கிகரமாகத் திரியும்.**

*(எ.டு).* த. கிளிக்கி, கடைக்கி (பேச்சு வழக்கு) வீட்டுக்கு, பலாவுக்கு > தெ. கூடு (சோறு) – கூட்டிகி (சோற்றுக்கு)

த. மாற்றம் (பேச்சு) > தெ. மாட்ட – மாட்டகு.

த. அதனுக்கு > தெ. தானிக்கி

**6.212 பன்மை குறித்த 'கள்' ஈறு லுகர மாகத் திரியும்.**

*(எ.டு).* த. கத்திகள் > தெ. கத்திலு

த. அங்காடிகள் > தெ. அங்கடிலு.

**6.213 மொழியிடை ழகரம் டகரமாகிப் பின்னர் தகரமாகி இரு மடித்திரிபு எய்தும்.**

*(எ.டு).* த. இழி–இழிகு (இறங்கு)

த. இழிகு > தெ. டிகு–திகு.

**6.214 ன்று என முடியும் வினையெச்ச ஈறு னு எனக்குறுகும்.**

*(எ.டு).* த. ஊன்று > தெ. ஊனு

த. ஊன்றிக் கொண்டு > தெ. ஊனு கொனி.

## தமிழ் – துளு

**6.215 பல தென்திரவிட மொழிகளின் கலவையாகத் துளுமொழி உள்ளதென்பது அன்றாடு வழக்கு அடிப்படைச் சொற்கள் பன்மடித் திரிபுகளால் அறியப்படும்.**

*(எ.டு).* த. இவன்–இவ > து. (இவ) இம்பெ.

த. இவள்–இமள் > து. மோளு

த. இவர்–இமர் > து. மேரு (ஆ) மோகுளு (பெ.)

த. இவை, உவை > து. உந்தெகுளு

த. அவன் > து. ஆயெ

த. அவள் > து. ஆளு

த. அவர் > து. ஆரு

த. அவை > து. அவு, ஆகுளு

**6.216 தன்மைப் பெயர் யான் யாங்கள் என்பவற்றின் திரிபாக அமையும்.**

*(எ.டு).* த. ஆன், யான் > து. யானு (தன்மை ஒருமை)

த. யாம், யாங்கள் > து. எங்குளு (தன்மைப் பன்மை)

**6.217 முன்னிலைப் பெயர்களில் நகர மெய் நீங்கிய முந்து தமிழ்த் திரிபு வடிவம் நிலைக்கும்.**

*(எ.டு).* த. ஊன்–நூன்–நீன்–நீ > து. ஈ

த. ஊன்–நூன்–நூம்–நீம்–நீர் > து. ஈரு

**6.218 வினாப் பெயர்கள் பன்மடித் திரிபு எய்தும்.**

*(எ.டு).* த. யார் > து. யேரு

த. யாவது > து. தாதவு

த. யா (என்ன) > து. (யானெ) தானே (என்ன)

**6.219 பன்மையீறு 'கள்' உகரம் சேர்ந்து குளு எனத் திரியும்.**

*(எ.டு).* த. யாங்கள் (யாம்) > து. எங்குளு

த. நீங்கள் > து. நிகுளு

த. குருக்கள் > து. குருக்குளு

**6.220 ஆண்பால் ஈறு 'அன்' கெட்டு ஈற்றயல் எகர ஒலித்துணை பெறும்.**

*(எ.டு).* த. குயவன் > து. குசவெ.

த. கள்வன் > து. கள்வெ.

**6.221 பெயர்ச்சொற்களின் ஐகார ஈறு ஏகார ஈறாகத் திரியும்.**

*(எ.டு).* த. பிள்ளை > து. பிள்ளே.

**6.222 பெயர்ச்சொற்களில் இடைநின்ற டகரம் இரட்டித்து ஆண்பால் ஈறு கெடும்.**

*(எ.டு).* த. வேடன் > து. வேட்ட

**6.223 பெயர்ச்சொற்களில் சகர உடனிலை மெய்மயக்கம் எடுப்பொலி பெறும்.**

*(எ.டு).* த. அச்சன் > து. ajja.

**6.224 ஆகார மொழி முதல் ஏகாரமாகத் திரியும்.**

*(எ.டு).* த. ஆடு > து. ஏடு

**6.225 'ன்ற' எனும் மெய் மயக்கம் 'ஞ்ச' எனத் திரியும்.**

*(எ.டு).* த. பன்றி > து. பஞ்சி

த. கன்று > து. கஞ்சி

**6.226 சொல்லின் இடைநின்ற ருகரம் ரகர மெய்யாகத் திரியும்.**

*(எ.டு).* த. மருந்து > து. மர்து

த. எருமை > து. எர்மெ.

த. குருகு > து. கொர்ங்கு (பறவை)

**6.227 சொல்லின் இரண்டாம் எழுத்து தொகும்.**

*(எ.டு).* த. கழுதை > து. கத்தெ.

**6.228 மொழி முதல் உகரம் ஒகரமாகத் திரியும்.**

*(எ.டு).* த. குறி > து. கொறி

**6.229 மொழியிறுதி ழகரம் ரகரமாகத் திரியும்.**

*(எ.டு).* த. கோழி > து. கோரி

த. தாழை > து. தாரெ

**6.230 ளகர மெய் மயக்கம் லகர மெய்யிறுதி ஆகும்.**

*(எ.டு).* த. புள்ளி (புள்ளி கொண்ட சிறுத்தை) – புல்லி– புலி > து. பில்லி

**6.231 ழகர மெய்யீறு ளகர ஈறாகத் திரியும்.**

*(எ.டு).* த. கூழ் > து. கூளு

**6.232 றகர ஈறு ரகர ஈறாகத் திரியும்.**

*(எ.டு).* த. சாறு > து. சாரு

**6.233 மகர மெய்யீறு கெடும்.**

த. அப்பம் > து. அப்ப

த. அரம் > து. அர

**6.234 வகர முதல் எடுப்பொலி பகரமாகத் திரியும்.**

*(எ.டு).* த. வயல் > து. bayal.

**6.245 மொழியிறுதி லகர மெய் ரகர மெய்யாகத் திரியும்.**

*(எ.டு).* த. வில் > து. பிர் (bir)

**6.246 டகரம் இரட்டித்த பெயர்ச்சொல் தமிழ் மரபல்லாத வேற்று நிலை மெய் மயக்கம் பெறும்.**

*(எ.டு).* த. கொட்டகை > து. கொட்யெ

த. பட்டணம் > து. பட்ண

**6.247 தனிக் குறிலடுத்த ழகரம் ரகர மெய்யாகத் திரியும்.**

*(எ.டு).* த. பொழுது > து. பொர்து

த. கழுதை > து. கர்தெ,கத்தெ

**6.248 ரகர லகர மெய்யீற்றுச் சொற்கள் உகர ஒலித்துணை பெறும்.**

*(எ.டு).* த. ஊர் > து. ஊரு

த. இல் (வீடு) > து. இல்லு

த. உகிர் > து. உகுரு

**6.249 'மகரமெய் இடைக்குறையாகி பு' எனும் சொல்லிறுதி வுகர மாகத் திரியும்.**

*(எ.டு).* த. பாம்பு > து. பாவு

த. காம்பு > து. காவு

**6.250 யகர மெய்யீற்றுச்சொல் இகர ஒலித்துணை பெறும்.**

*(எ.டு).* த. காய் > து. காயி

த. நாய் > து. நாயி

**6.251 மொழி முதல் சகரம் ககரமாகும்.**

*(எ.டு).* த. செவி > து. கெவி

**6.252 ஐகார ஈறு எய் எனத் திரியும்.**

*(எ.டு).* த. மூலை > து. மூரெய்

**6.253 ற்ற எனும் உடனிலை மெய் மயக்கம் த்த எனத் திரியும்.**

*(எ.டு).* த. நாற்றம் > து. நாத்த

த. நெற்றி > து. நெத்தி (நுதல்–நெசலு)

**6.254 வகர முதல் பகர முதலாகத் திரியும்.**

*(எ.டு).* த. வெப்பு > து. பெப்பு

**6.255 றுகர ஈறு துகர ஈறாகத் திரியும்.**

*(எ.டு).* த. நூறு > து. நூது

**6.256 தொழிற்பெயர்களின் இலக்கணக் கட்டமைப்பு தமிழ் முந்து நிலையைக் காட்டும்.**

*(எ.டு).* 1. *முதனிலைத் தொழிற்பெயர்:* த. சுருள் > து. சுருள்

2. *முதனிலை திரிந்த தொழிற்பெயர்:* த. ஈடு, கேடு > து. ஈடு, கேடு.

3. *முதனிலை திரிந்து ஈறு பெற்ற தொழிற்பெயர்:* த. ஆட்டம், ஓட்டம் > து. ஆட்ட, ஓட்ட.

4. *ஈறு பெற்ற தொழிற்பெயர்:* த. கொலை > து. கொலெ.

த. சாவு > து. சாவு

த. தீர்ப்பு > து. தீர்ப்பு.

**6.257 ஒகர உயிர்மெய் முதற்சொல் உகர உயிர்மெய் முதலாகும்.**

*(எ.டு).* த. பொடி > து. புடி

**6.258 தொழிற்பெயர் ஈறு அல் – உனி எனத் திரியும்.**

*(எ.டு).* த. கொள்தல் > து. கொணுனி

த. அலம்பு (அலம்பல்) > து. அலம்புனி

த. அழு (அழுதல்) > து. அர்பினி

த. ஆர்த்தல் (ஒலித்தல்) > து. ஆர்க்குனி

**6.259 ளகர மெய்யீறு ணகர மெய்யாகத் திரியும்.**

*(எ.டு).* த. கேள் > து. கேண்

**6.260 தொழிற்பெயர் ஈறு மற்றொரு துணையீறு பெற்று ஏவல் வினையாகும்.**

*(எ.டு).* த. இரு > து. இருப்பல்–இருப்புல்+(ஈ)இ–இருப்புனி (இரு)

த. ஆகல்–ஆகலி > து. ஆகுனி–ஆயினி (ஆகு)

**6.261 ஏவல் வினையொடு எலா, எலே எனும் கெழுதகைப் பொதுச்சொல் புணரும்.**

*(எ.டு).* த. கேள்எலா > து. கேண்லெ, கேண்ல.

த. கேண் (மின்)எலா > து. கேணுலெ

**6.262 ளகர மெய்யீற்று வினைச்சொல்லில் வருமொழி முதல் வல்லினம் எடுப்பொலியா யிருந்தால் அல்லது மெல்லின மெய் இருந்தால் ளகரம் ணகரமாகத் திரியும்.**

*(எ.டு).* த. கேள்–கேட்பேன் > து. கேணும்பெ.

த. கேள்–கேட்கிறேன் > து. கேணுவெ.

த. கேள்–கேட்டேன் > து. கேண்டெ.

கன்னடத்தில் கேள்தே (கேட்டென்) கேளுத்தேனே (கேட்கிறேன்) கேள்வெனு (கேட்பேன்) எனப் புணர்தல் காண்க.

தமிழில் ளகர மெய்யீற்றின் வரும் தகரம் எடுப்பொலியாகாமல் வல்லொலியாகவே ஒலித்த காலத்தில் ள்+த் புணர்ச்சி ட்ட எனத் திரிந்து, கேள்+த்+ஏன்–கேட்டேன் ஆயிற்று.

**6.263 ஆண்டு எனும் சொல்லின் நெடு முதல் குறுகி இடைமெல்லினம் கெட்டு உகர ஈறு எகர ஈறாகத் திரியும்.**

*(எ.டு).* த. ஆண்டு > து. அடெ (ஆண்டு)

செமித்திய மொழிகளில் பாண்டியன் என்றும் பெயர் படெ எனத் திரிந்ததை ஒப்பிடுக.

**6.264 பொருட்பாட்டு விரிவுற்ற உரிச் சொல் குறிப்பு வினைச்சொல்லாக வழங்கும்.**

***(எ.டு).*** த. மல்–மல்லல். "மல்லல் வளனே". (தொல.தொல்.303).

த. மல் > து. மல்–மல்ல=பெரிய.

வளமும் செழிப்பும் கொண்டது வடிவிலும் பெரியதாகும் பெற்றி நோக்கி மல்லல் உரிச்சொல் பெரிதாதல் பொருளில் குறிப்பு வினைச் சொல்லாயிற்று.

து. யென குதுரெகு நினகுதுரெ மல்லெ. = என் குதிரையை விட உன் குதிரை பெரியது.

**6.265 ழகர மெய்யீற்றுச் சொற்களில் துகர துணையீறு சேர்ந்து திரிபு எய்தும்.**

***(எ.டு).*** த. பறழ் (குட்டி) > து. பரண்டு (பறழ்+து)

**6.266 கூட்டுச் சொற்கள் மரபிகந்த மரூஉ முடிபுகள் எய்தும்.**

***(எ.டு).*** த. கட்டஒல்லும் > து. கட்டொலி

த. கட்டஒல்லுமா > து. கட்டேல்யா

**6.267 இடையண்ண மெய் மயக்கம் அடியண்ண மெய் மயக்கமாகும்.**

***(எ.டு).*** த. இஞ்சி > து. இங்கு

## தமிழ் – படகம்

**2.271 மூவிடப் பெயர்கள் ஈற்றுத்திரிபு எய்தும்.**

***(எ.டு).*** தன்மையொருமை: த. நான் > பட. நா

தன்மைப் பன்மை: த. நாம், நாங்கள் > பட. நங்க

முன்னிலையொருமை: த. நீ > பட. நீ

முன்னிலைப்பன்மை: த. நீங்கள் > பட. நிங்க.

**2.272 சுட்டுப்பெயர்கள் முந்துதமிழ்ச் சொல்லாட்சிகளாக நிலைக்கும்.**

***(எ.டு).*** த. அங்கே > பட. அல்லி

த. இங்கே > பட. இல்லி

**2.273 கள் எனும் பன்மை ஈற்றில் ஈற்று ளகர மெய் கெடும்.**

***(எ.டு).*** த. மக்கள் > பட. மக்க

த. பெண்மக்கள் > பட. hemmakka

த. அவர்கள் > பட. அவக்க

த. நாம்+கள் > பட. நங்க

த. நீம்+கள் > பட. நீங்க

த. தாம்+கள் > பட. தங்க

**2.274 சுட்டுப்பெயர் வினாப்பெயர்களில் பெண்பால் தவிர மொழியிடை வகரம் பகர மாகத் திரியும். ஐகார இறுதி எகரமாகும்.**

***(எ.டு).*** த. அவன் > பட. அம

த. அவள் > பட. அவ

த. அவர்கள் > பட. அவக்க

த. அது > பட. அது

த. அவை > பட. அவெ

த. எவன் > பட. எம

த. எவள் > பட. எவ

த. எவர்(கள்) > பட. எவக்க

த. எது > பட. எது

த. எவை > பட. எவெ

தமிழ், கன்னடம் ஆகிய மொழிகளைப் போன்று படகு மொழியில் சுட்டுப்பெயர், வினாப் பெயர் ஆகியவை ஐம்பால்களைக் காட்டுகின்றன. குடகு, கோத்தம் ஆகிய மொழிகளில் நான்கு பால்களே உள்ளன. துடவம் மொழி ஒரே பாலைக் காட்டும்.

மூவிடப் பெயர்கள்:

| | தமிழ் | படகு | குடகு | துடவம் | கோத்தம் | கன்னடம் |
|---|---|---|---|---|---|---|
| தன்மை ஒருமை | நான் | நா | நா | ஒன் | ஆன் | நானு |
| உளப்பாட்டுப்பன்மை | நாம் | நங்க | நங்க | ஓம் | ஆம் | நாவு |
| உளப்படாப்பன்மை | நாங்கள் | எங்க | எங்க | எம் | ஆம் | ஆம் (கல்வெட்டு) |
| முன்னிலை | | | | | | |
| ஒருமை | நீ | நீ | நீ | நீ | நீ | நீனு |
| பன்மை | நீங்கள் | நிங்க | நிங்க | நிம் | நீம் | நீவு |

த. யார் > பட. தார (dara)

**6.275 மொழியிடை ழகரம் தொகும்**

*(எ.டு).* த. உழுந்து > பட. உத்து

த. அழுது > பட. அத்து

த. கழுத்து > பட. கத்து

த. கழுதை > பட. கத்தெ

த. முழுகுது > பட. மூகு

**6.276 குறிலிணைச்சொல் நெடு முதலாகும்.**

*(எ.டு).* த. புழு > பட. hū

த. தொழு(வம்) > பட. தோ

**6.277 மொழியிறுதி ழகரமெய் கெடும்.**

*(எ.டு).* த. கூழ் > பட. கூ (அரிசிச்சோறு)

த. அகழ் > பட. அகெ

**6.278 மொழியிறுதி ழகரம் லகரமாகி உகர ஒலித்துணை பெறும்.**

*(எ.டு).* த. எழு > பட. எல்லு

த. கமழ் > பட. கமலு

**6.279 மொழியிடை ழகரம் ளகரமாகும்.**

*(எ.டு).* த. எழுபது > பட. எளவத்து

த. பழி > பட. பளி

த. ஏழை > பட. ஏளெ

த. மெழுகு > பட. மொளுகு

த. பழக்கம் > பட. பளசு

**6.280 மொழியிறுதி ழகரம் யகரமாகும்.**

*(எ.டு).* த. குழி > பட. குய்

த. சுழி > பட. சுய்

த. கழி > பட. கயி

த. ஏழு > பட. இய்யு

த. குழை > பட. கொயெ

**6.281 மொழியிறுதி ழகரம் ககரமாகும்.**

*(எ.டு).* த. இழு > பட. இகி

த. வழி > பட. பகி

த. அவிழ் > பட. அகெ

த. இழி > பட. ஈகு

**6.282 மொழியிறுதி ழகரம் ணகரமாகும்.**

*(எ.டு).* த. பழம் (பழ) > பட. haṇṇu

த. பிழிகு > பட. பிண்டு

த. கழை > பட. கணெ

த. முழங்கால் > பட. மொணகாலு

**6.283 முற்றுகர இறுதியாக வரும் ழகரம் வகர மெய் மயக்கமாகி உகர ஒலித்துணை பெறும்.**

த. அழு > பட. அவ்வு

**6.284 ஏவல்வினையிறுதியாக வரும் முற்று கர ழகர ஈறு கட்டளைப்பொருள் அழுத்தத் தால் உடனிலை மெய்மயக்க மெய்யீறாக நிற்கும்.**

*(எ.டு).* த. இழு > பட. இழ்ழ்.

**6.285 மொழியிடை மொழியிறுதி ளகரம் முறையே இடைக் குறையாகவும் கடைக் குறையாகவும் திரியும்.**

*(எ.டு).* த. குளகம் > பட. கோக

த. நாளை > பட. நே (க)

**6.286 மொழி முதல் வகரம் பகர எடுப் பொலியாகும்.**

*(எ.டு).* த. வளை > பட. பே

த. விளை > பட. பே

த. விளக்கு > பட. பீகு

**6.287 மொழியீற்று ளகரம் ணகரமாகும்.**

*(எ.டு).* த. உருள் > பட. உருணு

த. ஆள் > பட. ஆணு

த. நுளம்பு (கொசு, மின்மினி) > பட. நொணா(ஈ)

**6.288 இகரமூர்ந்த ளகர ஈறு இகர மூர்ந்த யகர ஈறாகும்.**

*(எ.டு).* த. தெளி > பட. தீயி

**6.289 மொழியிடை ளகரம் வகரமாகும்.**

*(எ.டு).* த. ஊளையிடு > பட. ஊவலிக்கு.

**6.290 மொழியிடை ளகரம் தொகும்.**

*(எ.டு).* த. முளைக்கை > க. மொளக்கே > பட. மொக்கு.

த. உள்ளாக > க. ஔகோ > பட. ஒகெ.

த. தளும்பு > பட. தொக்கு

**6.291 வினையடி ளகர மெய்யீறு லகர மெய்யீறாகி இரட்டித்து உகர ஒலித்துணை பெறும்.**

*(எ.டு).* த. கள் (தல்) > பட. கல்லு (திருடு)

**6.292 மொழி முதல் வல்லினம் எடுப் பொலியாகும்.**

*(எ.டு).* த. கூடு > பட. gūḍu

த. தண்டு > பட. dādu.

**6.293 தனிக்குறிலடுத்த லகர ணகர னகர மெய் இரட்டித்து உகர ஈறு பெறும்.**

*(எ.டு).* த. மண்+உ > பட. மண்ணு (மண்)

த. கல்+உ > பட. கல்லு (கல்)

த. பொன்+உ > பட. பொன்னு(பொன்)

**6.294 ஆள் எனும் சொல் ஈறு கெட்டு ஓரெழுத்து ஒரு மொழியாகும்.**

*(எ.டு).* த. ஆள் > பட. ஆ

த. ஆட்கள் > பட. ஆகொ

**6.295 "அன்" ஆண்பாலீற்றின் னகர மெய் கெட்டு அகரம் எகரமாகும்.**

*(எ.டு).* த. மூங்கன் > பட. மூங்கெ

த. படகன் > பட. படகெ.

**6.296 கள்ளி என ளகர உடனிலை மெய் மயக்கத்தொடு சேர்ந்த பெண்பால் இகர ஈறு எகரமாகத் திரியும்.**

*(எ.டு).* த. கள்ளன் > பட. கள்ளெ (கள்ளி)

**6.287 'அர்' பலர்பால் ஈற்றுடன் உகர ஒலித்துணை ஈறு சேரும்.**

*(எ.டு).* த. கள்ளர் > பட. கள்ளரு

த. முதியர் > பட. முதுகரு.

**6.300 அள், அள் எனும் உயர்திணைப் பாலீறுகள் வழக்கிழந்ததால் அவற்றை ஈடுகட்டும் பாங்கில் மகரம் ஆண்பாலீறாகவும் வகரம் பெண்பாலீறாகவும் வழங்கும்.**

*(எ.டு).* த. பெரியவன் > பட. தொட்டம

த. பெரியவள் > பட. தொட்டவ

**6.301 மொழி முதல் இகரம் எகரமாகத் திரியும்.**

*(எ.டு).* த. இலை > பட. எலெ

த. இறங்கு > பட. எரகு.

**6.302 எகர முதற்சொற்கள் இகரமுத லாகத் திரியும்.**

*(எ.டு).* த. எலி > பட. இலி

த. எதிர் > பட. இதிர்

**6.303 உகர முதற்சொற்கள் ஒகர முதலாகும்.**

*(எ.டு).* த. உடல் > பட. ஒடலு

த. குடை > பட. கொடெ

**6.304அகர முதற்சொற்கள் எகர முதலாகும்.**

*(எ.டு).* த. கம்மல் (குரலடைப்பு) > பட. கெம்மலு (இருமல்)

த. கன்னம் > பட. கென்னி

த. கிலி > பட. கிலி (அச்சம்)

த. கோணி > பட. கோணி

த. கூடு > பட. கூடு

த. கிழங்கு > பட. காஸூ

த. குடில் > பட. குடி (கோயில்)

**6.305 சகர முதற்சொற்கள்ள எடுப்பொலி யாகும்.**

*(எ.டு).* த. காண் > பட. jān

த. சொல்லு > பட. jolly

த. சோளம் > பட. jolu

**6.306 மொழி முதல் தகரம் எடுப்பொலி யாகும்.**

*(எ.டு).* த. தாடை > பட. dāḍe

த. தடம் > பட. daḍe

**6.307 மொழி முதல் பகரம் எடுப்பொலி யாகும்.**

*(எ.டு).* த. புழுதி > பட. būdi

த. பாகம் > பட. bāge.

**6.308 மொழி முதல் சகரம் ககர வல் லொலியாகும். ஆரியத்தாக்கம் மிகுந்த சூழல்களில் எடுப்பொலியாகும்.**

*(எ.டு).* த. சிவப்பு > பட. கெப்பு

த. செவி > பட. கிவி

த. செய் > பட. giy

த. செடி > பட. giḍu

**6.309 சில சொற்களில் மொழி முதல் சகரம் உரசொலி சகரமாகும்.**

*(எ.டு).* த. கிளை > பட. sullu.

**6.310 மொழி முதல் ககரம் சகர எடுப் பொலியாகும்.**

*(எ.டு).* த. கிள்ளு > பட. jiḷḷu

**6.311 மொழி முதல் ஞகரம் நகர மெல்லினமாகும்.**

*(எ.டு).* த. ஞெலிகோல் > பட. நெலிகோல்

த. ஞண்டு > பட. நண்டு

**6.312 மொழி முதல் தகரம் சகர உரசொலியாகும்.**

*(எ.டு).* த. தேன், தீம் > பட. si, siya

த. தீய் > பட. siyi

**6.313 மொழி முதல் பகர அடியண்ண மூச்சொலியாகும்.**

*(எ.டு).* த. பால் > பட. hālu

த. பட்டி > பட. haṭṭi

**6.314 மொழி முதல் வகரம் பகர எடுப் பொலியாகும்.**

*(எ.டு).* த. வால் > பட. bālu

த. வா > பட. bā

**6.315 மொழி முதல் மொழியிடை வகரம் மகரமாகும்.**

*(எ.டு).* த. வதுவை > பட. மதுவெ

த. விதி > பட. மிதி

த. அவன் > பட. அம

த. இவன் > பட. இம

த. ஆண்டவன் > பட. ஆண்டம

த. கண்டவன் > பட. கண்டம்

த. அவைத்தல் > பட. அமெ (குற்றுதல்)

**6.316 நெடுமுதல் மொழியிடை மகரம் வகரமாகும்.**

*(எ.டு).* த. ஆமணக்கு > பட. அவுண்டெ

த. தாமணி > பட. தாவணி

**6.317 மொழி முதல் உயிரொடு சகரம் சேரும்.**

*(எ.டு).* த. இடி > பட. sidilu

த. ஆயிரம் > பட. sāvira

**6.318 மொழியிடை மெல்லினம் கெடும்.**

*(எ.டு).* த. கன்று > பட. கரு

த. நான்கு > பட. நாகு

**6.319 மொழியிடை இன மெல்லின மெய் தோன்றும்.**

*(எ.டு).* த. நாடகம் > பட. நாடங்கெ

த. ஊசி > பட. sūnji

**6.320 சொல்லில் யகர மெய்யீறு கெடும். ஆகார முதல் ஏகாரமாகும்.**

*(எ.டு).* த. நாய் > பட. நே

த. நோய் > பட. நோ

**6.321 மொழியிடை யகரம் சகரமாகும்.**

*(எ.டு).* த. உயிர் > பட. உசுரு

த. வயிறு > பட. பசுரு

**6.322 மொழியிடை யகரம் மகரமாகும்.**

*(எ.டு).* த. எயிறு > பட. மெருு

**6.323 வல்லின றகரம் இடையின ரகரமாகத் திரியும்.**

*(எ.டு).* த. முறம் > பட. மொரெ

த. கறை > பட. கரெ

**6.324 றகரம் ரகரமாகத் திரிந்ததால் பல பொருள் ஒரு சொல் பெருகும்.**

*(எ.டு).* த. மொர > பட. முறம், மரம்

த. அரெ > பட. அறை, பாதி

**6.325 மொழியிறுதி <u>ற்ற</u> மெய்மயக்கம் <u>த்த</u> எனத் திரியும்.**

*(எ.டு).* த. நெற்றி > பட. நெத்தி

த. வெற்றிலை > பட. பெத்தலெ

**6.326 தகரம் இரட்டித்து வரும்பொழுது அதற்கு முன் உள்ள எழுத்து நெடிலாக இருந்தால் ஈற்றுத்தகரம் வல்லெழுத்து ஒலிப்பே பெறும்.**

*(எ.டு).* த. மாற்று–மாத்து > பட. mātu

த. நாற்று–நாத்து > பட. nātu.

**6.327 மொழியிறுதி ரகர மெய் லகரமாகி ஒலித்துணை உகரம் பெறும்.**

*(எ.டு).* த. மயிர் > பட. மயிலு

த. கோடாரி > பட. கொடலி

**6.328 <u>ன்ற</u> எனும் மெய் மயக்கம் <u>ந்த</u> எனத் திரியும்.**

*(எ.டு).* த. மன்று > பட. மந்து

த. என்று > பட. எந்து

**6.329 ஐகார ஈறு எகரமாகத் திரியும்.**

*(எ.டு).* த. மனை > பட. மநெ

த. மலை > பட. மலெ

த. தலை > பட. தலெ

த. அலை > பட. அலெ

த. வலை > பட. பலெ

**6.330 மொழி முதல் பகரம் வகரமாதலொடு றகரமும் ரகரமாகும்.**

*(எ.டு).* த. தலைப்பொறை > பட. தலெவொரெ (தலைச்சுமை).

## <u>வட இந்திய மொழிகள்</u>

### தமிழ் – மராத்தி

**6.401 மராத்திமொழியில் தன்மை யொருமை நான்மடித் திரிபு எய்தும்.**

*(எ.டு).* <u>த.</u> நான் > <u>தெ.</u> நேனு > <u>பிரா.</u> மேன் > <u>இந்.</u> மை > <u>மரா.</u> மீ.

**6.402 தன்மைப் பன்மை மொழி முதல் மெய் கெட்டு, 'கள்' ஈறு அடியண்ண மூச்சொலியாகி ஈகாரத் துணையீறு பெறும்.**

*(எ.டு).* <u>த.</u> நாம்+கள் > <u>மரா.</u> ஆம்ஈ (āmhī).

**6.403 முன்னிலை ஒருமை பழந்தமிழ் வடிவத்தின் இருமடித் திரிபு பெறும்.**

*(எ.டு).* த. நூன் (நீன்) – நூ > மரா. தீ (நீ)

**6.404 முன்னிலைப் பன்மை நெடில் குறுகி மகர மெய்யீறு கெடாமல் திரிபுப் பன்மை யீறு பெறும்.**

*(எ.டு).* த. நூம் (நீம், நீங்கள்) > மரா. (தூம்) தும்ஈ (tumhī).

**6.405 ஆண்பால் ஒருமை நான்மடித் திரிபு பெறும்.**

*(எ.டு).* த. அவன் > தெ. அதன் (atan) > தான். மரா. (தோன்) தோ (அவன்).

**6.406 பெண்பால் ஒருமை மும்மடித்திரிபு பெறும்.**

*(எ.டு).* த. அவள் > தெ. (அதள்) அதி > மரா. தீ.

**6.407 பலர்பால் நான்மடித் திரிபு பெறும்.**

*(எ.டு).* த. அவர் > தெ. (அதர்) தேர் > மரா. தே (ஆண்பால்) த்யா (பெண்பால்).

**6.408 அஃறிணையொருமை இருமடித் திரிபு எய்தும்.**

*(எ.டு).* த. அது > தெ. அதி > மரா. தெ.

**6.409 அஃறிணைப் பன்மை மும்மடித் திரிபு எய்தும்.**

*(எ.டு).* த. அவை (அதுங்கள்) > பிரா. (தேம்) > மரா. தீ (ங்).

**6.410 பழந்தமிழ் அண்மை நெடுஞ்சுட்டு அடியண்ண மூச்சொலியாகவும் சேய்மைச் சுட்டு முன்னுயிர் இடம் பெயர்ந்து ஏகார மாகும் நான்மடித் திரிபு பெறும்.**

*(எ.டு).* த. ஈ (இது) > மரா. ஏ (hē).

த. ஆ– அது > தெ. அதி > மரா. தே.

**6.411 வினாப்பெயர்கள் பழந்தமிழ்ச் சொல்லின் பன்மடித்திரிபு பெறும்.**

*(எ.டு).* த. எவன் (என்ன) > த. வோனு (வட்டார வழக்கு) > மரா. கோன்> இந். கா (ங்).

த. எவை (வோயி) > மரா. கோயி–காய் (என்ன, எது, > இந். க்யா (பன்மை சுட்டிய வினா ஒருமை சுட்டியதாயிற்று).

**6.412 முன்னுயிர் கெட்டு அயலுயிர் நெடிலாகும்.**

*(எ.டு).* த. உகள் > மரா. ghāl (போடு).

**6.413 மொழி முதல் குறிலிணை தனி நெட்டுயிராகும்.**

*(எ.டு).* த. அள்+கு–அளுகு > தெ. அடுகு (கேள்) > மரா. ஐக் (கேள்).

**6.414 தாயைக் குறிக்கும் ஆய் எனும் சொல் யகர உடம்படு மெய் பெறாமல் இகர ஈறு பெறும்.**

*(எ.டு).* த. ஆய், ஆயி > மரா. ஆஇ (தாய்).

**6.415 செல்லுதல் பொருள்படும் யா வினைச்சொல் எடுப்பொலி சகரமாகும்.**

*(எ.டு).* த. யா (செல், போ) > மரா. jā

த. யானம் (கப்பல்) – யாயம் > மரா. Jahāj.

**6.416 கரும்பைக் குறித்த இக்கு எனும் தமிழ்ச்சொல் இருமடித்திரிபு பெறும்.**

*(எ.டு).* த. இக்கு > இந். ஈக் > மரா. (ஊசு) ūs.

**6.417 தமிழில் இருபொருள் குறித்த சொல் இருவேறு தனிச்சொல்லாகும்.**

*(எ.டு).* த. நகர் (வீடு) > மரா. கர்

த. நகர் (நகரம்) > மரா. நகர்.

**6.418 ஒரு சொல்லின் வட்டார வழக்கு பிறமொழிகளில் பரவி முந்தைய சொல் மறையும்.**

*(எ.டு).* த. உரல் (பெருவழக்குச் சொல்)

த. உரல்கல் (சிறு வழக்கான வட்டாரச்சொல்)

த. உரல்கல் > தெ. ரோகலி > மரா. உக்கல்

**6.417 நகர முதற்சொல் மகர முதலாகும்.**

*(எ.டு).* த. நிகழ் (முதலை) > மரா. மகர்

**6.418 சொல்லின் இரண்டாம் எழுத்து கெடும்.**

த. பழுக்க (பழுத்த) > மரா. பக்கா

த. மூழ்கின > மரா. மக்ன.

**6.419 மகர உடனிலை மெய் மயக்கம் வேற்று நிலை இன மெய் மயக்கமாகும்.**

*(எ.டு).* த. அம்மை, அம்மா > மரா. அம்பா

**6.420 சொல்லின் இடை ருகரம் ரகர மெய்யாகும்.**

*(எ.டு).* த. கருமம் > மரா. கர்மம்.

**6.421 மொழி முதல் எழுத்து கெடும்.**

*(எ.டு).* த. சாகாடு (வண்டி) > மரா. காடி, காடீ

**6.422 மரபு வழுச் சொல்லாட்சிகள் வழு வமைதியாக வழங்கும்.**

*(எ.டு).* த. செடி > தெ. செட்டு (மரம்) > மரா. jhāḍ. (செடியை மரப்பொருளில் ஆள்வது மரபுவழு).

**6.423 உரிய சொல்லிருப்பினும் வேறு திரிசொல் ஆளப்படும்.**

*(எ.டு).* த. ஏர்–உழுவது > மரா. ஔத் (ஏர்).

**6.424 தலை எனும் தமிழ்ச்சொல் தல், தர் எனத் திரியும்.**

*(எ.டு).* த. தலைவாள் > தல்வார் (சிறப்பான வாள்)

தலைவாசல் > தர்வாசா (darvāja).

**6.425 வா எனும் ஏவல் வினை இருமடித் திரிபு பெறும்.**

*(எ.டு).* த. வா > இந். ஆ > மரா. யே

**6.426 ஆகார நெடுமுதல் ஏகாரமாகும்.**

*(எ.டு).* த. தா > மரா. தே.

**6.427 இன்று எனப் பொருள்படும் சொல் பன்மடித் திரிபு பெற்று மரூஉச் சொல் லாகும்.**

*(எ.டு).* த. இஞ்ஞான்று–ஞான்று–ஞாந்து–ஞாத்து–ஞாச்சு–ஆச்சு > மரா. āj.

தெலுங்கில் இஞ்ஞான்று–ஞேன்று–ஞேண்டு–ஞேடு–நேடு என்றாகும்.

**6.428 மூவசைச்சொல் ஈரசைச் சொல் லாகத் திரியும்.**

*(எ.டு).* த. வழுதுணங்காய் > தெ. வங்காய் > மரா. வாங்கே (கத்தரிக்காய்).

**6.429 யகர மெய்யீறு தகர மெய்யீறாகத் திரியும்.**

*(எ.டு).* த. செய் (நிலம்) > தெ. செய்னு, சேனு > மரா. சேத் > இந். கேத்.

**6.430 உகர ஈற்று வினையடி இகர ஈறு பெற்று பெயர்ச்சொல்லாகும்.**

*(எ.டு).* த. நாவுதல் (மழித்தல், நீக்குதல், நாவு > மரா. நாவி (முடி மழிக்கும் தொழிலாளி).

த. தூ–தூவு (கழுவு, துப்பரவாக்கு) தூவு > மரா. (தூவி) தோவி (துணி வெளுப்பவன்).

**6.431 தகர முதல் நகர முதலாகத் திரியும்.**

*(எ.டு).* த. தொழும்பன்–தொழுத்தன் (வேலைக் காரன்) > மரா. (நௌத்தன்) நௌக்கன் – நோக்கர்.

**6. 432 பகர முதல் எடுப்பொலியாகும்.**

த. பதம் (உணவு, தவசம்) > மரா. பத்தா (battā).

**6.434 லகர ஈறு ளகர ஈறாகத் திரியும்.**

*(எ.டு).* த. சாலை (பள்ளிக்கூடம்) > மரா. சாளா.

**6.435 புகர முதல் பகர முதலாகத் திரியும்.**

*(எ.டு).* த. புகல் (புகுமுகம், முதலாவது) > மரா. பகிலா (pahilā).

**6.436 மொழியிறுதி தகரம் யகரமாகிப் பின்னர் வகர மெய்யாகும்.**

*(எ.டு).* த. பாதம் > இந். பாய > மரா. பாவ் (காற்பகுதி).

**6.437 மொழியிடை 'மூ எழுத்து 'ஊ' எனத் திரியும்.**

*(எ.டு).* த. பாத(ம்) மூன்று (3/4) > மரா. (பாதமூண்) – பாஊண் (3/4).

**6.438 பழந்தமிழ் வேரடி மெய்யீற்றுத் திரிபு பெறும்.**

*(எ.டு).* த. ஊ (மேலெழும்புதல், உயர்தல், கருத்துவேர்) – ஊடு > மரா. ஊட் (எழுந்திடு).

**6.439 ளகர மெய்யீறு டகர மெய்யீறு ஆகும்.**

*(எ.டு).* த. உகள் (வெளிப்படுதல்) > மரா. உகட் (திற).

**6.440 மறைந்துபோன தமிழ்ச்சொல் தகர மெய்யீறு பெற்று வழங்கும்.**

*(எ.டு).* த. தூ (வெண்மை, வெண்மையான பால்) > மரா. தூத் (dūd).

**6.441 ழகர மெய்யீறு கெட்ட சொல் துணையீறு பெறும்.**

*(எ.டு).* த. தாழ் (பொறு) > க. தாள், தாளு > மரா. தாம்ப் (tāmb)

த. ஏன்–வோன்–கோன்–காய் > மரா. கிசி (எத்தனை) மரா. கசாலா (எதற்கு) குணாலா–யாருக்கு.

**6.442 அருகிய வட்டார வழக்குச் சொல் லாட்சிகள் திரிபுற்று வழங்கும்.**

*(எ.டு).* த. இவ்விடம் – இவ்விடத்து–இவத்தே (வட்டாரவழக்கு) > மரா. ஏத்தே.

த. அவ்விடம்–அவ்விடத்து–அவத்தே–தவத்தே (வட்டார வழக்கு) > மரா. தேத்தே.

**6.445 வினைச் சொற்கள் பொருளால் புடை பெயரும்.**

*(எ.டு).* த. கால்–காலுதல் (வீசுதல், பொழிதல், விரிதல்) > மரா. கால் (gāl) விரித்தல்.

**6.446 றகர ஈறு டகரமாகத்திரியும்.**

*(எ.டு).* த. கற > மரா. காட் (kāḍ).

**6.447 ஆகும் எனும் வினைமுற்றின் ஈறு அடியண்ண மூச்சொலியாகும்.**

*(எ.டு).* த. ஆகும் > மரா. āhē

**6.448 நகர முதற்சொல்லில் முன்னெழுத்து நீங்கி ஈற்று மகர மெய் ஙகர மெய்யாகத் திரியும். றகரம் ரகரமாகும்.**

*(எ.டு).* த. நிறம் > மரா. ரங் > இந். ரங்.

**6.449 அடுத்து வரும் னகர றகர புணரொலிகள் ணகர டகர வேற்று நிலை மெய் மயக்கமாகும்.**

*(எ.டு).* த. பால்+நிறம்–பானிறம் > மரா. பாண்ட்ர (பாண்டரம் = வெண்மை) – பாண்டு = வெண்மை.

**6.450 ஒன்பதைக் குறித்த தொண்டு எனும் பழந்தமிழ்ச் சொல்லின் வேரடி இருமடித் திரிபு பெறும்.**

*(எ.டு).* த. தொண்டு = ஒன்பது (தொள்–தொண்டு).

த. தொள் > தௌ (தொவ்) > நொவ் > இந். நவ் > மரா. நஊ.

**6.451 ஐந்தாவது ஆறாவது என்பன வற்றில் எண்ணுப்பெயரெச்சச் சொல்லாக வரும் ஆவது, ஆவா எனக் குறுகும்.**

*(எ.டு).* த. முதலாவது > மரா. பாகிலா.

த. ஐந்தாவது > மரா. பாச்வா

த. ஆறாவது > மரா. சாக்வா (sahvā).

த. ஏழாவது > மரா. சாத்வா

த. எட்டாவது > மரா. ஆட்வா

த. தொண்பதாவது, ஒன்பதாவது > மரா. நவுவா.

த. பத்தாவது > மரா. தாவா.

**6.452 எக்கடை (எங்கே) எனும் சொல் இருமடித்திரிபு எய்தி மரூஉச் சொல்லாகும்.**

*(எ.டு).* த. எக்கடை (எவ்விடம், எங்கே) > தெ. எக்கட > மரா. எக்டே – குட்டே (kuṭē).

**6.453 மரூஉச் சொற்களினடியாகப் புதிய வினாச் சொற்கள் தோன்றும்.**

*(எ.டு).* த. எப்பொழுது (கெப்பொழுது) > மரா. கேவ்ஆ.

**6.454 பருகு எனும் சொல் மரூஉ முடிபு எய்தும்.**

*(எ.டு).* த. பருகு–பாகு–பீகு > மரா. பீ.

**6.455 மறைந்துபோன தமிழ் வினையடிகள் திரிபுற்று வழங்கும்.**

*(எ.டு).* த. நீள்–நீள்து (நெடிய உறக்கம் கொள்) > க. நீள்சு (nidde-உறக்கம்) > மரா. jijav (தூங்கச்செய்).

த. சால் (நீளுதல், போதல், நடத்தல்) – செல் > மரா. சால் (நட).

**6.456 ரகர வினையீறு அடியண்ண மூச் சொலியாகத் திரியும்.**

*(எ.டு).* த. பார் > மரா. pāh.

**6.457 எலா எனும் கெழுதகைப் பொதுச் சொல் முன்னிலை அசையாகி வினை முற்று ஈறாகும்.**

*(எ.டு).* த. சால் (நட)+எலா > மரா. (சால்+எலா)

த. சாலா (செல்லுங்கள்)

த. ஆகும்+எலா > மரா. ஆலே.

த. படு+எலா > மரா. பட்லா (பட்டது).

**6.458 செய்யூ எனும் வாய்பாட்டு நிகழ் கால வினையெச்சம் முற்றாகி வழங்கும்.**

*(எ.டு).* த. இய (இயங்கு) – யா – யாயூ > மரா. (யாதூ) ஏதோ (வருகிறான்).

**6.459 'ஆல்' எனும் மூன்றாம் வேற்றுமை உருபு லா என இலக்கணப்போலியாகி நான்காம் வேற்றுமைப் பொருளில் உருபு மயக்கம் எய்தும்.**

*(எ.டு).* த. யாம்–எமக்கு (எம்மால்) > மரா. (மா+லா) மலா (எனக்கு), துலா (உனக்கு).

**6.460 சொல்லின் சகர முதல் எடுப்பொலி யாகும். ஈறு கெடும்.**

*(எ.டு).* த. சிறிது > மரா. jarā.

**6.461 மூன்றன் உருபாகிய ஆல்–லா எனத் திரிந்து இரண்டாம் வேற்றுமைப் பொருளில் உருபு மயக்கமாக ஆளப்பெறும்.**

*(எ.டு).* த. கண்ணனை விளி > மரா. க ணூலாமார். (விளி–வீர்–மார்).

**6.462 இல்லை எனும் சொல் மரூஉ முடிபு எய்தும்.**

*(எ.டு).* த. இல்லை (இல்லை ஆயி – பேச்சு வழக்கு) > இல்லாயி–லாயி > மரா. nāhi.

**6.463 ஏல்–ஏல்கு–பொருந்தல் எனும் சொல் மரூஉ முடிபு எய்தும்.**

*(எ.டு).* த. ஏல்–ஏல்கு > மரா. லாகு > இந். லக் (lag).

**6.464 குறிலிணை முதற்குறில் நெடிலாகி அயல் குறில் கெடும்.**

*(எ.டு).* த. கதுவு (உண்) > த. கதுக்கு > தெ. கெதுக்கு.

த. கதுவு–காவு (உண்) > மரா. கா (உண்).

த. கரு–கரை (உயர்த்தல், உயரம், மேடு) – கரைதல் – குரல் உயர்த்தி ஒலி எழுப்பல் – கூப்பிடுதல், அழுதல், மனம் மாழ்கிப் பாடுதல்.

த. கரை > மரா. கா (gā) பாடுதல்.

**6.465 மொழி முதல் வகரம் எடுப்பொலி பகரமாகி ஈறு திரியும்.**

*(எ.டு).* த. வைகு (தங்குதல், உட்கார்தல்) > மரா. பைசு, bas.

**6.466 குறிலிணைச் சொல்லின் முன்னுயிர் கெடும்.**

*(எ.டு).* த. இலக்கு (எழுது) > மரா. லிக் (lihi).

**6.467 ஈரசை ஏவல் வினையில் இடை மெல்லின மெய் கெடும்.**

*(எ.டு).* த. நீங்கு > மரா. (நீகு) நீக் (nig)

**6.468 ஈரசை ஏவல் வினையின் முதலிரு மெய் நீங்கி ஈற்றுயிர் மெய்யொடு ஆ–ஏவாகிப் புணரும்.**

*(எ.டு).* த. வாங்கு > மரா. (ஆகு)–ஏகு – (gē)

**6.469 குற்றுகர ஈறு கொண்ட குறிலிணைச் சொல்லில் இடையெழுத்து கெட்டு முன்னுயிர் ஓகாரமாகும். குற்றுயிர் நீங்கி மெய்யீறாகும்.**

*(எ.டு).* த. உதடு > மரா. ஒட்.

**6.470 முல் எனும் தோன்றல் கருத்து வேரடியாகத் தோன்றிய சொற்கள் இளமை மென்மை அழகு பொருள் குறித்த சொற்களாகும்.**

*(எ.டு).* த. முல்–முளை > மரா. முல்கா (சிறுவன்) மூல்கீ (சிறுமி) முர்கா (சேவல்) முர்கி (கோழி > மரா. முன்னா (குழந்தை)

த. நுல்–நல்–நால்–நாற்று (இளம்பயிர்) நாற்று > மரா. நாத்து (பேரன்).

**6.469 கூட்டுச்சொற்கள் மரூஉ முடிபு எய்தும்.**

*(எ.டு).* த. நண்பகல் > தண்பகல்–தாபால் > மரா. தாபார்.

த. படுமறை > தெ. படமட > மரா. பச்சிம் (மேற்கு)

**6.470 ளகர ஈறு ரகரமாகும்.**

*(எ.டு).* த. வளி > மரா. வாரா (காற்று).

**6.471 மொழியிறுதி சகரம் எடுப்பொலி மெய்யீறாகும்.**

*(எ.டு).* த. வீச்சு (மின்னல்) > மரா. vij.

த. வீச்சொளி > இந். bijli

**6.472 வகர முதல் மகரமாகத் திரியும்.**

*(எ.டு).* த. வெரிந்–வெந் (முதுகு, பின்புறம்) > வெனுக > மரா. (வாக) மாகே (பின்னால்).

**6.473 ஈற்று ழகரம் லகரமாகும்.**

*(எ.டு).* த. கீழே > மரா. காலெ.

**6.474 முன்னுயிர் இகரம் யகரமொடு புணர்ந்த பின் சகர எடுப்பொலியாகும்.**

*(எ.டு).* த. இவண் (இவள்) யவள் > மரா. javal (அருகில்).

**6.475 மொழி முதல் குறிலிணை நெடிலாகும்.**

*(எ.டு).* த. அகத்து > மரா. ஆன்த், ஆத் (உள்ளே).

த. புறத்து > மரா. bāhēr.

**6.476 மொழி முதல் ஈகாரம் ஆகாரமாகும்.**

*(எ.டு).* த. வீடு > மரா. வாடா

த. சீக்கு (சீவு)ம் கத்தி > மரா. சாக்கூ.

**6.477 தகர மெய்யீறு உரசொலி சகரமாகும்.**

*(எ.டு).* த. மத்தி (மத்தி மீன்) – மச்சம் > மரா. māsē.

**6.478 லகர ஈறு னகர ஈறாகித் துணையீறு பெறும்.**

*(எ.டு).* த. பலா > மரா. panas.

**6.479 எகர முதல் ஏகார முதலாகும்.**

*(எ.டு).* த. செவ்வந்தி > மரா. சேவந்தீ.

**6.480 ஊகார முதல் யூகாரமாகி மீண்டும் சகர எடுப்பொலியாகும்.**

*(எ.டு).* த. ஊசி (மல்லி) > க. sūji > மரா. jū-ī.

**6.481 மகர ஈறு கெட்டு ஈற்றயல் மெய்யீறாகும்.**

*(எ.டு).* த. கப்படம் (போர்வை, அணியும் துணி) > மரா. காபட் > இந். கப்படா.

**6.482 லகர ஈறு ளகர ஈறாகத் திரியும்.**

*(எ.டு).* த. ஓலை (காதணி) > மரா. வாளே.

**6.483 ஒற்றடுத்த மொழி முதல் குறில் நெடிலாகும்.**

*(எ.டு).* த. கங்கணம் > மரா. காகண்

த. முத்து > மரா. மோதி (moti).

**6.484 னகர மெய்யீறு உரசொலி சகரமாகும்.**

*(எ.டு).* த. மையான் (எருமை) > மரா. mays.

**6.485 மகர முதல் எடுப்பொலி பகரமாகும்.**

*(எ.டு).* த. மயிலை (காளை) > மரா. பைல் (byl).

**6.486 மொழி முதல் உகரம் வகரமாகும்.**

*(எ.டு).* த. உழுவை (புலி) > மரா. வாக் (vāg).

**6.487 மொழியிடை லகர மெய் இன மெல்லொற்றாகத் திரியும்.**

*(எ.டு).* த. சால்–சால்கு (நல்ல) > மரா. சாங்க்லா (cānglā).

**6.488 தகர முதல் சகர முதலாகத் திரியும்.**

*(எ.டு).* த. தூ (வெண்மை) – தூல்–தால்–சால் > மரா. (சால்) சாந்தீ (வெள்ளி) சாந்த்–வெண்ணிலா.

**6.489 துகரம் இறந்த காலத்திலும் நிகழ் காலத்திலும் முன்னிலை ஒருமையீறாக வந்து சகர உரசொலி ஈறாகத் திரிபு எய்தும்.**

*(எ.டு).* த. வரல்+ஆ+து–வரலாது (வரலாயிற்று) – வாலாது > மரா. ஆலாது – alās=வந்தாய்.

த. யா (போ) – யோ+து (போவது) > மரா. jattōs =போகிறாய்.

**6.490 வேண்டாம் என்னும் பொருளில் இல்லாகு எனும் சொல் மரூஉ முடிபு எய்தும்.**

*(எ.டு).* த. இல்–இல்லாகு–லாகு > மரா. னாகு–னாகி–நக்கோ.

**6.491 வழங்கு எனும் சொல் தெலுங்கிலும் மராத்தியிலும் ஒரே சீரான திரிபு எய்தும்.**

*(எ.டு).* த. வழங்கு (வாழு) > தெ. வாடு > மரா. வாட் (vāḍ) = பரிமாறு.

**6.492 தொடர் நிகழ்கால வினையெச்சம் மரூஉ முடிபு எய்தும்.**

*(எ.டு).* த. பருகிக்கொண்டு > தெ. பருகிக் கொனி > மரா. பீஊன்.

**6.493 இளையது (சிறியது) எனும் சொல் முன்னுயிர் நீங்கி மரூஉ முடிபு எய்தும்.**

*(எ.டு).* த. இளையது (ளேது–லேது–லேசு) > மரா. lahān. (சிறியது).

**6.494 இரு வினையடிகளின் கூட்டுவினை மருவி புதுவினையாகும்.**

*(எ.டு).* த. தூ (தூங்கு) > இந். சோ (தூங்கு)

த. தூ+பண் (தூங்கச்செய்) > த. சோபன > மரா. jopan (jopanyākōli=தூங்கும் அறை).

மணமக்களை ஓரிற்படுத்தல் (முதலிரவு) கன்னட தெலுங்கு மொழிகளில் சோபன(ம்) எனப்படும்.

**6.495 கற்காலச் சொல்லாட்சி உடன் கொண்ட சொல்வளமாக வழங்கும்.**

*(எ.டு).* த. தீக்கடை (தீக்கடை கோலால் தீ மூட்டும் அடுப்பு) > மரா. சேகடீ.

**6.496 ஏவல் ஈறாகிய துகரம் சகர எடுப்பொலி ஆகும். ஒல்லும் ஈறு சேர்ந்து எதிர்காலம் காட்டும்.**

*(எ.டு).* த. வாது (தாக்குதல், வெட்டுதல், அறுத்தல் – வாதுவல் வயிறே (தொல். பொருள்.79. உரை) > மரா. vāj

த. வாது > மரா. vāJ+ஒல்லும் –vājel= (மணி) அடிக்கும்.

த. வாதுது (அடிக்கிறது) > மரா. vājtē= (மணி) அடிக்கிறது.

**6.499 ஆறன் உருபாகிய அது முன்னுயிர் நீங்கி சகர வல்லொலியாகத் திரியும். ஏழன் உருபாகிய அத்து திரிபுற்று வழங்கும்.**

*(எ.டு).* த. அம்மாவினது வீட்டில் > மரா. ஆஈசா (அம்மாவினுடைய)

த. வீட்டில்–வீட்டகத்து–வீட்டத்து > மரா. கராத.

**6.500 குறில் நெடில் மொழி முதற் சொற்கள் பொருள் வேறுபாடு தரும்.**

*(எ.டு).* த. அது > மரா. தெ (அது)

த. அவன் > தெ. அதன் > மரா. தே (அவர்கள்).

வட இந்திய மொழிகளில் குறில் நெடில் வேறுபாடுகள் தெளிவாக ஆளப்படுவது கண்டும் எ, ஒகரங்களுக்கான தனித்த வடிவங்கள் சேர்க்கப்படாதது பெருங்குறையாகும். மொழியின் உண்மையான ஒலிப்புக் கட்டமைப்புகளை வடஇந்திய ஆரிய எழுத்துப் புகுத்தங்கள் மறைத்துள்ளன.

**6.501 ஏவல் வினையீறுகளாகிய ரகர றகரச் சொற்கள் தனித்த வடிவம் பெறும்.**

*(எ.டு).* த. இருத்தல் (வாழ்தல்) > மரா. rah-rahta.

த. இறு–இறக்கு > மரா. rak, rakta.

**6.502 மொழி முதல் சகரம் எடுப்பொலி ககரம் ஆகும்.**

*(எ.டு).* த. செல் > மரா. gēl.

**6.503 மீள்தல் சொல் கிடைத்தற் பொருளில் விரிவடையும்.**

*(எ.டு).* த. மீள் > மரா. மிள், மில் (கிடைத்தல்)

**6.504 எழுவாயொடு ஆனவன் எனும் துணைச் சொல் பேச்சுவழக்கில் சேர்ந்து கூடுதல் பெயரீறாகும்.**

*(எ.டு).* த. இராமன் ஆனவன் > மரா. ராமாநே.

இதனை முதல் வேற்றுமையின் எழுவாய் உருபு என வடநூலார் கூறுவது ஏற்புடைத்தன்று.

**6.505 அல்லீற்றுத் தொழிற்பெயர் சகர உரசொலி மெய்யீறாகத் திரியும்.**

*(எ.டு).* த. பெயல் (மழை) > மரா. பாவூசு (pāvūs).

**6.506 இருத்தல் பொருள் தரும் பழந்தமிழ் அல் வினையின் லகர ஈறு சகர உரசொலி ஆகும்.**

*(எ.டு).* த. அல்–அல்கு > மரா. as, asu (இருத்தல்) குடகு. அலதண்டுஇரு–உட்கார்ந்திரு.

**6.507 கன்னட வழித் திரிபு வினை பன்மடித் திரிபு எய்தும்.**

*(எ.டு).* த. விள்–(விழை)–வேள்–வேள்கு > க. பேகு (bēku)> மரா. pāhi(வேண்டும்).

த. பதம் (சோறு) > இந். பாத் (bat)

### 6.855 சில சொற்கள் திரிபின்றி வழங்கும்

எ.டு த. தூள்> இந். dul

த. பக்கல் > இந். bagal

த. வேண்டல > இந். பேண்ட் (bent) காணிக்கை> அன்பளிப்பு

த. முத்து > மோத்தி (moti)

த. இசை (புகழ்) > இந். யச்

த. சால் – > *இந்.* சாரா முழுவதும்>

த. செந்நெல் > இந். சாவல்

### 6.856 மொழியிடை யகரம் அடியண்ண மூச்சொலி ஆகும்.

எ.டு த. தயிர் > இந். dahi

### 6.880 சில சொற்கள் இலக்கணப் போலியாகும்

எ.டு த. அடு அடல் > இந். லடாயி (ladna)

த. இலக்கழி > லக்டி விறகு

### 6.857 சிலசொற்களில் உயிர் முதலொடு சகரம் சேரும்.

எ.டு த. ஊசி > இந். சூயி > க. suri

த. ஆ (ஆமல்) > இந். சாம்னெ

### 6.858 மொழிமுதல் நகரம் தகரமாகும்.

எ.டு நுல் (எள்) நூல் > இந். தெ. நுவ்வுலு . நூகுலு – நூல் – நேல் > இந். தேல் (எள் – எள்ளெண்ணெய்)

### 6.859 சில சொற்கள் பன்மடித்திரிபு பெறும்.

எ.டு த. தாவு (இடம்) தாகு – தகு – சகு > இந். > jegah (உலகம்)

த. நால் – தால் (நாக்கு) – சால் – சீல் – சீல்பு > இந். jib (நாக்கு) jaban (மொழி)

த. யாமம் – நள்ளிரவு நேரம்>க. இந் jamana (காலம்)

த. நேர் – தேர் – சேர் > இந். (jer) (jarur) (உண்மையாக – உறுதியாக)

த. அதிகம் (யதிய – jadiya) > இந். jyayda

த. உல் (எரிதல்) – யல் > இந். jai, jalak

த. தக்கது > இந். டீக்

தாங்கல் (வருத்தம்) இந். தங்

நாள் (புதிய) – தாள் இந். tajot

த. தீயவன் > இந். dusman

த. நாள் > இந். (புதிய) நயா

த. பொற்றை (கல்) > இந். (கல்) பத்தர்

த. படிப்பு > இந். பாடயீ

த. புகல் இந். பகலே > இந். (முதலில்) > (pahle)

த. பூந்தோட்டம் > இந். பௌதா

த. மூள் – மூடு > இந். பீடு (clidu)

த. பய் (பசி) – பய்கு > இந். பூக்

த. மன்னாப்பு (மன்னிப்பு) > இந். மாப்

த. பொருள் – போள் (மோல்) > இந். மால்

விழா (விலா – வேலா) > இந். மேளா

த. மேய்தானம் (மேய்ச்சலிடம்) > இந். மைதான்

த. பருத்தி – ருத்தி – ருச்சி > இந். ரூயி

த. உருவம் – ருவம் > இந். ரூப்

த. பிள்ளை – பிள்ளை யாண்டான் தெ.> பிள்ளாடு – ளாடு > இந். லட்கா பையன்)

த. இறும்பூதும் > இந். இம்மத் himmar

### 6.860 சொல்லீற்றுக் குற்றியலுகரம் கெடும்

எ.டு த. சாத்து (மேற்கூரை) > இந். (சாத்) சத்

## சிந்தி

### 6.901 சிந்தி மூவிடப் பெயர்கள் திரிபுற்ற வடிவங்களில் வழங்கும்.

எ.டு தன்மையொருமை : ஆண் – யான் > சிந் ஆண்

தன்மைப் பன்மை : ஆம் – யாம். – நாம் > சிந் அசின்

முன்னிலையொருமை : நூன் – (நீன்) > சிந் தூண்

முன்னிலைப் பன்மை : நீங்கள் (தாங்கள்) > சிந். tahin

**6.902 சில தழிழ்ச்சொற்கள் திரியாமல் இருக்கும்**

எ.டு த. மகவு > மக > <u>சிந்.</u> மக

த. கரி (அடுப்புக்கரி) > <u>சிந்.</u> கரி

**6.903 ஆண்பாற் பெயர்கள் 'அன்' ஈறு பெறும்**

எ.டு த. வலன் > <u>சிந்</u> வலன்

த. சிவன் > <u>சிந்.</u> சிவன்

த. சாமன் > <u>சிந்.</u> சாமன்

த. ஏமன் > <u>சிந்.</u> ஏமன்

த. கானன் > <u>சிந்.</u> கானன்

**6.904 ஐகார ஈற்றுச்சொல் உகர ஈறுபெறும்**

எ.டு த. கோட்டை > <u>சிந்</u> கோட்டு

**6.905 உகர ஈறு ஊகாரமாகும்.**

எ.டு த. கரு > சிந். காரு (கருமை)

**6.908 பெண்பால் ஈறாக அள், ஆள் இரண்டும் வழங்கப் பெறும்.**

எ.டு த. அவள்> ஆயாள் > <u>சிந்.</u> ஆயள்> ஆயாள் (தாய்)

**6.909 அம்மாள் என்னும் சொல்லின் மகர மெய் கெடும்**

எ.டு த. அம்மாள் > சிந். அமள்

**6.910 சில பெயர்ச்சொற்கள் திரிபின்றி வழங்கும்.**

எ.டு த. பெருமாள் > <u>சிந்.</u> பெருமாள்

த. மாடி > <u>சிந்.</u> மாடி (வீட்டு மேல் மாடி)

த. காவடி > <u>சிந்.</u> காவடி (கான்வடி)

**6.911 ஏவல் வினையின் குகர ஈறு திரியாமல் முன்னுயிர் கெடும்.**

எ.டு த. இலக்கு (எழுது) > <u>சிந்.</u> லிக்கு

**6.910 முன்னிலைப் பன்மை உணர்த்த உகர ஈறு ஊகார ஈறாகத்திரியும்.**

எ.டு த. இலக்கு (இலிக்கு) > சிந். லிக்கூ

த. வைகு (உட்பகார்) > சிந். விகூ

**6.911 ஐகார முதல் ஏகார முதலாகத் திரியும்**

எ.டு த. வைகு (உட்கார்) > சிந். வேகு

**6.912 சிறுவன் எனும் சொல் பன்மடித் திரிபு எய்தும்**

எ.டு த. சிறுவன் > ம. செறுக்கன்

க. சிக்கவனு > சிந். சோக்கரு

**6.913 இகரப் பெண்பால் ஈறு நெடிலாகும்.**

எ.டு த. சிறுமி – (சிறுக்கு) > சிந். சோக்ரி

**6.914 பெயரெச்சங்கள் தமிழைப் போல் இயல்பாகும். ஆரியத்தாக்கம் பெற்ற வட இந்திய மொழிகளைப் போல பெயரெச்சம் பாலீறு ஏற்பதில்லை.**

எ.டு அதிக பால் > சிந். கணு கீர்

**6.915 மிக அதிகமான எனப் பொருள் அழுத்தும் தருவதற்கு பெயரெச்சம் இரு முறை அடுக்கி வரும்.**

எ.டு த. இனிக்கும் இனிக்கும் பால் > <u>சிந்.</u> மீட்டோ மீட்டோ கீரு

**6.916 குறுமுதல் செயப்படுபொருள் குன்றிய வினையையும் முதினிலை நீட்சி செயப்படு பொருள் குன்றா வினையையும் காட்டும்.**

எ.டு த. த. மறி (மடி – சாதல்) – மாறு (கொல) மர் (சாதல்) > <u>சிந்.</u> மர் (கொல்)

**6.917 பிறவினை ஆவதற்கு செயப்படு பொருள் குன்றா வினையீறு ஆகார துணையீறு பெறும்.**

எ.டு த. கொல் – கொல்வி

> <u>சிந்.</u> மார் – மாரா (கொல்வித்தல்)

**6.918 குறுமுதல் வினை நெடுமுதலாகிப் பெயர்ச்சொல்லாகும்.**

எ.டு த. கெடு – கேடு

<u>சிந்.</u> குசு (கொல்) – கோசு (கொலை)

சிந். விறு (போரிடு) . வேற் (போர்)

**6.919 வினையொடு சேரும் இகர அகர ஈறு தொழிற் பெயராய் மாற்றும்**

எ.டு த. உறு – உறுதி

சிந். (அகல்) அல் (போ) – அலந்தி

சிந். லிக் – லிக்னி

சிந். தெ (தா) – தேப்ப (தருதல்)

**6.920 அத்து எனும் சொல் ஓரெழுத்தாகக் குறுகி மேல் எனும் பொருளில் ஏழன் சொல்லுருபு ஆகும்.**

எ.டு த. மேசைமேல் > சிந். maizate

**6.921 பாக்கம் எனும் நெய்தல் நில ஊர்ப் பெயரில் பகரம் வகரமாகி ககர மெய் அடியண்ண மூச்சொலியாகும்.**

எ.டு த. பாக்கம் > சிந். vahan (கான்வாகன் ஆவிவாகன் – சிற்றூர்ப் பெயர்)

**6.922 பாலைக் குறிக்கும் குழந்தைச் சொல்லான பாச்சி வடிவு திரிந்து வழங்கும்.**

எ.டு த. பாச்சி > சிந். பிசு

**6.923 இகர ஈற்றுச்சொல் ஒகர ஈறாகத் திரியும்**

எ.டு த. சம்மட்டி > சிந். சிம்டோ

**6.924 ஐகார ஈறு ஒகார ஈறாகத் திரியும்**

எ.டு த. தொண்ணை (இலையால் செய்த கிண்ணம்) > சிந். தோணோ

**6.925 ஏகார நெடுமுதல் 'அ' எனக் குறுகும்**

எ.டு த. ஏர் > சிந். அர்

**6.926 மொழியிடை தகரமெய் கெடும்**

எ.டு த. தாத்தா > சிந். தாதா

**6.927 நிலை மொழியிறுதியும் வருமொழி முதலும் நெட்டுயிராயின் வருமொழி முதல் நெட்டுயிர் கெடும்.**

எ.டு த. தா (பெரிய) ஆயி > பஞ் தா ஆஇ (பெரிய தாய்) > சிந். தாயி. தாய் போன்று ஈன்ற குழந்தை உடையவளாய் செல்வர் அரசர் அரண்மனையில் அரசி அல்லது இல்லத்தரசியின் குழந்தைக்கும் பாலூட்டி வளர்க்கும் செவிலித்தாயாகச் செயற்படும் தோழிப் பெண்)

**6.928 சிலவினைகள் அடுக்குச் சொல்லாக ஆளப்படும்.**

எ.டு த. முணுமுணுத்தல் > சிந். மிண்மிண்

(மிள் (பேசு) > ம. மிண்டு த. விள் (பேசு)

**6.329 அகர முதற் சொல் ஆகார முதலாகும். ணகர மெய்யீறு உகர ஒலித்துணை பெறும்**

எ.டு அங்கணம் (முற்றம்) > சிந். ஆங்கணு

**6.930 உகார முதல் அகர முதலாகத் திலீயும்**

எ.டு த. புலால் > சிந். பலோ (புலால், மீன் இறைச்சி)

**6.931 ன்ற மெய்மயக்கம் ந்த எனத் திரியும்**

எ.டு த. நன்றி > சிந். ம. நந்தி > சிந். நந்தி

**6.932 அன் ஆண்பாலீறு கெட்டு ஈற்றயல் மெய்யீறாகவே நிற்கும்.**

எ.டு த. கண்டு (திரட்சி) – கண்டன் (மறவன் > க. கண்டனு – கண் (ganda) – கணவன் > சிந். கண்ட (gand)

**6.933 ளகர இறுதிலகாரமாகத் திரியும்.**

எ.டு த. செள்ளை (துங்கை) > தெ. செல்ல > சிந். சாலி (துங்கை)

**6.933 மொழியிடை ழகரம் ரகரமாகும்**

எ.டு த. பழைய > சிந். பர

**6.934 எகர முதல் அகரமுதலாகத் திரியும்.**

எ.டு த. எலா (விளிச்சொல் கெழுதகை பொதுச்சொல்)

சிந். அலா

**6.935 மொழியிறுதி லகரம் ரகரமாகும்.**

எ.டு த. தலை > சிந். தரு

த. வேலி > சிந். வேரி

**6.936 மொழியடை ழகரம் ரகரமாகும்.**

எ.டு த. முழங்கால் > சிந். முரோ

**6.937 மொழியிடை தகரமும் ஈற்றுகரமும் ரகரமாகத் திரியும்.**

எ.டு த. நுதல் (நெற்றி) > சிந். நுருரு

**6.378 ஒகர முதல் அகரமுதலாகத் திரியும்**

எ.டு த. தொடை > சிந். தடா

**6.939 ஊகார நெடுமுதல் எகரமாகக் குறுகும். லகர மெய் கெடும்.**

எ.டு த. கூந்தல் > சிந். குந்தல்

**6.940 மொழியிடை ணகரம் கெடும் இணைகுறில் நெடிலாகும்**

எ.டு த. வணர் (சுருண்ட கூந்தல்) > சிந். வார்

**6.941 ணகர மெய்யீறு டகர மெய்யீறு ஆகும்**

எ.டு த. தண் > சிந். தட்

**6.942 ஊகார முதல் உகர மாகும்**

எ.டு த. சூளை > சிந். சுளி

**6.943 அகரமுதல் ஊகாரமாகும் ஞகரம் ணகரமாகும்.**

எ.டு த. பஞ்சு> சிந். ம. பஞ்ஞி > சிந். பூணி

**6.944 மொழிமுதல் ஒகரம் உகரமாகும் ஐகார இறுதி உகரமாகும்.**

எ.டு த. புரை > சிந். பொரு (துளை)

**6.945 வெப்பம் குறித்த சொல் தாகப் பொருளில் புடை பெயரும்**

எ.டு த. உல் (எரிதல்) – உண்ணம் (வெப்பம்) > சிந். உண் (வெப்பம்> தாகம்)

**6.946 அகர முதல் ஆகாரமாக நீளும்**

எ.டு த. வரு > சிந். வாரு (பாரம்= தலைச்சுமை)

**6.946 மொழியிடை ழகரம் சகரமாகும்.**

எ.டு த. கழிசடை > சிந். கசாயி

**6.947 மொழியிடை அகரம் அகரமாகும்.**

எ.டு த. தகடி (துலாக்கோல்) > க. தக்கடி சிந். தகரடி

**6.948 ளகர மெய்யீறு ரகர மெய்யீறாகத் திரியும்**

எ.டு த. துகள் > சிந். துகர்

**6.949 ஒகர முதல் உகர முதலாகும்.**

எ.டு த. சொட்டை > சிந். சுடோ

**6.950 மொழியிடை ழகரமெய் மகர மெய்யயாகும்**

எ.டு த. சீழ்க்கை > சிந். சீட்டி

**6.951 ஐகார ஈற்றுச் சொல் அகர ஈறாகி உகர ஒலித்துணை பெறும்**

எ.டு த. மனை > சிந். மனவு (வீடு)

**6.952 அரவம் எனும் சொல் முதற் குறையாகி ஈறு திரியும்.**

எ.டு த. அரவம் (ஓசை) > க. ரவுசு > சிந். ரம்ப

**6.953 சகர உடனிலை மெய்மயக்கம் ககர மெய்மயக்கமாகத் திரியும்.**

எ.டு த. தச்சன் > சிந். தக்கன்

**6.954 எகர முதல் இகர முதலாகத் திரியும்**

எ.டு த. தெறு > சிந். திறு (அம்பு)

**6.955 ளகர மெய்யீறு ணகர மெய்யீறாகத் திரியும்.**

எ.டு த. தள் (தடு> தடை) > சிந். தண் (தண்டம்> குற்றப்பணம்)

**6.956 போதல் எனும் சொல் இறந்த கால வினையெச்சமாகி இடைச் சொல்லாகும்.**

எ.டு த. போய் > சிந். போயி (பிறகு)

**6.957 ஐகார ஈறு அகர ஈறாகும்.**

எ.டு த. அடை > சிந். அட (அடைப்பு)

**6.958 நீட்சிப் பொருள் மிகுதிப் பொருளில்**

டை பெயரும்

எ.டு த. வார் (நீட்சி) – வாரை (உயரமான மூங்கில்) > சிந். வரை (மிகுதி)

**6.959 டகர மெய்மயக்கம் டகரமாகும்.**

எ.டு த. குட்டை > க. கிட்டு > சிந் கிடி

**6.960 உகர ஈறு ஒகாரமாகும்**

எ.டு த. செரு > சிந். செரோ (போர்)

**6.961 பகர முதல் வகரமாகும்**

எ.டு த. பயத்தல் (குழந்ததை பெறுதல்) > குட. பாய (ஈனுதல்) > சிந். வயம் (பிள்ளை இபெறுதல்> ஈனுதல்)

**6.962 மொழியிடை தகரம் தொகும்**

எ.டு த. வதுவை (திருமணம்) > சிந். வாவு

**6.963 மொழியிடை தகர மெய்மயக்கம் மெய் நீங்கிய வடிவம் பெறும்**

எ.டு த. துத்தாரி > சிந். துதாரி

**6.964 மொழியிடை ளகரம் ளலகரமாகும்.**

எ.டு த. தெள்ளேணம் > சிந். தைலாங் (இசை வகை)

த. பிள்ளை (பூனை) > தெ. பில்ல > சிந். பிலி

**6.965 அகர முதலும் ஐகார ஈறும் ஒகரமாகமாறும்**

எ.டு த. தத்தை > சிந். தொத்தொ (கிளி)

**6.966 ஒகார மொழிமுதல் ஆகார மொழி முதலாகும்.**

எ.டு த. போத்து > சிந். பாதோ (எருது)

**6.967 உகர ஈறு ஒகார ஈறாகும்.**

எ.டு த. தோடு > சிந். தோடோ (பழத்தின் மேலோடு)

**6.968 உகர முதல் ஊகாரமாகும்.**

எ.டு தூம்பி > சிந். தும்பி (சுரைக்குடுவை)

**6.969 ஆகார ஈறு உகரமாகும்**

எ.டு மிடா > சிந். மாடு (பானை)

**6.970 ஒகர முதல் அகர முதலாகும்**

எ.டு த. சொல் > சிந். சல்

த. தொங்கு > சிந். தங்க

**6.971 இடையண்ண (refroflex) ஒலியன் களாகிய டண காக்கப் பட்டுள்ளமை தமிழ் மூலத்தைக் காட்டும்**

எ.டு த. பிணா > சிந். lena (பேணா) – (பெண் > தங்கை)

**6.972 சில முந்து தமிழ்ச் சொல்லாட்சிகள் வழக்கூன்றி நிற்கும்.**

எ.டு த. உல் > சிந். (எரிதல் ) – உலை (அடுப்பு – சிந் உலோ (கனன்று எரியும் கரி) உருகிய இரும்பு

த. வட்டி – வட்டில் சிந். > வட்டி (தட்டு)

த. பட்ட சிந்.> (சமநிலம்) ம. படம். பாடம் (வயல்) பட்டு சிந். (pata)

த. செடி – உழுமண் > சிந். செடி

த. தாங்கு > சிந். – தாங்கு (உடலைத் தாங்குகின்ற கால் > சிந். தான் – தான்கு தாங்கு)

த.. அறல் > > சிந். அறல் > (கருமலை)

த. வரவர > சிந். வரவர (நாளடைவில்)

த. சீப்பு > சிந். சாப்போ (மரத்தால் செய்த தாழ்ப்பாள் பழந்தமிழ் சுற்றுக் கோட்டடை வாயில் தாழ்ப்பாள்

த. ஆவி (குயவன் சூளை) > சிந். ஆவி

த. கோடு – கோடை > சிந். கோட (இளமை)

தெ. > கொடுக்கு (குழகன்> மகன்) சிந். கோடு (மணமகன்)

த. பொதி > சிந். பொதி (தலைப்பபாகைத் துணி)

த. தெறு > ம. தெற்று > சிந். தெறு (தவறு, குற்றம்)

த. சுட்டி (சுள்+;தி) > சிந். சுட்டி (நுண்ணறிவு)

த. காக்கை> காக்காய் > சிந். காக்கா

த. துளசி > சிந். துளசி

த. உசு (உச்சை> சிறுநீர் கழித்தல் க. > உசுநீர் (ஆண்குறி) > சிந். உசு (சிறுநீர்)

**6.973 த. கடா > சிந். னடா (ஆட்டுக்கடா)**

த. கடம் > சிந். கடம் (மட்பாண்ட இசைக்கருவி)

த. மறி > சிந். மறி (மீண்டும் வருதல், திரும்பி வருதல்)

த. படபடத்தல் > சிங். படாபட் (படபடத்தல்> விரைதல்)

த. சிப்பி > சிங். சிப்பி (முத்துச்சிப்பி)

த. தண்டு > சிங். தண்ட்டு, தண்டு (செடியின் தண்டு)

த. மாடி > சிங். மாடி (மேல்மாடி)

த. இடு (அடி)> சிங். இடு (தாக்கு > அடி)

த. வெறு > சிங். வெறு (வெறுத்தல்)

த. கல > சிங். கல்

த. பற > சிங். பற

த. வரு > சிங். வரு (வருதல்)

த. தப்பு. (அடித்தல்) > சிங். தப்ப

த. தூல் > (தூவு) சிங். தூல் (நகர்தல், நீங்குதல்)

த. முறுகுதல் (பதமாதல்) > சிங். முரணு (நோய் குணமாதல்)

த. வரைதல் > சிங். வராயின் (எழுதுதல்)

**6.764 சில சொற்கள் மரூஉமுடிபு எய்தும்**

எ.டு த. மடங்கு > சிங். மண்டக

த. பாரித்தல் (ஒப்பாரி) > சிங். பார்கதன்

த. வெதுப்புதல் (சூடாக்குதல்) > சிங்.பசனு (வேகவைத்தல்)

த. உரறு (பேரொலி எழுப்புதல்) > சிங். ஏற

த. தாழ்த்து > சிங். சரக்கொ் (காலந் தாழ்த்து)

த. செடைதல் (முறுக்கேறுதல்> வன்மையாக்குதல்) > சிங். சீட

த. காறுதல் > சிங். கத் (வாயாலெடுத்தல்

**6.975 முதல் வேற்றுமையில் வரும் எழுவாய் வேற்றுமை உருபு ஏற்காது.**

எ.டு த. சிறுமி தண்ணீர்பருகினாள் > சிங். சோக்ரியா பானி பீது

**6.976 நான்கன் உருபு கு – கெ எனத்திரியும்**

எ.டு த. சிறுவனுக்கு > சிங். சேக்கரா கெ.

**6.977 முக்கால வினைமுற்றுள்கள் பழந்தமிழ் முடிபு கொள்ளும்**

எ.டு நிகழ்காலம் த. சிறுவன் வருகிறான் > சிங். சோக்கரு அசீது (வருவது – வாருது – ஆசிது – அசீது)

2. இறந்தகாலம்

த. சிறுவன் வந்தான் > சிங். சோக்கரு ஆயோ

3. எதிர்காலம்

த. சிறுவன் வருவான் சோக்கரு ஈண்டு (ஈ + உந்து – ஈந்து – ஈண்டு)

த. சிறுவன் தண்ணீர் பருகுவான் > சிங். சோக்கரு பானி பியந்து (உந்து ஈறு எதிர்காலம் காட்டியது)

த. குதிரை தண்ணீர் பருகும் > சிங். கோடு பானி பியந்து

**6.978 ஆற்றைக் குறித்த புழை எனும் சொல் இருமடித்திரிபு எய்தும்.**

எ.டு த. புழை > ம. புழ > சிங். போடு bōḍu

**6.979 சில தமிழ்ச் சொற்கள் வடிவம் மாறாமல் வழங்கும்.**

எ.டு த. கோடு – கோ > சிங். கோ (மலை)

த. மட்டி (சட்டி) >க. மட்கெ > சிங். matu

த. கட்டில் > சிங். கட்டுலூ

த. ஆதி > சிங். அதீ (மூத்த தமக்கை)

**6.980 உகர ஈற்று ஏவல் அகர ஈறாகத் திரியும்**

எ.டு த. கடு – கடி > சிங். கட்ட kata

**6.981 ஊகார முதற் சொல்லின் சகர மெய் மொழி முதல் உயிரொடு சேரும்.**

எ.டு த. ஊசி> சிங். (சூசி) சுயீ

**6.982 ரகர மெய்யீறு உகர ஒலித்துணை பெறும்**

எ.டு த. நீர் > க. நீரு > சிங். நீரு

**6.983 னகர மெய்யீறு அகர ஒலித்துணை பெறும்.**

எ.டு த. மீன் > சிங்.மீன

**6.984 ஐகார ஈற்றுச்சொல் ஆகார ஈகார ஈறு பெறும்**

எ.டு த. அம்மை > சிங். அமா (அமீ)

**6.985 மொழிமுதல் ஆகாரம் ஓகாரமாகத் திரியும்**

எ.டு த. நார் (கயிறு) > சிந். நோர்

**6.986 ஒகார முதல் ஊகாரமாகத் திரியும். ஈற்று இகரம் கெடும்.**

எ.டு த. கோணி > க.goni > சிந். gun

**6.987 கொல் எனும் வினை நெடுமுதலாகி ஈறு திரிந்து தொழிற்பெயராகும்.**

எ.டு த. கொல் – கொலை > சிந். (கொல் – கொய) குசு – கோசு (கொலை)

**6.988 சில ஊர் பெயர்கள் எளிய திரிபுற்று வழங்கும். தாரோ**

த. தேரி மேடு > சிந். ஊர்ப்பெயர் தாரோ)

த. கோட்டை > சிந். கோட்

த. புரம் > சிந். புர் த. நகரம் சிந். கர்

**6.989 மருத நிலத்து ஊர்ப்பெயரான தண்டலை (குளிர்ந்த சோலை நிலம்) ஈறு திரிந்து வழங்கும்.**

எ.டு த. தண்டலை – தண்டரை > சிந். தண்டோ

**6.990 துறை முகத்தைக் குறித்த பந்தர் என்னும் சொல்லின் மொழி முதல் பகரம் எடுப்பொலி ஆகும்.**

எ.டு த. பந்தர் > சிந். baudar த.பாந்துதல், கட்டுதல், நங்கூரம் பாய்ச்சுதுதல்

**6.991 மொழிமுதல் நகரம் மகரமாகும்.**

எ.டு த. நொண்டி > சிந். மண்டி (முடவன்)

**6.992 'பற' எனும் வினைச்சொல் தொழிலாகு பெயராய் பறவையின் இறக்கையைக் குறிக்கும்.**

எ.டு த. பற > சிந். பற (இறக்கை)

**6.993 மட்பாண்டத்தைக் குறித்த சொற்கள் திரிபுற்று வழங்கும்.**

எ.டு த. மண் > மட்டிகை க. மட்கெ > சிந். matu

த. சட்டி > சிந். சாடி (cadi)

ஒ.நோ : பஞ்.சாட்டி

**6.994 மொழியிறுதி ழகரமெய் டகரமாகும்**

எ.டு த. தாழ் (தாழ்ப்பாள்) > சிந். தாடி

**6.995 ணகர மெய்யீறு இகர ஒலித்துணை பெறும்.**

எ.டு த. தூண் > சிந். தூணி

**6.996 கடி எனும் வினைச்சொல் மும்மடித் திரிபு எய்தி இலக்கணப் போலியாகும்.**

எ.டு த. கடி > க. கச்சு > சிந்.சக்கு

**6.997 அல்லீற்றுத் தொழிற்பெயர்கள் னகர மெய்யீறாகி ஏவல் வினையாகும்.**

எ.டு த. பிசை > சிந். பீசன் (பிசை)

த. பொடி (பொடித்தல்) > சிந். பாடன்

த. பிழி > சிந். பீரன்

த. சொரி > சிந். சுரன்

த. தொலி > சிந். சலன்

**6.998 ளகர மெய்யீற்று வினை ரகர ஈறாகத்திரிந்து உகர ஒலித்துணை பெறும்.**

எ.டு த. திரள் > சிந். திர (குழைத்தல்)

**6.999 கட்டு எனும் வினைச்சொல் இடைக்குறையாகும்.**

எ.டு த. கட்டு > சிந். கடு katu

**6.1000 னகர ஈறு தகர ஈறாகத் திரியும்**

எ.டு த. கனி (கனிதல்) > சிந். கதி (பழுத்தல்)

**6.1001 மொழியிடை எழுத்துகள் இலக்கணப் போலியாகும்.**

எ.டு த. புனைவு > புவனு (புனைதல்> கட்டுதல்)

**6.1002 ஏவலீறு இருவகையாய் திரியும்.**

எ.டு த. கடி (கடித்தல்) > சிந் கடு> கப்பு

**6.1003 மொழியடை உடனிலை மெய்மயக்கம் தொகும். குறுமுதல் நெடுமுதலாகும்.**

எ.டு த. துப்புக > தூக

**6.1004 அள் ஈறுகெட்ட உயர்திணைப் பெயர்கள் உகர ஈறு பெறும். சில ணகர ஈறு பெறும்.**

எ.டு த. பாலு > சிந். வாசு பாலு> வாசு

த. செல்லன் (செல்லப்பன்) > சிந். செலலோ

**6.1005 சும்மன் எனும் சொல்லின் மகர மெய் கெடும்.**

எ.டு த. கம்மன் (உழவன்) > சிந். கமன் (பணியாளன்)

**6.1006 தமிழில் அக்கன் அம்மன் எனப் பெண்பான் முறைப் பெயர்கள் அன் ஈறு பெறுவது போல இந்தியிலும் பெயர்கள் அன்சி ஈறு பெற்று அரைமாத்திரையாகக் குறுக்கம் பெறும்.**

எ.டு த. கலை > சிந். கலான்

த. சீதை> சிந். சீதான்

த. ராதா > சிந். ராதான்

**6.6007 முகம் வாய் எனும் சொற்களின் ஈறு திரியும்.**

எ.டு தமுகம் > சிந். முன்னு

த. வாய் > சிந். வாது

**6.6008 மொழிமுதல் அகரம் உகரமாகி ஐகார ஈறு இகரமாகத் திரியும்.**

எ.டு த. சடை > சிந். சொடி

**6.6009 ஈகார முதல் உகரமாகி ஈற்று ஐகாரம் ஆகாரமாகத் திரியும்.**

எ.டு த. மீசை > சிந். முசா mucha

**6.1010 தோலைக் குறித்த துகள் எனும்ம பழந்தமிழ்ச் சொல் உகர ஈறு பெற்று மொழியிடை அகரம் இகரமாகத் திரிபு எய்தும்.**

எ.டு த. துகள் > சிந். துகிலு (duhile) (தோலால் செய்த இசைக் கருவி தோல்)

**6.1011 ற்ற உடனிலைமெய்மயக்கம் உகரமாகும்.**

எ.டு த. சுற்று (முடியப்படும் கூந்தல்) க. juttu > சிந். juta

## தமிழ் சந்தாலி

**6.1050 சந்தால் மொழியில் மூவிடப் பெயர்கள் முந்துயை திரிபுற்று வழங்கும்.**

எ.டு தன்மை த. யான்> நான் > சந் ஏன்> ஈன்

முன்னிலை த. நூம்> நீம் > சந். ஆம்> அனெ

படர்க்கை த. இவன் > சந். இனி

த. அவன் – உவன் > சந். உனி

**6.1051 தாயைக் குறிக்கும் சொல் முந்து தமிழ்ச்சொல்லாகவும் முந்து தமிழ்ச் சொல்லாக தந்தையைக் குறிக்கும் சொல் இடைக் குறையாகவும் வழங்கும்.**

எ.டு த. யாய்> யாயா > சந். யாயா (எம்தாய்)

த. அப்பன்> அப்பா > சந். apa

**6.1052 மாமனைக் குறிக்கும் சொல் ஈறு குறைந்தும் அத்தையைக் குறிக்கும் சொல் மகர ஈறு மிகுந்தும் வழங்கும்.**

எ.டு த. மாமன் > சந். மாமா

த. அத்தை> சந். hatam

**6.1053 மொழியிடை றகரம் தொக்கு ஈறு திரியும்.**

எ.டு த. முறுவல் (சிரிப்பு) > சந். முறுவெ (புன்முறுவல்)

**6.1054 கல் எனும் பெயர்ச் சொல்லின் ஈறு ரகரமாகத் திரிந்து மிகையீறு பெறும்.**

த. கல் > சந். karonj

**6.1055 நகர முதற்சொல் தகர முதலாகத் திரியும்**

எ.டு த. நில்> நில்கு> நிங்மே > சந். tengo (நில்)

**6.1056 குகர ஏவலீறு சகர மெய்யாகும்.**

எ.டு த. உய்கு > சிந். உயுக் (முன்னால் தள்ளுதல்)

**6.1057 அகர முதல் ஐகார முதலாகும்.**

எ.டு த. அங்குரித்தல் > சந். ஐங்குல் (முளைத்தல்)

**6.1058 வினை முழுமையாகத் திரிபுற்று பொருள் மாறா திருக்கும்.**

எ.டு த. குனியல் > சந். கொசல்

**6.1059 மொழியிடை லகரம் ரகரமாகும்.**

எ.டு த. அலம்பு > சந். அருப் (கழுவி)

**6.1060 வகர மொழிடுதல் எடுப்பொலி பகரமாகும்.**

எ.டு த. விசி > சந். (கட்டுதல்>வி சித்தல்)

**6.1061 ஏவல் வினையீறு ஆவோ எனத்திரியும்.**

எ.டு த. படி > சந். படாவோ

த. கழுவு > சந். கச்டாவோ

த. புகலுதல் > சந். baknao(பேசு)

த. பரப்புதல் > சந். pasnao

த. சிலுப்புதல் > சந். சல்காவோ (தயிர் கடைதல்)

த. சுள் (எரிதல்) > சந். சுல்காவோ

**6.1062 ஏரைக்குறித்த சொல் விதைத்தல் பொருளில் புடைபெயரும்**

எ.டு த. ஏர் > சந். ஏர் (விதைத்தல்)

**6.1063 மொழியிடை ரகரம் லகரமாகத் திரிந்து திரியாமலும் வழங்கும்.**

எ.டு த. தா தருக > சந். dela> duu

**6.1064 மொழியிறுதி ளகரம் னகரமாகத் திரியும்.**

எ.டு த. மிள் – விள் > சந். மென் (பேசு)

**6.1065 லகர மெய்யீற்று ஏவல் திரியாமல் வழங்கும்**

எ.டு த. தள்ளு > சந். dal

த. நோக்கு > க. நோடு > சந். nol, nal

**6.1066 சகர ஈறு தொழிற்பெயர் ஈறாகும்.**

எ.டு த. தேவுதல் (தடவுதல்) > சந்; rewas கண்டுபிடித்தல்

**6.1067 மொழியிடை வகரம் பகர எடுப்பொலியாகும்.**

எ.டு த. குவிகுவி (வளைதல்) > சந். kubkubu (குனிதல்)

**6.1068 ஈகார முதல் ஏகார முதலாகத் திரியும்.**

எ.டு த. பீர்தல் > சந். பேரெ (நீர்பாய்தல்> நிரம்பி வழிதல்)

**6.1069 ழகர லகரங்கள் ரகரமாகத் திரியும்.**

எ.டு த. அழல் (அழுதல்) > சந். அரர்

**6.1070 ஐகார மூர்ந்த ழகர ஏவலீறு ரகர ஈரொற்றாகத் திரியும்.**

எ.டு த. அழை > சந். அர் (கூப்பிடு)

**6.1071 மொழியிறுதி ழகரம் லகரமாகத் திரியும்**

எ.டு த. கோழி > சந். கோலெ

**6.1072 ஒகர முதல் உகர முதலாகும்**

எ.டு த. கொட்டு > சந். kutas (சம்மட்டி)

**6.1073 அகர முதல் உகர முதலாகும்**

த. மண்டை > சந். முண்ட (தலை)

**6.1074 மொழியிடை யகரம் சகரமாகும்**

எ.டு த. உயரம் > சந். உசல் (உயரம்)

**6.1075 சில பெயர்ச் சொற்கள் லகர மெய்யீறு பெறும்.**

எ.டு த. ஏறு (காளை) > சந். ஏரல் (கணவன் – உவம ஆகுபெயர்)

**6.1076 பெயர்ச்சொல்லின் ஐகார ஈறு கெடும்**

எ.டு த. சாலை (ஓலைக்குடில்) > சந். சால் (வீடு)

**6.1077 ககர முதல் எடுப்பொலியாகும்**

எ.டு த. குடி (வீடு) > சந். குடி (gudi) (வீடு)

**6.1078 சொல்லின் மகர மெய்யீறு கெடும்**

எ.டு த. தொல்பம் – (சொற்ப) > சந். சொற்ப

**6.1079 மொழியடை றகரம் ரகரமாகும்**

எ.டு த. முறுக்கு > சந். முருக் (வலிமை)

**6.1082 உயிர்முதலும் ககரம் அடியண்ண மூச்சொலியாகும்.**

எ.டு த. அகை (தகை – தடு) > சந். haha

**6.1083 றகர உடனிலை மெய்மயக்கம் டகர ஈறாகத்திரியும்.**

எ.டு த. காற்று > சந். hod

**6.1084 மொழியிடை ழகரம் கெட்டு ஙகர மெய் ககர எடுப்பொலியாகும்.**

எ.டுத. த ழுங்கு தெ. தக்கு > சந். dagger (இருமல்)

**6.1085 குகரம் பெயரீறாகி உகரம் கெடும்**

எ.டு த. கட்டில் > சந். (கட்டில்கு) கட்லக் ஒ.நோ. மாலத் முசல்கு (முயல்)

**6.1086 ஐகாரப் பெயரீறு எகர ஈறாகும்.**

எ.டு த. சிறை > சந். செரெ (பறவை)

**6.1087 கருமை குறித்த நல் எனும் சொல் ஈறு பெற்றுத் திரியும்.**

எ.டு த. நல் (கருமை) > சந். நக்> நங்கல் (கருப்பு)

**6.1088 டுகரப் பெயரீற்றின் முந்து நிலை ளகரப் பெயரீறு வழக்கில் நிலைக்கும்.**

எ.டு த. குருள் – குருடு > சந். கொர்லொக்

**6.1089 ககர முதல் எடுப்பொலியாகும்.**

எ.டு கறவை > சந். gāy (கறவைமாடு)

**6.1090 சில முந்து தமிழ்ச்சொல்லாட்சிகள் நிலைபேறடையும்.**

எ.டு த. தூ (வெண்மை) – தோயம் (பால்) > சந். தோவா (பால்)

த. சடை > சந். சடெ(ஓசை)

த. ஆசு (பற்றுக்கோடு பாதுகாப்பு) > சந். அசாள் (காக்கும் தலைவன்)

த. பூசை > சந். புசி (பூனை)

த. தூவி (இறகு) > சந். தூயிற் இல் (இறகு)

த. பருவம் > (விழா) சந். parob

த. மாண் (சி றப்பு) > சந். மஞ்சோக் (அழகு)

த. சக்கிமுக்கி (தீப்பற்ற வைக்க உதவும் கல் ) > சந். சக்மக்கி

த. மெல் > சந். மெல், மிலு (அன்பு)

த. பொக்குள் (நீர்க்குமிழி) > சந். bukur

த. ஓதம் > சந். ஓத (ஈரம்)

த. தண் > சந். தண்டா (குளிர்ந்த)

த. கரு (கருமை) > சந். கரன் (இருட்டு)

த. அடுகலன் > சந். அட்கன்ல

த. படி > சந். படி (அம்மிக்கல்)

த. தன்னு > சந். தனல் (பால்மடி) ஒ.நோதெ சன்னு. முலை

**6.1091 மொழியிடை ரகரம் லகரமாகும்.**

எ.டு த. உருள் > சந். உலல் (துவசக்குதிர்) இருவாய் சால்)

**6.1092 சில சொற்கள் அதிக திரிபின்றி தமிச் சொற்களை ஒத்திருக்கும்.**

எ.டு த. கடாவு > சந். கடாவு (துரத்துதல்)

த. தக்கடி > சந். தக்ரி தக்ளா(ஏமாற்று)

த. பொய்த்தல்> சந். புய்துவ

த. எரித்தல் > சந். எரி

த. புகல் > சந். பலு (பேசு)

த. கடிதல் > சந். குட்டெ (வெட்டுதல்)

த. கரு (கம்) > சந். கமி (செய்தல்)

த. செய் > சந். செக்க

த. பரி(சுற்றுதல்) > சந். பரி (திரும்பு)

த. படுதல் > சந். பட்டாபிவோ (கெட்டுப்போதல்) (கெடுதல்)

த. தட்டுதல் >சந். dhati, tap

த. பிசைதல் > சந். பொச்பொசாவோ

த. செத்தல் > சந். செத் (கருதுதல் நினைத்தல்)

> சந். செத்தல் (கற்பித்தல் கற்றறல்)

த. தூள் > சந். தோல் > தோரை

த. துலைதல் (எடையிடுதல்) > சந். துலா தோல்ணா (எடையிடுதல்)

த. பயவு > பாயம் (ஈனுதல்) சந். bian (பிள்ளை பெறுதல்)

த. கசப்பு > சந். கசத்

த. உரம் (மார்பு> உடம்பு) > harm சந். (உடம்பு)

த. கிளை > சந். களெர கலெ (மக்கினை)

த. அமர் (விரும்புதல்) > சந். அமர் (முயற்சி)

த. சொக்கம் > சந். சுக் சொகன் (அழகு)

த. ஓரி> சந். ஓரக்கோ (எருது)

த. மாரி (அம்மை நோய்) > சந். மரிலீ (நோய்)

த. சாறு > சந். சாறு

த. சேல் > சந். நல்கா(மீன்)

த. மீசை > சந். மிசி

த. கொங்கன் > சந். கொக கொன்னகி (அறிவல்லாதவர்)

த. மேழகம் > சந். மெரோம்ம (ஆடு)

த. தட்டான் > சந். தட்டோரி

த. தாவு (இடம்) > சந். தானவா

த. ஐயா > சந். அயா

த. மை (கருமை)> சந். மைலா (அழுக்கு)

த. காவடம்> சந். – கபாடம் கபாட் > (கதவு)

த. அடிதடி > சந். அடி (சண்டை)

த. சும்மா > சந். சுமை (அமைதி)

த. வேளை > சந். bela (நேரம்)

த. தழை > சந். தொரி (தொர்க்கை – கீரை)

த. குயவன் சக்கரம் > சந். குய்கல்சக்

த. சிமுக்கு > சிமுக் (வளார்)

பாண்டு > சந். பாண்ட (வெண்மை

த. கட்டை > சந். கட்

த. கடை > சந். paha(அங்காடி)

த.கலக்கம் > சந். கலோக்

த. பொட்டகம் > சந். பொட்ட (வயிறு) தெ. பொட்ட (வயிறு)

**6.1093 மொழியிடை ககரம் அடியண்ண மூச்சொலியாகும்.**

எ.டு த. பகல் > சந். paha

**6.1094 மொழியிடை இலக்கணப் போலியில் வகரம் பகரமாக ளகரம் ரகரமாகத் திரியும்.**

எ.டு த. பவளம் > சந். porbal (பவளம்)

**6.1095 மொழிமுதல் காகரம் இகரமாகத் திரியும்.**

எ.டு த. தேயம் – தேசம் > சந். திசோம்

**6.1096 சில சொற்கள் மரூஉ முடிபு எய்தும்**

எ.டு த. முழங்கை > சந். மொக

த. விழி (முழி) > சந். மெத்

த. பொழுது > சந். pohar

த. மணப்பந்தல் மன்றம் > சந். மந்தின்

த. அன்ன (போல)> சந். ஞன

த. ஆனால் (ஆகினால்) > சந். அய்க்க

த. தீர (முழுவதும்) > சந். தீர்

த. என்றாலும் > சந். eurcho

த. முருங்கை >சந். முங்

**6. 1091 'அன்' ஈறு பண்புப் பெயர் ஈறாகும்**

எ.டு த. மெல் – மென்மை > சந். மொலன் (மென்மை)

**6.1098 மகர ஈற்றுப்பெயர் னகர லகர ஈறுகளாகத் திரியும்.**

எ.டு த. மரம் > சந். மரனு> மரல் (மரம்)

**6.1099 மொழி முதல் வகரம் எடுப்பொலிப் பகரமாகும்.**

எ.டு த. வணிகம்> சந். bini

**6.1100 உதகம் எனும் சொல் முதற்குறையும் கடைக்குறையும் பெறும்.**

எ.டு த. ஓதம் – உதகம் > சந். தக் (தண்ணீர்)

**6.1101 பகரமுதல் அடுக்குச்சொல் எடுப்பொலி பெறும்.**

எ.டு த. பைப்பய (மெதுவாக)> சந். baibai

**6.1102 மொழியிடை ழகரம் டகரமாகும்.**

எ.டு த. கீழே > சந்.கிடி

**6.1102 மொழிமுதலாகாத 'சை' குறிப்பொலியாக வழங்கும்.**

எ.டு த. சே சேய் > சந். சை (பாகன் யானை ஓட்டும் குறிப்பொலி)

சோ, சோ என்பது உழவர் ஏரேட்டும் குறிப்பொலி

**6.1103 ஒலிக்குறிப்புச் சொல்லின் ஈற்றில் சேரும் என எனும் எச்சத்தின் அகர ஈறு கெடும்**

எ.டு த. சடக்கென > சந். சட்கன்

**6.1104 பெயர்ச்சொல்லின் மகர ஈறு னகர ஈறாகத்திரியும்.**

எ.டு த. தீ – தீயம் – தூயம் – தூவம் (புகை) > சந். தூம் (dum) –புகை)

**6.1105 ஐகார ஈறு ஆகார ஈறாகத் திரியும்**

எ.டு த. பொற்றை (கல். மலை)> சந். bura (மலை> குன்று)

**6.1106 'அன்' 'ஆன்' ஆண்பால் ஈறு பெறா நிலையிலும் முதனிலையே பாற் பொதுப் பெயராக நிற்கும்.**

எ.டு த. குழகன் (குழந்தை> மகன்) > சந். கொர (பையன்)

**6.1107 மொழியிடை பகார உடனிலை மெய்மயக்கம் எடுப்பொலி பெறும்.**

எ.டு த. எழுப்பல் > சந். ebban (விழிப்பு)

**6.1108 நுனி எனும் சொல் முகடு (உச்சி) எனும் பொருளில் ஆளப்படும்.**

எ.டு த. நுனி > சந். நுன்தின் (மலையுச்சி முகடு)

**6.1109 சோலைகள் அடர்ந்த நெய்தல் நிலத்து ஊர்ப்பெயர் திரிபுற்று வழங்கும்.**

எ.டு த. பாக்கம் > சந். bagan (தோட்டம்)

**6.1110 எதற்கு எதனால் எனும் வினாச் சொற்களின் முன் சகர ஒலித்துணை மெய் சேரும்.**

எ.டு த. எதற்கு > சந். செதக்கெ

த. எதனால் > சந். செதமே

**6.1111 புகுதல் பொருள் முதலில் வருதல் பொருளில் புடைபெயரும்**

எ.டு த. புகு (புகல்) பகல் > சந். பகி (முதலில்)

**6.112 தெவ் எனும் கொள்ளுதல் பொருட்சொல் இருமடித் திரிபு பெறும்.**

எ.டு த. தெவ் (நெவ்) > சந். நம் (பெறுதல்)

**6.113 மழையைக் குறித்த சொல் ஆற்று வெள்ளம் எனும் பொருளில் புடைபெயரும்**

எ.டு த. வான்மழை (வா ன்வசி) > சந். bana basi (வெள்ளம்)

**6.1114 நெல்லைக் குறிக்கக் கொட்டை எனும் சொல் ஆளப்படும்.**

எ.டு த. நெல் (நெற்று E. nut) > சந். gotan (நெல்)

**6.1115 நகரமுதல் தகர முதலாகத் திரியும்**

எ.டு த. நுல்(எள்) > தில் > சந். தில்மின் (எள்)

**6.1116 உயிர் முதல் விளிச்சொல் அடியண்ண மூச்சொலியாகும்.**

எ.டு த. ஏண்டா > சந். hēũḍa, (hallo)

**6.117 முன்னுயிர் அயல் மெய்யொடு சேர்ந்து திரிபு எய்தும் அல்லது மொழிமுதல் அகரம் ஒகரமாகும்.**

எ.டு த. ஏல – ஏற்க (பொருந்த)> சந். லெக லெக்கன் (போல)

த. அன்ன > சந். ஒன

**6.1118 பெயர்ச்சொல்லின் உகர ஈறு அகர ஈறாகத் திரியும்.**

எ.டு த. புறவு (புறா) > சந். பர்வ

**6.1119 எகர முதல் இகர முதலாகத்திரியும்**

எ.டு த. என > சந். இனிக் இனக் (என்னுடைய)

**6.1120 எங்கள் தாய் எனும் பொருளில் கூட்டுச்சொல் வழங்கும்.**

எ.டு த. எங்கள் ஆயா > சந். எங்கா (அம்மாள்)

**6.1121 தருதல் எனும் சொல் வருதல் பொருளில் புடை பெயரும்.**

எ.டு த. தரு – தா (கொண்டுவா) > சந். தெலா> தெரா> (வா>வருக)

**6.1122 எரித்தல் பொருள் படும் சொல் சமைத்தல் பொருளில் புடைபெயரும்**

எ.டு த. மண்டுதல் (எரிதல்) > தெ. மண்ட்ட (எரிச்சல்> எரிதல்) – வண்ட்ட (சமைத்த உணவு) > சந். மண்டி (சமைத்த சோறு)

**6.1123 கூட்டம் தொகுப்பு எனும் சொற்கள் சொல்லாக்க ஈறுகள் பெறாமல் முதனிலை யளவிலேயே பெயர்ச்சொல்லாகும்.**

எ.டு த. கூட்டம் > சந். கூட் (கூட்டம்> குழு)

த. தொகுப்பு > சந். தொக் (குழு)

**6.1124 நிறைதல் பொருளிலிருந்து திரண்டு பருவமடையும் பெயர்ச் சொல்லாட்சிகள் வழக் கூன்றும்.**

எ.டு த. சால்தல் (நிறைதல்) > சந். சண்டி (எருது) (சேவல்)

**6.1125 பெரிதாகும் பொருள் தரும் மரு எனும் வினைச் சொல்லிருந்து புதிய சொற்கள் வழக்கூன்றும்**

எ.டு த. மரு (மரம்) > சந்.மரான் (தலைவன்)

**6.1126ஆதன் என்னும் தலைவனைக் குறிக்கும் சொல்லின் ஆண்பால் ஈறு கெடும்.**

எ.டு த. ஆதன் (குட தலைவன் ) > சந். ஆத்தே (ஊர்த்தலைவன்) தேச மஞ்சி (நாட்டாண்மையாளர்)

**6.1127 கூரையைக் குறிக்கும் சொல் குடிசையைக் குறிக்கும்**

எ.டு த. கூம்பு (கூரை) > சந். கும்பா

த. கப்பு கூரை > தெ. கப்பு> சந். கப்பு (குடிசை)

**6.1128 கடு எனும் சொல் கொடுமைப் பொருளில் புடைபெயரும்**

எ.டு த. கடு (கடுத்தல் – கடூரம்) > சந். கடோர் (கொடிய)

**6.1129 உருளை எனும் சொல் மும்மடித் திரிபு எய்தி முட்டையைக் குறிக்கும்**

எ.டு த. உருள் – உருளை > சந். (உளை – வெளை) bale (முட்டை)

**6.1130 உகர முதல் வினைச் சொல்லில் உகரம் யகரத் திரிபு எய்தி சகர எடுப்பொலியாக மாறும்.**

எ.டு த. உண் – உண்ம் (யுண்ம்) > சந். join (உண்ணுதல்)

**6.1131 தளும்பல் எனும் சொல் பெருமகிழ்வுப் பொருளில் புடைபெயரும்.**

எ.டு த. தளும்பல் (நிறைந்து – வழிதல்) > சந். தல்மல் (பெருமகிழ்ச்சி)

**6.1132 தோன்றல் கருத்துச் சொல் கிழக்கு எனும் பொருளில் புடைபெயரும்.**

எ.டு த. பூ – பூத்தல் (தோன்றுதல்) > சந். பூர்ச் (கிழக்கு)

**6.1133 கொள்ளுதல் பொருள்தரும் தெவ் எனும் சொல் ஜீவனை இழுத்தல் பொருளில் புடைபெயரும்.**

எ.டு த. தெவ் (பெறுதல்) > சந். தெகெ (இழு)

**6.1134 செறிவுப்பொருள்தரும் சொல்லி லிருந்து செருக்குப் பொருள் தரும் சொல் தோன்றும்.**

எ.டு த. அடு – அடை > சந். அடை (செருக்கு)

த. அடு – அடை – (வடை) > சந். badai

(செருக்கு) ஒ. நோ. க. பாட (செருக்கு)

**6.1135 அதள் (தோல்) எனும் சொல் பன்மடித் திரிபு எய்தும்**

எ.டு த. அதள்> சந். chal hartaw (தோல்)

**6.1136 மென்மை குறித்த சொல் மெலிந்த பொருளுக்கு ஆகிவிடும்.**

எ.டு த. துய் (மென்மை) > சந். துய்வா (மெலிந்த, ஒல்லியான)

**6.1137 அல்கு எனும் சொல் நிறுத்து எனும் பொருளில் ஆகு என புடை பெயரும்**

எ.டு த. அல்கு தல் (தங்குதல்) > தெ. (அல்கு) ஆகு> சந் haha (நிறுத்து)

**6.1138 தழையைக் குறிக்கும் சொல் நிழல் பொருளில்புடைபெயரும்**

எ.டு த. உவலை (தழை) > சந். (உவல் – உமல்) உமுல் (நிழல்)

**6.1139 என்பதால் என்னும் சொல் ஆதலால் என்னும் பொருளில் புடைபெயரும்.**

எ.டு த. என்பதால் > சந். ebeto (ஆதலால்)

**6.1140 எகர மொழிமுதல் ஒகர மொழி முதலாகும்.**

எ.டு த. மெல்லென் > சந். மொலன் (மென்மை)

**6.1141 மேற்கை குறித்த சொல்பன்மடித் திரிபு எய்தும்.**

எ.டு த. படுமறை> தெ. படமட்ட> சந். padh mehi

**6.1142 மறைந்து போன முந்து தமிழ்ச்சொல் தென்திசையைக் குறிக்கும்.**

எ.டு த. மூழ்முகம் (கடலில் மூழ்கிப்போன நிலப்பகுதிக்கான தென்திசை)> சந். morumuthu (தெற்கு)

**6.1143 சொரிதலைக் குறிக்கும் உகுத்தல் எனும் சொல் பொங்குதல் பொருளில் புடைபெயரும்.**

எ.டு த. உகுதல் > சந். உகுந்தல் (நீருற்று)

**6.1144 மடக்கு எனும் வினைச்சொல் மடக்கி ஒடித்த குச்சியைக் குறித்த சொல்லாக மாறும்.**

எ.டு த. மடக்கு > சந். முடக் (குச்சி)

**6.1145 சுடர் எனும் சொல் சூரியனைக்குறித்த சொல்லாக மாறும்.**

எ.டு த. சுடர் > சந். jedar (கதிரவன்)

**6.1146 நீந்துதலைக்குறித்த சொல் மும்மடித் திரிபு எய்தும்.**

எ.டு த. நீயல் (நீந்துதல்) > க. மீல்> சந். பீரா (நீந்து)

**6.1147 சுள் எனும் எரிதல் கருத்திலிருந்து சூரியனைக் குறிக்கும் சொல் தோன்றும்.**

எ.டு த. சுல் – சுள் > சந். suraj (சூரியன்)

**6.1148 பாதையைக் குறிக்கும் சொல் மும்மடித் திரிபு எய்தும்.**

எ.டு த. அதர் (வழி) > சந். hor, rah >(வழி, பாதை)

**6.1149 மொழிமுதல் யகரம் எகரமாகி ஈற்று ரகரம் லகரமாகும்.**

எ.டு த. யார் > சந். ஏலே (யார்)

**6.1150 வீட்டுப் பெண் எனப் பொருள்படும் சொல் மனைவி எனும் பொருளில் ஆளப்படும்**

எ.டு த. உறையாள் (வீட்டுப்பெண்) > சந். உறாக்கு (வீடு) பெண் மனைவி > பொங் – பெண்)

**6.1151 இடைக் குறையும் திரியும் இயல்பாகும்**

த. கைதாவல் (அடக்குதல்) > சிந். கைதால்

த. உருட்டு > சந். உரட் (தேய்த்தால்)

## தமிழ் – சமற்கிருதம்

**6.1201 தமிழ்ச் சொல்லீற்று ககரம் 'h' ஆகத் திரிந்து சமற்கிருதச் சொல்லாகும்.**

*(எ.டு).* <u>த.</u> அகோ> <u>சமற்.</u> aho.

**6.1202 தமிழ்ச்சொற்களின் மகரமெய்யீறு கெட்டு சமற்கிருதச் சொல்லாகும்.**

*(எ.டு).* <u>த.</u> அங்கணம்> <u>சமற்.</u> அங்கணா.

<u>த.</u> அங்கதம்> <u>சமற்.</u> அங்கத.

**6.1203 ககர சகர உடனிலை மெய்மயக்க ஈற்றுச் சொற்கள் ksha ஈறாகத் திரியும்.**

*(எ.டு).* <u>த.</u> அக்கம் (உருத்திராக்கமணி) > <u>சமற்.</u> aksha.

<u>த.</u> அச்சு (வண்டியின் அச்சு)> <u>சமற்.</u> aksha.

**6.1204 ஐகார ஈற்றுச்சொற்கள் ஆகார ஈறாகவும் அகர ஈறாகவும் திரியும்.**

*(எ.டு).* <u>த.</u> கலை> <u>சமற்.</u> கலா.

<u>த.</u> மாலை> <u>சமற்.</u> மாலா.

<u>த.</u> அட்டாலை> <u>சமற்.</u> அட்டால.

**6.1205 முன்னுயிரும் ஈற்று மகர மெய்யும் கெட்டு ஈற்றயல் வல்லினம் ஆகார உயிர் மெய்யாகும்.**

*(எ.டு).* <u>த.</u> அடக்கம் (அடங்கிய ஓசையுடைய தோற்கருவி) > <u>சமற்.</u> டக்கா.

**6.1206 முக்குறில் சொற்களில் தமிழ் ஈற்றயல் வல்லினம் எடுப்பொலியாகாமல் மரூஉச்சொல்லொலியாகி ஈற்றுயிர் நெடிலாகும்.**

*(எ.டு).* <u>த.</u> அடவி (காடு)> <u>சமற்.</u> aṭavī.

**6.1207 மொழியிடை தகர உடனிலை மெய் மயக்கம் <u>த்வ</u> எனத் திரிந்து ஈறு கெடும்.**

*(எ.டு).* <u>த.</u> அத்தம் (அற்றம்–அத்தம். ஆள் இயங்காத காடு) > <u>சமற்.</u> atvan, atvam.

**6.1208 குறிலிடைச் சொல்லீற்றுத் தகரம் எடுப்பொலியாகவும் வல்லொலியாகவும் இருவகைத் திரிபுற்று ஒரே பொருள் தரும்.**

*(எ.டு).* <u>த.</u> அதி (அதித்தல்:மிகுதல், பெருகுதல் > <u>சமற்.</u> adi, ati.

சமற்கிருதத்தில் <u>அதி</u> முன்னொட்டாகிய இடைச்சொல்லாவதன்றி தமிழில் உள்ளது போன்று வினைச் சொல்லாவதில்லை.

**6.1209 சந்தி எனும் வினைச்சொல் சமற் கிருதத்தில் பெயர்ச்சொல்லாகி ஈற்று எடுப் பொலி தகரம் மூச்சு எடுப்பொலியாகும். த்யா என வேற்றுநிலை மெய்மயக்கமு மாகும்.**

*(எ.டு).* <u>த.</u> சந்தி> <u>சமற்.</u> Sandhā, Savadhi, Sandhyā.

அந்தித்தல் சந்தித்தல் எனும் வினைச் சொற்களும் சந்தை எனும் சொல்லும் சமற்கிருதத்தில் இல்லை.

**6.110 அப்பம் போன்ற சொற்களில் ஈறு கெட்டு இடையில் உள்ள உடனிலை மெய் மயக்கம் திரிபடையும்.**

*(எ.டு).* <u>த.</u> அப்பம்> <u>சமற்.</u> apūpa.

**6.1211 அப்பளம் எனும் சொல்லில் முதலும் ஈறும் கெட்டு ரகர ஒற்று இடைமயங்கி ளகரம் டகரமாகித் திரிபுறும்.**

*(எ.டு).* <u>த.</u> அப்பளம்> <u>சமற்.</u> parappaṭa.

**6.1212 தனிக்குறிலடுத்த மெல்லினமெய் இனவல்லீறாகத் திரியும்.**

*(எ.டு).* <u>த.</u> அம் (நீர்) > <u>சமற்.</u> ap.

**6.1213 மெல்லின மெய் மயக்கம் மெல் வல்லின மெய் மயக்கமாகும்.**

*(எ.டு).* <u>த.</u> அம்மை> <u>சமற்.</u> ambā.

**6.1213 <u>அன்</u> எனும் ஆண்பாலிறு கெட்டு <u>த்த</u> எனும் உடனிலை மெய் மயக்கம் <u>த்யா</u> எனத்திரியும்.**

*(எ.டு).* த. அமைத்தன் (அமைச்சன்) > சமற். amātya.

**6.1214 சொல்லின் முதலுயிர் நீங்கி ரகர முதல் நெடிலாகி சகரம் எடுப்பொலி (j) ஆகும்.**

*(எ.டு).* த. அரசன்> சமற். rājan.

**6.1215 சொல்லின் முன்னுயிர் கெட்டு தகர உடனிலை மெய் மயக்கம் க்த எனும் வேற்றுநிலை மெய் மயக்கமாகும்.**

*(எ.டு).* த. அரத்தம்> சமற். rakta.

**6.1216 முன்னுயிரும் ஈற்று மகரமும் கெடும்.**

*(எ.டு).* த. அரவம் (ஓசை) > சமற். ரவ.

**6.1217 பெயர்ச்சொற்களின் முன்னுயிர் ha எனும் மிடற்று மூச்சொலியாகத் திரியும்.**

*(எ.டு).* த. அரி (திருமால்)> சமற். hari.

த. அரன் (சிவன்)> சமற். hara.

**6.1218 சொல்லிடை ருகறம் ரகர மெய் யாகத் திரியும்.**

*(எ.டு).* த. அருக்கம் (அருக்குதல் = எருக்குதல், அழித்தல்)> சமற். arkka.

**6.1219 ஈரசைச் சொற்கள் ஓரசைச் சொல்லாக மரூஉ முடிபு கொள்ளும்.**

*(எ.டு).* த. அருந்து (உண்) > சமற். ad(இ.வே.).

**6.1220 தகர உடனிலை மெய்மயக்கம் க்த என வேற்று நிலை மெய்மயக்கமாகும்.**

*(எ.டு).* த. அலத்தம் (செம்பஞ்சு குழம்பு) > சமற். alakta.

**6.1221 ஐகார ஈற்று வகரம் பகர நெடில் மூச்சு எடுப்பொலி (bha) ஆகும். சகரம் மிகை முன்னொட்டாகும்.**

*(எ.டு).* த. அவை> சமற். sabhā.

**6.1222 லகர மெய்யீற்றுச் சொற்கள் அகர ஈறு பெறும்.**

*(எ.டு).* த. அனல்> சமற். அனல.

**6.1223 மொழியிடை ககரம் மிடற்று மூச் சொலியாகும்.**

*(எ.டு).* த. ஆகவம் (அகவு=போருக்கு அழைத் தல். ஆகவம்=போர்) > சமற். āhava.

**6.1224 சில தமிழ்ச்சொற்கள் நேர்கடன் சொற்களாக சமற்கிருதத்தில் வழங்கும்.**

*(எ.டு).* த. ஆணி > சமற். ஆணி.

த. ஆம்> சமற். ஆம.

**6.1225 சில பெயர்ச்சொற்கள் ஈறு திரியும்.**

*(எ.டு).* த. ஆமணக்கு> சமற். ஆமண்ட.

**6.1226 உயிர்முதற்சொற்கள் சகர உர சொலியை மிகை முன்னொட்டாகப் பெறும்.**

*(எ.டு).* த. ஆயிரம் (அயிர்=நுண்மணல். அயிர்– ஆயிரம்) > சமற். sahasra (இ.வே.).

**6.1227 மொழியிடை வகரம் பகர வல்லின மாகும்.**

*(எ.டு).* த. ஆவணம் (அங்காடித் தெரு) > சமற். āpaṇa.

**6.1228 மொழியிடை டகர மெய் மயக்கம் வல்லித்த உரசொலி (sha)யாக மாறும்.**

*(எ.டு).* த. இட்டிகை (சிறுசெங்கல்) > சமற். ishṭaka.

த. வேட்டி > சமற். vēshti.

**6.122 9 முன்னுயிர் நீங்கி டகரம் தகர மாகவும் ககரம் அடியண்ண மூச்சொலியாகவும் திரியும்.**

*(எ.டு).* த. இடைகழி > சமற். dēhali.

**6.1230 குற்றுகர ஈற்றுக்ககர மெய் மயக்கம் ksha எனும் கூட்டொலியாக மாறும்.**

*(எ.டு).* த. இலக்கு > சமற். laksh. (எய்யும் குறி)

த. இலக்கம் > சமற். laksha.

த. இலக்கியம் > சமற். lakshaya.

த. இலக்கணம் > சமற். lakshaṇa.

**6.1231 மொழியிடை ணகர மெய் வல்லித்த உரசொலி (sh)யாக மாறும்.**

*(எ.டு).* த. உண்ணம் (வெப்பம்) > சமற். ushṇa.

**6.1232 முன்னுயிர் நீங்கி பின்னீறு பெறும்.**

*(எ.டு).* த. உரு (தோன்றல், முளைத்தல்) > சமற். ruh. (இ.வே.).

**6.1233 முதலும் ஈறும் கெட்டு 'ரு' மெடிலாகி வகரம் பகரமாகும்.**

*(எ.டு).* த. உருவம் > சமற். rūpa.

**6.1234 முதலும் ஈறும் கெட்டு லகரம் லோ முதலாகத் திரியும்.**

*(எ.டு).* த. உலகம் > சமற். lōka.

**6.1235 மொழியிடை வகரம் பகரமாகும்.**

*(எ.டு).* த. உவமை > சமற். upamā.

**6.136 மொழியிடை றகர மெய் லகர மெய் ஆகும்.**

*(எ.டு).* த. உற்கம் (எரிகொள்ளி, இடி) > சமற். உல்க (இ.வே.).

**6.1237 உயிர் முதல் ரகரச் சொல் உயிரூர்ந்து மிடற்று மூச்சொலி ஈறு பெறும்.**

*(எ.டு).* த. ஊர் (உயர்–ஊர்–ஏற்றுதல் உயர்த்தல் > சமற். rōh.

**6.1238 உயிர் முதற்சொல்லில் ksha மிகை முன்னெழுத்தாகச் சேரும்.**

*(எ.டு).* த. ஏமம் > சமற். kshēma. (இ.வே.).

**6.1239 ஆய்த எழுத்து ரகர மெய்யாகத் திரியும்.**

*(எ.டு).* த. கஃகு (கால்–கஃசு = காற்பலம்) > சமற். karsha.

**6.1240 மொழியிடை டகர உடனிலை மெய் மயக்கம் தனி மெய்யாகி ஈற்று லகரமெய் ஆகார ஈறு பெறும்.**

*(எ.டு).* த. கட்டில் > சமற். கட்லா.

**6.1241 மொழியிடை டகரம் தகரமாகத் திரியும்.**

*(எ.டு).* த. கடம்பு (காவல் மரம்) > சமற். கதம்ப.

**6.1242 முற்றுகர ஈறு வல்லினமெய்யீறு ஆகும்.**

*(எ.டு).* த. கடு> சமற். கட்.

**6.1243 மொழி முதல் ககரம் மூச்சொலி ககரமாகும்.**

*(எ.டு).* த. கண்டம் > சமற். khaṇḍa.

த. கண்டனம்> சமற். khaṇḍaṇa.

**6.1244 மொழி முதல் ககரம் எடுப்பொலி ககரமாகும்.**

*(எ.டு).* த. கணம் (கூட்டம்) > சமற். gaṇa.

த. கணிதம் > சமற். gaṇita.

**6.1245 மொழியிடை வல்லின உடனிலை மெய் மயக்கம் 'ர்த்த' எனத் திரியும்.**

*(எ.டு).* த. கத்தரி > சமற். கர்த்தரி.

த. கப்பரை> சமற். கர்ப்பர.

**6.1246 மொழி முதல் வல்லின எழுத்துகள் ரகரச் சேர்ப்பு பெற்று வேற்று நிலை மெய் மயக்க மொழி முதலாகும்.**

*(எ.டு).* த. பவளம் > சமற். ப்ரவள.

த. கமுழு > சமற். க்ரமுக.

**6.1247 ரகர ஈற்றுக் குறிலிணைச் சொற்கள் க்ரு எனும் மொழி முதலாகும்.**

*(எ.டு).* த. கருள் (கருகம்) > சமற். krsh.

த. கரை (அழை) > சமற். gru.

**6.1248 லகரம் ரகரமாகவும் ழகரம் டகர, shaகரமாகவும் திரியும்.**

*(எ.டு).* த. கலுழன் > சமற். garuḍa.

த. மேழகம்–மேழம்> சமற். mēsha.

**6.1249 ழகரம் லகரமாகத் திரிதலும் உண்டு.**

*(எ.டு).* த. கழஞ்சு > சமற். கலஞ்ச.

**6.1250 மொழியிடை லகரம் நெடிலாகி வகரம் பகரமாகும்.**

*(எ.டு).* த. கலாவம் > சமற். kalāpa.

**6.1251 மொழியிடை லகர உயிர்மெய் ஒற்றாகி வேற்றுநிலை மெய்மயக்கமாகும்.**

*(எ.டு).* த. கலுவம் > சமற். கல்வ.

**6.1252 மொழியிடை ளகரம் லகரமாகும்.**

*(எ.டு).* த. களங்கம் > சமற். கலங்கம்.

த. களம் (ஏர்க்களம்) > சமற். khala (இ.வே).

**6.1253 ககரம் முதல் ரகர மெய் புணர்ந்து ளகரம் டகரமாகும்.**

*(எ.டு).* த. களி (விளையாட்டு) > சமற். krida

**6.1254 னகர உடனிலை மெய்மயக்கம் மொழியிடையில் ர்ண எனத் திரியும்.**

*(எ.டு).* த. கன்னம் (காது) > சமற். karna.

த. கன்னர் > சமற். karni.

**6.1255 மொழியிறுதி னகர உடனிலை மெய் மயக்கம் ன்யா எனத் திரியும்.**

*(எ.டு).* த. கன்னி > சமற். கன்யா.

**6.1256 இகர ஈற்றுப்பெயர் ஈகார ஈறாகத் திரியும்.**

*(எ.டு).* த. காஞ்சி > சமற். காஞ்சீ.

**6.1257 மெல்வல்லெழுத்து உடனிலை மெய் மயக்கம் ஈற்று வல்லெழுத்து எடுப்பொலி இழந்து வல்லொலிப்பு பெறும்.**

*(எ.டு).* த. காந்தி > சமற். kānti.

**6.1258 மொழியிடை யகரம் சகரமாவதால் ஆகார மிகை முன்னொட்டு பெறும்.**

*(எ.டு).* த. காயம் (வானம்) > சமற். ஆகாச.

**6.1259 மொழி முதல் நெடில் உயிர் மெய்யின் பின் மிடற்று மூச்சொலி (ஹ) மிகும்.**

*(எ.டு).* த. காளம் (எக்காளம்)> சமற். kāhala.

**6.1260 எடுப்பொலி டகரம் மொழியிறுதி யில் இயல்பு வல்லொலியாகும்.**

*(எ.டு).* த. குடம் > சமற். kuṭa.

த. குடி> சமற். kuṭi.

த. குடும்பம்> சமற். kuṭumba.

**6.1261 மொழியிறுதி சகரம் ககரமாகும்.**

*(எ.டு).* த. குடிசை > சமற். kuṭikā.

**6.1262 மொழியிடை டிகரம் நெடிலாகும்.**

*(எ.டு).* த. குடில் > சமற். kuṭira.

**6.1263 சில வடதமிழ் (பிராகிருத)ச் சொல் திரிபு ஏற்று மேலும் திரியும்**

*(எ.டு).* த. குயில் > மரா. [illegible] கோகிலி.

**6.1264 ஈற்றயல் நீண்டு ஈற்று மெய்யொடு அகரம் சேரும்.**

*(எ.டு).* த. குளிர் (நண்டு) > சமற். குளீர.

**6.1265 மென்றொடர் குற்றுகர ஈறு கெட்டு மெல்லினம் நீங்கும்.**

*(எ.டு).* த. கூம்பு (பாய்மரம்) > சமற். kūpa.

**6.1266 ஈற்று ழகரம் லகரமாகும்.**

*(எ.டு).* த. கூழை (படையின் பின்னணி) > சமற். கூல.

**6.1267 ஐகார ஈறு அகரமாகி மிகையாகக் ககர ஈறு பெறும்.**

*(எ.டு).* த. கைதை (முள்தாழை)> சமற். கைதக.

**6.1268 இடவழக்குத் திரிபைத் தன்மொழித் திரிபாக ஏற்கும்.**

*(எ.டு).* த. கொஞ்சம் > சமற். கிஞ்சித்.

த. கோடரி, கோடலி > சமற். குட்டார.

**6.1269 மொழி முதல் சகரம் எடுப்பொலி எழுத்தாக மாறும். ஐகார ஈறு ஆகார மாகும்.**

*(எ.டு).* த. சடை (அ) > சமற். jaṭā.

த. சல்லரி > சமற். jallari.

**6.1270 மொழியிடை ண்ப மெய் மயக்கம் ம்ப எனத் திரியும்.**

*(எ.டு).* த. சண்பகம் > சமற். சம்பக.

**6.1271 ருக்க எனும் மொழியிடைப் புணர்ச்சி ர்க்க எனத் திரியும்.**

*(எ.டு).* த. சருக்கரை > சமற். சர்க்கரா.

த. சருக்கம் > சமற். sarga.

**6.1272 வல்லின றகர ஈறு இடையின ரகர ஈறாகத் திரியும்.**

*(எ.டு).* த. சாறு > சமற். sāra.

**6.1273 வினைச்சொற்களில் உயிர்மெய் ஈறு மெய்யீறாக நிற்கும்.**

*(எ.டு).* த. சிதை > சமற். chid. (இ.வே.).

**6.1274 மொழி முதல் சகரம் ககரமாகும்.**

*(எ.டு).* த. சீர்த்தி > சமற். கீர்த்தி (இ.வே.).

**6.1275 மொழியிடை க்க, ட்க என்பன shka எனத் திரியும்.**

*(எ.டு).* த. சுக்கு> சமற். sushka.

**6.1276 சுகர முதற்சொல் jva எனத் திரியும்.**

*(எ.டு).* த. சுரம் (சூடு, காய்ச்சல்)> சமற். jvara.

**6.1277 ழகரம் வல்லித்த உரசொலியாகத் திரியும்.**

*(எ.டு).* த. சுழிமுனை > சமற். sushumna.

**6.1278 சகர முதற்சொல் sre முதற் சொல்லாகும்.**

*(எ.டு).* த. செட்டி > சமற். srēshti.

**6.1279 சகர முதற்சொற்கள் சில மரூஉச் சொல்லாகும்.**

*(எ.டு).* த. செவ்வந்தி > சமற். சேவதி.

த. செவியுறு > சமற். sru.

**6.1280 சகரமுதற் சொற்கள் sva எனத் திரியும்.**

*(எ.டு).* த. செம் > சமற். swam.

த. சொன்னம் (சொல்–சொன்=பொன்) > சமற். swarna.

**6.1281 சகர முதற் சொற்கள் வெறும் மெய்யாய் நின்று அடுத்த எழுத்தொடு கூட்டுப் புணரொலியாகும்.**

*(எ.டு).* த. சொலவம் > சமற். sloka.

**6.1282 சகர முதற்சொற்கள் jwa எனத் திரியும்.**

*(எ.டு).* த. சொலி > சமற். jwal.

**6.1283 மொழியிடை யகரம் தகரமாகும். ரகர ஈறு கெடும்.**

*(எ.டு).* த. தயிர் > சமற். ததி

**6.1284 மொழியிடை ம்ப மெய் மயக்கம் 'ம' எனத் திரியும். ஈறு நெடிலாகும்.**

*(எ.டு).* த. தாம்பணி (மாடுகளைப் பிணைக்கும் கயிறு) > சமற். தாமணீ

**6.1285 ரகர ஈற்றுப் பெயர்ச்சொல்லொடு உரசொலி சகர ஈறு சேரும்.**

*(எ.டு).* த. தாமரை > சமற். tāmarasa.

**6.1286 தகர முதல் ஈரெழுத்துச்சொல் ஓரெழுத்து சமற்கிருத ஒலிப்பாகத் திரியும்.**

*(எ.டு).* த. திரு > சமற். sri.

**6.1287 தகரமுதற் சொற்கள் த்வ எனத் திரியும். பகர ஈறும் ககர ஈறும் சேரும்.**

*(எ.டு).* த. துர (துரத்து)> சமற். த்விர் (விரைதல்)

த. தீவம் (தீவு) > சமற். dwīpa.

த. துவரை (நகரம்) > சமற். dwāraka.

**6.1288 இகர எகர மொழி முதற்சொற்கள் ஐமுதலாகும்.**

*(எ.டு).* த. தெய்வம் > சமற். தைவ.

த. சிவ > சமற். சைவ.

**6.1289 மொழியிடை ழகரம் டகரமாகும்.**

*(எ.டு).* த. நாழிகை > சமற். நாடிகா.

**6.1290 உகர முதற்சொற்கள் யகர முதற் சொற்களாகும்.**

*(எ.டு).* த. உத்தி > சமற். யுக்தி.

த. ஓகம் > சமற். யோகம்.

**6.1291 நகர முதற்சொற்களொடு உரசொலி சகரம் மிகை முன்னொட்டாகச் சேரும்.**

*(எ.டு).* த. நேயம் > சமற். snega.

**6.1292 ஈற்று டகரம் தகரமாகத் திரியும்.**

*(எ.டு).* த. படி > சமற். ப்ரதி.

த. படிமை > சமற். ப்ரதிமா.

**6.1293 நத எனும் மெய் மயக்கம் ங்க்த எனத் திரியும்.**

*(எ.டு).* த. பந்தி > சமற். பங்க்தி (இ.வே.).

**6.1294 தகரம் டகரமாகவும் ரகரம் லகரமாகவும் திரியும்.**

*(எ.டு).* த. பாதிரிபுரம் > சமற். பாடலிபுரம்.

**6.1295 மொழி முதல் உகர உயிர் அடுத்த எழுத்தொடு சேரும்.**

*(எ.டு).* த. புடலை > சமற். paṭola.

**6.1296 மொழியிடையில் த்த எனும் உடனிலை மெய் மயக்கம் sta எனத் திரியும்.**

*(எ.டு).* த. புத்தகம் > சமற். pustaka.

**6.1297 மொழியிடைக் ககரம் அடியண்ண மூச்சொலியாகத் திரியும்.**

*(எ.டு).* த. மகள் > சமற். mahila.

**6.1298 ரகர றகர ஈற்றுக் குறிலிணை வினையடிகள் சமற்கிருத மொழி முதல் ba, bha திரிபுகளால் பொருட்பாட்டுத் திரிபடையும்.**

*(எ.டு).* த. பெரு (பெருகு) > சமற். brhat.

த. பொறு (சுமத்தல்) > சமற். bhru

**6.1299 த்த எனும் உடனிலை மெய்மயக்கம் ர்த எனத் திரியும்.**

*(எ.டு).* த. மத்தளம் > சமற். மர்தல.

த. மத்தளிகன் (அ) > சமற். மர்தலிக.

**6.1300 நத எனும் மெய் மயக்கம் nta எனத் திரியும்.**

*(எ.டு).* த. மந்திரம் > சமற். mantra

**6.1301 மொழியிடை ருகரம் ரகர மெய்யாகும்.**

*(எ.டு).* த. மருமம் > சமற். மர்மம்

த. கருமம் (கருத்தல் = செய்தல்) > சமற். கர்மம்.

**6.1302 உரசொலி சகரம் பெயரீறாகச் சேரும்.**

*(எ.டு).* த. மனம் > சமற். manas.

த. தவம் > சமற். tapas.

**6.1303 தகரம் உரசொலி சகரமாகத் திரியும்.**

*(எ.டு).* த. மாதம் > சமற். māsa. (இ.வே.).

**6.1304 மொழியிடையில் த்த எனும் உடனிலை மெய் மயக்கம் க்த எனத் திரியும்.**

*(எ.டு).* த. முத்து > சமற். முக்த.

த. பத்தி > சமற். பக்தி

**6.1312 மொழியிடையில் ட்ட எனும் உடனிலை மெய்மயக்கம் த்த எனத் திரியும்.**

*(எ.டு).* த. வட்டம் > சமற். வ்ருத்த.

**6.1313. மொழியிடையில் ட்ட எனும் உடனிலை மெய் மயக்கம் ர்த்த எனத் திரியும்.**

*(எ.டு).* த. வட்டணம் > சமற். வர்த்தன.

த. வட்டி > சமற். வர்த்தி

**6.1314 மொழியிடை யகரம் சகர எடுப்பொலி பெறும்.**

*(எ.டு).* த. வயிரம் > சமற். vajra.

**6.1315 டகாம் வல்லித்தகண9 உரசொலி (sha) ஆகும்.**

*(எ.டு).* த. விடை (எருது) > சமற். vrushaba.

**6.1316 ழகரம் தகர மெய் ஆகும்.**

*(எ.டு).* த. விழி > சமற். vid.

**6.1317 மொழி முதல் வீ எழுத்து வா எனத் திரியும்.**

*(எ.டு).* த. வீசு > சமற். vās. (வாசனை).

# 7. ஞாலப்பொது நெறி

## (Global Perspective)

> *"Tamil stands alone without any predecessor".*
> *- Mannual of standing information for Madras Presidency. P.50.*

நெ.மு.

**7.1 த–ச திரிவு உலக மொழிகளுக்குப் பொதுவானது.**

*(எ.டு.)*

தீம்பால் – சீம்பால்

கடிது – கடுசு (பேச்சு வடிவம்)

*E. goeth - goes*

*cometh - comes*

**7.2 உலக மொழிகளை ஆராய்வதற்கு மூலமாகத் திகழ்வது எழுத்தமைதி, சொல்லமைதி, தொடரமைதி ஆகிய மூன்றுமாகும்**

*(எ.டு.)*

(1) எழுத்தமைதியால் மொழி பிறந்த இடத்தையும் சூழலையும் அறியலாம்.

(2) சொல்லமைதியால். பண்பாடு வரலாறு ஆகியவற்றையும் மக்கள் புலம் பெயர்ந்த பாதையையும் அறியலாம்.

(3) தொடரமைதியால் அம்மக்களின் நாகரிகப்படி நிலைகளை அறியலாம்.

**7.3 வேரடியை முதனிலையாக்கித் தம் வழக்கிலுள்ள துணைவினை சேர்த்து புதிய சொல்லாட்சியை எம்மொழியும் உருவாக்கிக் கொள்ளும், அதன் முதனிலையாகிய வேரடியும் துணை வினையும் தமிழாக இருந்தால் அவை ஞாலமுதன் மொழியிலிருந்து உடன் கொண்ட செல்வளமாகப் பேணிக்காக்கப் பட்டவை என்பது புலனாகும்.**

*(எ.டு.)*

த. இல் (இல்லை எனப் பொருபடும் வேரடி).

த. இல் + கரு – இல்கரு = இல்லாததாகச் செய். (கருத்தல் = செய்)

த. இல் கரு > இந் இன்கார் = மறுப்பு ஒப்புக் கொள்ளாதது.

த. கைசெய் = கையால் செய், பாடுபடு, பழக்கப்படுத்து.

த. கைசெய் >Fin. *kesy = to tame,* பழக்கப்படுத்து.

**7.4 மக்கள் வழக்கில் அண்மை அல்லது நெருக்கத்தைக் குறிக்கும் எந்தச் சொல்லும் அண்மைச் சுட்டாகிவிடும்.**

எ.டு.

த. ஒத்து = நெருக்கம். (பயிர்ஒத்தாக இருக்கிறது)

உருசி *bot- here.*

**7.5 இலக்கணப் போலி உகர ஒலித் துணைபெறும்.**

எ.டு.

த. நாஇ > சப். இனு. இநு

த.ஆன் (மாடு) >சீன. (நியா) நியு.

**7.6 ஓரசைச் சொற்கள் உலகமொழிகளில் ஊடாடும் போது அடிவினை உருமாறுவ தில்லை.**

*(எ.டு.)* தூ. புரி >E. Burg (ஊர்)

தூ. கரு >E. create

தூ. வலி–வரித்தல் (மணம்புரிதல்)

Skt. vari. L. marier > E. marry.

**7.7 வினையாலணையும் பெயர் பயன் பாட்டில் இருந்த காலத்தில் மேலையாரிய மொழிகள் பிரிந்ததன.**

*(எ.டு.)* தூ. செய்பவர் – 'அர்'ஈறு.

E. maker - doer.

**7.8 கணவனைக் குறிக்கும் சொல் செய் தொழில் தொடர்பில் உருவாகுதல் உண்டு.**

*(எ.டு.)*

(கிழார்)– கிழவன் > E. husband (உழவன்).

பண்ணை – பண்ணாடி (வேளாண்மைத் தலைவன் கணவன்).

**7.9 தொல்காப்பியர்காலத்துக்கு முந்தைய சொல்லாட்சிகள் ஆரிய செமித்திய குடும் பங்கள் பிரிவதற்குமுன் நிலைவியவை. ஈறு சேர்ப்பு வகையிலும் கூட்டுச்சொல் பாங்கிலும் தமிழுக்கு இயல்பலாத nka, nka, mya yta போன்ற வேற்று நிலை மெய்மயக்கங்கள் தோன்றின எனலாம்.**

*(எ.டு.)*

1) ம்வ – போம்வ (mv)

ஞ்ய – உரிஞ்ய(ñya)

ந்ய – பொருந்ய(nya)

ம்ய – உண்ம்ய (mya)

வ்ய – செய்வ்ய (vya)

ய்ம் – செய்ம்மன (ym)

ண்ம்– உண்மன (ṇm)

2) ள்ச – நீள்சினை (ḷc)

ள்ய – வெள்யாறு (ḷya)

ல்ய – பல்யானை (lya)

ண்ச – வெண்சாந்து (ṇc)

ண்ஞ – மண்யாறு (ṇya)

ன்ச – புன்செய் (nc)

ன்ஞ – மென்ஞாண் (nña)

ன்ய – இன்யாழ் (ny)

ன்வ – புன்வரகு(nv)

ன்த (புன்+துய்) (nt)

(புன்சுய்–பஞ்சுய்– பஞ்சு–பன்னு (sp7.12

**7.10 பிறமொழியாளர்கற்றுக்கொள்ளும் புதிய மொழியில்மரபுவழுக்கள் மிகுந் திருக்கும்.**

*(எ.டு.)* யானைக்கன்று – யானைக்குட்டி

**7.11 இருசொல் புணர்ந்த தொகைச் சொல் ஒரு சொல் நீர்மைத்தாயின் ஒரு சொல்லாகக் கருதப்படும். எல்லாத் தொகையும் ஒரு சொன்னடைய (தொல்.எச்ச.29.).**

*(எ.டு.)* கொல்யானை – வினைத்தொகை

வெண்ணிலா – பண்புத்தொகை

E. ink pot, door step, horse shoe, drinking water.(Eng. Nesfield grammar).

**7.12 உலகமொழிகள் அனைத்திலும் சொல் அல்லது தொகை தொடர் மொழி களில் எடுப்பு, படுப்பு, நலிவு (accent - acute, grave, circumflex) ஆகிய அசையழுத் தங்களால் நுண் பொருள் வேறுபாடுகள் புலனாகும்.**

*(எ.டு.)* தபு – பிறவினை

தபு– தன்வினை

செம்பொன் பதின்பலம்

செம் பொன் பதின்பலம்

**7.13 ஒரு தனிமொழியிலிருந்து பிரிந்த கிளை மொழி தனிமொழியாக வளர்வ தற்குச் சற்றொப்ப 1000 ஆண்டுகள்**

**ஆகின்றன.**

*(எ.டு.)*

1.தமிழிலிருந்து களப்பிரர்காலத்தில் வட்டாரக் கிளைமொழியாகப் பிரியத் தொடங்கிய தால் கன்னம், தெலுங்கு, மலையாளம் போன்ற மொழிகள் கி.பி.1000 அளவில் தனிமொழி களாகியுள்ளன.

2.கி.மு. 1800 அளவில் வட்டாரக் கிளைமொழிகள் பிரியத் தொடங்கிய வட இந்திய மொழிகள் கி.மு. 800 அளவில் பிராகிரு மொழி களாயின.

3. கி.மு. 800 முதல் மகதத்தில் வழங்கிய மாகதி பிராகிருதம் கி.மு. 800 அளவில் பாலி மொழியாகப் பிரிந்தது.

**7.14பிறமொழித் தாக்கமில்லாமல் தனித்து விடப்பட்ட வட்டாரவழக்குச் கிளைமொழிகளும் தம் தாய் மொழி யோடு தொடர்பு அறுத்துக் கொண்டு சற்றொப்ப 1000 ஆண்டுகளில் ஓரசைச் சொற்களாக மரூஉ முடிபு எய்தி மேற் கொண்டு திரியமுடியாத எல்லையில் தனிமொழிகளாகிவிடுகின்றன.**

*(எ.டு.)* குடகு, துதவம், கோவைதம், போன்றவை தமிழியக் கிளைமொழிகள்.

**7.15 ஒரு தனிமொழி எத்தனை ஆயிரம் ஆண்டுகளாயினும் மூலத்தாய் மொழியி லிருந்து பெற்ற உடன்கொண்ட சொல் வளத்தை இழந்து விடுவதில்லை.**

*(எ.டு.)* மூவிடச்சுட்டுப் பெயர், வினா, எதிர் மறையிடைநிலை, முறைப்பெயர், சினைப்பெயர், அடிப்படை வினைச் சொல்கள், பெயர்ச் சொற்கள் முதலியவற்றை இழப்பதில்லை.

**7.16அறிவியல், தொழில்நுட்பம், நாகரிக வாழ்வியல்போன்ற சிறப்புச் சொல்லாட் சிகள் தவிர்த்து அன்றாடு பேச்சுவழக் கிற்கு அடிப்படையான சொற்கள் ஒவ்வொரு மொழியிலும் ஆயிரத்துக்கு மேலில்லை. இதில் ஐந்தில் ஒரு பகுதி யாக 200 அடிப்படைச் சொற்களை உலக முதல்தாய் மொழிச் சொற்களாக மீட்ட மைக்கவியலும். அவ்வாறு கண்டறியப் பட்ட மொழிகள் உலக முதல் தாய்மொழி யிலிருந்து பிறந்தவை – பின்னர் பிந்தவை என வரையறுத்து முடிவுசெய்யவியலும்.**

*(எ.டு.)*

பின்வரும் அடிப்படைச் சொற்கள் உலக முதல் தாய்மொழியிலிருந்து உடன் கொண்ட சொல் வளமாக (carried vocabulary) உலக மொழிகள் அனைத்திலும்ஊடபாடியவை எனக் கருதத் தக்கனவாகும்.

| | |
|---|---|
| 1.வா | 29. கண் |
| 2. போ | 30. மூக்கு |
| 3. இரு | 31. வாய் |
| 4. எடு | 32. பல் |
| 5. நட | 33. நாக்கு |
| 6. ஓடு | 34. குடல் |
| 7. கொடு | 35. வயிறு |
| 8. ஆம் | 36. குருதி |
| 9. இல்லை | 37. புண் |
| 10. நில், மூழ்கு, நீந்து | 38.வலி |
| 11. தின், உண் | 39. நரம்பு |
| 12. தூங்கு | 40.எலும்பு |
| 13. இழு, அடி, குத்து,எறி | 41. நகம் |
| 14. கொல், வெட்டு, அடி | 42நெற்றி |
| 15. பார் | 42.உதடு |
| 16.கேள் | 43. துள் |
| 17. பேசு | (பாலுறுப்பு – பெண்) |
| 18.தொடு | 44.துண்ணை |
| 19.முகர் | (பாலுறுப்பு–ஆண்) |
| 20. ஆடு | 45. ஏத்து/எழும்பு |

